# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் - 49 ★ JANUARY 1988



## "புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள்.... விழித்திருங்கள்...உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லா ருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

மாற்கு 13 : 35-37

EDITOR : CHIEF PASTOR N. LAZAR

BOMBAY. INDIA.

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒருமைப்பட்டு கிறிஸ்துவுக்கேற்பபூரண வளர்ச்சியடையும்படியாகவும் தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய்க் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும் சபையானது வஞ்சக போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும்படியாகவும் இப்பத்திரிகை வெளியிடப் படுகிறது. (எபே. 4 : 11-16)

## புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப் 1 : 1 - 3)" எனக் காண்பித்து எனக்குக் கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள்:

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்ற சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள்—மத் 28:18; மாற்கு 16:15

2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா குமாரன் பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப் படுத்துங்கள்—மத் 28 : 19 [இயேசு மாதிரி (Through action) செய்து காண்பித்தார்]

3. திருச்சபையைக் கட்டி (மத் 16 : 18) நான் உங்களுக்குக் கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்—மத் 28 : 20.

4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள்—யோவா 20 : 23.

5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள்—யோவா 21 : 15 - 17.

6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக் கொண்டு—அப் 1 : 5, 8.

7. நான் வருகிறவரையிலும் என்னை நினைவு கூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார்—I கொரி 11 : 23 - 26.

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கிறார்கள்; வேறுசிலர் ஏழு (7) என்கின்றனரே. அதெப்படி என்றேன்

இயேசுவானவர் பிரதியுத்தரமாக: இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி 9 : 1 - 6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்கு கொடுக்கிறேன் என்றார் (அப் 1 : 1 ; 10 : 40 - 43).

CHIEF PASTOR N. LAZAR

---

## இதழின் உள்ளே

# ஆசிரியர் உரை

கிறிஸ்துவின் வெற்றியே நம்முடைய வெற்றியாகும். கிறிஸ்து சிலுவையின்மேல் வெற்றிசிறந்தார். தீமையை தீமையினால் மேற்கொள்ளாமல்; தீமையை சாத்வீகமாக சகித்து உலகத்தாருடைய பாவங்களையெல்லாம் தாமே ஏற்றுக்கொண்டு பாவத்துக்காய் வேதவாக்கின்படி மரித்ததினால் பாவத்தை அழித்தார். எப்படி ஒரு முள்செடிக்குள் புகுந்து கொண்ட சர்ப்பத்தை நெருப்பைக்கொளுத்தி முட்செடியோடு கூட சேர்த்து அழித்துப்போடுவதுபோல, தம்முடைய மரணத்தினால் பாவத்தை அழித்து ஜெயங்கொண்டு மூன்றாம் நாள் உயிர்த்தெழுந்ததினால் வெற்றியை விளம்பரப்படுத்தினார். பாவத்துக்கு முடிவு சிலுவையினால் உண்டாயிற்று. சிலுவை வெற்றியின் அடையாளம். ஆனபடியினால் கிறிஸ்து இயேசுவினால் சம்பாதிக்கப்பட்ட ஜெயத்தை முழுவதுமாக சுதந்தரித்துக் கொள்வதே இந்த ஆண்டின் நம்முடைய நோக்கமாயிருக்கட்டும். இயேசு கிறிஸ்து சிலுவையிலே வெற்றி சிறந்தார். பாவத்தின் மேலும், உலகத்தின் மேலும், பிசாசுகளின்மேலும், மாம்சத்தின் மேலும், எல்லாத்தீமையின் மேலும், நம்முடைய எல்லாச் சத்துருக்கள் மேலும் கிறிஸ்து ஜெயங்கொண்டார். அவர் நமக்காக மரித்தபடியினால் அவர் அடைந்த ஜெயமும் நமக்காகவே அடைந்த வெற்றியாகவே இருக்கிறது. ஆனபடியினால் கிறிஸ்து இயேசுவில் உண்டாயிருக்கிற இரட்சிப்பை, சுதந்தரங்களை முழுவதுமாக இந்த ஆண்டு சுதந்தரித்துக் கொள்வோமாக. அதற்காக புதிய எருசலேம் செய்தி உங்களுக்கு உறுதுணையாக இருக்கும். புதிய எருசலேம் செய்தி பத்திரிக்கைக்காகவும், அதின் முக்கியஸ்தர்களுக்காகவும் ஜெபித்துக் கொள்ளுங்கள். அதற்கான பணசகாயத்திற்காக நீங்களெல்லாரும் ஜெபிக்கவும், உதவி செய்யயும்படியும் கேட்டுக்கொள்கிறோம். இப்படி உதவி செய்வதினால் இந்த தெய்வீக ஊழியத்தில் நீங்களும் பங்குதாரர்களாக இருக்கிறீர்கள் என்பதை விளங்கச் செய்கிறீர்கள். இதற்கான பலனை கர்த்தர் நிறைவாய் உங்களுக்குக் கட்டளையிடுவாராக. புதிய எருசலேம் செய்தி தன் சத்துருக்கள் மேலெல்லாம் இயேசுவின் நாமத்தில் ஜெயங்கொள்ளும்.

கிறிஸ்துவுக்குள்,

N. Lazar

Chief Pastor. N. LAZAR.

# பாவமன்னிப்பின் நிச்சயம்

ஒவ்வொரு மனிதனும் பாவமன்னிப்பின் நிச்சயத்தை பெறுவதும், பாவத்திலிருந்து விடுதலையாவதும் அவசியம். பாவமன்னிப்பின் நிச்சயம் மனிதனை பாவத்திலிருந்து விடுதலையாக்குகிறது. மெய்யாகவே பாவம் மன்னிக்கப்பட்டதென்றால் பாவத்திலிருந்து அவன் விடுதலையாகிறான். பாவத்தைப் பற்றிய குற்ற மனசாட்சியற்றவனாக சுத்தமானவனாகக் காணப்படுவான். இப்படிப்பட்டவர்களே தேவனை ஆராதிக்கும் பொழுது இறைவன் மேல் அன்புகூர்ந்து, இறையாவியினால் நிறைந்து தேவனோடுகூட ஐக்கியமாகிறார்கள். அவர்கள் தேவனுக்குப் பிரியமான ஆராதனை செய்ய கிருபை பெறுகிறார்கள். பிதாவே என்று கூப்பிடும்பொழுது, மகனே! மகளே! என்று இறைவன் பதில் கொடுத்து அவர்களோடு கூட உறவாடுகிறார் (எபி 9:14; 10:22; ஏசா 58:9) "நம்முடைய பாவங்களை நாம் அறிக்கையிட்டால், பாவங்களை நமக்கு மன்னித்து எல்லா அநியாயத்தையும் நீக்கி நம்மை சுத்திகரிப்பதற்கு அவர் உண்மையும் நீதியு முள்ளவராயிருக்கிறார்" (I யோவா 1:9).

உலகத்தில் பாவமன்னிப்பை பெற்றுக் கொள்ளும்படி பற்பல மதக்காரர்களும் பலவிதமான பிரயாசங்களையும், பூஜை பலிகளையும், தானதர்மங்களையும் செய்கிறார்கள். இதனாலே அவர்களுடைய பாவங்கள் மன்னிக்கப்பட்டு விட்டதாக எண்ணுகிறார்கள். ஆனால் அவர்களுடைய பாவங்கள் மன்னிக்கப்படவில்லை. அதற்கு ஆதாரம் அவர்கள் அந்த பாவங்களிலிருந்து விடுதலையாகமலிருப்பதேயாகும். எல்லா மதக்காரர்களும் தங்களுடைய தெய்வங்களை நோக்கி பாவ அறிக்கை செய்து மன்னிக்கும்படியாகப் பிரார்த்திக்கின்றனர். இந்துக்கள் செய்யும் காயத்திரி மந்திரம் நான் பாவி நான் பாவத்தில் பிறந்தவன் என்றே ஆரம்பமாகின்றது.

முக்கியமான இந்துக்கள் தினந்தோறும் இதைச் செய்கிறார்கள். அப்படியே இஸ்லாமியர்களும் வேண்டிக் கொள்கின்றனர். கிறிஸ்தவர்களில் அநேகரும் வேண்டிக் கொள்கின்றனர். இதனால் பாவமன்னிப்பின் நிச்சயமோ பாவத்திலிருந்து விடுதலையோ, குற்றமனசாட்சி நீங்கி சுத்தமான இருதயமோ கிடைக்கப் போவதில்லை. பாவத்திற்கு பிராயசித்தம் செய்யப்பட வேண்டும். வஞ்சித்ததையும், திருடி எடுத்துக் கொண்டதையும், அபகரித்ததையும் திருப்பிச் செலுத்தவேண்டும் ஒப்புரவாக வேண்டியவர்களிடத்தில் ஒப்புரவாகவேண்டும். மன்னிப்பு கேட்க வேண்டியவர்களிடத்தில் மன்னிப்பு கேட்க வேண்டும். பின்பு உலகத்தின் பாவத்திற்காய் பலியான தேவாட்டுக்குட்டியாகிய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் திருப்பலியை ஏற்றுக்கொண்டு "அவர் சிலுவையில் சிந்தின இரத்தத்தினால் பாவமன்னிப்பு உண்டாகிறது என்று வேதம் சொல்லுகிறதை" விசுவாசித்து பாவத்தை சபையின் மத்தியிலோ, அதிகாரம் பெற்ற தேவ ஊழியர்களின் முன்னிலையிலோ அறிக்கை செய்து விட்டு விட்டு தேவனுக்குத்" தன்னை சமூலமாய் ஒப்புவிப்பதினால் கல்வாரி பலியின்மேல் உள்ள விசுவாசத்தோடு பாவமன்னிப்புக்காக தேவனை நோக்கி ஜெபித்தால் பாவ மன்னிப்பும், பாவத்திலிருந்து விடுதலையும் உண்டாகும்.

இதை விட்டு விட்டு பிற மதஸ்தர்களைப் போல கிறிஸ்தவர்களில் அநேகர் தேவனை நோக்கி பாவத்தை அறிக்கை செய்து பாவத்தை மன்னியும் என்று பிரார்த்திப்பதும், சுய திருப்தியோடுகூட எழுந்திருந்து போவதும், அதே பாவத்தை மறுபடியும் அறிக்கை செய்வதும், மறுபடியும் கூடி ஆராதிக்கும்பொழுது அந்த பாவம் உணர்த்தப்பட்டு மறுபடியும் அறிக்கை செய்வதும் அழுகிறதுமாயிருக்கிறார்கள். தேவன் பாவத்தை மன்னிக்கிறாரென்றால் ஒரே படியாய் மன்னித்து விடுகிறார். திரும்ப அவர்களுடைய பாவங்களை அவர் நினைப்பதில்லை (எபி 8:12; சங் 103:12; மீகா 7:18,19; எரே 50:20). தேவன் மன்னித்து மறந்து விடுகிறாரென்றால்; அதை அவர்

திரும்ப நினைப்பதில்லையென்றால் நமக்கும் திரும்ப நினைவு வராது. ஒரு பாவத்தை ஒரு தடவைதான் அறிக்கை செய்யவேண்டும். திரும்ப அறிக்கை செய்யாதே.

அப்படி நீ ஒரு தடவை தேவனை நோக்கி அறிக்கை செய்துவிட்டு மறுபடியும் அறிக்கை செய்கிறாயென்றால், பாவங்கள் உண்டென்று நினைவு கூறுதலும் உண்டா யிருக்கிறது (எபி 10:1-3). ஆனபடியினால் தேவ ஜனங்கள் பாவமன்னிப்பின் நிச்சயத்தைப் பெற்றுக் கொள்ளவேண்டும், பாவத்திலிருந்தும் சாபத்திலிருந்தும், ஆக்கினையினின்றும், ரோகத்தினின்றும், அழிவினின்றும், துர்மனசாட்சியினின்றும் விடுதலையாகவேண்டும். "தன் பாவங்களை மறைக்கிறவன் வாழ்வடைய மாட்டான் அவைகளை அறிக்கை செய்து விட்டு விடுகிறவனோ இரக்கம் பெறுவான்" என்ற வேத வாக்கின் படி தங்கள்பாவங்களை சபையின் மத்தியிலோ, தேவ ஊழியர் களிடத்தில் தனித்தோ பாவமன்னிப்பின் நிச்சயத்தையும் பெற்றுக் கொண்டு பாவத்தி லிருந்து விடுதலையானவர்களைத் தேவனை ஸ்துதியுங்கள் (மாற் 1:4,5; அப் 19:18; யாக் 5:13-18; 1 யோ 1:8-10). பாவ அறிக்கை செய்து பாவமன்னிப் பின் நிச்சயத்தையும் பாவத்திலிருந்து விடுதலையையும் பெற்றுக் கொண்ட சில சாட்சிகள்.

(தொடரும்

---

"ஏனெனில் நான் அவர்கள் அநியா யங்களைக் கிருபையாய் மன்னித்து, அவர்கள் பாவங்களையும், அக்கிரமங் களையும் இனி நினையாமலிருப்பேன் என்று கர்த்தர் சொல்லுகிறார்".

—எபி 8.12

---

# ஆதியாகமத்தைப் பற்றி ஓர் ஆராய்ச்சி

(தொடர்ச்சி)

**ஆதி 2:8 :** (ஏதேன்: மனிதனுடைய முதல் வீடு) ஏதேனை உண்டாக்குமுன்னே ஆதாம் உரு வாக்கப்பட்டான்.

**ஆதி 2:15** மனிதனுடைய கடமை: இந்த ஏதேனை பண்படுத்தவும், ஏதேனுக்குள் வெளியி லிருந்து யாரும், எதுவும் உள்ளே வராதபடி அதைக் காவல் பண்ணவும், (ஆதி 2:15) இதை வேலியடைக்கவும் பாதுகாக்கவுமே மனிதனின் கடமையாய் இருந்தது. காக்கவும் என்ற வார்த்தைக்கு எபிரேய பாஷையிலே சம்மார் (SHAMAR) என்றழைக்கப்படும் (ஆதி 3:24; 6:19,20, 7:2 3; 28:15,20; சங் 17:8). தேவனுக்கும் மனிதனுக்கும் எதிரான பகைவன் இருப் பதாக இந்த குறிப்பிலிருந்து அறிய முடிகிறது இதுவே முதல் குறிப்பும் ஆகும். ஆதாம் ஏதேனை சரியாய்க் காக்கவில்லை. தோல்வியடைந்தான். ஆகையால் பாவம் பிரவேசித்தது. புதுப்பித்த இப்பூமிக்கு சாத்தான் பொய்யான அதிபதியாகிவிட்டான் (மத் 4:1-11, 12:24,25; ரோமர் 5:12- 21; II கொரி 4:4; எபே 6:10—18) இந்த சாத்தானுடைய கடைசி தோல்வி வெளி 12:7– 12, 20:1—10ல் காணப்படுகிறது!

**ஆதி 2:16** மனிதனுடைய வீழ்ச்சிக்கு முன்னால் தேவன் கொடுத்த கட்டளைகள் ஐந்து :-

1. பலுகுங்கள் (ஆதி 1:28) 2. பெருகுங்கள் (ஆதி 1:28) 3. நிரப்புங்கள் (ஆதி 1:28;9:7) 4. கீழ்ப்படுத்துங்கள் (ஆதி 21:28; :15). 5. நன்மை தீமை அறியக்கூடிய விருட்சத்தின் கனியை புசிக்க வேண்டாம் (ஆதி 2:17).

கடைசி கட்டளைகள் இரண்டும் சோதனைக்கு ஏதுவானவைகளாக இருந்தன விருப்பத்தையும், தெரிந்து கொள்ளும் ஆர்வத்தையும் தூண்டிவிட்டது. மற்ற கட்டளை களுக்கும் விசேஷமான எச்சரிக்கைகள் கொடுக்க தேவையில்லாதிருந்தது. ஆகையால் கடைசி கட்டளைக்கு விசேஷமான தண்டனை நியமிக்கப்பட்டுள்ளது.

**ஆதி 2:17 ஆதாம் பாவம் செய்த அதே நாளில் செத்தான :-** மேலும் அந்த நாள் 24 மணிநேர நாளாய் இருக்கிறது. *கீழ்ப்படியாமையின்* செயல் ஏற்பட்டவுடன் தண்டனையும் *நித்திய* மரணமும் உண்டானது (ரோம 5:12—21).

**ஆதி 2:18; (மனிதனுக்குத் தேவனுடைய தூர திருஷ்டி)**

அவருடைய (தேவன்) வேலை முடிவடையாததாலும், மனிதன் இன்னும் முழுமையடையாததாலும் அவன் தானாகவே அவனுடைய இனத்தை உற்பத்தி செய்ய முடியாது. ஆகையால் இன உற்பத்தி செய்யும்படி ஒரு துணையை ஏற்படுத்தினார். (ஆதி 1:28; I தீமோ 2:11—15; I கொரி 11:9) மனிதனுக்கு ஒத்த ஒரு ஏற்ற துணையை உருவாக்கினார். அறிவுள்ள *சரீர* சம்பந்தமுள்ள துணை.

**ஆதி 2:18 :-** தேவன் பார்க்கிறார், ஆராய்கிறார், கண்டுபிடிக்கிறார். மனிதனுடைய காரியங்களை அறிந்து கொள்கிறார் (ஆதி 6:5—6; 18:21;22:12; 29:31; யாத் 3:4; உபா 32:19; II நாளா 12:7; II இராஜா 14:26; ஏசா 59:15,16; யோனா 3:10). மனிதனைக்குறித்தும் அதே காரியங்கள் குறிப்பிடப்பட்டுள்ளது (ஆதி 3:6; 8:8; 37:13,14).

**ஆதி 2.20 :-** மனிதனுக்குத் தேவன் கொடுத்த அறிவு மிகவும் விஸ்தாரமானதும், அவனுடையபாஷை வளர்ச்சியுடையதாயும் இருந்தது. ஏனென்றால் ஆதாமின் வேலையில் தேவன் யாதொரு மாற்றமும் செய்ய வில்லை. எந்த மனிதனும் இந்த வேலையை நீண்டகால ஆராய்ச்சியினாலும் செய்யமுடியாது.

**ஆதி 2:21 :-** (ஸ்திரீயின் சிருஷ்டிப்பு I தீமோ 2:13) முதல் மயக்கமும், முதல் பெரிய ஆபரேஷனும் (Operation) (ஆதி 15:12; I சாமு 26:12; தானி 8:18)

**ஆதி 2:22,23 :-** ஆணுக்கு எபிரேய பாஷையில் இஷ் (ISH) என்றும், பெண்ணுக்கு எபிரெய பாஷையில் இஷ்ஷா (ISH SHA) என்றும் வழங்கப்படுகிறது. இஷ்ஷா என்றால் *சரியான* பெண்மனிதன்; கர்ப்பமனிதன்; கருப்பை உடைய மனிதன் என்று அர்த்தம். ஏனென்றால் அவள் மனிதனிலிருந்து எடுக்கப்பட்டாள் (ஆதி 2:23; I கொரி 11:3—12; I தீமோ 2:9—15; ஸ்திரீயானவள் மனிதனை அளுகை செய்யும்படி அவனுடைய தலையிலிருந்து எடுக்கப்படவில்லை, அவனுடைய கால்களால் மிதிக்கப்படும் படி அவனுடைய கால்களிலிருந்தும் எடுக்கப்படவில்லை. அவனுக்கு சமமானவளாயிருக்கவும், அவனால் காக்கவும், காப்பாற்றப்படவும் அவனுடைய விலாவின் ஒரு பக்கத்திலிருந்தும், அவனால் நேசிக்கப்படும்படி அவனுடைய இருதயத்தின் பக்கத்திலிருந்தும் எடுக்கப்பட்டாள்.

**ஆதி 2:23,24 :-** இதுவே முதல் விவாகம் (முதல் விவாகம் எபி 13:4; மத் 19:5; மாற் 10:7; I கொரி 6:16; எபே 5:31).

(தொடரும்)

"நான் பிரமிக்கத்தக்க அதிசயமாய் உண்டாக்கப்பட்டபடியால் உம்மைத் துதிப்பேன்"

— *சங் 139:14*

## திருத்தம்

எக்காள *சத்தம்*-45, டிசம்பர் 1987-பிரதியில் ஆதியாகமத்தைப் பற்றி ஓர் ஆராய்ச்சி தேவனுடைய ஓய்வு என்ற கட்டுரையில் (பக்கம் நம்பர் 6 point No:22) குறிப்பு நியாயப் பிரமாணமும், ஓய்வு நாளும் அப்போஸ்தலர்கள் கைக்கொள்ள வேண்டிதில்லை என்பதை நியாயப் பிரமாணமும், ஓய்வுநாளும் அப்போஸ்தர்களோ, புதிய ஏற்பாட்டின் *சபையோரோ* கைக்கொள்ள வேண்டியதில்லை என்று திருத்தி வாசித்துக் கொள்ளவும்.)

# முதலாம் மாதம் முதல் தேதி

கர்த்தர் மோசேயை நோக்கி நீ முதலாம் மாதம் முதல் தேதியில் ஆசரிப்புக் கூடாரத்தின் வாசஸ்தலத்தை ஸ்தாபனம் பண்ணு என்று கட்டளையிட்டார். வருஷத்தின் முதலாம் மாதம் முதல் தேதி என்பது ஒரு புதிய ஆரம்பத்தைக் காண்பிக்கிறது. இஸ்ரவேல் ஜனங்களுக்கு முதலாம் மாதம் என்பது அவர்கள் எகிப்தின் அடிமைத்தனத்திலிருந்து மீட்கப்பட்ட அல்லது புறப்பட்ட மாதமாகும். அதுவே அவர்களுக்கு பிரதான மாதம் முதல் மாதம். இதற்கு ஆபிப் என்றும் நிசான் என்றும் பெயர் (யாத் 12:1,2) அந்த ஆபிப் (ஆங்கில காலண்டர்படி மார்ச்-ஏப்ரல் ஆகும்). மாதத்திலே குறித்த காலத்தில் பஸ்காவை ஆசரிக்கும்படி கர்த்தர் கட்டளையிட்டார். இது அவர்களுக்கு விசேஷித்த ராத்திரியும், ஆராதனையுமாக இருந்தது. அந்த மாதத்தின் முதல் தேதியில் ஆசரிப்புக் கூடாரத்தின் வாசஸ்தலத்தை ஸ்தாபனம் பண்ணும்படியாய் கர்த்தர் கட்டளையிட்டபடியினால் அந்த நாள் இஸ்ரவேலர்களுக்கு விசேஷித்த நாளாயிருந்தது. அன்றைய தினம் ஆசரிப்புக்கூடாரம் ஸ்தாபிக்கப்பட்டது. அது பிரதிஷ்டை செய்யப்பட்டது. ஜனங்கள் தேவனை ஆராதித்து அவரைத் தொழுது கொண்டார்கள்.

இஸ்ரவேல் ஜனங்கள் எகிப்திலிருந்து புறப்பட்ட இரண்டாம் வருஷம் முதல் மாதம் முதல் தேதியில் ஆசரிப்புக் கூடாரம் ஸ்தாபனம் பண்ணப்பட்டது (யாத் 40:17) அப்பொழுது ஒரு மேகம் ஆசரிப்புக் கூடாரத்தை மூடினது. கர்த்தருடைய மகிமை வாசஸ்தலத்தை நிரப்பிற்று (யாத் 40:34,38) அந்த மேகம் புறப்படுகிறதை அனுசரித்து இஸ்ரவேலர்கள் போகவும், தங்கவும் செய்தார்கள். இவ்விதமாகவே தேவ ஜனங்களுக்கு வருஷத்தின் ஆரம்பம் முக்கியமானதொரு நாளாக இருக்கிறது.

முதல் தேதியில் நம்முடைய வாழ்க்கையை நாமும் ஒழுங்குபடுத்தி தேவனுக்கென்று நம்மை பிரதிஷ்டை செய்வோமாக. இந்த ஆண்டு மோட்ச பிரயாணத்தை கர்த்தருடைய மகிமைப் பிரசன்னத்தின்படி போகவும் வரவும் செய்வோமாக. இந்த ஆண்டு முழுவதிலேயும் கர்த்தருடைய சித்தப்படி நம்முடைய வாழ்க்கையில் நாம் வாழ்ந்து, ஊழியம் செய்து ஆண்டின் இறுதி மாதத்திற்குள் சத்துருவை முறியடித்து ஆண்டின் இறுதி மாதமாகிய (ஆதார்) 12 வது மாதத்தில் சாத்தானையும் அவனுடைய சேவகர்களையும் முறியடித்து ஆர்ப்பரிப்போடும், மகிழ்ச்சியோடும் பூரீம் பண்டிகையை ஆசரித்து பூரிமை கொண்டாடுவோமாக (எஸ் 3:7;8:11,12,15,16).

எந்த ஒரு காரியத்துக்கும் ஒரு ஆரம்பம் வேண்டும் வருஷத்தின் முதல் நாளிலே தேவ சந்நிதானத்தில் பிரதிஷ்டை செய்து நல்ல ஆரம்பத்தை ஆரம்பிக்கிறவர்கள் நல்ல காரியத்தைச் செய்கிறார்கள். தேவனுடைய பக்தனாகிய நெகேமியாவும் வருஷத்தின் முதலாம் மாதமாகிய நிசாம் (ஆபிப்) மாதத்திலே தன்னுடைய தேவனுக்காகவும், தேவனுடைய ஆலயத்திற்காகவும், தேவனுடைய பட்டணத்திற்காகவும் நல்லெண்ணம் கொண்டு ஜெபம் பண்ணி, தீர்மானித்து, உத்தரவுப் பெற்று போய் இடிந்துபோன எருசலேமின் அலங்கத்தைக் கட்ட ஆரம்பித்தார் (நெகே 2:1...) நாமும் எழுந்து கட்டுவோம் வாருங்கள் (நெகே 2:17,18).

---

"நீ எகிப்து தேசத்திலிருந்து புறப்பட்ட நாளை நீ உயிரோடிருக்கும் நாளெல்லாம் நினை..."
—உபா 16:3

---



(தொடர்ச்சி)

# வேதபாடம்

யாத் 21:1–11 இஸ்ரவேலர்களில் வேலைக்காரர், வேலைக்காரிகள், மனைவிகளைப் பற்றிய 10 (Civil Laws) சமூகச் சட்டங்கள்.

யாத் 21:12–1 கொலையாளிகளுக்குரிய தண்டனை

யாத் 21:15 தாய், தகப்பன்மாரை அடிக்கிறவன் கொலை செய்யப் பட வேண்டும்.

யாத் 21:16 மனித ஆத்துமாக்களை திருடியோ, திருடி விற்றுப் போட்டாலோ அப்படிச் செய்தவன் கொலை செய்யப்பட வேண்டும்.

யாத் 21:17 தாய் தகப்பன்மாரை நிந்திக்கிறவன் கொலை செய்யப் படவேண்டும்.

யாத் 21:18,19 சண்டை செய்கிறவர்களுக்குரிய தண்டனை

யாத் 21:20,21 வேலைக்காரர்களை காயப் படுத்துகிறவர்களுக்குரிய தண்டனை

யாத் 21:22-25 கர்ப்ப ஸ்திரீகளைக் காயப்படுத்துகிறவர்களுக்குரிய தண்டனை

யாத் 21:26,27 வேலைக்காரர்களைக் காயப்படுத்தினால் உண்டாகும் தண்டனை.

யாத் 21:28,22:25 சொத்துக்களைப் பற்றிய 7 (Civil Laws) சமூகச் சட்டங்கள்.

1. யாத் 21:28-32 மாடுகளின் சொந்தக்காரர்களைப் பற்றியது
2. யாத் 21:36 கவனக்குறைவுக்கான தண்டனை.
3. யாத் 22:1-4 சிறு (அற்ப) திருட்டுக்குரிய தண்டனை.
4. யாத் 22:5 பிறனுடைய மேய்ச்சலிலாவது, வயலிலாவது தன் மிருக ஜீவன்களை மேய விடுகிறவர்களுக்குரிய தண்டனை.
5. யாத் 22:6 நெருப்பைக் கொளுத்தி நஷ்டமாக்குகிறவர்களுக்குரிய தண்டனை.
6. யாத் 22:7-135 தன் வசமுள்ள பிறனுடைய பொருளை நஷ்டப்படுத்தினால் அதற்குரிய தண்டனை.
7. யாத் 22:14,15 இரவல் வாங்கின பொருள் நஷ்டப்பட்டதானால் அதற்குரிய தண்டனை.

யாத் 22:16-23:9 இஸ்ரவேலர்களுக்குரிய 16 (Civil Laws) சமூகச் சட்டங்கள்.

யாத் 23:10 –19 இஸ்ரவேலர்களுக்குரிய 6 மத சம்பந்தமான கட்டளைகள்

1. யாத் 23:10,11 ஓய்வு வருஷத்தைப் பற்றிய கட்டளை
2. யாத் 23:12 வாரத்தின் ஒரு நாள் ஓய்வைப் பற்றிய கட்டளை
3. யாத் 23:13 கடவுள்மேல் நம்பிக்கையில்லாமல் அந்நிய தெய்வங்களின் பெயரை சொல்லக்கூடாது என்பதைப் பற்றிய கட்டளை.
4. யாத் 23:14-16 இஸ்ரவேலர்களின் 3 பிரதான பண்டிகைகளுக்குரிய கட்டளை
5. யாத் 23:17 வருஷத்தில் மூன்றுதரம் இஸ்ரவேலர்களின் ஆண்கள் எல்லாரும் கர்த்தருடைய சந்நிதியில் கூட வேண்டுமென்ற கட்டளை.
6. யாத் 23:18,19 இஸ்ரவேலர்களின் காணிக்கைகள் பலிகளைப் பற்றிய கட்டளை

யாத் 23:20,23 இஸ்ரவேலர்களின் வெற்றி வாழ்க்கைக்குரிய 4 சட்டங்கள்:

1. 23:20-23 கர்த்தருடைய வார்த்தையை நன்றாய் கேட்டு கீழ்படிதலும் அதினால் உண்டாகும் ஆசீர்வாதமும்.
2. யாத் 23:24 சிலை வழிபாட்டிற்கு விரோதமான கட்டளை

3. யாத் 23:25-31 தேவனுக்குக் கீழ்ப்படிந்து அவருக்கு சேவை செய்வதினால் உண்டாகும் 14 ஆசீர்வாதங்கள்.

4. யாத் 23:32,33 இஸ்ரவேல் ஜனங்கள் புறஜாதிகளிலிருந்தும், அந்நிய தெய்வங்களிலிருந்தும் தனித்து வாழும்படியான கட்டளை.

(தொடரும்)

> யாக்கோபுக்கு தம்முடைய வசனங்களையும் இஸ்ரவேலுக்குத் தமது பிரமாணங்களையும் தமது நியாயங்களையும் அறிவிக்கிறார்-சங் 147:19

# மோட்ச வழி

(தொடர்ச்சி)

## (குரு-சிஷ்ய உரையாடல்)

சிஷ்ய :- தேவனுடைய சித்தத்தை எவ்விதமாய் ஒரு விசுவாசி பகுத்து அறியலாம்.

குரு :- வேதவசனத்தின் மூலமாகவும், வெளிப்படுத்தலின் மூலமாகவும், அநுபவங்கள் மூலமாகவும், பரிசுத்தவான்கள் மூலமாகவும் அறியலாம்.

சிஷ்ய :- வேதவசனத்தை வாசிக்கும் பொழுது ஒன்றுக்கொன்று மாறான கருத்துக்கள் காணப்படுகின்றனவே.

குரு :- இல்லை. வேதத்தின் மூலமாக தேவன் தம்மையும், தம்முடைய சித்தத்தையும் மனுமக்கள் நடக்க வேண்டிய வழியையும் போதிக்கிறார். அவைகளில் புரட்டும், விபரீதமும் ஒன்றுமில்லை (நீதி 8:8). அவைகளெல்லாம் ஒரே மேய்ப்பனால் (பரிசுத்த ஆவியானவர்) அருளப்பட்டவைகள் (பிர 12:11). அவைகள் சகலமும் சத்தியமும் உண்மையுமாயிருக்கிறது (சங் 119:160). அது பூரணமானது, குறைவற்றது (சங் 19:7). அது ஜீவனும் ஆவியுமாயிருக்கிறது (யோவா 6:63). இதை ஒன்றோடொன்று ஒத்துப் பார்க்கிறதினால் ஜீவன் உண்டாகும் (யோவா 5:39 ஏசா 34:16). தேவனுடைய பரிசுத்த மனிதர்கள் மூலமாக வேதத்தைக் கற்றுக்கொள்ள வேண்டும் (II பேது 1:21; அப் 8:30—35).

சிஷ்ய :- தேவனுடைய சித்தத்தை வெளிப்படுத்தல் மூலமாக அறிந்து கொள்ளலாம் என்று சொன்னீர்கள், வெளிப்படுத்தல் என்றால் என்ன?

குரு :- தேவன் தம்முடைய சித்தத்தை பற்பல விதமாக வெளிப்படுத்தினது பழைய புதிய ஏற்பாட்டில் குறிப்பிடப் பட்டுள்ளது. தீர்க்கதரிசிகள் மூலமாக, சொப்பனங்கள் மூலமாக,
கனுக்கள் மூலமாக, ஊரீம் தும்மீம் மூலமாக. சித்திர சம்பவங்கள் மூலமாக தம்முடைய பக்தர்களோடு இடைபடுகிறது மூலமாக தேவன் தம்மை, தம்முடைய சித்தத்தை வெளிப்படுத்தினார். புதிய ஏற்பாட்டிலோ கிறிஸ்துவிலிருந்தும் அவருடைய திருச்சபையின் மூலமாயும் தேவன் தம்மை, தம்முடைய சித்தத்தை வெளிப்படுத்துகிறார். பொதுவாக வெளிப்படுத்தல் என்றால் ஏதோ ஒரு அறிவல்ல. இறைவனோடு கொள்ளுகிற உறவேயாகும்.
சிலர் வெளிப்படுத்தல் என்று வாயில் வந்ததை தீர்க்கதரிசனமாய் சொல்லியும், பேச்சுக்களை தேவ சித்தம் என்று சொல்லியும், புதிதாக கண்டுபிடித்தேன் என்று (தேவசித்தத்தை உணராமல்) வேதப்புரட்டுகளையும், தவறான உபதேசங்களையும் சுய விளக்கங்களையும் கொடுக்கிறார்கள். இவர்கள் மனசாட்சியில் சூடுண்ட பொய்யர்களும், ஆவியில் வீழ்ச்சியடைந்த உள்ளான பாவிகளுமாயிருக்கிறார்கள். அவர்களுடைய கனிகளினால் அவர்களை
அறியலாம் (I தீமோ 4:1—5; மத் 7:15—20).

சிஷ்ய :- அநுபவங்கள் மூலமாக தேவனுடைய சித்தத்தை எவ்விதமாக அறியலாம்?

குரு :- ஒரு மனிதனுக்கு தேவன் ஆரம்ப உபதேசங்களைக் கொடுக்கிறார். அதைக் கற்றுக் கொண்டு கீழ்ப்படிந்து பூரணமாய் அதைக் கைக்கொண்ட பின்பு அடுத்த சத்தியம் அவனுக்கு வெளிப்படுத்தப்படும். ஜீவியத்திலும், ஜெப வாழ்க்கையிலும், அறிவும், பரிசுத்தமும் வளர்ந்து கொண்டே வரும். வெளிப்பட்ட சத்தியத்தை அவன் கைக்கொள்ளும் போது அடுத்த சத்தியம் விளங்கும். இப்படியாக படிப்படியாய் தேவனுடைய சித்தத்தையும், அவருடைய இருதயத்தையும் அவன் அறிந்து கொண்டு மென்மேலும் பூரணப்படுவான். அதற்கு அவனுடைய மனம் மறுரூபப் படவேண்டும் (ரோம 12:2). அறிந்த சத்தியத்தில் உண்மையில்லாதவர்கள் ஒன்றையும் அறிந்து கொள்ள மாட்டார்கள். அவர்களுக்கு தேவனுடைய சித்தம் வெளிப்படாது (எபி 5:12—14).

சிஷ்ய :- பரிசுத்தவான்கள் மூலமாக தேவனுடைய சித்தத்தை அறியலாம் என்று சொன்னீர்கள்; அது எப்படி?

குரு :- பரிசுத்தவான்கள் என்று சொல்லும் பொழுது மெய்யான சபையின் ஐக்கியமாகும். சபை கூடிவந்து ஆராதனை செய்யும் பொழுது தேவன் தம்முடைய சித்தத்தை வெளிப்படுத்துகிறார் (அப் 13:2,3; I கொரி 14:26—33; ஆதி 49:1). தேவன் பரிசுத்தவான்களோடு தம்முடைய திருச்சபையில் இருக்கிறார். சபையின் மூலமாய் மக்களுக்கு தேவன் ஆலோசனையையும், வரப்போகிற காரியங்களையும் அறிவிக்கிறார். விசேஷமாக அப்போஸ்தல அதிகாரம் எங்கே உண்டோ அங்கே அப்போஸ்தலர் மூலமாக கர்த்தர் பேசுகிறார். அப்போஸ்தலர்கள், ஊழியர்கள் மூலமாக கர்த்தர் பேசுகிறார். அதாவது எங்கே அப்போஸ்தல அதிகாரம் உண்டோ, அந்த அப்போஸ்தல ஆளுகையின் கீழுள்ள சபைகள் கூடும் போது ஆவியிலே அப்போஸ்தல பிரசன்னம் உண்டாகும். அவர்கள் மூலமாக தேவ ஆசீர்வாதமும், ஆலோசனைகளும் உண்டாகும் (ரோம 1:6,7; I கொரி 5:3,4). இது தேவன் நடப்பிக்கிற தெய்வீகச் செயலாகும். இவ்விதமாயும், நேரடியாக உபதேசம் கேட்டும் பரிசுத்தவான்கள் மூலமாக தேவனுடைய சித்தத்தை தெளிவாக அறிந்து ஒரு விசுவாசி வெற்றிகரமான கிறிஸ்தவ வாழ்க்கை வாழலாம், பூரணப்படலாம், கர்த்தருடைய வருகைக்கு ஆயத்தப்படலாம்.

> "நமக்கோ தேவன் அவைகளை தமது ஆவியினாலே வெளிப்படுத்தினார்"
>
> — 1 கொரி 2:10

## அறிவிப்புகள்

1. மணியார்டர் (Money order) கூப்பனில் அடிப்பாகத்தில் சந்தா எண்ணையும், முழுவிலாசத்தையும் எழுதவும். புதிய சந்தாதாரர் என்றால் முழு முகவரியையும் புதிய சந்தாதாரர் என்பதையும் குறிப்பிடவும்.

2. விலாசங்கள் மாறும் பொழுது உடனே எங்களுக்குத் தெரிவிக்கவும். தவறினால் பத்திரிக்கை உங்களுக்குக் கிடைப்பது தடைப்படும்.

3. பத்திரிக்கைக்குப் போதுமான கட்டணம் செலுத்தியே பத்திரிக்கை அனுப்பப்படுகிறது. Due (அதிகப்படியான கட்டணம்) கேட்டால் கொடுக்க வேண்டாம். பத்திரிக்கையை திருப்பி அனுப்பி விடவும். உடனடியாக எங்களுக்கு தகவல் தெரிவிக்கவும். அதற்கான நடவடிக்கை எடுப்போம்.

# வேதாகம ஸ்திரீகள்

## மரியாள் (MARY)

மிரியாம் என்பதும், மரியாள் என்பதும் ஒன்றே. மிரியாம் என்பது எபிரேய வார்த்தை. மரியாள் என்பது கிரேக்க வார்த்தை. புதிய ஏற்பாட்டில் மரியாள் என்று அழைக்கப்பட்ட ஆறு ஸ்திரீகள் உண்டு.

1. மகதலேனாள் மரியாள் (லூக் 8:2)
2. சின்ன யாக்கோபுக்கும், யோசேக்கும் தாயாகிய மரியாள் (மாற் 15:40)
3. இயேசுவின் தாயாகிய மரியாள் (மத் 1:18.)
4. லாசருவின் சகோதரியாகிய மரியாள் (லூக் 10:39, யோ 11:1-44)
5. மாற்கு என்ற பெயர் கொண்ட யோவானுடைய தாயாகிய மரியாள் (அப் 12:12)
6. ரோமாபுரி சபையைச் சேர்ந்த மரியாள் (ரோம 16:6).

### 1. மகதலேனாள் மரியாள்

மக்தலா என்னும் ஊர் கலிலேயா கடலுக்கு வடமேற்கில் இருக்கிறது. இந்த ஊரைச் சேர்ந்தவள் இந்த மரியாள் என்று தெரிகிறது. ஆனபடியினால் இவளுக்கு மகதலேனாள் மரியாள் என்று பெயர் வழங்கப்பட்டிருக்கலாம். இவளிடத்திலிருந்து 7 பிசாசுகளை கர்த்தர் துரத்தி இவளை சுகப்படுத்தினார். பின்பு இவள் இயேசுவுக்கும், சீஷர்களுக்கும் ஊழியம் செய்து வந்த ஸ்திரீகளில் ஒருத்தியாக இருந்தாள் என்று பார்க்கிறோம் (லூக் 8:2,3). நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து சிலுவையில் அறையப்பட்டதையும், அடக்கம் பண்ணப்பட்டதையும் இவள் பார்த்திருந்தாள் (மத் 27:55; மாற் 15:47; யோவா 19:25). லூக் 7ம் அதிகாரத்தில் கர்த்தருடைய பாதத்தில் பரிமள தைலம் பூசி அபிஷேகம் பண்ணின ஸ்திரீயும், மகதலேனாள் மரியாளும் ஒருவரல்ல. சிலர் மகதலேனாள் மரியாள் தான் அந்தப் பாவியான ஸ்திரீ என்று நம்புகிறார்கள் அது மகா தவறு. இயேசு கிறிஸ்து தன்னை பேய்களின் பிடியிலிருந்து விடுதலையாக்கி தன்னை இரட்சித்ததின் நிமித்தம் கர்த்தரில் அன்பு கூர்ந்து அவருக்குப் பணிவிடை செய்து வந்தாள். இயேசு கிறிஸ்து உயிர்த்தெழுந்தபின் முதல் முதல் மகதலேனா மரியாளுக்கே தரிசனமானார் என்று தெரிகிறது (மாற் 16:9).

அவர் உயிர்த்தெழுந்த செய்தியை சீஷர்களுக்கு முதல் முதல் அறிவித்ததும் இந்த மரியாளே (யோவா 20:18). கல்லறைக்கு அதிகாலையில் மற்ற ஸ்திரீகளோடு மகதலேனாள் இயேசுவின் சரீரத்திற்கு சுகந்த வர்க்கமிடும்படியாகச் சென்றிருந்தாள் (மத் 28:1, மாற் 16:1; லூக் 24:10) மகதலேனாள் மரியாள் முந்தி ஓடி கல்லறையில் பார்த்த பொழுது கல் புரட்டப்பட்டிருக்கிறதைக் கண்டு ஓடி சீஷர்களுக்கும், பேதுருவுக்கும், யோவானுக்கும் அறிவித்தாள் (யோவா 20: 1,2) பின்பு மற்ற ஸ்திரீகள் கல்லறையினிடத்தில் வந்து தேவதூதர்களைக் கண்டார்கள். பின்பு மகதலேனாள் மரியாள் கல்லறைக்கு அருகே கர்த்தரைக் கண்டாள். (யோவா 20:11-18) இவ்விதமாய் சீஷர்களில் இவளே முதல் முதல் இயேசுவைக் கண்டவள். கர்த்தரிடத்தில் அதிகமாய் அன்பு கூருகிறவர்களுக்கு தம்மை வெளிப்படுத்துகிறார் என்பதற்கு மகதலேனா மரியாள் ஒரு உதாரணமாகும்.

இயேசுவினிடத்தில் இருந்து நன்மையும், ஆசீர்வாதமும், விடுதலையும் பெற்றுக் கொண்ட எத்தனையோ ஸ்திரீகள் இவ்வுலகத்தில் உண்டு. அவர்களில் அநேகர் கர்த்தரிடத்தில் அன்பு கூறுவது இல்லை. கர்த்தரை சேவிப்பதுமில்லை. கர்த்தரால் புகழப்படும் சிலாக்கியத்தையும் இழந்து விடுகிறார்கள். ஆனால் தேவாசீர்வாதம் பெற்ற அநேக சகோதரிகள் விடுதலை பெற்ற சகோதரிகள் கர்த்தரை நேசித்து மகதலேனா மரியாளைப் போல் ஊழியம் செய்கிறார்கள். அவரை அறிவிக்க ஓடுகிறார்கள். அப்போஸ்தலருடைய ஆளுகையிலிருந்து ஒழுங்கும் கிரமமுமாக கர்த்தரை சேவித்து அப்போஸ்தலர்களுக்கு ஆக்கில்லா, பிரிஸ்கில்லாள் போல, மரியாளைப் போல உதவி

யாயிருந்து ஊழியம் செய்கிறார்கள் (ரோம 16:3,6).

தனித்தனியே தங்கள் இஷ்டப்படி ஊழியம் செய்யவில்லை. ஏனென்றால் அப்போஸ்தலனாகிய பவுல் சபையின் அஸ்திபார உபதேசங்களை எழுதும் பொழுது இயேசு கிறிஸ்து உயிர்த்தெழுந்து தரிசனமானதை குறிப்பிடும் பொழுது, "கிறிஸ்துவானவர் வேதவாக்கியங்களின்படி நமது பாவங்களுக்காக மரித்து அடக்கம் பண்ணப்பட்டு, வேதவாக்கியங்களின் படி மூன்றாம் நாளில் உயிர்த்தெழுந்து கேபாவுக்கும், (அப்போஸ்தலனாகிய பேதுரு) பின்பு பன்னிருவருக்கும் தரிசனமானார்" என்றே குறிப்பிட்டுள்ளார் (1கொரி15 ,1-5). ஸ்திரீகளுக்குண்டான தரிசனம் முக்கியமல்ல. கர்த்தர் ஸ்திரீகளுக்கு கட்டளையும் கொடுக்கவில்லை. அவரால் முன் நியமிக்கப்பட்டவர்களும் உயிர்த்தெழுந்த கர்த்தரை தரிசித்து அவரோடு புசித்துக் குடித்தவர்களுமான அப்போஸ்தலருக்கே கட்டளை கொடுக்கப்பட்டது. (அப் 10:40-42;1:1-3).

---

அந்த ஸ்திரீயை நோக்கி: உன் சொல்லினிமித்தம் அல்ல, அவருடைய உபதேசத்தை நாங்களே கேட்டு, அவர் மெய்யாய்க் கிறிஸ்துவாகிய உலக இரட்சகர் என்று அறிந்து விசுவாசிக்கிறோம் என்றார்கள் — யோவான் 4:42

---

சிறுவர் பகுதி

## புது சிருஷ்டி

ஒரு கிறிஸ்தவ தம்பதிகளின் ஏகப் புதல்வன் மனோவா. மனோவா பணக்காரக் குடும்பத்தில் பிறந்தபடியாலும் ஏகப் புதல்வனாக இருந்த படியினாலும் அவனை மிகவும் செல்லமாக வளர்த்து விட்டனர். அவன் தனது இளமைப் பருவத்தைக் கடந்து, வாலிப பிராயத்தை அடைந்தான். மகன் வாலிபனாக ஆகி விட்டபடியினால், பெற்றோர்களுக்கு மிகவும் சந்தோஷம். எங்கள் மகனைப் பற்றி கவலையில்லை, எங்களது அந்திய காலத்தில் எங்களைப்பார்த்துக் கொள்ளுவான் என எண்ணி மகிழ்ந்தனர். தகப்பனார் மகனைக் காணும் போதெல்லாம் சந்தோஷப்பட்டார்.

எனது வியாபாரத்திலும் மற்றும் எல்லாவற்றிலும், உறுதுணையாக இருப்பான். இனி எனக்கு ஓய்வு கிடைத்து விடும் இன்னும் இரண்டு, மூன்று ஆண்டுக்குள் கல்லூரிப் படிப்பை முடித்து விட்டு எனக்குத் துணையாக இருப்பான் என எண்ணி, தினமும் மகிழ்ந்தார் தனது குமாரனைக் காணும் போதெல்லாம் சந்தோஷப்பட்டார்.

மனோவா கல்லூரிக்குள் நுழைந்த முதல் ஆண்டில் மிகவும் நல்லவனாகத்தான் வாழ்ந்து வந்தான். கல்லூரி செல்வதற்காக அவனது பெற்றோர் ஒரு மோட்டார் சைக்கிள் ஒன்றும் வாங்கிக் கொடுத்தனர். மனோவா வீட்டைவிட்டு வெளியில் புறப்படும் போது மிகவும் சமர்த்தாக அமைதியாக மோட்டார் சைக்கிளில் புறப்படுவான் வீட்டை விட்டு சிறிது தூரம் வந்த பின்னர் எவ்வளவு அதிக பட்ச வேகத்தில் வாகனத்தை செலுத்த வேண்டுமோ, அவ்வளவு விரைவாக செலுத்துவான். அனேகமுறை விபத்துக்களும் ஏற்பட்டது. ஆனாலும் கர்த்தர் அனேக முறை காத்துக் கொண்டார். அனேகமுறை பெற்றோர்கள் அறிவுரை கூறி வந்தனர். ஆனாலும் கீழ்ப்படிய வில்லை. மனோவா, அவனது தாயார் தினமும் அறிவுரை கூறியும் அதையும் அலட்சியப் படுத்தி வந்தான். அம்மா உங்களுக்குத் தினமும் இந்தப் பாட்டுத்தானோ என அம்மாவை எதிர்த்து வந்தான்.

மனோவா கல்லூரி வாழ்க்கையின் இரண்டாவது ஆண்டில் அவனது ஆகாத தோழர்கள் மூலம் அனேக கெட்டப் பழக்கங்களுக்கு அடிமையாக ஆரம்பித்தான். அப்பொழுதும் பெற்றோர்கள் கண்டித்தனர். பெற்றோர்களின் அறிவுரை "செவிடன் காதில் ஊதிய சங்கு போல்" ஆகிவிட்டது. செவி சாய்க்காமல் தனது மனம் போல் போக ஆரம்பித்து விட்டான். கல்லூரியில் உள்ள சக மாணவர்களின் கெட்ட பழக்கத்திற்கு அடிமையாகி விட்டான். மனோவாவின் பெற்றோர்களால் ஒன்றும் செய்ய முடியாத படியால், கர்த்த

சீடத்தில் விண்ணப்பிக்க ஆரம்பித்தனர். 'கர்த்தாவே எனது மகனை சிட்சித்து, தண்டித்தாவது சீர் படுத்தும் என தொடர்ந்து மனோவாவிற்காக விண்ணப்பம் பண்ணிக் கொண்டிருந்தனர்.

ஒருநாள் மனோவா வழக்கத்திற்கு மாறாக அதிகமான போதை வஸ்து சாப்பிட்டு விட்டு, தனது சக தோழனுடன் மோட்டார் சைக்கிளில் தனது வழக்கத்தின்படி வேகமாக வந்து கொண்டிருந்தான். இவனுக்கு எதிர் திசையிலிருந்து வேகமாக வந்த லாரி ஒன்றுடன் மோதி விட்டான். மோதிய வேகத்தில் மோட்டார் சைக்கிளில் இருந்த இருவரும் தூக்கி எறியப்பட்டனர், மனோவாவினுடைய ஒரு காலின் எலும்பும், ஒரு கையின் எலும்பும் முறிந்து விட்டது. ஆனால் மனோவாவின் தோழன் அந்த இடத்திலேயே பரிதாபமாக உயிரிழந்தான். விபத்தைப் பார்த்தவர்கள் மனோவாவை உடனடியாக மருத்துவமனையில் சேர்த்து விட்டனர், மனோவாவைக் குறித்து விசாரித்து அறிந்து அவனது வீட்டிற்குச் செய்தி அனுப்பினார்கள்.

மாலை ஜெபவேளையில் மனோவாவின் தாயார் மனோவாவிற்காக விண்ணப்பம் செய்து கொண்டிருந்தனர். எனது மகனை திருத்தும், சிட்சித்தாவது திருத்தும் என விண்ணப்பம் செய்து ஜெபத்தை முடித்து விட்டு வேதம் வாசிக்க அமர்ந்திருந்தனர், அப்பொழுது கதவு தட்டப்படும் சத்தம் கேட்டு திறந்தனர். ஒரு புதிய மனிதர் இது தான் மனோவாவின் வீடா என விசாரித்து விட்டு, செய்தியைத் தெரிவித்தார். உங்களது மகன் விபத்திற்குள்ளானதால் மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டுள்ளார் என்று கூறினார். உடனே மனோவாவின் பெற்றோர்கள் மருத்துவமனைக்குச் சென்றனர். அங்கு மனோவாவின் கை, காலில் பேண்டேஜ் போடப்பட்டு படுக்கையில் இருந்தான். அவன் மயக்க நிலையில் இருந்தான். அவனது மயக்கம்தெளியும் மட்டும் அங்கு காத்திருந்தனர். மயக்கம் தெளிந்து கண் விழித்து தன் பெற்றோரைப் பார்த்து

மனோவா கண்ணீர் விட்டு அழுது புலம்பினான். அப்பா, அம்மா என்னை மன்னியுங்கள். நீங்கள் எனக்கு எவ்வளவோ ஆலோசனை தந்தீர்கள், எனக்கு தினமும் அறிவுரை கூறினீர்கள். நான் இளமையின் துடுக்கினால் அவைகளுக்கு செவி சாய்க்காத படியினால் கர்த்தர் எனக்கு சரியான தண்டனை தந்துவிட்டார். நான் உங்களுக்கு இவ்வளவு நாட்களும் ஒரு மன நோவாக இருந்ததற்காய் என்னை மன்னியுங்கள். இனிமேல் நான் அப்படி இருக்க மாட்டேன். கர்த்தருக்கும், உங்களுக்கும் கீழ்ப்படித்திருப்பேன் என அழுதான். பெற்றோர்கள் அவனைத் தேற்றினர். அவனது நண்பன் விபத்தில் உயிரிழந்து விட்டான். ஆனால் கர்த்தர் அவனது பெற்றோரின் ஜெபத்தைக் கேட்டு மனோவாவிற்கு உயிர் பிச்சை கொடுத்ததற்காக கர்த்தருக்கு நன்றி செலுத்தினர்.

சிறிது நாட்களுக்குப் பின் மனோவா பூரண குணமடைந்து மருத்துவமனையிலிருந்து வீடு திரும்பினான். அதுமுதற்கொண்டு கர்த்தருக்கும், பெற்றோருக்கும் கீழ்ப்படிந்து கர்த்தரின் பிரமாணங்கள் யாவையும் கைக்கொண்டு பெற்றோருக்கு உறுதுணையாக இருந்து வந்தான்.

பிள்ளைகளே, நாமும் கடந்துபோன ஆண்டில் கர்த்தருக்கும், பெற்றோர்களுக்கும் அநேக வேளையில் கீழ்ப்படியாமல் நடந்திருப்போம். நாம் நமது கீழ்ப்படியாமையை விட்டு விட்டு, இந்த ஆண்டு துவக்கத்திலிருந்து கர்த்தருக்கும், பெற்றோர்களுக்கும் கீழ்ப்படிந்து, கர்த்தரின் பிரமாணங்களை கைக்கொண்டு கர்த்தருக்கும், பெற்றோர்களுக்கும் மனமகிழ்ச்சியை உண்டாக்குவோமாக.

கடந்த ஆண்டு மனோவா மனநோவை உண்டாக்கியது போல் இல்லாமல் புதிய மனோவாவாக இந்த புதிய ஆண்டின் துவக்கத்திலிருந்து ஜீவிப்போமாக.

''என் மகனே, உன் தகப்பன் கற்பனையைக் காத்துக்கொள் உன் தாயின் போதகத்தைத் தள்ளாதே'' -நீதி 6:20.

---

''என் மகனே, அறிவைத்தரும் வார்த்தைகளை விட்டு விலகச் செய்யும் போதகங்களை நீ கேளாதே".

—நீதி 19: 27

# சாட்சி

என்னுடைய பெயர் C. அமல்ராஜ். கோவில்பட்டி தாலுகாவிலுள்ள வெங்கடாசலபுரம் என்பது என்னுடைய ஊர். புதிய எருசலேம் சபையின் மூலமாக கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவை பற்றி கேள்விப்பட்டு, அவரை என்னுடைய சொந்த இரட்சகராகவும், ஆண்டவராகவும் ஏற்றுக் கொண்டு இரட்சிப்பை பெற்றவன் நான். கோவில்பட்டி புதியஎருசலேம் சபையில் அங்கமாக இருக்கின்றேன். கிறிஸ்துவுக்குள்ளான ஒரு சகோதரியை கர்த்தர் எனக்குத் துணையாகத் தந்தார். துணைவியின் பெயர் சுசீலா. என் மகனுடைய பெயர் சிமியோன். என்னுடைய வாழ்க்கையில் கர்த்தர் நடப்பித்த அதிசயங்களில் மிகப் பெரிய அதிசயங்களில் ஒன்றை சாட்சியாக சொல்லுகிறேன் : கேளுங்கள். 16-7-87-ம் தேதியன்று எனக்கு ஒரு பயங்கரமான ஆபத்து நேரிட்டது. அதிலிருந்து தேவன் என்னை விடுவித்துக் காத்து எனக்கு உயிர் கொடுத்தார் அதற்காக என் தேவனுக்கு என் உயிர் உள்ள மட்டும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளேன். அதன் விபரம் பின் வருமாறு.

16-7-87-ம் தேதியன்று காலை 10 மணிக்கு என் வேலை விஷயமாக வெளியே கடந்து சென்றுவிட்டு மதியம் 1 மணிக்கு வீட்டுக்கு வந்தேன். வந்தவுடன் என் சகோதரன் அன்னதுரை துணிகளை இஸ்திரி செய்ய வேண்டும் என்றான். உடனே இஸ்திரி (Iron Box) பெட்டியையும், வயரையும் எடுத்து அவன் கையில் கொடுத்துவிட்டு குளிக்கச் சென்று விட்டு 1-45 மணிக்கு வீட்டுக்கு வந்தேன். வந்தவுடன் துணிகளை இஸ்திரி பண்ணி விட்டாயா என்று சகோதரனிடம் கேட்டேன். இஸ்திரி பண்ணவில்லை என்றான். ஏன் என்று கேட்டேன்? இஸ்திரி பெட்டி சூடே ஆகவில்லை. நானும் 45 நிமிடம் சரிசெய்து பார்த்தேன் இஸ்திரி பெட்டி வேலை செய்யவில்லை என்றான். உடனே நான் கூறினேன். நேற்றைய தினத்தில் நல்லமுறையில் சூடான பெட்டி இன்று ஏன் சூடாகவில்லை என்று சொல்லிக் கொண்டே நான் இருக்கும் வீட்டுக்கு பெட்டியை எடுத்து வந்தேன். உடனே இஸ்திரிப் பெட்டியில் வயரைப் பொருத்தி பிளக் பாய்ண்டில் பிளக்கைப் பொருத்தி ON-செய்து விட்டேன். தற்சமயம் இஸ்திரி பெட்டி மேஜை மீது தெற்கு முகமாக இருக்கிறது. சிறிது நேரம் கழித்து இஸ்திரிப் பெட்டியைத் தொட்டுப் பார்த்தேன். லேசான சூடு இருந்தது. பின்னர் கொஞ்ச நேரம் (2 நிமிடம் கழித்து) இஸ்திரிபெட்டியை தொட்டுப் பார்த்தேன். தொட்ட நேரத்தில் தானே என் வலது கையை இஸ்திரிப் பெட்டி பற்றிக்கொண்டது ஹோல்டரில் உள்ள ஒரு வயர் எப்படியோ விட்டு இருந்திருக்கிறது அந்த வயர் நேராக இஸ்திரிப் பெட்டியில் ஒட்டி இருந்த காரணத்தால் பெட்டி முழுவதும் மின்சாரம் பரவி இருந்திருக்கிறது, என்னைப் பற்றிக்கொண்டது.

இந்த நேரத்தில் என் மனைவி துவைத்த துணிகளை வீட்டிற்கு வெளியே காயப் போட்டுக் கொண்டிருக்கிறாள். மகன் சிமியோன் நன்றாகத் தூங்கிக் கொண்டு இருக்கிறான். அப்பா அவர்களுடைய வீட்டில் கட்டிலில் தூங்கிக் கொண்டு இருக்கிறார்கள். அன்னதுரையும், அவன் மனைவி செல்வியும் சாப்பிட்டுக் கொண்டு இருக்கிறார்கள்.

அநாதையாக மின்சாரத்தில் அகப்பட்டுக் கொண்டேன். மின்சாரம் என்னை இழுக்கின்றது. மின்சாரத்திலிருந்து விடுபட நான் இழுக்கின்றேன். மின்சாரத்திற்கும் எனக்கும் பயங்கரமான சண்டை நடக்கின்றது. ஒரு பக்கம் நான் இழுக்க இன்னொரு பக்கம் மின்சாரம் இழுக்க இப்படியாக சரீரத்தின் சுய நினைவுகள், அசைவுகள் சில நிமிடத்திற்குள்ளாக நின்றுவிட்டன. ஒன்றும் பேச முடியாத நிலையிலும், சத்தம் போட முடியாமலும் இருக்கிறேன். என்னுடைய வாயிலிருந்து புகை வருவது என் கண்களுக்குத் தெரிகிறது. இன்னும் சில நிமிடத்திற்குள்ளாக மரித்து விடுவோமே என்று எண்ணுகிறேன். அதே சமயத்தில் என் உள்ளத்தில் இக்கொன்று உதயமாகின்றது. நான் இரட்சிக்கப்பட்டிருக்

கிறேன். ஆண்டவர் நினைத்தால் நாம் பிழைத்து விடுவோம். அவர் நிச்சயமாக உதவி செய்வார் என்று எண்ணிக் கொண்டே என் உள்ளத்திற்குள்ளாக ஆண்டவரே! ஆண்டவரே!! ஆண்டவரே!!! என்று சொல்லிக் கொண்டேயிருக்கிறேன்! என் வீட்டின் சுவரில் நான்கு திசைக்கும் நான்கு வசனங்கள் பொருத்தியுள்ளேன் அவை

1. கிழக்கு சுவரில்: தேவன் உன்னோடு இருக்கிறார் (I சாமு 10:7).

2. தெற்கு சுவரில்: கர்த்தர் நித்தமும் உன்னை நடத்தி உன் ஆத்துமாவை திருப்தியாக்குவார் (ஏசா 58:11).

3. மேற்கு சுவரில்: கர்த்தர் தேவபக்தியுள்ளவர்களை சோதனையினின்று இரட்சிக்க அறிந்திருக்கிறார் (II பேது 2:9).

4. வடக்கு சுவரில்: தேவன் நமக்கு நித்திய ஜீவனை தந்திருக்கிறார் (I யோவா 5:11).

இந்த நான்கு வசனங்களும் என் கண்களுக்கு முன்பாக இருப்பது போன்று எனக்கு காட்சியளிக்கிறது. அவைகள் என்னை உயிர்ப்பித்தது என்னோடு பேசிக் கொண்டேயிருக்கிறது. ஒரு நொடிக்கு ஒரு நொடி என் சரீரம் நீண்டு கொண்டே இருப்பது எனக்கு தெரிகிறது. பயங்கரமான போராட்டத்தில் போராடிக் கொண்டிருக்கிறேன். இந்த நேரத்தில் வட திசையிலிருந்து ஒரு வெண்வஸ்திரம் தரித்த பெரியவர் பறந்து வருவது போன்று என் கண்களுக்குத் தெரிகிறது. வேகமாகப் பறந்து வந்து வீட்டினுள் நுழைந்து பிளக்கை பிடுங்கி விட்டு, பின்னர் இஸ்திரிப் பெட்டியில் உள்ள ஹோல்டரையும் பிடுங்கி வயரை சுற்றி ஒரு மூலையில் எறிகின்றது எனக்குத் தெரிகிறது. இஸ்திரிப்பெட்டியையும் திருப்பி வைத்து விட்டு மீண்டும் வட திசையை நோக்கி பறந்து சென்று விட்டார். அதன் பின்னர் என்னால் நிற்க முடியவில்லை. ஐயா! என்ற பயங்கர சத்தம் போட்டு கீழே விழுந்து விட்டேன். விழுந்த பின்னர் என்ன நடந்தது என்று எனக்குத் தெரியாது. ஐயா என்று போட்ட சத்தம், துணி காய போட்டுக் கொண்டிருந்த என் மனைவிக்குக் கேட்டு ஓடி வந்து என்னை தூக்கி உட்கார வைத்திருக்கிறாள். அதன் பின் என் தகப்பனாரும், என் தாயாரும், சகோதரனும், சகோதரன் மனைவியும், ஓடி வந்து என் மீது விழுந்து அழுது கொண்டேயிருக்கிறார்கள்.

சிறிது நேரம் கழித்து "டப்" என்று ஒரு சத்தம் கேட்டது. அதன் பின்னர் என் சரீரத்தில் உயிர் வருவது எனக்குத் தெரிந்தது. என் கண்களைத் திறந்து பார்த்தேன். என் மீது அனைவரும் விழுந்து அழுது கொண்டிருப்பதைப் பார்த்தேன். உடனே அழ வேண்டாம் எனக்கு ஒன்றும் செய்யவில்லை. இப்போது நான் நன்றாக இருக்கிறேன் என்று அவர்களிடம் ஆறுதலான வார்த்தைகளைக் கூறினேன். பின்னர் சிறிது நேரம் கழித்து நடந்த சம்பவங்களை அனைத்தையும் கூறினேன். அவர்கள் மிகுந்த சந்தோசம் அடைந்தார்கள். உண்மையாகவே நம் தேவன் உயிரோடே இருக்கின்றார் என்று ஒப்புக்கொண்டார்கள். எனக்கு ஏற்பட்ட பயங்கர ஆபத்திலிருந்து என்னை விடுதலை செய்யும்படியாக பரிசுத்த ஆவியானவர் கடந்து வந்து எனக்கு உதவி செய்து விட்டு கடந்து செல்வதை, என் கண்களால் கண்டேன். அதற்காக என் தேவாதி தேவனுக்குக் கோடாகோடி நன்றி ஸ்துதி ஸ்தோத்திரங்களை ஏறெடுத்துக் கொள்கிறேன். எனக்கு மறுபடியும் ஜீவன் தந்த தேவனுக்கு ஸ்தோத்திரம் அல்லேலூயா!

"தேவனுக்குப் பயந்தவர்களே நீங்கள் எல்லோரும் வந்து கேளுங்கள்: அவர் என் ஆத்துமாவுக்குச் செய்ததைச் சொல்லுவேன்"-சங் 66:16.

## ஞானஸ்நானம்

சேலம் "புதிய எருசலேம் சபை"யில் 11 பேர்கள் திருமுழுக்குப் பெற்று திருச்சபையின் அங்கமாகச் சேர்த்துக் கொள்ளப்பட்டார்கள்.

(தொடர்ச்சி)

# புதிய எருசலேம் சபை நடபடிகளில் சில

இந்த சங்கரன் கோவில் வட்டாரங்களில் கர்த்தருடைய வேலை வளருகிறதைக் கண்ட சாத்தான் இந்த வேலையைத் தடைசெய்துவிட வேண்டும் என்ற எண்ணத்தோடு பலவிதமான போராட்டங்களை உண்டு பண்ணினான். முக்கியமாக என்னையும் உடன் ஊழியரையும் அந்த பிரதேசங்களுக்கு வரவிடாமல் தடை செய்ய வேண்டும். சந்தர்ப்பம் கிடைத்தால் எங்களை கொன்றுவிட வேண்டும் என்றும் பெரிய வேலைகள் செய்யப்பட்டது. "உன்னை அனுப்புகிறவர் நான் அல்லவா" (நியா 6:14) என்று கிதியோனோடே அன்று சொன்ன ஆண்டவர் இன்றும் எங்களோடு பேசி தம்முடைய காரியமாய் எங்களை அனுப்ப வேண்டிய இடத்துக்கு எங்களை அனுப்பி வருகிறார். அதற்காக கர்த்தரை ஸ்துதிக்கிறோம்.

நாங்கள் சங்கரன் கோவில் வட்டாரத்துக்குப் புறப்படுவதற்காக கர்த்தரிடம் உத்தரவு பெற்று இன்ன நாளில் நாங்கள் அங்கு வருகிறோம் என்று அங்குள்ள ஊழியருக்கு கடிதம் எழுதி அவர் அங்குள்ள விசுவாசிகளுக்கு செய்தி அறிவிப்பது வழக்கம். இப்படிப்பட்ட நாட்களில் அங்குள்ள மந்திரவாதி ஒருவர் தன்னிடமுள்ள தீய சக்திகளை அனுப்பி எங்களுடைய பிரயாணங்களைத் தடைசெய்யப் பிரயாசப் படுவதுண்டு. ஆனால் அவைகள் எங்கேயிருந்தது? யாரால் அனுப்பப்படுகிறது என்பதை நாங்கள் அறிந்து கொண்டு அவைகளைக் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் கடிந்து துரத்தி விடுவதுண்டு.

இப்படிக் காலங்கள் கடந்து போயது. சில ஆண்டுகளுக்கு பிறகு நாங்கள் ஒரு நாள் மதுரை ஜில்லா ஊழியத்தை முடித்துக் கொண்டு இந்த சங்கரன் கோயில் வட்டத்திலுள்ள துரைசாமிபுரம் சபைக்கு வந்து கொண்டிருந்தோம். நாங்கள் ஸ்ரீவில்லிபுத்தூரிலிருந்து சிவகிரி வழியாக இராயகிரி வந்து இந்த துரைசாமிபுரத்துக்கு வந்தோம். ஒருநாளும் இந்தப் பாதை வழியாக நாங்கள் வந்ததில்லை. அன்று ஆவியானவர் எங்களை இந்தப் பாதை வழியாக அழைத்து வந்தார். இராயகிரி வந்ததும் இரவு சுமார் 9-30 மணியிருக்கும். அதற்கு அப்புறம் துரைசாமியாபுரம் செல்ல பஸ் கிடையாது என்று அறிந்து கொண்டோம். அங்கிருந்து சுமார் 3 கிலோ மீட்டர் தூரத்தில் இந்த துரைசாமிபுரம் உள்ளது. இரவு 10 மணிக்குமேல் நாங்கள் எங்கள் கைப்பைகளையும் தூக்கிக் கொண்டு கால்நடையாய்ச் சென்றோம். அமாவாசை தினம் மிகுந்த இருட்டாகவே இருந்தது. கர்த்தரை மகிமைபடுத்திக்கொண்டே கால்நடையாக சென்று கொண்டு இருந்தோம். பாதி தூரம் நடந்து வந்ததும் எங்கள் இருவருக்குள்ளும் கர்த்தருடைய வல்லமை இறங்கினது (நியா 14,6) இருவரும் அதற்கு மேல் நடக்க முடியாதபடி நின்று விட்டோம். வலது புறத்தில் உங்களைத் தாக்குவதற்காக நிறுத்தியிருக்கும் தீய சக்தியை அதட்டுங்கள் என்று கர்த்தருடைய ஆவியானவர் பேசினார். உடனே கர்த்தராகிய இயேசுவின் நாமத்தினால் அந்த ஆவியைக் கடிந்து கொண்டோம். அந்த ஆவி அந்த இடத்தை விட்டு உடனே வேகமாய் கடந்து போய் எங்களுக்கு விரோதமாய் அந்த ஆவியை அனுப்பின மந்திரவாதியைப் போய் ஒரு இமைப் பொழுதில் தாக்கிவிட்டது. அந்த மந்திரவாதியின் அபயக்குரல் ஆவிக்குள்ளாயிருந்த எங்கள் காதுகளில் தொனித்தது. மறுபடி நாங்கள் கர்த்தருடைய பெலத்தினால் தொடர்ந்து பிரயாணம் பண்ணி இரவு சுமார் 11 மணிக்கு துரைசாமிபுரம் வந்து சேர்ந்தோம் அங்குள்ள ஊழியர் ராஜசுத்தரிடம் நடந்த சம்பவத்தைக் கூறினோம். மந்திரவாதி தான் பயன்படுத்திய சக்தியினாலேயே தாக்கப்பட்டு விட்டார். காலையில் செய்தி கிடைக்கும் என்று கூறினோம்.

மறுநாள் பரிசுத்த ஆராதனை நடந்தது. அன்று மாலையில் மந்திரவாதியை மருத்துவமனையில் சேர்த்திருப்பதாக செய்தி வந்தது. சில நாட்களுக்குள்ளாக மரித்துப் போனார். பிசாசானவன் கொல்லவும் அழிக்கவுமே

வருகிறான். இதை அறியாத அநேக ஆயிரம் மக்கள் பிசாசையே தெய்வமென்றெண்ணி வணங்குகிறார்கள்.

நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவே பிசாசின் வல்லமையில் அகப்பட்ட யாவரையும் விடுதலை செய்கிறார். (அப் 10:38)

(தொடரும்)

Pastor S. Sundarraj Vallioor.

சர்ப்பங்களையும், தேள்களையும் மிதிக்கவும், சத்துருவினுடைய சகல வல்லமையையும் மேற்கொள்ளவும் உங்களுக்கு அதிகாரம் கொடுக்கிறேன், ஒன்றும் உங்களைச் சேதப் படுத்த மாட்டாது—லூக் 10:19

# அந்தோ பரிதாபம்

வருத்தப்பட்டு பாரம் சுமந்து தவிக்கிறவர்கள், இளைப்பாறுதல் அடைந்து கொள்ளும்படியான புதிதும் ஜீவனுமான மார்க்கத்தை கர்த்தராகிய இயேசு கிறிஸ்து உண்டு பண்ணினார். இதைக் கண்டு கொள்ள முடியாமல் நித்திய நரகத்தை நோக்கி கடந்து செல்பவர்கள் திரள் கோடி பேர். இந்த மார்க்கத்தை அநேகர் தேடியும் கண்டு கொள்ள முடியாதவர்களாயிருக்கிறார்கள். இயேசு சொன்னபடி அதைக் கண்டு பிடித்தவர்கள் சிலரே. ஒருவன் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசித்து, அவரை சொந்த இரட்சகராக ஏற்றுக்கொண்டு பாவமன்னிப்புக்கென்று ஞானஸ்நானம் பெற்று, மீட்கப்படும் நாளுக்கென்று முத்திரையாக பரிசுத்தாவியை பெற்று, திருச்சபையின் அங்கமாக இருக்கிறான் என்றால், அவன் இந்த உலகத்திலே ஒரு பெரும் பாக்கியவானே. ஏனெனில் சர்வ லோகத்தையும் படைத்த ஆண்டவர் அவனை தனது பிள்ளையாகப் பாவித்து அன்பு செலுத்தி அவன் மீது கண்ணோக்கமாயிருக்கிறார். இப்பேர்பட்ட பாக்கியம் பெற்றவன், திருச்சபையை விட்டு வெளியேறவும், கர்த்தராகிய இயேசுவினால் பெற்ற இரட்சிப்பை இழந்து பாவம் செய்ய துணிகரம் கொண்டு, மறுபடியும் பழைய வாழ்க்கைக்கு போக விரும்பினால் கீழ்காணும் இறைவாக்கு இப்படி இயம்புகிறது.

(1) அறியாத காலங்களை தேவன் காணாதவர் போல் இருக்கிறார். தேவனுடைய சித்தத்தை அறிந்தும் அதைச் செய்யாதபடி, அசட்டை பண்ணி தூரப்பட்டு போகிறவன் அநேக அடிகள் அடிக்கப்படுவான் (லூக் 12 : 47).

(2) இவ்வளவு காலம் உன்னை அநேகர் Brother, Brother என்று சொல்லி சகோதர பாசம் காட்டியிருக்க, நீ விபச்சாரக்காரனாவது, விக்கிரகாராதனைக்காரனாவது, கொள்ளைக்காரனாவது, வெறியனாவது, பொருளாசைக்காரனாவது மாறிப்போனால் அன்பின் ஐக்கியம் உடைவுபட்டு தேவனுக்குப் பயந்த மெய்யன்புள்ளவர்கள் உன்னை ஒதுக்கி, உன்னுடன் உறவை முறித்து உன்னை புறம்பாக்கிப் போட நேரிடும் (1 கொரி 5 : 11).

(3) சாத்தான் உன்னைப் பிடித்திருந்த நாள் முன்பு பாவம் செய்து வந்தாய். இயேசுவண்டை வந்ததால் சாத்தான் விலகிப் போய் விட்டான் மறுபடியும் நீ பழைய வாழ்க்கைக்குப் போக முற்படுவாயாகில், அநேக அசுத்த ஆவிகள் உன்னில் புகுந்து விடும்; நீ பெரும் பாவியாய், மிகவும் அசுத்தனாகி சீயென்று இகழப்படுவாய். உன் பின்னிலைமை முன்னிலைமையைக் காட்டிலும் அதிகக் கேடுள்ளதாயிருக்கும் (லூக் 11 : 24-26).

(4) நீதியின் மார்க்கத்தை அறிந்த பின்பு அதை விட்டு விலகிப் போனால் நீ மனிதன் என்று எண்ணிக் கொண்டாலும் தேவன் உன்னை நாய் போன்றும், பன்றி போன்றும் பார்க்கிறார். சீ நாயே, பன்றியே

என்றால் எப்படி இருக்கும் (II பேதுரு 2: 21,22).

(5) சத்தியத்தை அறிகிற அறிவை அடைந்த பின்பும் நீ மனப்பூர்வமாய் பாவம் செய்கிறபடியால், இயேசுவின் இரத்தம் உனக்குப் பிரயோஜனப்படாமல், இறைவனுடைய கோபாக்கினையும், நியாயத்தீர்ப்பும் உனக்குக் கிடைக்கும் (எபி 10 : 26, 27).

(6) மறுபடியும் மனந்திரும்பி குணப்பட உனக்கு வாய்ப்பு கிடைக்காமலேயே போய் விட வாய்ப்பு உண்டு. சுட்டெரிக்கப்படுவதே உன் முடிவாக இருக்கலாம் (எபி 6 : 5-8).

(7) நீ பின்வாங்கிப் போவாயானால தேவன் உன்னை வெறுப்பார் (எபி 10 : 38). தேவபாதுகாவல் நீங்கிப் போகும். வேலியில்லா பயிர்போல் நீ நாசமாவாய்.

ஆகையால் பிரியமானவனே, இக்கேடுகள் உனக்கு வராதிருக்க சத்தியத்தில் நிலைத்திரு. திருச்சபையில் நிலைத்திரு. உன் இரட்சிப்பைக் காத்துக்கொள். உன் ஆத்துமா ஈடேறப் பிரயாசப்படு. நீ கெட்டுப் போகாமல் பரலோகம் செல்லவே இறைவன் சித்தமாயிருக்கிறார். உன் ஆத்துமா சாகாமல் வாழட்டும்.

## உங்களுக்கு வேண்டாம் வழுவிப் போகிற இருதயம்

தேவன், நாம் தம்முடைய குமாரனுடைய சாயலுக்கு ஒப்பாயிருக்கும்படி நம்மை முன் குறித்தார். நம்மை அழைத்தார். அவருடைய அழைப்பை ஏற்று அவரிடம் வந்த நாம் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் விலையேறப்பெற்ற இரத்தத்தால் கழுவி சுத்திகரிக்கப்பட்டோம். நீதிமான்களாக்கப்பட்டோம். விசுவாசிகளானோம் பரிசுத்தவான்களாக அவருடைய சரீரமாகிய சபையில் இருக்கிறோம். சபையில் நிலைத்திருந்து சீர் பொருந்தி கிறிஸ்துவின் நிறைவான வளர்ச்சியின் அளவுக்குத்தக்க பூரண புருஷராகி தேவனுக்கு முன்பாக நிற்க வேண்டும் என்பது இறை சித்தம் (ரோம 8:30; யோவா 1:16; எபே 4:11,12).

ஒரு மனிதனை கிறிஸ்துவுக்குள் நிலை நிறுத்துகிறது அவருடைய உபதேசமே. தேவனுடைய வார்த்தை அல்லது கட்டளை ஒரு மனிதனுக்குக் கொடுக்கப்படும் போது அதை அவன் கைக்கொள்வானானால் அவன் தன்னைச் சீர் பொருத்துவான், தேவனை கிட்டிச் சேர்வான். எவன் ஒருவன் தேவனுடைய கட்டளைகளுக்கு கீழ்ப்படியும்படி தன்னை தாழ்த்தாமல், ஒப்புக்கொடாமல் இருக்கிறானோ அவனே வழுவிப் போகிற இருதயமுடையவனாக இருக்கிறான். அவன் தன்னை சீர்படுத்திக்கொள்ளும்படி கர்த்தர் அவனுக்குத் தவணை கொடுக்கிறார். ஒவ்வொருவனும் சீர்படும்படி நீடிய பொறுமை உள்ளவராய் அவனுக்குக் காலம் கொடுக்கிறார்.

தசமபாகம் செலுத்த வேண்டும் என்று ஒருவன் அறிந்திருந்தபோதிலும் அதை செலுத்த முழு மனதோடே தன்னை ஒப்புக்கொடாமல் செலுத்துவோம், செலுத்தலாம் என்று வெளிப்படையாய் எண்ணிக்கொண்டு செலுத்தாமலேயே இருக்கிறவர்கள் இருதயம் வழுவிப்போகிற இருதயமுடையவர்களாகும்.

தகாத எண்ணத்தை, உறவை விட்டுவிட விரும்பாமல் தகாத காரியத்தை செய்துகொண்டே இருக்கிறவன் வழுவிப் போகிற இருதயமுடையவன்.

கீழ்த்தரமான பழக்க வழக்கங்களை விடாமலே பற்றிப்பிடித்துக் கொண்டிருக்கிறவர்களும் வழுவிப் போகிற இருதயமுடையவர்கள்.

இப்படிப் பட்டவர்கள் தேவசபையில் இருக்கலாம். அபிஷேகம் பெற்று அந்நிய பாஷையும் பேசலாம், வெளிப்படுத்தலும் பெறலாம், கிருபைவரங்களும் செயல்படலாம். இவைகளை எண்ணி ஓ! கர்த்தர் நம்மோடேதான் இருக்கிறாரே என்று அநேகர் எண்ணி ஏமாந்து போவதுண்டு.

இஸ்ரவேல் ஜனங்களை கர்த்தர் எகிப்திலிருந்து அழைத்து வந்து நாற்பது வருஷம் அவர்களுக்குத் தம்முடைய வல்லமையான செய்கைகளைக் காண்பித்து வந்தார். அவருடைய மகா பெரிய செயல்களை கண்ட போதும், அவருடைய கட்டளைகளை மீறி

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் - 50 ★ FEBRUARY-1988



"புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ரெ)ன்று நீங்கள் அறியீர்களே.... விழித்திருங்கள். உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

மாற்கு 13 : 35-37

**EDITOR : CHIEF PASTOR N. LAZAR**

BOMBAY. INDIA.

# ஆசிரியர் உரை

மனிதன் தேவனால் உண்டாக்கப்பட்டான். தேவனுக்காக உண்டாக்கப்பட்டான். தேவ சித்தம் செய்வதே இவனுடைய கடமையாயிருக்கிறது. தேவனுக்குத் தன்னை முழுவதுமாக ஒப்புக் கொடுத்து தேவ சித்தம் செய்ய, தன்னை கருவியாக உபயோகிக்கும்படி மனப்பூர்வமாய் இடம் கொடுக்க வேண்டும். அப்பொழுதே அவனுடைய வாழ்க்கை சிறந்து விளங்கும். பூரணப்படும், பிரயோஜனமாக இருக்கும். தேவனுடைய சித்தம் இன்னதென்று வேதாகமத்தில் (BIBLE) மூலமாக தேவன் நமக்கு காட்டியிருக்கிறார் அவைகளை ஏற்றுக் கொண்டு அவைகளுக்குக் கீழ்ப்படிந்து அவைகளை நாம் செய்யும் போது மீதி எல்லாக் காரியங்களிலும் தேவன் தம்முடைய சித்தத்தை நம்மில் நிறைவேற்றுவார், நம்மை சரியாய் நடத்துவார். அவர்களுக்கு இடறல் இல்லை. தேவன் அவர்கள் மூலமாகவும், அவர்கள் தேவனாலும் மேன்மைப்படுத்தப்படுவார்கள். ஆனபடியினால் தேவனுடைய சித்தம் இன்னதென்று அறிந்து மனப்பூர்வமாய் தேவனுடைய சித்தத்தைச் செய்யுங்கள். தேவனுக்குச் செவி கொடுங்கள், அப்பொழுதே தேவன் நம்மை ஆசீர்வதிப்பார்.

கிறிஸ்துவுக்குள்,

Chief Pastor N. LAZAR

# ஆதியாகமத்தைப் பற்றி ஒரு ஆராய்ச்சி

## ஏதேனின் சர்ப்பம்-ஆதி 3:1

(தொடர்ச்சி)

எபிரேய மொழியில் பாம்பிற்கு நாகாஷ் (Nachash) என்று பெயர். சாத்தானுக்கு தன்னையே பாம்பைப்போல் மாற்றுவதற்கு சக்தி கிடையாது அவன் ஒரு தூதன். ஆகையால் அவன் எப்பொழுதும், இன்றும் ஒரு விழுந்துபோன தூதனாய் இருக்கிறான் (எசேக் 28:11-17). ஒரு சாதாரணபாம்பு சாத்தானுடைய கருவியாய் சம்பந்தப்பட்டிருக்கிறது. மற்றபடி தேவன் அதை சபிப்பதற்கு நியாயமில்லை. எபிரேய மொழியில் அதே பெயர் வேதத்தில் உள்ள எல்லா சாதாரண பாம்பிற்கும் உபயோகப்படுத்தப்பட்டிருக்கிறது (ஆதி 3:1-14; ஆதி 49:17; யாத் 7:15; எண் 21:9; II இரா 18:4, நீதி 30:19; பிர 10:8, 11; ஆமோஸ் 5:19; 9:3) நாம் சர்ப்பத்திற்குப் பதிலாக சாத்தான் என்ற வார்த்தையை வேதாகமத்தில் உபயோகித்தால் அது சரியாக அர்த்தப்படுத்த முடியாது

ஏதேனின் சர்ப்பத்தின் உண்மை, முக்கியமாக அது ஒரு சாதாரண பாம்பென்று எழுதப்பட்டிருக்கிறது. ஏனென்றால் அதனுடைய சாபம் எல்லா மிருகங்களைப் பார்க்கிலும் பெரிதாய் இருக்கிறது அதுமட்டுமல்லாமல்; இது ஒரு உருவகமான கதையோ புராணக் கதையோ பழங்கதையோ, கட்டுக்கதையோ அல்ல. ஆனால் இது ஒரு சரித்திர சம்பவம். சர்ப்பத்தின் வித்து சாதாரண பாம்புகளையே குறிப்பிடும் எப்படியென்றால் இயற்கையிலே பாம்பிற்கும், மனிதனுக்கும் பகை உண்டு. ஸ்திரீயின் வித்து தேவன் மாம்சத்தில் மனிதனாய் வருகிறதைக் குறிப்பிடும் ;(ஆதி 3:15, ஏசா 7:14; 9:6,7; 11:1; மத் 1:23; யோவா 1:14; ரோம 1:1,5 கலா 4:5; I தீமோ 3:16, எபி 2:14-15).

I ஆதி 3:1 தேவனுடைய வார்த்தையின் மீது சந்தேகம் (ரோம 14:23) ஆதி 2:16, 17—ல் காணப்படும் வசனங்கள் தவறாக கையாளுதல்: "சகல விருட்சத்தின் கனியையும் நீங்கள் புசிக்க வேண்டாம் என்று தேவன் சொன்னதுண்டோ" என்றது

II ஆதி 3:2,3 தேவனுடைய வார்த்தையை கூட்டுதல் (II கொரி 4:2-4; வெளி 22:18, 19): "தொடவும் வேண்டாம் என்றார்" என்று சொன்னாள்.

III ஆதி 3:4,5 தேவனுடைய வார்த்தைக்கு எதிராக சொல்லப்படுதல் (ஆதி 2:17): 'நீங்கள் சாவதில்லை' என்றது இதுவே வேதாகமத்தில் முதல் நேரடியான பொய் (யோ 8:44).

IV ஆதி 3:6: தேவனுடைய வார்த்தை மீறப்படுதல்

V ஆதி 3:7 பாவத்தின் உடனடியான விளைவு: முன்னறிய மனதில் எல்லாம் தெரியும். ஆனால் இப்பொழுது அனுபவத்தின் மூலம் தெரிந்தது. அவர்கள் தேவ உணர்வை இழந்து தனதுணர்வை அடைந்தார்கள். அவர்கள் நன்மை செய்யும் சக்தியை இழந்தார்கள். மேலும் தீமை செய்யும் சக்தியை பெற்றார்கள். இவ்வாறாக இவர்கள் தேவனைப்போல் ஆகாமல் வேறுவிதமாய் மாறினார்கள். தேவன் நன்மையை மாத்திரம் செய்யக்கூடியவர். தேவன் நீதியானவர் பாவம் செய்யமாட்டார். ஆதாம் அந்த மகிமையுள்ள பாவமின்மையையும், குற்றமற்ற முகத்தின் பார்வையையும் ஏலோகிமுக்கு ஒப்பிடக்கூடியதையும் இழந்தான்.
VI ஆதி 3:8 தேவன் மனிதனை பழைய நிலைக்குக் கொண்டு வர பிரயாசப்படுதல். தேடுதல்.
VII ஆதி 3:9-13 மனிதனுடைய குறுக்கு விளக்கம்:

ஆதி 3:9 எபிரேய மொழியில் காரா (Qura) என்றால் வெளியே அழைத்தல் (ஆதி 1:5, 8,10; 2:19; 3:9, 20; 4:17,25).

ஆதி 3:12 பாவத்தை மூடுதல் : ஸ்திரீயின் மீது குற்றம் சாட்டுதல் (யோபு 31:33; நீதி 28:13) ஆதாம் வஞ்சிக்கப்படவில்லை (I தீமோ 2:15-18)

**தேவன் மீதும், மனைவியின் மீதும் குற்றம் சாட்டுதல் :-** தேவன் அவனுக்கு மனைவியைக் கொடுக்காதிருந்தால் அவன் பாவம் செய்திருக்க முடியாது என்றான். மற்றவர்கள் மீது குற்றத்தை கூறுவது மனிதனுடைய இயற்கையான குணம். மேலும் ஒரு ஆதாரம், ஆதாமினுடைய மனைவி சோதிக்கப்படும் போது ஆதாம் பக்கத்தில் இருந்தும் அவளை பாதுகாக்கும் படி அவன் ஒன்றும் செய்யவில்லை, தடுக்கவில்லை. ஏனென்றால் அவனுக்கும் அதை புசிக்க வேண்டும் என்கிற விருப்பம் இருந்தது. ஒரு வேளை அவன் அதை வாங்கிப் புசிப்பதற்கு ஏவாளால் வற்புறுத்தப்பட்டிருப்பான்.

**ஆதி 3:3** மனிதனைப் போல் ஸ்திரீயானவளும் மற்றவர்களை குற்றம் சாட்டுவது இயற்கையே. ஏவாள் அதைத்தான் புசித்ததாக ஒப்புக் கொண்டும் தன் மேல் குற்றமில்லையென்றும் சாதித்தாள். சர்ப்பம் என்னை வஞ்சித்தது என்றாள்.

> "சர்ப்பமானது தன்னுடைய தந்திரத்தினாலே ஏவாளை வஞ்சித்தது." II கொரி 11:3

# உபதேசம்

சொர்க்கபுரியில் ஒரு செல்வந்தன் இருந்தான். அவனுக்கு ஒரே ஒரு மகன் இருந்தான். அந்த மனிதன் தன்னுடைய குடும்பத்தாரோடே மிகவும் மகிழ்ச்சியாய் செல்வாக்குடன் வாழ்ந்து கொண்டிருந்தான். இவனுடைய வாழ்வைப் பொறுக்காத அக்கம் பக்கத்தார் ஒன்றுகூடி சதி ஆலோசனை செய்து, அந்த மனிதனுடைய சுகவாழ்வை கெடுக்க திட்டம் தீட்டினர். அவனுடைய ஒரே மகனை பிரித்துவிட்டால், வீடு ஒளியிழந்து போகும் என எண்ணி, அந்த வாலிபனுக்கு நாசபுரியில் இருக்கும் உல்லாச வாழ்வைப் பற்றி போதிக்க ஆரம்பித்தனர். வாலிபனும் இழுப்புண்டான். தகப்பனை வெறுத்தான். ஒருநாள் திரளான பணத்தை எடுத்துக் கொண்டு நாசபுரி போய் நாசமாகிக் கொண்டிருந்தான். எதிரிகள் எதிர்பார்த்தபடியே செல்வந்தனின் குடும்ப சமாதானம் சீர்குலைந்தது. மறுபடியும் தன் மகனை அழைத்து வர தன் வீட்டு வேலைக்காரனை அழைத்து, லெட்டர் கொடுத்து செலவுக்குப் பணமும் கொடுத்து அனுப்பினான். வேலைக்காரன் நாசபுரி போய், அந்த வாலிபனுக்கு புத்தி சொன்னான். தகப்பன் வீட்டில் அவனுக்குண்டாகும் மேன்மையையும், நாசபுரியில் தொடர்ந்து இருந்தால் ஏற்படும் அழிவையும் எடுத்துரைத்தான். வேலைக்காரனுடைய வார்த்தைகளை அந்த வாலிபன் ஏற்றுக் கொண்டு, சொந்த ஊர் நடந்துவர ஒப்புதல் கொடுத்தான். இந்த செய்தி செல்வந்தனின் வீட்டாருக்கு அறிவிக்கப்பட்டது. அந்த வீட்டில் சந்தோஷம் உண்டாயிற்று. இதை கேள்விப்பட்ட சத்ருக்கள் பதற்றமடைந்து, மறுபடியும் ஆட்களை அனுப்பி, நாசபுரியை விட்டு வந்துவிட தீர்மானித்தாய், அது நல்லது தான், ஆனால் உன் தகப்பனின் வேலைக்காரனை நம்பாதே, அவனோடே போகாதே. வேலைக்காரர்கள் எல்லாரும் துரோகிகளாகத்தான் இருப்பார்கள். ஆகையால் வேறு எங்காவது போய்விடு என்று துர்போதனை கொடுத்தார்கள். எதிரிகளுடைய நோக்கம் நாசபுரியில் இவனை நாசமாக்க போட்ட திட்டம் தோற்றுப்போனதால் அந்த வாலிபனை வீட்டுக்கு வரவிடக் கூடாது. தகப்பனும், மகனும் சேர்ந்து வாழக் கூடாதபடியாவது தடுக்க வேண்டும் என்பதே. அதற்கு அவர்கள் பயன்படுத்தின ஆயுதங்கள் வஞ்சகமான போதனைகள்.

அப்படிப் போலவே, நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவும், பிதாவினால் அனுப்பப்பட்டு, நரகத்தை நோக்கிப் போய்க் கொண்டிருந்த நம்மையும் மீட்டு பிதாவண்டை கொண்டு போகும்படியாய் கடந்து வந்து, மனந்திரும்புங்கள் என்று பிரசங்கித்தார். அவருடைய வார்த்தையை

சந்தோஷமாய் ஏற்றுக் கொண்ட பாவிகள் மனந்திரும்பினார்கள். பிதாவண்டை போக தங்களை ஒப்புக் கொடுத்தார்கள். பரலோகில் தேவ தூதர்கள் மத்தியில் மிகுந்த சந்தோஷம் உண்டாயிற்று. இயேசு சொன்னார்: பிதாவண்டை போக நானே வழியாய் இருக்கிறேன். என்னாலேயல்லாமல் ஒருவனும் பிதாவண்டை வர முடியாது (யோவா 14 : 6). நானே பிதாவை அறிந்திருக்கிறேன், ஆகையால் என்னிடமாய் பிதாவண்டை போகும் வழியைக் கற்றுக் கொண்டு, அந்தப் பாதையில் என்னைப் பின்பற்றி நடவுங்கள். அப்பொழுது பிதாவை சேர்வீர்கள் என்றார் (மத 11 : 27 - 30).

இயேசுவானவர் இந்த உலகை விட்டு எடுபடும் நாட்கள் சமீபித்தபோது தன்னுடைய சீஷர்களை அழைத்து, பிதா என்னை அனுப்பினது போல, நானும் உங்களை அனுப்புகிறேன். நீங்கள் பரிசுத்த ஆவியைப் பெற்றுக் கொள்ளுங்கள் அவர் வரும்போது உங்களை சகல சத்தியத்திற்குள்ளும் நடத்துவார். என்னிலிருந்து எடுத்து போதிப்பார் (யோவா 16 : 13). அவர் மூலமாய் நீங்கள் கேள்விப்படும் என்னுடைய வார்த்தைகளை ஏற்றுக் கொண்டு மனந்திரும்பி, ஞானஸ்நானம் பெறுகிறவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள் (மத்28:19,20). அந்த உபதேச சட்டத்திற்கு யார், யார் கீழ்ப்படிவார்களோ; அவர்கள் பாவத்தினின்று விடுதலையாக்கப்பட்டு, நீதிக்கு அடிமைகளாகி, பரிசுத்தம் பெற்று முடிவில் நித்திய ஜீவனை (பிதாவண்டை) அடைவார்கள் (ரோம 6 : 18, 22). இப்படி சத்தியத்தை அறிவீர்கள் சத்தியம் உங்களை விடுதலையாக்கி பிதாவண்டை சேர்க்கும் என்றார் (யோவா 8 : 32). அந்த வார்த்தைகளின்படியே அப்போஸ்தலர்கள் விசுவாசிகளுக்கு உபதேசித்தார்கள் அந்த உபதேசத்தை ஏற்றுக் கொண்டவர்கள் இயேசுவால் அனுப்பப்பட்ட அப்போஸ்தலர்களை பின் பற்றுகிறவர்களாகிய இவர்களுடைய கட்டளைகளின்படி நடந்து பிதாவை நோக்கிப் போய்க்கொண்டிருக்கிறார்கள். இவர்களை இப்படியேவிட்டால் இவர்கள் தேவ சாயல் அடைந்து தேவனண்டை போய் விடுவார்கள் என அறிந்த எதிராளியாகிய பிசாசு தன்னுடைய பிரதிநிதிகளை அனுப்பி ஜனங்களை கலக்க ஆரம்பிக்கின்றான். அவன் சொல்வது: கிறிஸ்துவைப்பற்றிப் பேசுங்கள், ஆனால் அவருடைய உபதேசத்தைப்பற்றி (Doctrine) பேசக் கூடாது, அவைகள் எல்லாம் சாதாரணமானவைகள், கிறிஸ்துவே முக்கியம் உபதேசம் முக்கியமல்ல. இது எப்படி இருக்கிறதென்றால் ஒரு சபையின் தலைமை போதகரிடம் இருந்து கிளை சபைக்கு கடிதம் ஒன்று வந்தது. ஸ்தல ஊழியர் சபையாருக்கு முன்பாக அதைப் பிரித்து படிக்க ஆரம்பித்தார் உடனே அந்தச் சபையிலுள்ள சில பிரதானிகள் ஊழியரிடம் நீர் லட்டரைப் பற்றி எதையாகிலும் சொல்லும் லட்டரிலுள்ள வாசகத்தைப் படித்து சபையை கலக்க வேண்டாம் என்று சொன்னார்களாம். அப்படி போலவே சிலபேர் விருப்பமற்ற ஜெனமகளையுள்ளவர், இயேசுவின் உபதேசத்தை, அவர் தம்முடைய ஊழியக்காரரைக் கொண்டு பரிசுத்தாவி மூலம் அருளிச் செய்யும் உபதேசத்தை போதத்தடை செய்கிறார்கள்.

மேலும், தேவனால் ஏற்படுத்தப்பட்ட அப்போஸ்தலனானவன் சபையை கற்புள்ள கன்னிகையாகக் கிறிஸ்து என்னும் ஒரே புருஷனுக்கு ஒப்புக் கொடுக்க நியமித்து தேவ வைராக்கியமான வைராக்கியம் கொண்டிருக்கிறான் (II கொரி 11 : 2) என்பதை பிசாசு அறிந்து அவனைப் பற்றி தவறாக போதிக்கிறான். அவரா! அவர் ஒரு சாதாரண ஆள் (IIகொரி 11 : 6). அவருக்கொன்றும் பெரிய வெளிப்படுத்தல் கிடையாது (IIகொரி 12 : 1). அவர் அப்போஸ்தலனா என்பதே சந்தேகமான காரியம் (IIகொரி 12 : 12). உதவி செய்து, அன்பு செலுத்துவதுபோல் பாசாங்கு செய்து பெரும் ஆதாயம் பெற்றுக்கொள்கிற ஆசாமி (IIகொரி 12 : 16 17). அவர், சும்மா கர்த்தர் சொன்னார், வெளிப்படுத்தினார் என்றெல்லாம் சொல்கிறாரே இதெல்லாம் நம்பக்கூடிய காரியமா? (IIகொரி 13 : 3). அவருடைய செய்கைகளெல்லாம் மாம்சத்தின் படியானவைகள் (IIகொரி 10 : 2)

இப்படியே சாத்தான் ஆதியிலே ஏவாளை வஞ்சித்து தேவனை விட்டுப் பிரித்து கெடுத்தது போல, தேவ ஜனங்களை மெய் அப்போஸ்தலனிடமிருந்து பிரித்துவிட அப்போஸ்தலனைப் பற்றி மேற்கண்ட துர் போதனை செய்வது அவனுடைய தந்திரம் இது நமக்குத் தெரியாதவைகளல்லவே!

அப்போஸ்தலன் இல்லாமல் ஒருவனும் முழுமையடைய முடியாது (IIகொரி 11:2) என்பது சாத்தானுக்கு நன்கு தெரியும்.

கிறிஸ்துவானவர் தம்முடையவர்களை சத்தியத்தால் (உபதேசத்தால்) பரிசுத்தமாக்கி (யோவா 17:17) தமக்குமுன் நிறுத்திக்கொள்ள திட்டமிட்டு இருக்கையில் சாத்தானோ, அந்த உபதேசத்தின்படி ஜனங்கள் பரிசுத்தமாகாதபடி அது தப்பு, அப்படிச் செய்யக் கூடாது இப்படித்தான் செய்ய வேண்டும் என்று மாறுபாடானவைகளை போதிக்கும்படி தன்னுடைய கையாட்களை பயன் படுத்துகின்றான். அவர்களுடைய நோக்கம் தங்கள் பக்கம் கூட்டம் சேர வேண்டும் என்பதே (அப் 20:30). சாத்தான் இன்றும் சிலர் மூலம் கிறிஸ்துவினுடைய ஆரோக்கியமான உபதேசத்தை புரட்டி தங்கள் அறியாமையினால் தங்களுக்கேற்ப சுய இஷ்டமான விளக்கம் கொடுத்து, ஜனங்கள் ஆவியில் முன்னேறுவதை தடை செய்து குழப்பிவிடுகிறான். தேவனால், சபையால் அனுப்பப்படாதவர்களால் குழப்பங்களும், கலகங்களும் உண்டாகும் (I தீமோ 4:1; அப் 15:24).

காரியத்தின் கருத்து என்னவெனில் இயேசுவின் உபதேசத்தினால் விழுந்து கிடக்கிறவன் எழுந்து நிற்கிறான். செத்தவன் பிழைக்கிறான். பிசாசின் உபதேசத்தால் நிற்கிறவன் விழுகிறான். உயிருள்ளவன் சாகிறான் (I தீமோ 4:1). ஞானம் அதின் பிள்ளைகளால் நீதியுள்ளதென்று ஒப்புக் கொள்ளப்படும். அவருடைய ஆடுகள் அவருக்குச் செவி கொடுக்கும். சத்தியவான் எவனும் அவர் சத்தம் கேட்பான். அநீதியில் பிரியப் படுகிற அனைவரும் சாத்தான் உபதேசத்துக்கு கீழ்ப்படிவார்கள் (II தெச 2:11, 12). உபதேசம் தேவனுடையதா? பிசாசினுடையதா? என வேத வாக்கியத்தால் பகுத்தறிந்து நலமானதை பிடித்து முழுமை அடையுங்கள்.

---

"வழியை விட்டு விலகுகிறவனுக்குப் புத்திமதி விசனமாயிருக்கும்; கடிந்து கொள்ளுதலை வெறுக்கிறவன் சாவான்" நீதி 15:10

---

# மோட்சவழி

## குரு-சிஷ்ய உரையாடல்

(தொடர்ச்சி)

**சிஷ்ய:-** *சிலர் தேவ சித்தத்தை அறிய வேதாகமம் ஒன்றே போதும், வேறெங்கேயும், எவரிடத்திலேயும் போய் தேவ சித்தத்தை அறிய வேண்டுமென்கிற அவசியமில்லை என்று சொல்லுகிறார்களே அது எப்படி? அது சரிதானா?*

**குரு:-** இவ்வித எண்ணம் மகா தவறான எண்ணமாகும். வேதாகமம் ஒரு சட்ட புஸ்தகம் போலிருக்கிறது. அதை விளக்க நீதிபதி, வக்கீல்கள் (Judge, Lawyers) போன்றவர்கள் தேவைப்படுகிறார்கள். திருச்சபை தேவை. சபையின் மூலமே வேதாகமத்தை சரிவர உணர்ந்து கொள்ள முடியும். வேதாகமம் காட்டும் வழி "உங்களுக்குச் செவி கொடுக்கிறவன் எனக்குச் செவி கொடுக்கிறான், உங்களை அசட்டை பண்ணுகிறவன், என்னை அசட்டை பண்ணுகிறான், என்னை அசட்டை பண்ணுகிறவன் என்னை அனுப்பினவரை அசட்டை பண்ணுகிறான்" என்று அப்போஸ்தலர்களைப் பார்த்து சொன்னார் (லூக் 10:16).

அப்போஸ்தலர்களும், எங்களோடு ஐக்கியமாயிருங்கள், எங்களைப் பின்பற்றுங்கள் என்றும், நாங்கள் உங்களுக்கு வழிகாட்டுகிறபடி நடக்கிறவர்களை மாதிரிகளாக நோக்குங்கள் என்றுமே கூறியுள்ளார்கள் (I யோவா 1:1-3; I கொரி 4:16; 11:1; பிலி 3:17, 4:9).

பைபிள் ஒன்றே போதும் அவனவன் வேதாகமத்தைப் படித்து தேவ சித்தத்தை அறிந்து
கொள்ளலாம் என்பது ஆசிரியன் (Teacher) வேண்டாம் என்று சொல்லுகிற சாத்தானு
டைய நவீன உபதேசமாகும். ஒரு விசுவாசி அமர்ந்து இருக்கிற ஒரு ஊழியரைப் பார்த்து
ஐயா, சபைக்கு வாருங்கள் என்றார்; ஊழியர் கேட்டார் எதற்கு? அதற்கு விசுவாசி, சத்தியத்
தைப்பற்றி மேலும் அறிந்து கொள்வதற்கு என்றார். அதற்கு ஊழியர் தன் கையிலிருக்கிற
வேதாகமத்தைக் காட்டி என் கையில் சத்தியம் (வேதாகமம்) இருக்கிறது; நான் ஏன் வர
வேண்டும் என்றார். சாயங்காலமே அந்த ஊழியர் ஒரு கன்வென்ஷன் மேடையிலேறி
பைபிளை எடுத்து பிரசங்கம் பிறருக்குப் பண்ணுகிறார். இது எவ்வளவு மாறுபாடு. அவனவன்
பைபிளைப் படித்து தேவ சித்தத்தை அறிந்து கொள்ள முடியும் என்றால் வேதாகமத்தை
ஒவ்வொரு மனிதன் கையிலும் கொடுத்து இதை வாசித்து நீங்கள் இரட்சிக்கப்படுங்கள்
என்று சொல்லிவிடலாமே பிறகு எதற்கு பிரசங்கம்? பிரசங்கி? கன்வென்ஷன் கூட்டங்கள்?
ரேடியோ பிரசங்கங்கள்? வியாக்கியான பத்திரிக்கைகள்? புத்தகங்கள்? சபைக்கூட்டங்கள்.
ஆனபடியினால் கள்ளப் பிரசங்கிகளுடைய வியாக்கியானங்களையும், பிரசங்கங்களையும்,
கேட்பதினால் மக்கள் சீர் கெட்டுப் போவார்களேயொழிய தேவசித்தத்தை அறிய
மாட்டார்கள். ஆனபடியால் தேவ சித்தத்தை அறிய மெய்யான சபையும், தேவனால்
அனுப்பட்ட மெய்யான ஊழியர்களும் தேவை.

சிஷ்ய:- அப்படியானால் வேதாகமத்தைப் பிறர் மூலமாகத்தான் கற்றுக் கொள்ள
வேண்டுமா?

குரு:- நாமும் வேதாகமத்தை வாசிக்க வேண்டும். தினந்தோறும் வாசிக்க வேண்டும்,
அதற்கு செவி கொடுத்து வாசிக்க வேண்டும். ஆராய்ச்சி செய்ய வேண்டும். தியானிக்க
வேண்டும், பரிசுத்தவான்களுடைய விளக்கங்களையும் கேட்க வேண்டும். வேத ஆராய்ச்சி
யின் மூலமாகவும் தேவ வெளிப்படுத்தல் மூலமாகவும் வேதத்தின் மகத்துவங்கள் நமக்குத்
தெரிய வரும். ஆனபடியினால் வேதாகமத்தை பட்டு கற்றுக் கொள்ள வேண்டும்.
வேதத்தை எழுதின பரிசுத்த ஆவியானவர் தம்முடைய வசனத்துக்குக் கீழ்ப்படிகிறவர்
களுக்கு வேதாகமத்தை திறந்து காண்பிக்கிறார். அது பற்பல விதமாக இருக்கும்.

சிஷ்ய:- இன்னும் சிலர் அவரவர்களுக்கு ஜெபத்தின் மூலமாக தேவசித்தத்தை அவரவர்
களே அறிந்து கொள்ளலாம். வேறொருவரிடத்தில் போக வேண்டிய அவசியமில்லை
என்கிறார்களே அது எப்படி?

குரு:- இதுவும் பித்தம் கொண்ட சிலருடைய பிதற்றுதலாகும். பொதுவாக வேதவசன
அறிவில்லாதவர்கள் தீர்க்க தரிசனம் சொல்லக் கூடாது (ரோம 12:6). ஆவி பெற்றிருக்கிறேன்
என்றும், காட்சி கண்டேன் என்றும் சிலர் தற்பெருமை கொண்டு தேவ வசனத்துக்கு மாறாய்
தீர்க்க தரிசனம் சொல்லிக் கொண்டும், பிரசங்கித்துக் கொண்டும் திரிகிறார்கள். இதினால்
பெரிய சீர்கேடுகளும், வீழ்ச்சிகளும் உண்டாகும். தேவ ஆவி பெற்றவர்கள் தேவ
வசனத்துக்கு செவி கொடாமல் அற்புத அடையாளங்கள், சொப்பனங்கள் மேலே விசு
வாசம் வைத்து அசுத்த ஆவிகளினால் வஞ்சிக்கப்படுவார்கள். ஒரு ஸ்திரீ இவ்விதமாக
தீர்க்கதரிசனம் சொன்னாள். "என் பிள்ளைகளே, நான் உங்களை என் இரத்தத்தினாலே
கழுவியிருக்கிறேன். உங்களை தண்ணீரினால் ஞானஸ்நானம் எடுக்கச் சொன்னவன்
யார்?" என்று. இது சரிதானா? இப்படிப்பட்டவர்கள் மூலமாக சில
அற்புதங்கள், தெய்வீக சுகங்கள் நடந்ததும் இவர்கள் சொல்லுகிறது எல்லாம்
உண்மையென்று மக்கள் நம்பி ஏமாந்து போகிறார்கள். சாத்தானும் சில உண்மைகளைச்
சொல்லுவான் (அப் 16:16-18). ஆவி இன்னதென்று பகுத்தறியும் வரம் இல்லாதவர்கள்
இவ்வித வஞ்சக ஸ்திரீ, புருஷர்களால் வஞ்சிக்கப்படுவார்கள். உங்களுடைய ஆவிக்குரிய
வாழ்க்கைக்கு ஒரு நடத்திப்புக்காரன் (அப்போஸ்தலன்) தேவை. தன்னைத்தான் நடத்து
கிறவன் தகாதவனால் (சாத்தான்) நடத்தப்படுகிறான் (எபி 13:7, 17,24; கொலோ 4:11,12;
I தெச 5:12, 13; II தெச 2.5).

(தொடரும்...)

> "கர்த்தர் மோசேயைக் கொண்டு இஸ்ரவேல் புத்திரருக்குச் சொன்ன சகல பிரமாணங்களையும் அவர்களுக்குப் போதிக்கும்படிக்கும், உங்கள் தலைமுறை தோறும் நித்திய கட்டளையாயிருக்கும்..." லேவி 10:11

மாதர் பகுதி

# வேதாகம ஸ்திரீகள்

## 2. இயேசுவின் தாயாகிய மரியாள்

*(தொடர்ச்சி)*

1. 'கலிலேயாவிலுள்ள நசரேத்தூரில் வாசமாயிருந்த இந்த மரியாள் யோசேப்பு என்பவருக்கு நியமிக்கப்பட்டிருக்கையில், பரிசுத்த ஆவியினால் கர்ப்பவதியானாள். இந்த சம்பவம் தேவனுடைய தீர்க்கதரிசிகளால் முன்னறிவிக்கப்பட்ட காரியமாக இருக்கிறது (ஆதி 3:15; ஏசா 7:14; மத் 1:22, 23). தேவ தூதனுடைய முன்னறிவிப்பு மரியாளுக்கும், யோசேப்புக்கும் உண்டாயிருந்தது (லூக் 1:26-3?; மத் 1:18-21).

2. அந்நாட்களில் அகுஸ்துராயனும் குடிமதிப்பு (Census) எழுதும்படி கட்டளையுண்டாயிற்று. ஆனபடியினால் யோசேப்பு மரியாளுடன் பெத்லகேம் போனார். அங்கு இயேசு பிறந்தார் (லூக் 2:1-7)

3. பின்பு தேவ தூதனால் அறிவிக்கப்பட்டபடி அந்தப் பிள்ளைக்கு இயேசு என்று பெயரிட்டார்கள்.

4. பிள்ளையை கர்த்தருக்கு ஒப்புக்கொடுக்கவும், பிள்ளைக்காக பலி செலுத்தவும் எருசலேம் தேவாலயத்துக்குக் கொண்டு போனார்கள். அங்கே சிமியோன், அன்னாள் போன்றவர்களினால் பிள்ளையைப் பற்றியும், மரியாளைப் பற்றியும் தீர்க்கதரிசனங்கள் வெளிப்படுத்தப்பட்டது.

5. பின்பு தேவ தூதனால் அறிவிக்கப்பட்டு பிள்ளையை எடுத்துக் கொண்டு யோசேப்பும் மரியாளும் எகிப்துக்கு ஓடிப் போனார்கள் (மத் 2:13-15).

6. எகிப்திலிருந்து மரியாள் தனது புருஷனோடு பாலகனாகிய இயேசுவை எடுத்துக் கொண்டு நாசரேத்தூரில் வந்து வாசம் பண்ணினார்கள் (மத் 2:19-23).

7. மரியாளும், யோசேப்பும் 12 வயதான இயேசுவை எருசலேமிலிருக்கும் தேவாலயத்துக்கு பண்டிகைக்கு அழைத்துக் கொண்டு போனார்கள். திரும்பி வரும் பொழுது இயேசுவை மறந்து தவறவிட்டு விட்டார்கள். இயேசு தங்களோடு கூட வரவில்லை என்பதை மரியாள் அறியாதிருந்தாள். திரும்பி இயேசுவைத் தேடிக்கொண்டு போய், மூன்று நாட்களுக்குப் பின்பாக எருசலேம் தேவாலயத்தில் போதகர்கள் நடுவில் அவர் இருப்பதைக் கண்டார்கள். ஏன் எங்களுக்கு இப்படிச் செய்தாய் என்று மரியாள் கேட்டதற்கு, என் பிதாவுக்கடுத்தவைகளில் நான் இருக்க வேண்டியதென்று அறியீர்களா என்றார் (லூக் 2:41-51).

8. கானாவூரில் நடந்த கல்யாணத்தில் இயேசு தமது முதலாம் அற்புதத்தைச் செய்த போது மரியாள் அங்கிருந்தாள் (யோவா 2:1-11).

9. ஒரு தடவை வேதபாரகர் இயேசுவை பெயல்செபூலைக் கொண்டிருக்கிறார் என்று சொன்னதின் நிமித்தம், அவருடைய தாயும், சகோதரரும் அவரை அழைத்துக் கொண்டு போகும்படி வந்தார்கள். அப்பொழுது இயேசு ஆவிக்குரிய விதமாய் தம்முடைய இனத்தாரைப் பற்றி பேசினார் (மாற் 3:21-35; மத் 12:22-50).

10. இயேசு சிலுவையில் தொங்கின போது மரியாளை காப்பாற்றும்படி இயேசுவானவர் தம்முடைய சீஷனாகிய யோவானுக்கு கட்டளையிட்டார் (யோவா 19:26).

11. இயேசு பரலோகம் போனபின் அவருடைய தாயும், சகோதரரும் கூட ஒரு

மனப்பட்டு மற்ற சீஷரோடுங்கூட ஜெபத்திலும், வேண்டுதலிலும் தரித்திருந்தார்கள் (அப் 1:14).

இவைகளை நாம் பார்க்கையில் இயேசு பாலகனாய் இருந்த காலத்தில் மரியாள் அதிக சந்தோஷமாய் இருந்த போதிலும், அவருடைய ஊழியக் காலத்தில் மிகவும் துக்கப்பட்டாள் என்று தெரிகிறது. மரியாளைப்பற்றி பாரம்பரியங்கள், தள்ளுபடி சுவிசேஷங்களில் அநேக காரியங்கள் உண்டு. இவள் 12 வயதுக்கு வரு மட்டும் தேவாலயத்துக்குப் பிரதிஷ்டை செய்யப் பட்டவளாயிருந்தாள் என்றும், இவளுக்கு தேவ தூதர்கள் பணிவிடை செய்தார்கள் என்றும்; பெத்லகேமில் இவள் இயேசுவைப் பெறும் பொழுது அநேக அற்புதங்கள் காணப்பட்டதென்றும், சொல்லப்பட்டிருக்கிறது. மரியாள் தனது 59வது வயதில் எருசலேமில் சுவிசேஷகனாகிய யோவான் வீட்டிலே மரணமடைந்திருக்கும் பொழுது சகல அப்போஸ்தலர்களும், ஆச்சரியப் பிரகாரமாக அங்கே கூடி வந்து அவளை கெத்சமனே தோட்டத்தில் அடக்கம் பண்ணிப் போட்ட பிற்பாடு அவள் உயிரோடெழுந்து மோட்சத்துக்கு எழுந்தருளிப் போனாள் என்றும் கூறுகிறார்கள். கி. பி 450ல் இவளுக்கு கடவுளைப் பெற்றவள் (Theotokos) என்னும் பட்டப் பெயரை கொடுத்தார்கள். அதனால் அநேகர் இவளுக்கு 'தேவ மாதா' என்னும் பெயர் கூறி வணங்குவது அவசியம் என்று தீர்மானித்தார்கள்; இவளுக்கு திருவிழாக்களை ஏற்படுத்தினார்கள். இதன் பிறகு இவள் பாவமற்றவள் என்றும், மரணத்திற்குப்பின் இவளுடைய சரீரம் அற்புதமாய் பரத்திற்குப் போனதென்றும் நம்பி இவளை சிறப்பிக்கும்படி இவளுக்கு ஆராதனை செய்கிறார்கள். இதை நாம் நன்றாய் விசாரித்தால் ரோம சபையில் அனேகர் இயேசுவை எப்படி மதிக்கிறார்களோ அப்படியே மரியாளையும் மதிக்கிறார்கள் என்பது விளங்கும். ஆனால் இதற்கும் உண்மையான சுவிசேஷங்களில் சொல்லியிருக்கிறவைகளுக்கும் வித்தியாசம் உண்டு.

பரிசுத்த ஆவியானவர் மரியாளுடைய தகப்பனாகிய ஏலி என்பவருடைய நாமத்தை தவிர (லூக் 3:23) அவளுடைய பிறப்பை எப்படி வெளிப்படுத்தாமல் இருந்தாரோ அப்படியே அவளுடைய மரணத்தையும் வைக்கவில்லை. திருச்சபையில் அவளைக் குறித்து ஒவ்வாத பற்பல ஆராதனை சடங்குகள் உண்டாக்கப்படுமென்று கர்த்தர் முன்தானே அறிந்தபடியினால் அவளுடைய வரலாறுகளை மனதார மறைத்துப் போட்டார். திருச்சபையிலுள்ள ஸ்திரீகளைக்குறித்து அப். பரி. பேதுரு எழுதும் போதும் நீங்கள் மரியாளின் பிள்ளைகள் என்று எழுதாமல் நீங்கள் சாராளின் பிள்ளைகளாயிருப்பீர்கள் என்றே எழுதி வைத்தார் (I பேது 3.6).

ரோமன் சபையாருடைய கோவில்களைப் பற்றி பொதுவாக நாம் கேள்விப்படும்போது இயேசுவின் ஆலயம் என்று கேள்விப்படாமல் மாதாவின் கோவில் என்றே அழைக்கப் படுவதைப் பார்க்கிறோம். அப்படியே தேவ தூதர்கள் பேராலும், அர்ச்செண்டர்கள் பேராலும் கோவில்களைக் கட்டி ஆராதிக்கிறார்கள். இதன் மூலமாய் இறைவனாகிய இயேசுவையல்ல மரியாளையே முக்கிய தெய்வமாக இவர்களில் அநேகர் வணங்குகிறார்கள்; ஆராதனை செய்கிறார்கள் என்பது தெரிய வருகிறது. இது வேதாகமத்திற்குப் புறம்பான, மாறுன கொள்கையாகும்.

குழந்தை இயேசுவை தரிசிக்க வந்த சாஸ்திரிகள் பிள்ளையாகிய இயேசுவையே பணிந்து கொண்டார்கள்; மரியாளையல்ல. அவர்கள் அந்த வீட்டுக்குள் பிரவேசித்து பிள்ளையையும், அதின் தாயாகிய மரியாளையும் கண்டு, சாஷ்டாங்கமாய் விழுந்து அதைப் பணிந்து கொண்டு தங்கள் பொக்கிஷங்களைத் திறந்து பொன்னையும், தூபவர்க்கத்தையும், வெள்ளைப் போளத்தையும் அதற்கு காணிக்கையாக வைத்தார்கள் (மத் 2:11). வேதாகமத்தில் எந்த இடத்திலும் மரியாளுக்கு ஆராதனையோ, வணக்கமோ செய்ததாக கூறப்படவில்லை.

இதன் மூலம் நாம் மரியாளைப் பற்றி அறிவது என்னவென்றால் உண்மையான சுவிசேஷத்தின்படி இவள் இரக்கசாலி, பக்தி நிறைந்தவள், தாழ்மை பொருந்தியவள், பொறுமையுடையவள், மனிதனாகிய இயேசுவின் தாய். ஆனால் தேவனாகிய இயேசுவின் தாயல்ல; மற்ற ஸ்திரீகளைப் போல (நியா 5:24) இவளும் ஒரு பெண்தான். பரிசுத்த ஆவிக்காக காத்திருந்து இயேசுவை நோக்கி

ஜெபித்த ஸ்திரீகளில் மரியாளும் ஒரு ஸ்திரீயாகும் (அப் 1:14). ஆனபடியால் மனிதனாகிய இயேசுவின் தாயாகிய மரியாள் தேவனாகிய இயேசுவுக்கு மகள்தான் என்பதை நாம் மறந்து விடக்கூடாது. மரியாளைப் பற்றிய தவறான கற்பனை அந்தகாரத்தின் அமுக்குக்குள் கொண்டுபோம். ஆகையால் தேவ ஜனங்கள் விக்கிரகங்களுக்கு விலகி தங்களைக் காத்துக் கொள்வீர்களாக ஆமென் (கொலோ 2:19). பிற்காலத்தில் வேதாகமத்தை எழுதிய பரிசுத்தவான்கள் மரியாளின் புருஷன் யோசேப்பு என்றும் யோசேப்பின் மனைவி மரியாள் என்றும் மிகத் தெளிவாக பரிசுத்த ஆவியினால் எழுதி வைத்தார்கள் (லூக் 2:4; மத் 1:18-21, 24, 25; 1:16). சபையின் நடபடி புஸ்தகத்திலே நிருபங்களிலே நாம் மரியாளைப் பற்றி அதிகமாய் ஒன்றும் வாசிப்பதில்லை. கடவுளே முக்கியம். (தொடரும்).

(இயேசு) "தம்முடைய கையை தமது சீஷர்களுக்கு நேரே நீட்டி: இதோ, என் தாயும் என் சகோதரரும் இவர்களே! என்றார்." (மத் 12:49).

# வேத பாடம்

(தொடர்ச்சி)

யாத் 24 : 1 - 11 பழைய ஏற்பாடு அல்லது பழைய ஒப்பந்தம். மோசேயும், மோசேயோடுகூட ஆரோனும், நாதாபும், அபியூவும், இஸ்ரவேலின் மூப்பர் 70 (எழுபது) பேரும் மலையில் ஏறிப் போய் தூரத்திலிருந்து தேவனைத் தொழுது கொண்டார்கள் மோசே மாத்திரம் கர்த்தரின் சமீபமாய்ச் சேர்ந்தார். பின்பு மோசே இறங்கி வந்து கர்த்தருடைய வார்த்தைகள் யாவையும் ஜனங்களுக்கு அறிவித்தார். ஜனங்கள் எல்லோரும் ஏக சத்தமாய் கர்த்தர் அருளிய எல்லா வார்த்தைகளின்படியும் செய்வோம் என்றார்கள். உடன்படிக்கையின் புஸ்தகத்தை எடுத்து ஜனங்களின் காது கேட்க மோசே வாசித்தார். கர்த்தர் சொன்னபடியெல்லாம் செய்து கீழ்ப்படிந்து நடப்போம் என்று ஜனங்கள் மாறுத்தரம் சொன்னார்கள். கர்த்தருக்கு சர்வாங்க தகன பலிகளையும், சமாதான பலிகளையும் செலுத்தி பாதி இரத்தத்தை பாத்திரங்களில் வார்த்து கர்த்தரின் சார்பாக உடன்படிக்கை புஸ்தகத்தின் மேலும், ஜனங்களின் சார்பாக ஜனங்களின் மேலும் தெளித்து இந்த வார்த்தைகள் யாவையும் குறித்து கர்த்தர் உங்களோடு பண்ணின உடன்படிக்கையின் இரத்தம் இதுவே என்றார். பழைய ஏற்பாடு பழைய உடன்படிக்கை என்று சொல்வது இதுவே. பின்பு மூப்பர்கள் கர்த்தரை தரிசித்தார்கள் தேவ சந்நிதானத்தில் விருந்துண்டு சந்தோஷப்பட்டார்கள்

யாத் 24 : 12 பத்து கற்பனைகளடங்கிய இரண்டு கற்பலகைகளை கர்த்தர் மோசேக்கு கொடுத்தார்.

யாத் 24 : 13-18 கர்த்தர் மோசேயைக் கூப்பிட்டு பேசுகிறார் இரவும், பகலும் 40 (நாற்பது) நாள் மோசே மலையில் தங்கி இருந்தார்.

யாத் 25 : 1 - 7 கர்த்தர் மோசேக்கு, ஜனங்கள் கர்த்தருக்கு காணிக்கை கொண்டு வரும்படி சொல் என்று கட்டளையிட்டார். இதில் 4 கட்டளைகள் காணப்படுகின்றன

1 இஸ்ரவேல் ஜனங்களுக்குச் சொல்.

2 ஒரு காணிக்கை கொண்டு வரும்படி கட்டளையிடு.

3 மனப்பூர்வமாய் உற்சாகமாய் கொடுக்கிறவன் எவனோ அவனிடத்தில் காணிக்கையை வாங்கு.

4 நீங்கள் அவர்களிடத்தில் வாங்க வேண்டிய காணிக்கையாவன: பொன், வெள்ளி வெண்கலம், இளநீல நூல், இரத்தாம்பர நூல், சிவப்பு நூல், மெல்லிய பஞ்சு நூல், வெள்ளாட்டு மயிர், சிவப்பு நிறம் தீர்ந்த ஆட்டுக்கடாத்தோல், தகசுத்தோல், சீத்தீம் மரம், விளக்கெண்ணெய், அபிஷேகத் தைலத்துக்குரிய பரிமள வர்க்கங்கள், தூபத்துக்கு சுகந்த,

வர்க்கங்கள், ஏபோத்திலும், மார்ப்பதக்கத்திலும் பதிக்கும் கோமேதகக் கற்களும், இரத்தினங்களுமே.

யாத் 25 : 8 - 9 ஜனங்கள் நடுவில் தேவன் வாசம் பண்ண தனக்கு ஒரு வாசஸ்தலத்தை உண்டாக்கும்படி தேவன் கட்டளையிட்டார். மலையில் தேவன் காண்பிக்கும் வாசஸ்தலத்தின் மாதிரியின்படி அதைச் செய்யும்படி கட்டளையிட்டார். மலையில் தேவன் காண்பிக்கிற மாதிரியின்படி செய்ய எச்சரிக்கையாய் இருக்கும்படி தேவன் மோசேக்கு எச்சரிக்கை கொடுத்தார். (யாத் 25 : 40, 26 : 30).

யாத் 25:10-16 - உடன்படிக்கை பெட்டி பண்ணப்பட்ட விதம்.

யாத் 25:17-22 - கிருபாசனத்தைப் பண்ணும் விதம்.

யாத் 25:23-30 - தேவ சமுகத்தில் மேஜை பண்ணும் விதம்.

யாத் 25:31-40 - ஏழு அகல்களையுடைய பொன் குத்துவிளக்கு பண்ணும் விதம். திருச்சபை எப்படி இருக்க வேண்டும் (காணப்பட வேண்டும்). இறைவனை எங்கே எப்படித் தொழுது கொள்ள வேண்டும் என்பதெல்லாம் இந்த ஆசரிப்புக் கூடாரப் பணி முட்டுக்கள், ஆசரிப்பு கூடார அமைப்பு இவைகளின் மூலம் வெளிப்படுத்தப்பட்டுள்ளது

(தொடரும்...)

"அவனவன் விசனமாயுமல்ல கட்டாயமுமல்ல, தன் மனதில் நியமித்தபடியே கொடுக்கக்கடவன்; உற்சாகமாய்க் கொடுக்கிறவனிடத்தில் தேவன் பிரியமாயிருக்கிறார் (II கொரி 9 : 7).

## பாலர் பகுதி

சாமுவேலும், சாராளும் நல்ல குணமுடைய சிறுவர்கள், அவர்களது தகப்பனார் டேவிட் அவர்களை பக்தி உள்ள பிள்ளைகளாக வளர்த்து வந்தார். தினந்தோறும் காலையிலும், மாலையிலும் வேதம் வாசிக்கவும், ஜெபிக்கவும் பயிற்றுவித்தார். சாமுவேலும் சாராளும் ஒற்றுமையுடன் காணப்பட்டனர். டேவிட்டின் குடும்பத்தைப்பார்த்து அவ்வூரிலுள்ள எல்லோரும் பொறுமையுடன் ஏளனமாகப் பேசுவார்கள். அவ்விதப் பேச்சைக் கேட்ட டேவிட் அதைப் பற்றி சிறிதளவும் மனதில் நினைக்கவே இல்லை. சிறிது காலம் கடந்தது. திடீரென டேவிட் மரித்து விட்டார். அக்குடும்பம் கவலையில் மூழ்கியது. டேவிட்டின் மனைவி பேசி தன் பிள்ளைகளைப் பார்த்து ஆறுதலடைந்தாள்.

பின்னர் சாமுவேல் தீய நண்பர்களோடு சேர்ந்து சினிமா பார்க்கவும், வெறி கொள்ளவும், சிகரெட் குடிக்கவும், திருடவும், தீய வார்த்தைகளைப் பேசவும் பழகிவிட்டான். ஆனால் படிப்பில் முதல் மாணவனாய் விளங்கினான், பரிசுகளைப் பெற்றான். அதோடு கெட்டப் பெயரும் பெற்றான். சாமுவேல் வீட்டிலிருக்கும் பொழுது ரேடியோவை ON பண்ணி வைத்து விட்டு சினிமா பாடல்களைக் கேட்டுக் கொண்டேயிருப்பான். ஆனால் சாராளுக்குக் கவலையாகவே இருக்கும். தனது அண்ணன் கெட்ட பையனாக மாறிவிட்டானே என்று சாராள் ஞாயிறு பள்ளியில் எல்லோரிடத்திலும் என் அண்ணன் தீய நண்பர்களோடு சேர்ந்து கெட்டவனாக மாறிவிட்டான். அவனுக்காகச் ஜெபியுங்கள் என்று கூறி கண்ணீரோடு ஜெபித்தாள். சாமுவேலின் தாயாரும், தங்கை சாராளும் காலை, மாலை குடும்ப ஜெபங்களில் கண்ணீரோடு ஜெபித்தார்கள். குடும்ப ஜெபம் நடந்து கொண்டிருக்கும்போது சாமுவேல் ரேடியோவை ON பண்ணி வைத்து சினிமா பாடல்களை கேட்டுக் கொண்டிருப்பான்.

பத்தாவது வகுப்பில் எதிர்பாரா தோல்வி அடைந்து விட்டான். நன்றாகப் படித்தும் தோல்வி ஆகிவிட்டதே என்று சாமுவேல்

கவலையோடு இருக்கும்போது சாமான் ரேடியோவில் கிறிஸ்தவ செய்தியை வைத்திருந்தான். அச்செய்தியில் இதுவே இரட்சண்ய நாள். கர்த்தருடைய வருகை கிட்டி வருகிறது. இனி காலம் செல்லாது. தீய வழியில் நடந்து உல்லாசமாய் வாழ்கிறவர்கள் அக்கினியில் வேதனைப்படுவார்கள். ஐசுவரியமுள்ள ஒரு மனுஷன் இருந்தான். லாசரு என்கிற ஒரு ஏழை மனிதன் பருக்கள் நிறைந்தவனாய் ஐசுவரியவானுடைய வாசலருகே கிடந்து அவனுடைய மேஜையிலிருந்து விழுந்துணிக்கைகளாலே தன் பசியை ஆற்ற ஆசையாயிருந்தான். நாய்கள் அவன் பருக்களை நக்கிற்று. லாசரு மரித்தான். தேவதூதரால் ஆபிரகாமுடைய மடியிலே (இளைப்பாறும் இடம்) கொண்டு போய் விடப்பட்டான். ஐசுவரியவான் மரித்தான். பாதாளத்திலே அக்கினி ஜுவாலையில் (நரகாக்கினையில்) வேதனைப் பட்டான். லாசரு ஆபிரகாமுடைய மடியிலே இருந்ததை ஐசுவரியவான் தூரத்தில் கண்டான். அப்போது ஐசுவரியவான் தகப்பனாகிய ஆபிரகாமே, நீர் எனக்கு இரங்கி லாசரு தன் விரலின் நுனியை தண்ணீரில் தோய்த்து என் நாவை குளிரப் பண்ணும்படி அவனை அனுப்பவேண்டும். நான் இந்த அக்கினி ஜுவாலையில் வேதனைப் படுகிறேனே என்று கெஞ்சினான். அதற்கு ஆபிரகாம் மகனே, நீ பூமியிலே உயிரோடிருக்கும் காலத்தில் நன்மைகளை அனுபவித்தாய் இப்பொழுது வேதனைப்படுகிறாய்; லாசரு தீமைகளை அனுபவித்தான். இப்பொழுது அவன் தேற்றப்படுகிறான். அதை நினைத்துக் கொள். உனக்கும் எங்களுக்கும் நடுவே பெரும் பிளவு உண்டாக்கப் பட்டிருக்கிறது என்று கூறிவிட்டார். எனவே தேவ பக்தியில்லாத மனிதன் தேவனுடைய ராஜ்யத்தில் பிரவேசிப்பது அரிது என்று காண்கிறோம்.

சகோதரனே, காலம் சமீபித்திருக்கிறது. மனந்திரும்பு. குடிபழக்கம், புகைபிடிப்பது, சினிமா பார்ப்பது இவ்வித காரியங்களில் ஈடுபட்டிருப்பாயானால் விட்டுவிடு. தேவனிடத்தில் திரும்பு. பாவங்களை அறிக்கை செய். ஒப்புரவாகு. தேவன் உன்னை ஆசீர்வதிப்பார். ஆமென்! என்று கூறி செய்தியை முடித்தார் போதகர். அதைக் கேட்டுக் கொண்டிருந்த சாமுவேல் உள்ளம் உடைந்து, கண்ணீரோடு உடனே முழங்கால் படியிட்டு ஜெபித்தான். தேவாலயம் சென்றான். அன்றைய தினத்திலிருந்து அவன் கையாண்ட தீய பழக்கவழக்கங்களை விட்டுவிட்டான். அவனுடைய நண்பர்களுக்கு தேவனைப் பற்றியும், மோட்சம், நரகம் எப்படிப்பட்டது என்பதைப் பற்றியும் அறிவித்தான். சாமுவேலின் நடக்கையில் உண்டான மாற்றத்தைப் பார்த்து அவனுடைய நண்பர்களும் நல்லவர்களானார்கள். சாமுவேலின் தாயாரும் தங்கை சாராளும் ஆனந்த மகிழ்ச்சியடைந்தனர். அக்குடும்பம் மகிழ்ந்தது.

கிறிஸ்துவுக்குள் அன்பார்ந்த சிறுவர்களே, அச்சிறுவனைப் போல நீங்களும் நல்ல குணங்களை உடையவர்களாயிருந்து அநேக சிறுவர்களுக்கு தேவனைப் பற்றி அறிவித்து ஜெபித்து ஆத்தும ஆதாயம் செய்து தேவ நாமத்தை மகிமைப்படுத்துங்கள். கர்த்தர் உங்களையும் நேசிக்கிறார்.

---

“திருவசனத்தை அவமதிக்கிறவன் நாசமடைவான்.”

நீதி 13:13

---

# தீர்க்கதரிசனத்தில் எலியா தீர்க்கதரிசி

“இதோ நான் என் தூதனை (உமக்கு முன்பாக) அனுப்புகிறேன், அவன் எனக்கு (உமக்கு) முன்பாகப் போய் வழியை ஆயத்தம் பண்ணுவான்”(மல் 3:1, மத் 11:10) என்ற தீர்க்கதரிசன வார்த்தை, யோவான் ஸ்நானகனைக் குறித்துச் சொல்லப்பட்டதாகும். இந்த வார்த்தையின்படி யோவான் ஸ்நானகன் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவுக்கு முன்னே தன்னை வெளிப்படுத்தி, அவரைக் குறித்து சாட்சி கொடுத்து, இயேசுவானவர் தன்னுடைய ஊழியத்தை ஆரம்பிப்

பதற்கு வழியை ஆயத்தம் பண்ணினார் (யோவா 1:21-36)

இதே யோவான் ஸ்நானகனைக் குறித்து மல்கியா தீர்க்கதரிசி மேலும் சொன்ன தீர்க்க தரிசனம்.

"இதோ கர்த்தருடைய பெரிதும் பயங்கரமுமான நாள் வருவதற்கு முன்னே நான் உங்களிடத்திற்கு எலியா தீர்க்கதரிசியை அனுப்புகிறேன். நான் வந்து பூமியை சங்காரத்தால் அடிக்காதபடிக்கு அவன் பிதாக்களுடைய இருதயத்தை பிள்ளைகளிடத்திற்கு திருப்புவான்" (மல் 4:5,6). இந்த வார்த்தையின்படி கர்த்தர் (மேசியா) வரு முன்னே எலியா தீர்க்கதரிசி வரவேண்டும் என இஸ்ரவேலர் எதிர் பார்த்தனர். ஆகவே யூதர்கள் யோவான் ஸ்நானகனிடம் வந்து நீர் எலியாவா? என்று கேட்டார்கள். அதற்கு அவன், நான் அவனல்ல என்றான் (யோவா 1:21). ஆனால் கர்த்தராகிய இயேசு கிறிஸ்து எலியா வந்தாயிற்று, அவனை அறியாமல் தங்கள் இஷ்டப்படி அவனுக்கு செய்தார்கள் என்றார். அவர் யோவான் ஸ்நானகனைக் குறித்து தங்களுக்குச் சொன்னார் என்று அறிந்து கொண்டார்கள் (மத் 17 12,13)

காபிரியேல் தூதன் யோவான் ஸ்நானகனைக் குறித்து சகரியாவிடம் சொன்ன தீர்க்க தரிசனம். "அவன் எலியாவின் ஆவியும் பலமும் உடையவனாய் அவருக்கு (கர்த்தருக்கு) முன்னே நடப்பான்" (லூக் 1:17) என்பதாகும்.

யோவானுடைய சாட்சியின்படி எலியா இவன் அல்ல (யோவா 1:21). காபிரியேல் தூதனுடைய வார்த்தையின்படி இவன் எலியாவின் ஆவியும் பலமும் உடையவன் (லூக் 1:17). ஆகவே இயேசுவானவர் இவனைக் குறித்து வருகிறவனாகிய எலியா இவன் தான (மத் 11:14) என்று சொன்னது, மல்கியா தீர்க்கதரிசனத்தின்படி பிதாக்களுடைய இருதயத்தை அவர்கள் பிள்ளைகளிடத்திற்குத் திருப்பும்படியாக வருகிற மல்கியா தீர்க்க தரிசனத்தில் சொல்லப்பட்ட எலியா இவன் என்பதாகும் (மல் 4:6) பரலோகத் திற்குஎடுக்கப்பட்ட எலியாவா நீர் என்ற அர்த்தத்தில் யூதர்கள் கேட்டபடியால், நான் அவனல்ல என்று யோவான் ஸ்நானகன் கூறிவிட்டார்.

மல்கியா 4:5,6 வசனங்களின்படி கர்த்தர் வருமுன் எலியா தீர்க்கதரிசி வரவேண்டும். அவன் வந்து பிதாக்களுடைய இருதயத்தை பிள்ளைகளிடத்திற்கும், பிள்ளைகளுடைய இருதயத்தை அவர்கள் பிதாக்களிடத்திற்கும் திருப்ப வேண்டும். இங்கே எலியா தீர்க்கதரிசி வந்து செய்ய வேண்டிய வேலை இரண்டு என்று காண்கிறோம்.

1. அவர் பிதாக்களுடைய இருதயத்தை பிள்ளைகளிடத்திற்குத் திருப்ப வேண்டும்.

2. பிள்ளைகளுடைய இருதயத்தை பிதாக்களுடைய இருதயத்திற்குத் திருப்ப வேண்டும்.

கர்த்தருடைய நாள் என்று சொல்வது கர்த்தராகிய இயேசு கிறிஸ்து பூமியிலிருக்கும் நாளாகும்.

அவருடைய நாள் இரண்டு வகைப் படும்.

1 பாவிகளை இரட்சிக்க (1 தீமோ 1:15)

2 நியாயந் தீர்க்க வரப்போவதாகும்.

இயேசுவானவர் இரட்சகராக இந்த பூமியில் செயல்படுமுன், அவருக்கு முன்பாக யோவான் ஸ்நானகன் வந்து அவரைக் குறித்துசொல்லப்பட்டப்பிரகாரம் அவருக்கு வழியை ஆயத்தம் பண்ணினான் (லூக் 1:76; யோவா 1 அதி). காபிரியேல் தூதன் சொன்னபடி அவர் எலியாவின் ஆவியும் பலமும் உடையவனாயிருந்து பிதாக்களுடைய இருதயங்களைப் பிள்ளைகளிடத்திற்குத் திருப்பினார் (லூக் 1:17). எப்படியெனில், ஆபிரகாம் முதலான பிதாக்கள் உத்தமர்களாய் இருந்து இறைவனுக்கேற்ற கனிகளைக் கொடுத்தார்கள். நீங்கள் அவனுக்கு பிள்ளைகள் என்று சொல்லிக்கொள்ள நினையாதிருங்கள், அவரைப் போல கனி கொடுப்பவனென்று சொல்லி ஆபிரகாம், ஈசாக்கு, யாக்கோபு போன்ற தேவபக்தியுள்ள பிதாக்களைப்போல இருதயம் பிள்ளைகளிடம் இருக்கும்படியாக கிரியை செய்து, ஒரு உத்தம ஜனத்தைக் கர்த்தருக்கு ஆயத்தம் பண்ணினார் (மத் 3:8-12; யோவா 1:25-40).

இதோ கர்த்தராகிய இயேசுகிறிஸ்து வரப்போகிறார். அவனவன் செய்த கிரியைகளுக்குத் தக்க பலன் கொடுக்க வரப்போகிறார். அவர் ராஜாவாய் வரப் போகிறார் (அப் 17:31; வெளி 22:12). இந்தத் தடவை அவர் வருமுன் மல்கி 4,5,6ல் சொல்லப்பட்டபடி எலியா தீர்க்கதரிசி வரவேண்டும், அவர் வந்து பிள்ளைகளுடைய இருதயத்தை அவர்கள் பிதாக்களிடத்திற்கு திருப்ப வேண்டும்.

இந்த நாட்களில் கிறிஸ்தவர்கள் சீர்கெட்டு கிடக்கிறார்கள். மெய்யான திருச்சபை எங்கே இருக்கிறது. அப். பவுலைப் போல், நாம் பின்பற்றி நடக்கக் கூடிய அப்போஸ்தலன் எங்கே இருக்கிறார்கள் நம்பத்தகுந்த மேய்ப்பர்கள் எங்கே இருக்கிறார்கள்? என்று பலவித கேள்விகளைக் கேட்டுக்கொண்டு கிறிஸ்தவர்கள் சுற்றி அலைகிற காலமாயிருக்கிறது. பரிசுத்த ஸ்தலமெல்லாம் பாவம் பிரவேசித்து, மனித பிரியம் மேற்கொண்டு அவனவன் தன் தன் வழியே சரி என்று தீர்மானித்து, பரிசுத்தாவியினால் நடத்தப்படும் அனுபவமற்று தங்கள் சுயசித்தம் செய்து சீர்கெட்டுக் கிடக்கிறதை எங்கும் காணமுடிகிறது. சத்துரு வெள்ளம் போல் மூடிக் கொண்டே வரும் போது, கர்த்தருடைய ஆவியானவர் அவனுக்கு விரோதமாய் கொடியேற்றுவார் என்று ஏசாயா முன்னறிவித்தார் (ஏசா 59:19) இப்படி சீர்கெட்டுப்போன மக்களை எடுத்துக் கொள்ள இயேசு கிறிஸ்து வரமாட்டார் முதலாவது இவர்கள் சீர்பட வேண்டும். கறைதிரை முதலானவைகள் ஒன்றுமில்லாமல் பரிசுத்தமும் பிழையற்றதுமான மகிமையுள்ள சபையாக அதைத் தமக்கு முன் நிறுத்திக் கொள்ளும்படி (எபே 5 : 27) சபையானது சீர்படுத்தப்பட வேண்டும்.

எலியா முந்தி வரவேண்டும் என்று வேதபாரகர்கள் சொல்லுகிறார்களே, அதெப்படி என்று சீஷர்கள் கேட்டார்கள். வேதபாரகர்களுடைய கருத்து : மீகா 5 : 2ன் படி இஸ்ரவேலை ஆளப்போகிறவர் (மேசியா) பெத்லகேமிலிருந்து வரவேண்டும் என்பதாகும். அப்படி அவர் ராஜாவாக வருமுன் எலியா தீர்க்கதரிசி வரவேண்டும் என நம்பினார். இயேசுவானவர் அதை மறுதலியாமல் எலியா முந்தி வந்து எல்லாவற்றையும் சீர்படுத்துவது மெய்தான் என்றார் (மத் 17 : 11)

யோவான் செய்த வேலை ஒரு உத்தம ஜனத்தை ஆயத்தப்படுத்தினார் (லூக் 1:17). அவர்கள் இயேசுவை பின்பற்றி செம்மையாயிருந்தார்கள். காலம் கடந்து சென்றது. பவுல் முன்னறிவித்தபடி மந்தைக்குள் ஓநாய்கள் புகுந்தது (அப் 20 : 29, 30). சபை வழி தப்பி போயிற்று. சீர்கெட்டுப் போனார்கள். இந்தப் பிள்ளைகள் சீர்படுத்தப்பட வேண்டும். இவர்களுடைய இருதயம் செம்மையாக்கப்பட்டு, கர்த்தரை உண்மையாய் சேவித்த பிதாக்களாகிய அப்போஸ்தலர், தீர்க்கதரிசிகளுடைய நிலைக்குக் கொண்டு வரப்பட வேண்டும். அதற்காக மல் 4 : 5, 6ன்படி எலியா தீர்க்கதரிசி வர வேண்டும். அவருக்கு செவி கொடுக்கிறவர்கள் கர்த்தருடைய வருகையில் எடுத்துக் கொள்ளப்படுவார்கள்.

---

உலகத் தோற்ற முதல் தேவன் தம்முடைய பரிசுத்த தீர்க்கதரிசிகளெல்லாருடைய வாக்கினாலும் உரைத்தவைகள் எல்லாம் நிறைவேறித் தீருங்காலங்கள் வருமளவும் பரலோகம் அவரை ஏற்றுக் கொள்ள வேண்டும் (அப் 3 : 21).

---

புதிய எருசலேம் சபை, சேலம் (கிளை) - புதிய முகவரி

Pastor V. Samuel Raj
New Jerusalem Church.
Kottai Goundan Patti (P.O)
Govt College of Engg. (Via)
Salem - 636 011.

சாட்சி

# ஆவிக்குரிய வாழ்க்கையில் நான் கண்ட சில அனுபவங்கள்

ஒரு நாள் இரவில் கர்த்தர் ஒரு தரிசனத்தை வெளிப்படுத்தினார். ஒரு முகடுள்ள கட்டிடம். அதின் நடுவில் ஒரு பெரியவர் நிற்கிறார். கட்டிடத்திற்குள்ளேயே சிறிது தூரத்தில் ஒரு சகோதரர் நிற்கிறார். வெளியே பெரும் மழை பெய்கிறது. மழையின் தூரல் உள்ளே அடிக்கிறது. தூரத்தில் நின்ற சகோதரரையும் தாக்குகிறது. உடனே அந்த சகோதரர் பெரியவரை நோக்கி நகர்ந்து செல்கிறார். பின்னும் இரைக்கிறது சிறிது சிறிதாக நகர்ந்து பெரியவரின் சரீரத்தோடு சரீரமாக இணைந்து விடுகிறார். தூரலிலிருந்து பாதுகாக்கப்படுகிறார்.

பெரியவர் திருச்சபையின் தலைமை என்றும் கட்டிடம் திருச்சபை என்றும் சகோதரர் தேவனுடைய பிள்ளைகள் (விசுவாசிகள்) என்றும் தலைமையோடு நெருக்கமில்லாதவர்களும், தலைமையைப் பற்றிய அவிசுவாசமுள்ளவர்களும் திருச்சபைக்குள்ளாக இருந்தாலும் ஜலத்தினாலும் ஆவியினாலும் பிறந்திருந்தாலும் தேவனுடைய பாதுகாவல் இல்லையென்றும் உலகத்தின் நெருக்கம் அவர்களையும் தாக்கும் என்றும் தேவன் உணர்த்தினார்.

இதுமுதல் ஆவியில் மங்கி எரிந்து கொண்டிருந்ததான என் ஆத்துமா எனக்குள் கலங்க ஆரம்பித்தது. ஆவியில் மந்தமான நிலை உருவானது "என் ஆத்துமாவே ஏன் எனக்குள் கலங்குகிறாய்" (சங் 42:5) என்று பரலோகத்தின் தேவனை நோக்கி காத்திருந்தேன். மறுபடியுமாக ஒரு தரிசனத்தின் மூலமாகப் பேசினார்.

ஒரு கட்டிடம் அதினுள் அநேக பரிசுத்தவான்கள் (தேவனுடைய பிள்ளைகள்) இருக்கிறார்கள். திடீரென்று அசரீரியாக ஒரு சத்தம் உண்டாகிறது. "சீக்கிரம் மறுரூபமாக்கப்படப்போகிறீர்கள் உடம்பில் எந்தவிதமான காயங்களோ புண்களோ இருக்கக் கூடாது. அப்படியுள்ளவர்கள் உடனடியாக சுகப்படுத்திக்கொள்ள வேண்டும் இல்லையென்றால் மறுரூபமாக முடியாது' என உரைத்தது. என் கையிலும் ஒரு சிறிய புண் காணப்பட்டது. அதைக் குறித்து தேவன் என் ஆத்துமாவிலே பேசினார். அந்தப் புண் திருச்சபையிலிருந்து பின்மாறியவர்களுடன் தொடர்பு வைத்துக் கொண்டிருந்த புண் என உணர்த்தினார். மேலும் தேவன் ஒவ்வொன்றாக வெளிப்படுத்தினார்.

கலங்கிக் கொண்டிருந்ததான என் நிலையை தேவன் தெளிவாக உணர்த்தினார். "நீ திருடனைக் காணும் போது அவனோடு ஒருமித்துப் போகிறாய், விபச்சாரக்காரரோடும் உனக்குப் பங்குண்டு. நீ உட்கார்ந்து உன் சகோதரனுக்கு விரோதமாய்ப் பேசி உன் தாயின் மகனுக்கு அவதூறு உண்டாக்குகிறாய். இவைகளை நீ செய்யும் போது நான் மௌனமாயிருந்தேன். உன்னைப் போல் நானும் இருப்பேன் என்று நினைவு கொண்டாய். ஆனாலும் நான் உன்னை கடிந்து கொண்டு அவைகளை உன் கண்களுக்கு முன்பாக ஒவ்வொன்றாக நிறுத்துவேன்" (சங் 50:18-21). இந்த வசனங்களின்படி உணர்த்தினார். நான் ஆவியில் கலங்கிக் கொண்டிருந்தேன்.

என் நிலை அறிந்த நான் பரிசுத்தவான்களை அணுகி என் காயத்தை சொஸ்தமாக்கிக்கொள்ள விரும்பினேன் இதை ஆவியில் அறிந்து அவர்கள், என்னை வரவழைத்தார்கள். மேற்கண்ட வசனங்களின்படி என்னை சுத்தப்படுத்தினேன். பாவ அறிக்கை செய்தேன்.

பின் மாறினவர்களோடு புசிப்பதும், கலந்திருப்பதும் பாவம் (I கொரி 5:11).

பரிசுத்தவான்களுக்கு விரோதமாகப் பேசும்போது மௌனம் சாதிப்பது அவர்களோடு ஒத்துப் போவது போன்றது (சங் 50:18-20).

அவர்களை வீட்டில் ஏற்றுக் கொள்வதும், அவர்களுக்கு வாழ்த்துதல் சொல்வதும் பாவம் (II யோவா 10).

அவனுக்கு வாழ்த்துதல் சொல்கிறவன் அவனுடைய துர்க்கிரியைகளுக்குப் பங்காளி (II யோவா 11)

இவர்கள் பிரிந்து போகிறவர்கள், ஆவியில்லாதவர்கள், ஜென்ம சுபாவத்தார்கள் (யூதா 19).

தங்களைத் தாங்களே மேய்த்துக் கொள்ளுகிறவர்கள் (யூதா : 12) என்பதை ஒத்துக் கொண்டு பாவ அறிக்கை செய்து இவைகளின்படி என் சிறிய காயத்தை குணமாக்கினேன். மீண்டும் ஒளியானது பிரகாசித்தது. எனக்குள் கலக்கம் நீங்கியது. புத்துணர்ச்சி, மகிழ்ச்சி உண்டாயிற்று.

இதை வாசிக்கிற என் சகோதரரே இப்படிப்பட்டதான புண்கள் காணப்படுமானால் அவைகள் நிச்சயமாக மறுரூபத்திற்கு தடையாக இருக்கும் என்பதை என் வாழ்க்கையின் அனுபவத்தில் கண்டு கொள்ள முடிந்தது. நீங்களும் உங்கள் நிலையை மாற்றிக் கொள்ள வேண்டும் என்பதற்காக இதை சாட்சியாக எழுதுகிறேன். நான் அறியாத நாட்களில் ஏற்பட்ட காயத்தை தேவன் வெளிப்படுத்தி அதை குணமாக்கினார்.

நம்முடைய பாவங்களை நாம் அறிக்கையிட்டால் பாவங்களை நமக்கு மன்னித்து எல்லா அநியாயத்தையும் நீக்கி நம்மை சுத்திகரிப்பதற்கு அவர் உண்மையும் நீதியும் உள்ளவராயிருக்கிறார் (I யோவா 1:9).

வழக்காடுவோம் வாருங்கள் என்று கர்த்தர் சொல்கிறார் (ஏசா 1:15).

ஆதிமேன்மையை காத்துக் கொள்ளாமல் தங்கள் வாசஸ்தலத்தை விட்ட (வலு சர்ப்பம்) பின் மாறியவர்கள் ஏதேனுக்குள் புகுந்து ஏவாளை வஞ்சித்தது போல இவர்களும் நயமாகப் பேசி எருசலேமாகிய ஏதேனுக்குள் புகுந்து தேவ பிள்ளைகளை வஞ்சிக்க வகை தேடுகிறார்கள். தேவனுடைய பிள்ளைகள் தங்களை காத்துக் கொள்ள வேண்டும். எந்தவிதமான பாவங்களையும் மன்னிப்பதற்கு திருச்சபை ஆயத்தமாக இருக்கிறது என்றும் தேவன் வெளிப்படுத்தினார்.

இவ்விதமாக தேவன் என்னை முன் குறித்தபடியினால் என் மீது வைத்த அன்பின் நிமித்தமும், கிருபையினிமித்தமும் என்னை ஆவிக்குள்ளாக நிலை நிறுத்துகிற தேவனுக்கு கோடா கோடியான ஸ்துதி ஸ்தோத்திரம் ஏறெடுக்கிறேன்.

இதை எழுதுகிற நான் 1954-ல் திருச்சபைக்குள்ளாக கடந்து வந்தேன். 1955 ஜனவரி முதல் நாள் ஞானஸ்நானம் பெற்றேன். கடந்த 1956ல் B. L. Shed, கொடைக்கானலில் நடைபெற்ற ஊழியர் மாநாட்டில் ஊழியராக அபிஷேகம் பண்ணப்பட்டேன். என்னை தேவன் தொடர்ந்து நிலை நிறுத்தவும் சத்தியத்திற்கு தூணாக நிற்கவும் பரிசுத்தவான்களும், தேவனுடைய பிள்ளைகளும் ஜெபத்தில் தாங்கும்படி வேண்டிக் கொண்டு என்னுடைய இந்த சிறிய அனுபவத்தை இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் முடித்துக் கொள்கிறேன்.

தேவ வசனத்தை உங்களுக்கு போதித்து உங்களை நடத்தினவர்களை நீங்கள் நினைத்து அவர்களுடைய நடக்கையின் முடிவை நன்றாய் சிந்தித்து அவர்களுடைய விசுவாசத்தை பின் பற்றுங்கள் (எபி 13:7).

Eld. Bro. M. சாதுசுந்தர் சிங்
புதிய எருசலேம் சபை
கோவில்பட்டி

---

"...உங்களை நீங்களே சோதித்து அறியுங்கள்; உங்களை நீங்களே பரீட்சித்துப் பாருங்கள்"

— II கொரி 13 : 5

---

**விவாகம்**

| மணமகன் | மணமகள் | மணநாள் | இடம் |
|---|---|---|---|
| ஜெபநேசர் | சந்திரா | 28-12-87 | சாந்தாபுரம் தேசப்பூர் |

# புதிய எருசலேம் சபை நடபடிகளில் சில

கிறிஸ்துவுக்குள் பிரியமானவர்களே, நம்முடைய தேவன் நமது மத்தியில் எப்பொழுதும் அற்புதங்களை செய்து நம்முடைய விசுவாசத்தைப் பலப்படுத்த விரும்புகிறார். நம்முடைய வாழ்க்கையில் ஓர் அற்புதம் நடக்கவிருக்கிறதென்றால் அதற்கு பின்னால் ஒரு நெருக்கடியான, கலக்கமான, பயங்கரமான, குறைவான ஒரு சூழ்நிலையை காணுகிறோம். முன்னாலே சிவந்த சமுத்திரத்தையும் பின்னாலே பார்வோனின் சேனைகளையும் பார்த்ததும் இஸ்ரவேலர்களுக்கு பெரிய பயம் உருவானது. அடுத்து நடந்த அற்புதத்தில் இந்தப் பயம் மாறினது. அப்படியே மாராவில் தண்ணீர் கசப்பானது உள்ளத்திற்கெல்லாம் வெறுப்புண்டானது. தண்ணீர் நல்ல தண்ணீரானதும் அந்த கசப்பு மாறி விட்டது. சீஷர்களோடு ஆண்டவர் படகில் பயணம் செய்தார். கடல் கொந்தளித்து படகு அமிழ்ந்து போகும் சூழ்நிலையில் சீஷர்கள் பயந்து அலறினார்கள். இயேசு காற்றையும், கடலையும் அதட்டினார். பெரிய அமைதி உண்டானது. அப்படிப் போல தேவனுடைய வேலை தீவிரமடையும் போது சாத்தானும் கோபாவேசம் கொண்டு தேவனுடைய வேலையை தடை செய்ய பல உபாயங்களை கையாள்வதுண்டு.

பவுலும், சீலாவும் கர்த்தர் சொல்லுகிற இடங்களுக்குப் போய் கர்த்தருடைய வேலைகளை திட்டமாய் செய்து வந்ததை பொறுக்க முடியாத சாத்தான் பவுலையும், சீலாவையும் அடித்து இரத்த களையாக்கி உட்காவலறையிலே கால்களை தொழு மரத்தில் மாட்டி சித்ரவதைச் செய்ய ஏற்பாடு செய்தான். தேவன் தம்முடைய ஊழியக்காரர்களைக் கை விட்டது போல் காணப்படலாம். அங்கேயும் கர்த்தர் பலத்த அற்புதம் நடப்பித்து தம்முடைய ஊழியக்காரர்களோடு தாம் வாசம் பண்ணுவதை வெளிப்படுத்தினார்.

எங்களுடைய ஊழியக்காலங்களிலேயும் புதிதாக ஆத்துமாக்கள் சந்திக்கப்படும் பொழுது புதிய இடங்களுக்கு ஊழியம் செல்லும் பொழுது அவைகளை தடை செய்யும் பொருட்டு வீட்டில் குழந்தைகளை பெலவீனப்படுத்தி என்னுடைய ஆத்துமாவைச் சோர்ந்து போகச் செய்வதற்கு பலமுறை பல காரியங்களை செய்து சாத்தான் தோல்வியடைந்து போனான்.

நடந்த ஒரு சம்பவத்தை கூறுகிறேன். கடந்த ஆகஸ்ட் மாதம் (1986), நாங்கள் மதுரை மாவட்டத்திலுள்ள கிளை சபைகளை சந்திக்க கடந்து போனேம். அங்கே ஞானஸ்நானம் பெறுவதற்கு ஒப்புக்கொடுத்திருந்த ஆத்துமாக்களுக்கு ஞானஸ்நானம் கொடுக்க வேண்டும். என்று கர்த்தருடைய ஆலோசனை பெற்று 2-9-1986 அணைப்பட்டி என்ற இடத்தில் ஞானஸ்நானம் கொடுக்கப்படும், சபை மக்களும் ஞானஸ்நானம் பெற விரும்புகிறவர்களும், வைகை ஆற்றுக்கு வந்து சேரும்படி 31-8-1986 பரிசுத்த ஆராதனையில் மதுரை மாவட்டத்திலுள்ள எல்லா கிளை சபைகளிலும் அறிவிப்புக் கொடுக்க ஏற்பாடு செய்யப்பட்டது. அநேகமாக காலை ஆராதனை பிற்பகல் 2-மணிக்குள் எல்லா சபைகளிலும் நடந்து முடியும். அந்நேரத்தில் இந்த ஞானஸ்நான அறிவிப்புகளும் ஏக காலத்தில் கொடுக்கப்பட்டிருக்கும்.

ஆனால் நடந்ததென்ன தெரியுமா? எனது இரண்டாவது பையன் +2 படிப்பவன். பெயர் சாது சுந்தர் சிங். இவனும் இன்னொரு சகோதரனுமாக வள்ளியூரிலிருந்து பக்கத்திலுள்ள மகிழ்ச்சிபுரம் என்ற ஊரிலுள்ள ஆராதனைக்குப் போய் விட்டு ஆராதனை முடிந்து வீடு வரும் பொழுது பையனுக்கு இரண்டு கால்களும் இடுப்புக்கு கீழே பெலவீனப்பட்டு கால் நடக்க முடியாமல் ஆகிவிட்டது. உடன் சென்றிருந்த சகோதரர் மெதுவாக தாங்கி வீட்டில் கொண்டு வந்து சேர்த்து விட்டார். இரவில் நிலைமை மோசமாகவே நாகர்கோவில் அருகேயுள்ள புத்தேரி ஆஸ்பத்திரியில் பையனை சேர்த்து விட்டு 1-9-1986-ல் எனக்கு மதுரை மாவட்டத்திலுள்ள பள்ளப்பட்டிக்கு தந்தி கொடுத்திருக்கிறார்கள்.

ஏன் இதை எழுதுகிறேன் என்றால், சாத்தான் ஆதியிலிருந்தே தேவனுடைய திட்டத்தை தடை செய்கிறவன் ஆனபடியால் அப்படியும் சாத்தானுக்கு தடை செய்கிறவன் என்ற பெயரை வைத்திருக்கிறார். (II தெச 2:7). இதிலே கர்த்தரின் செயலை பாருங்கள். நீங்கள் அதிகாலையில் கொடுத்த தந்தி அன்று மாலையில் எனக்கு கிடைத்திருக்க வேண்டும். கிடைக்கவில்லை, மறு நாள் காலை 9-30 மணி வரையிலும் நாங்கள் பள்ளபட்டியில் இருந்தோம் தந்தி வரவில்லை. ஞானஸ்நான ஆராதனையை முடித்துவிட்டு 35 பேர் ஞானஸ்நானம் பெற்று கிறிஸ்துவுடன் சேர்க்கப்பட்டார்கள். மாலை 5-மணிக்கு பள்ளபட்டி வந்து சேர்ந்தோம். அப்பொழுது தான் தந்தியை எங்கள் கையில் தேவன் கிடைக்கச் செய்தார். கர்த்தருடைய ஊழியத்தை வெற்றியோடு முடித்து விட்டோம். கர்த்தர் குழந்தைக்கு சுகம் கொடுப்பார் என்று சபை மக்கள், ஊழியர்களிடம் கூறி விட்டு, வள்ளியூர் வந்து, பின்னர் மருத்துவமனை சென்றோம். பையனை பார்க்கும் பொழுது மிகவும் கவலையாகத் தான் இருந்தது. ஆனாலும் இதிலும் தேவனுடைய சித்தம் ஒன்றுண்டு என்பதை எண்ணி கர்த்தரை மகிமைப் படுத்தினோம். பையனுக்காக ஊக்கமாக ஜெபித்தோம். இரு கால்களும் அசைக்க முடியாதிருந்த பையன் இரு கால்களையும் அசைக்க ஆரம்பித்தான். மறுநாள் டாக்டரை பார்க்கச் சென்றிருந்தோம் அவர் ரொம்ப ஆச்சரியப் பட்டார் நாங்கள் எல்லா பரிசோதனையையும் செய்தும் வியாதியைக் கண்டு பிடிக்க முடியாத நிலையாகி விட்டது. ஆனால் கர்த்தர் பையனுக்கு பெலன் கொடுத்திருக்கிறார் என்றார்.

பையனுக்காக தினமும் ஜெபித்து வரும் பொழுது பெங்களூருக்குச் செல்ல வேண்டும் என்று கர்த்தர் பேசினார். கொஞ்சம் கஷ்டமாகத்தான் இருந்தது. ஆனாலும் தம்முடைய பிள்ளையை கர்த்தர் பாதுகாத்துக் கொள்வார் நாம் அவருடைய சித்தப்படி செய்வோம் என முடிவு செய்து கொண்டு 12-9-1986 நள்ளிரவில் புறப்பட்டு 13-9-86 பிற்பகலில் பெங்களூர் போய்ச் சேர்ந்தோம். பெங்களூரில் புதிதாக ஓர் இடத்துக்கு ஆராதனை ஸ்தலம் மாற்ற வேண்டியது இருந்ததால் அங்கு சென்றோம். 14-9-86 பரிசுத்த ஆராதனையை அந்தப் புதிய இடத்தில் ஆரம்பித்து நடத்தினோம். கர்த்தருடைய மகிமை எருசலேம் தேவாலயத்தை நிரப்பினது போல் அந்த ஆராதனை ஸ்தலத்தை கர்த்தருடைய மகிமை நிரப்பினது. கர்த்தருக்கே மகிமை யுண்டாவதாக!

அன்று புதிதாக ஒரு வாலிபன் ஆராதனைக்கு வந்திருந்தார். அவர் பெயர் ஜேக்கப். இவருக்கு நீண்ட நாட்களாய் குடல் வியாதியால் மிகவும் அவஸ்தைப் பட்டுக் கொண்டிருந்தார். மருத்துவரால் குணமாக்க முடியவில்லை. அந்த ஆராதனையின் போது, அந்த சகோதரனிடம் ஒரு அசுத்த ஆவி குடி கொண்டிருந்து அவனைப் பெலவீனப் படுத்துகிறது; அவன் தன்னுடைய பாவங்களை அறிக்கையிட்டால் விடுதலையுண்டாகும் என்று தேவன் வெளிப்படுத்தினார். அவருக்கு ஆலோசனை கொடுத்தோம் தன்னுடைய பாவங்களை தேவ சமுகத்தில் அறிக்கையிட்டார். அவரிடம் குடி கொண்டிருந்த ஒரு அசுத்த ஆவி மிகவும் ஆவேசமாய் சத்தமிட்டு அவரை கீழே தள்ளி விட்டு ஓடி விட்டது. பின்னர் அந்த வாலிபன் எழுந்து மிகவும் சந்தோஷப் பட்டார். அவருடைய வியாதி நீங்கி விட்டது. வாழ்க்கையில் என்றுமில்லாத மகிழ்ச்சியை அவர் அடைந்து அதே திருச்சபைக்கு கொண்டு வருகிறார். தேவனுக்கு மகிமையுண்டாவதாக!

பின்னர் அங்கிருந்து வள்ளியூர் வந்து மீண்டும் மருத்துவமனைக்குப் போய் பையனுக்காக ஜெபித்தோம். அற்புதமாய் பையன் தெய்வீக சுகமடைந்து காலூன்றி நடக்க பெலன் பெற்றான். அநேக தேவபிள்ளைகளும் கர்த்தருடைய வல்லமையால் குணமடைந்து தேவன் [illegible] படுத்தினார் என்று கூறிக்கடந்து போகிறார்கள் பவுலும், சீலாவும் சிறைச் சாலை சென்றபடியால் சிறைச் சாலை தலைவன் சந்திக்கப் பட்டது போல இந் நாட்களிலும் சாத்தான் குழந்தையை பெலவீனப்படுத்தி மருத்துவமனைக்கு அனுப்பினாலும் கர்த்தர் அங்கே தம்முடைய நாமத்தை மகிமைப் படுத்தினார் அநேகரை சந்தித்துள்ளார்.

Pastor S Sundarraj
Valliyur

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் - 51 ★ MARCH 1988



"புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள்.... விழித்திருங்கள்...உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

மாற்கு 13 : 35-37

**EDITOR : CHIEF PASTOR N. LAZAR**

BOMBAY. INDIA.

# ஆசிரியர் உரை

நம்முடைய தேவன் நல்லவர், வல்லவர் அவர் தமக்குப் பிரியமானவர்களுக்குத் தமது வழியைப் போதிக்கிறார். கர்த்தர் தமது வழியை தெளிவாக வேதாகமத்தில் போதித்திருந்த போதிலும், சுய சித்தம் செய்ய விருப்பம் கொண்ட மனிதர்களும், பிசாசுகளும் தேவனுடைய வழியை தாறுமாறாக்கி தேவனுடைய வழியைக் குழப்பிப் போட்டனர். இந்த கடைசிக் காலத்தைக் குறித்து தேவனுடைய வார்த்தை தீர்க்கதரிசனமாய் சொல்லியிருக்கிறதென்னவென்றால் "அங்கே (இது கடைசிக்காலத்தைக் குறிக்கும்) பெரும் பாதையான வழியும் இருக்கும், அது பரிசுத்த வழி என்னப்படும்; தீட்டுள்ளவன் அதிலே நடந்து வருவதில்லை; அந்த வழியில் நடக்கிறவர்கள் பேதையராயிருந்தாலும் திசைகெட்டுப் போவதில்லை (துன்மார்க்கரில் அறிவாளிகள் கூட திசைகெட்டுப் போகிறார்கள்); அங்கே சிங்கம் இருப்பதில்லை; துஷ்ட மிருகம் அங்கே போவதுமில்லை; அங்கே காணப்படாது (இப்பொழுதோ துஷ்ட மிருகங்கள் அந்தப் பாதையில் காணப்படுகின்றன); மீட்கப்பட்டவர்கள் திரும்பி, ஆனந்தக் களிப்புடன் பாடி சீயோனுக்கு வருவார்கள்; நித்திய மகிழ்ச்சி அவர்கள் தலையின் மேலிருக்கும்; சந்தோஷமும் மகிழ்ச்சியும் அடைவார்கள்; சஞ்சலமும் தவிப்பும் ஓடிப்போம்"(ஏசா 35 : 8-10).

தேவனுடைய மார்க்கத்தில் உள்ள தடைகளையும் இடையூறுகளையும், கலகங்களையும் பொறுக்கிப் போட்டு மீட்கப்பட்டவர்கள் பேதையராயிருந்தாலும் தடுமாறாமல் இந்த ஜீவமார்க்கத்தில் செல்லும்படி பாதை செப்பனிடப்பட்டுள்ளது. தேவனுடைய சித்தம் செய்ய மனதுள்ளவர்களெவர்களோ அவர்கள் இந்த உபதேசம் தேவனால் உண்டாயிருக்கிறதோ; நாங்கள் சுயமாய் பேசுகிறோமோ என்று அறிந்து கொள்ளுவார்கள் (யோவா 7 : 17). இனிமேல் தேவனுடைய ஜனங்கள் வேகமாகவும், தெளிவாகவும் இந்த ஆவிக்குரிய பாதையில் நடக்க தேவன் வழி திறந்துள்ளார். சீயோனுக்கு (திருச்சபைக்கு) வாருங்கள். நித்திய மகிழ்ச்சி உங்கள் தலையின் மேலிருக்கும்; சந்தோஷமும் மகிழ்ச்சியும் அடைவீர்கள். சஞ்சலமும் தவிப்பும் ஓடிப்போம்"

கிறிஸ்துவுக்குள்,

Chief Pastor N. LAZAR.

# பாவ மன்னிப்பு

(தொடர்ச்சி)

நான் வைராக்கியமான இந்து குடும்பத்தில் பிறந்தவன். என் பெயர் சுந்தரசாமி. இயேசுவே இறைவன் என்றும் கிறிஸ்தவ மார்க்கமே மெய் மார்க்கம் என்றும் நீர ஆராய்ந்து அறிந்து, ஞானஸ்நானம் பெற்று, பரிசுத்தாவியின் அபிஷேகமும் பெற்றுக் கொண்டேன். "இருதயத்தில் சுத்தமுள்ளவன் பாக்கியவான் அவன் தேவனை தரிசிப்பான்" என்ற வேத வசனத்தின் மூலமாய் இறைவனை தரிசிக்க முடியும், அதற்கு வழி உண்டு என அறிந்து, இறைவனைக் காண வேண்டும், அவருக்கு முன் நிற்க தகுதி பெற வேண்டும் என பேராவல் கொண்டேன். என்னுடைய ஜெபங்களில் பெரும் பகுதி இறைவனைக் காணும்படி "இயேசுவே என்னை பரிசுத்தமாக்கும்" என்று ஜெபிப்பதிலேயே என் காலத்தை செலவழித்தேன். தேவன் என்னை பரிசுத்தமாக்க சித்தம் கொண்டார். சபைகளை சுற்றிப் பார்த்தேன், பல ஸ்தாபனங்களுக்குச் சென்று ஆராதித்தேன். நானாகப் போய் அவர்களோட ஒட்டிக் கொள்ள வேண்டியது இருந்ததே யொழிய அவர்களால் என்னை அவர்கள் சபையோடு ஊன்றக் கட்ட முடியவில்லை.

தேவ ஆவியானவரோ என்னில் அனல் மூட்டினார். என் நோக்கம், என் சிந்தை ஆவிக்குரிய மேலானவைகளை நாடிற்று. என் தாகம் தீர்ப்பார் யாருமில்லை. கொஞ்ச நாளில் எனக்குப் போதித்தவர்களுக்கு போதிக்க வளர்ச்சி பெற்றேன். இந்நிலையில் வள்ளியூர் "புதிய எருசலேம் சபை" போதகர் PASTOR S. SUNDARRAJ அவர்களையும், PROPHET S. YESUDASAN, அவர்களையும் போய் சந்தித்தேன். கூடி ஜெபித்தோம். பாஸ்டர் சொன்னார்கள்: Brother, நீங்கள் உங்கள் பாவங்களை அறிக்கை செய்யுங்கள் என்று. எனக்கு விளங்கவில்லை, நான் ஏற்கனவே ஆண்டவரிடம் அறிக்கை செய்து விட்டேனே என்றேன், அதற்கு பாஸ்டர், அதினால் மன்னிப்பு, பாவத்திலிருந்து முழுவதும் விடுதலையுண்டாகாது. பாவத்தை வெளிப்படையாய் அறிக்கை செய்ய வேண்டும் என்றார். இவர் இப்படி சொல்லுகிறாரே! இப்படி நமக்கு யாரும் சொல்லித் தரவில்லையே! இப்போது என்ன செய்யலாம்? என யோசித்து, உடனே ஒரு முடிவுக்கு வந்தேன். நமக்கு அறிந்த வேத வாக்கியங்களின்படி இப்படி அறிக்கை செய்யக் கூடாது என்று எழுதப்படவில்லை. இவர் சொல்லுகிறபடி அறிக்கை செய்வோம். ஏற்கனவே ஜெபத்தில் அறிக்கை செய்தவைகள் மன்னிக்கப்பட்டிருந்தாலும் இன்னொரு முறை இவரிடம் சொல்வதினால் என்ன தவறு! நாம் பாவத்தைச் சொன்னால் இவர் கேட்டுப் போனால் நமக்கென்ன? என சிந்தித்து ஞாபகத்திற்கு வந்த காரியங்களை அறிக்கை செய்தேன். என்னுடைய ஆவியில் அவரோட ஐக்கியப்பட ஈர்ப்புண்டானது. அடுத்த நாள் போய் அறிக்கை செய்தேன். திரளான பாவங்களை தெளிவாய் அறிக்கை செய்தேன். ஆத்மீகத்தில் ஒரு பெரிய எழுச்சியுண்டானது. ஏற்கனவே பரிசுத்தாவி பெற்று அந்நிய பாஷை பேச மிகுந்த ஆவலுண்டு; ஆனால் வராது. தேவ சமுகத்தில் நீண்ட நேரம் கெஞ்சி ஜெபம் பண்ணினால் சிறிது பாஷையும் வல்லமையும் உண்டாகும் அதுவும் எப்போதாவது. ஆனால் பாவ அறிக்கை செய்து ஜெபித்த பொழுது, 'உன் வாயை விரிவாய் திற நான் அதை நிரப்புவேன்' என்ற வசனத்தின் படி பாஷைகள் உருவானது. எந்த வேளையிலும் பேசத்தக்கதான ஒரு நிறைவுண்டாயிற்று.

இப்படி தேவனோடு எப்போதும் பேசும் சிலாக்கியம் கிட்டிற்று. தேவ ஆவியானவர் நடத்த ஆரம்பித்தார். கர்த்தர் பேசி, நான் நடக்க வேண்டிய வழியைப் போதித்தார். அவர் முகத்தை எனக்கு மறைத்த என பாவங்கள், பாவ அறிக்கையினால் நீங்கி தேவனைத் தரிசிக்கவும், அவர் ஆலோசனைகளையும், வழி நடத்துதல்களையும் பெற்றுக் கொண்டேன். என் வாழ்க்கை தூய்மையும், வல்லமையுமாய் இருக்க காரணம் இந்த பாவ அறிக்கையின் உபதேசமே. நான் குற்றமற்ற மனசாட்சியுடையவனாய் தைரியமாய் தேவனை கிட்டிச் சேர்கிறேன். ஆகவே இதுவே சரியானதும் சத்தியமானதுமான

சுத்திகரிப்பையுண்டாக்கும் உபதேசம் என சாட்சி கொடுக்கிறேன்.

ஒரு முறை எனக்கு பெரும் காய்ச்சல் வந்தது. அந்த சமயம் PASTOR. S. Sundarraj அவர்களும், தீர்க்கதரிசி அவர்களும் என்னோடே இருந்தார்கள். அவர்கள் ஜெபித்தார்கள். யோசித்து, யோசித்து பாவங்கள் உண்டாவென சோதித்து அறிந்து அறிக்கை செய்தேன். பிரயோஜனம் இல்லை. மீண்டும் யோசித்தேன். ஒரு காரியம் எனக்குப் பாவமாக தோன்றவில்லை அதை இயல்பாக வென்றே எண்ணினேன். அந்தப் பாவம் (காரியம்) உணர்த்தப்பட்ட படியால் அறிக்கை செய்ய விரும்பினேன். பாஸ்டர் என் கிட்டே வரும்போது அந்த ஒரு பாவத்தையும் அறிக்கை செய்ய ஒப்புக் கொடுத்தேன். என்ன ஆச்சரியம்! நான் இன்னும் அறிக்கை செய்ய வாய்திறக்க வில்லை, அறிக்கைக்கு ரெடியானேன், அவ்வளவு தான் சில நாள் என்னை வாட்டிய காய்ச்சல் உடனே டக்கென்று (Instant healing) இல்லாமல் போய் விட்டது. பின்பே அறிக்கை செய்தேன். 'நான் என் பாவத்தை அறிக்கையிடுவேன் என்று சொன்னேன், தேவரீர் என் பாவத்தின் தோஷத்தை மன்னித்தீர்'' என்ற திருவாக்கின்படி ஆயிற்று (சங் 32 : 5)

இந்த உபதேசத்தால் நான் பெற்ற நன்மைகளில் சில:

1. பரிசுத்தமாகுதல் (ரோம 6 : 22).
2. தேவ உறவு (தொடர்பு).
3. வல்லமை
4. சாட்சியின் ஜீவியம்
5. பாவத்தையே ஜெயிக்க கிருபை செய்தல், எல்லாவற்றையும் செய்வார் என்ற அசையா நம்பிக்கை.
6. சந்தோஷம்
7. ஆத்தும இளைப்பாறுதல்.

**நான் கண்ட உண்மை:**

இந்த உபதேசத்தை எதிர்க்கிறவன் ஒன்று படுபாவியாய் இருப்பான், அல்லது படுபாவத்தில் சீக்கிரம் விழுவான்.

இதை வாசிக்கும் அன்பானவர்களே! பரிசுத்தமாகுங்கள்.

Eld. Bro. SAM ISRAEL KANDASAMY
B. E; MSc. (Engg.)
'NEW JERUSALEM, CHURCH'
MADRAS.

..."யோவானுடைய சீஷரில் சிலருக்கும் யூதருக்கும் சுத்திகரிப்பைக் குறித்து வாக்குவாதமுண்டாயிற்று'' (யோவா 3 : 25).

# ஆதியாகமத்தைப் பற்றி ஒரு ஆராய்ச்சி

**ஆதி 3 : 14** சர்ப்பத்தின் மீது சாபம் இது எதைக் காண்பிக்கிறதென்றால் சர்ப்பமானது வீழ்ச்சிக்கு முன்னும் நேர்மையாக நடந்தது.

**ஆதி 3 : 15** சாத்தான் மீது சாபம். இயற்கையில பாம்பிற்கும மனிதனுக்குமிடையில் விரோதம் உண்டு. அது போலவே சாத்தானுடைய பிள்ளைகளுக்கும் தேவனுக்கும் விரோதம் உண்டு (ஆதி 3 : 15; மத் 10 : 34-38; யோவா 15 : 18, 19; யாக் 4 : 4; I பேதுரு 4: 12-19; I யோவா 2 : 15-17; 3 : 8-12; 4 : 1-6). சாத்தானுடைய வித்து (மத் 13 : 38; யோவா 8 : 44; I யோவா 3 : 8-10).

**ஸ்திரீயின் வித்து :** ஸ்திரீயின் வித்து, மனிதனுடைய வித்தல்ல. தேவனுடைய குமாரனாகிய மேசியாவின் வருகையை மாத்திரம் குறிப்பிடும் (ஆதி 3 : 15; ஏசாயா 7 : 14; 9 : 6, 7; 11 : 1; மத் 1 : 18-23; லூக் 1 : 31-35; யோவா 1 : 14; ரோம 1 : 5; 5 : 3; கலா 3 : 16, 19; 4 : 4,5; பிலி 2 : 5-11; I தீமோ 3 : 16; II தீமோ 2 : 8; எபி 1 : 1-8; 2 : 9-18; I யோவா 4 : 1-6; வெளி 5 : 5). தேவனுடைய முழு திட்டத்தில் கன்னிப் பிறப்பு ஒரு மிக முக்கியமான கொள்கையாயிருந்தது இயேசு கிறிஸ்துவின் கன்னிப் பிறப்பு, அவருடைய மரணம், அடக்கம் பண்ணுதல், உயிர்த்தெழுதலில் விசுவாசியாதவன் இரட்சிக்கப்படுவதில்லை (I கொரி 15 : 1-5; I யோவா 4 : 1-6). கிறிஸ்து சாத்தானை முற்றிலுமாய் நசுக்கி என்றென்றைக்கும் தோற்கடிப்பார் (ரோம 16 : 20; கலா 3 : 16; சங் 72 : 9; எபே 2 : 14-18; கொலோ

2 : 15; எபி 2 : 14; I யோவா 3 : 8; வெளி 11 : 15; 12 : 7-12; 19 : 11; 20 : 6). சாத்தான் மேசியாவின் மீது கொஞ்ச காலம் துன்பத்தை சுமத்துவான் என்று கூறப்பட்டது. அது கல்வாரியில் நடந்தேறி முடிந்தது. (ஆதி 3 : 15; ஏசா 53 அதி; அப் 2 : 22-24; எபி 2 : 14, 15; வெளி 1 : 18).

ஆதி 3 : 16 : ஸ்திரீயின் மீது சாபம் ஆதியாகமத்தில் இரண்டாவது தீர்க்க தரிசனம் (ஆதி 3 : 16 நிறைவேறியது நிறைவேறிக் கொண்டிருக்கிறது). இந்த சாபம் பிள்ளை பெறுவதைக் குறித்தல்ல. பிள்ளை பேறின் போது வேதனையும், கஷ்டமும் உண்டாயிருக்கும் என்பதையே குறிக்கிறது. இந்த சாபம் அதிக வருத்தத்தோடே பிரசவம் இருக்கும் என்பதே. ஆசை (ஆதி 4 : 7; உன்னத 7 : 10). உன் ஆசை உன்னுடைய புருஷனைப் பற்றியிருக்கும் அவன் உன்னை ஆண்டு கொள்ளுவான (ஆதி 3 : 1-6). மனிதன இப்பொழுது ஸ்திரீயின் தலையாளுன் (I கொரி 11 : 3-12; எபே 5 : 22).

ஆதி 3 : 17-19 : மனிதன மீதும் பூமியின மீதும் சாபம்

சாப நிலையின் கீழ் மனிதன் கடுமையாய் உழைத்து அதை சகித்து ஜீவிக்க வேண்டும் என்று இது காண்பிக்கிறது. அவனுடைய பாவத்தினால் அவனுடைய அதிகமான ஆதாரப் பொருள் (Elements) இயற்கைக்கு விரோதமாய் மாறி அவனை கஷ்டத்துக்குள்ளாக்கும். கடுமையான உழைப்பு அவனுடைய சரீரத்தை உடையச் செய்து முடிவில மரணத்தில் கொண்டு போய் விடும் (பிர 3 : 20; 12 : 7. I கொரி 15 : 21-26). மனிதன் சபிக்கப்பட்ட பூமிக்கு திரும்பும் வரை அவனுடைய தண்டனையில் ஒவ்வொரு விதமான சாபங்களான பாலைவனங்கள் மேட்டுத் தன்மைகள், களைகள், விஷங்கள், கிருமிகள் உண்டாயிருக்கும். கிரகங்கள் பாதிக்கப்பட்டு சீதோஷ்ண நிலைகள் ஒரு பிரச்சனையாய் மாறிற்று (ஏசா 30 : 26; 35 : 1, 2; வெளி 7 : 16). மனிதனுடைய முழு வாழ்க்கை இப்பொழுது மாறாத பெரும் கஷ்டங்கள், வேதனைகள் மற்றும் சோதனைகளினால் நிரம்பி எல்லாம் மறுபடியும் புதிதாய் சிருஷ்டிக்கப்படும் வரை நிலைத்திருக்கும் (சங் 90 : 10; 107 : 12 பிர 1 : 8; 2 : 17; 4 : 8; மத் 11 : 28; யாக் 5 : 14)

புதிய பூமியில் இனிமேல சாபம் இராது. ஆதாமுக்கு முந்தின உலகத்தில் லூசிபருடைய கலகத்திற்கு முன்னும் மற்றும் ஆதாமின் உலகத்தில் மனிதனுடைய கலகத்துக்கு முன்னும் எல்லாமே நன்றாய் இருந்தது போலவே புதிய வானம் புதிய பூமியில இருக்கும் (அப் 3 : 21; வெளி 22 : 3-5). 1000 வருட அரசாட்சியின் கிறிஸ்துவின நோக்கம் இந்த பூமியிலுள்ள எல்லா கலகம் மற்றும் சாபத்தை நீக்குவதே. அதினிமித்தம் தேவ மனிதன் தனக்கு ஆரம்பத்தில் கொடுக்கப்பட்ட வேலையில் தேவனுக்கு உதவியாயிருந்து உலகத்தை கிறிஸ்துவோடு சேர்ந்து ஆளுகை செய்வான்.

ஆதி 3 : 20 ஆதாமின் விசுவாசம் : (ஆதி 5 : 1, 6 : 1).

காயீனுக்கு எங்கேயிருந்து மனைவி கிடைத்தது?

மறுசிருஷ்டிப்பின் 6 நாட்களின வேலைக்குப் பின உடனடியாக பூமியில் ஆதாமும் ஏவாளும் முதல் மக்களாயிருந்தார்கள். அவர்கள் தங்களுடைய சொந்த இனத்தை பலுகி பூமியை நிரப்பும்படி அவர்களுக்கு கட்டளையிடப்பட்டது (ஆதி 1 : 26-28). அவர்கள் குமாரர்களையும், குமாரத்திகளையும் பெற்றார்கள் (ஆதி 4 : 1; 5 : 4; 6 : 1). இனத்தை உருவாக்கும்படி ஆரம்ப விவாகங்கள் சகோதரருக்கும் சகோதரிகளுக்குமிடையே நடைபெற்றது அதற்குப் பிறகு கிட்டத்து உறவினர்களை கல்யாணம் முடிப்பது தடை செய்யப்பட்டது (லேவி 18 அதி). காயீன் அவனுக்கு மனைவியை எடுக்கும் போது அவனுக்கு நூறு வயதிற்கு மேல் இருந்தது. அவன நோத் என்னும் தேசத்துக்கு போனான். அங்கே ஒரு நகரத்தைக் கட்டும் அளவில் போதுமான மக்கள் ஏற்கனவே இருந்தார்கள். அங்கே அவன் தன் மனைவியை அறிந்தான். அது என்னவெனில் அவன் அவளோடு உறவு கொண்டு

குடும்பத்தை ஆரம்பித்தான் (ஆதி 1 : 16-26). உண்மையில் ஆதி 3 : 20 சொல்லுகிறது, ஆதாம் தன்னுடைய மனைவியை ஏவாள் என்று அழைத்தான். "ஏனென்றால் அவள் ஜீவனுள்ளோர்களுக்கெல்லாம் தாயானவள். இது அவள் காயீனுடைய மனைவி மற்றும் குமார, குமாரத்திகளுக்கு தாயாக இருந்தாள் என்று ஆதாரமாயிருக்கிறது. இவ்விதமாக ஆதாம் தன்னுடைய மனைவி அநேக குமாரர், குமாரத்திகளுக்கு தாயாக இருக்கப் போகிறாள் என்பதை விசுவாசத்தினால் முன்னுகக் கண்டு ஜீவிகி என்றும் அர்த்தம் கொள்ளும் ஏவாள் என்றும் பெயரை சூட்டினான்.

ஆதி 3 : 21 பாவ நிவாரணத்திற்காக முதலாவது சிந்தப்பட்ட இரத்தம் மீட்பரைப் பற்றிய முதல் அடையாளம் (ஆதி 4 : 4; எபி 9 : 22).

ஆதி 3 : 22-24 கடைசி தீர்ப்பு: கபடமற்ற காலம் முடிவடைந்தது. ஜீவ விருட்சம் மனிதனுக்குத் தடை செய்யப்பட்டது. மனிதன (தோட்டத்திற்கு வெளியே) துரத்தப்பட்டான. ஜீவ விருட்சத்திற்கு காவல் வைக்கப்பட்டது. இது முதற்கொண்டு 1656 வருடங்கள் மனசாட்சியின் காலங்களாகும் (ஆதி 3 : 22—8 : 14).

ஆதி 3 : 22 தேவத்துவத்தில் ஒன்றுக்கு மேற்பட்ட வெவ்வேறு மற்றும் தனிப்பட்ட ஆளை இது குறிக்கிறது. (திரித்துவம் நிரூபிக்கப்பட்டிருக்கிறது)

(தொடரும்)

*நீ மண்ணாயிருக்கிறாய் மண்ணுக்குத் திரும்புவாய்*
*ஆதி 3 : 19*

(தொடர்ச்சி)

# மோட்ச வழி

## (குரு-சிஷ்ய உரையாடல்)

**சிஷ்ய:** தேவனுக்குப் பிரியமானவனாயிருக்க நான் என்ன செய்ய வேண்டும்?

**குரு:** தேவன் மேல் அன்பாய் (பக்தியாய்) இருக்க வேண்டும்

**சிஷ்ய:** எப்படி அன்புள்ளவனாய் நான் நடந்து கொள்ள வேண்டும் என்பதை விளக்கிச் சொல்லும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்.

**குரு:** 1. முதலாவது கர்த்தருடைய வார்த்தையை விசுவாசிக்க வேண்டும். தேவனுடைய வார்த்தையை தேவனுடைய வார்த்தையாய் ஏற்றுக்கொண்டு அதற்குக் கீழ்ப்படிய வேண்டும்.

2. தேவன் பேரில் நன்றியுள்ளவனாயிருந்து, அவரை ஸ்துதித்து அவருக்குச் செலுத்த வேண்டிய ஆராதனை, கனமகிமைகளைச் செலுத்த வேண்டும்.

3. கர்த்தருக்குப் பயந்து பாவத்தைவிட்டு விலகி ஓடி கர்த்தருக்கு முன்பாகவும், மனுஷருக்கு முன்பாகவும் உண்மையுள்ளவனாய் நடந்து கொள்ள வேண்டும்.

4. தேவனைக் குறித்து சாட்சி கொடுத்து அவரை பிறரும் அறியும்படியாக அறிவித்து தனியாகவும், சபையோடு சேர்ந்தும் அவருக்கு ஊழியம் செய்ய வேண்டும்.

5. கர்த்தரை ஸ்தோத்தரித்து ஜெபதியானம் செய்து இறைவேதம், திருச்சபையோடு ஐக்கியமாயிருந்து இறைசித்தம் செய்ய வேண்டும்

6. ஆத்தும ஆதாயம் செய்கிறதிலும், ஆத்துமாக்களை நிலைநிறுத்தி கர்த்தருடைய வருகைக்கு ஆயத்தப்படுத்துவதிலும் சபையோடு சேர்ந்து தன்னுடைய தாலந்துகளையும் செல்வத்தையும் காலத்தையும் செலவழிக்க வேண்டும்

7. நம்முடைய வாழ்க்கையானது எல்லாருக்கும் நல்ல முன்மாதிரியாயிருந்து இறைவனுக்கு சாட்சியாக விளங்குவதினால் நாம் கர்த்தருக்கு (தேவனுக்கு) பிரியமானவர்களாக விளங்க முடியும்.

**சிஷ்ய:** இவைகளை விவரித்து காண்பிக்கும்படி தயவாய் கேட்டுக் கொள்ளுகிறேன்.

**குரு:** 1. கர்த்தருடைய வார்த்தையை விசுவாசிக்க வேண்டும். தேவனுடைய வார்த்தையை தேவனுடைய வார்த்தையாய் ஏற்றுக் கொண்டு அதற்குக் கீழ்ப்படிய வேண்டும்.

தேவன் தம்மை, தன்னுடைய சித்தத்தை வேதாகமத்தின் மூலம் வெளிப்படுத்தியுள்ளார். தெய்வீக நூலாகிய வேதாகமத்தை நாம் பயபக்தியுடனும், விருப்பத்துடனும் ஜெபத்தோடும் வாசிக்க வேண்டும். வேதாகமம் வெளிப்படுத்தலாக இருக்கிறது. அதை விளங்கிக் கொள்கிறதற்கும் ஒரு வெளிப்படுத்தல் தேவை. வேதாகமத்தை கர்த்தராகிய ஆவியானவரின் மூலமாகவும், வெளிப்படுத்தல் மூலமாகவும் மாத்திரமே நாம் விளங்கிக் கொள்ள முடியும். இவ்விதமாக வெளிப்படுத்தல் மூலம் அறிந்த வேதாகம சத்தியங்களுக்கு நாம் முதலாவது கீழ்ப்படிய வேண்டும். நாம் கீழ்ப்படியும் பொழுது வேதாகமத்திலுள்ள ரகசியங்கள் வெளிப்பட ஆரம்பிக்கும். அனுபவம் பெற்ற பரிசுத்தவான்கள் மூலமாக நாம் மேலும் தெளிவு பெற்று உறுதிப் படுத்திக்கொண்டு அவ்வேதவாக்கியங்களுக்குக் கீழ்ப்படிய வேண்டும். அநேக வேதவாக்கியங்களுக்கு வெளிப்படையான கருத்தும் உள்ளான அர்த்தமும் உண்டு. சிலர் உள்ளான அர்த்தத்தை, கருத்தை மாத்திரம் ஏற்றுக் கொண்டு வெளிப்படையான கருத்தைச் சடங்காச்சாரம் என்றும் தேவையில்லை என்றும் தள்ளிப்போடுவார்கள். இன்னும் சிலர் தங்களுக்குப் பிடித்தமான வசனங்களை எடுத்துக் கொண்டு மற்றவைகளை ஒதுக்கி விடுவார்கள்.

வேறு சிலர் தங்களுக்கு வெளிப்பட்டதே சத்தியம் என்றும், மற்றவர்களுக்கு வெளிப்பட்ட உண்மை உண்மையல்லவென்றும் ஒதுக்கி விடுவார்கள். இன்னும் சிலர் மேற் கொண்டு தேவசித்தத்தை அறிய விரும்பாமல் தங்களுக்குத் தெரிந்ததே பூரணமானது என்று திருப்தியடைந்து அதற்கு ஆதரவான வசனங்களை சேர்த்துக் கொண்டு மற்ற வசனங்களுக்கு மாறுபாடான விளக்கங்களைக் கொடுப்பார்கள். வேதத்தையும், சாட்சியையும் கவனிக்க வேண்டும் (ஏசா 8:20; லூக் 16:29) வசனம் தனக்கு உணர்த்தும் கருத்தையும், தேவவசன ஆதாரத்தின் படியும் சாட்சியின்படியும் அங்கீகரிக்கப்பட்ட உபதேசங்களை, உண்மைகளை ஏற்றுக்கொண்டு கீழ்ப்படிந்து நடந்துகொள்ளுவது தேவனுக்குப் பிரியமான செய்கையாகும். அதனை விட்டு பாரம்பரியம், முன்னோர்கள் செய்தது பெரியவர்கள் சொன்னது என்று சொல்லி தேவவசனத்தை உதாசீனம் செய்வது முரட்டாட்டமும் கலகமுமான பில்லிசூனிய பாவத்துக்கும், இரண்டகம் பண்ணுகிறதற்கும் விக்கிரக ஆராதனைக்கும் சரியாக இருக்கிறது (1 சாமு 15:22,23)

(தொடரும்)

"தேவனே உம்முடைய சித்தத்தின்படி செய்ய இதோ வருகிறேன் என்று சொன்னார். இரண்டாவதை நிலைநிறுத்தும்படிக்கு முதலாவதை நீக்கிப் போடுகிறார்" (எபி 10:9).

மாதர் பகுதி

# வேதாகம ஸ்திரீகள்

## 3. சின்ன யாக்கோபுக்கும் யோசேயுக்கும் தாயாகிய மரியாள் (மாற் 15 : 40)

(தொடர்ச்சி)

இவள் கலிலேயா நாட்டிலிருந்து இயேசுவுக்கு பணிவிடை செய்யும்படி வந்த ஸ்திரீகளில் ஒருவளாகும். இவள் மற்ற மரியாள் என்றும், சின்ன யாக்கோபுக்கும், யோசேயுக்கும் தாயாகிய மரியாள் என்றும், யோசேயின் தாயாகிய மரியாள் என்றும், யாக்கோபின் தாயாகிய மரியாள் என்றும் சொல்லப்பட்டிருக்கிறாள் (மத் 27 : 61; 28 : 1; மாற் 15 : 40, 47 16 : 1; லூக் 24 : 10). இந்த அம்மா யோசேப்பின் சகோதரனாகிய கிலெயோப்பாவின் மனைவியாகிய கிலெயோப்பா மரியாள் என்று தெரிகிறது (யோவா 19 : 25). இவள் இயேசுவின் தாயாகிய மரியாளுடைய சகோதரி என்று அறிகிறோம் (யோவா 19 : 25). இவளும் மற்றவர்களும் இயேசுவை சிலுவையில் அறைந்ததை பார்த்துக் கொண்டிருந்தார்கள் (மத் 27 : 55, 56). பின்பு கல்லறைக்கு எதிராக உட்கார்ந்திருந்தார்கள் (மத் 27 : 61) இயேசு கிறிஸ்து கல்லறையில் அடக்கம் பண்ணப்பட்டதை இவள் பார்த்தாள் (மாற் 15 47; லூக் 23 : 55, 56). நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து உயிர்த்தெழுந்த அதி காலையில் கல்லறையைப் பார்க்க மகதலேனா மரியாளுடன் இந்த மரியாளும் போனாள் இவளும் மற்ற ஸ்திரீகளும் கல்லறையிலிருந்து திரும்பிப் போய் சீஷர்களுக்கு அறிவித்தார்கள். இந்த அம்மாளுடைய கணவன் பெயர் கிலெயோப்பா. இயேசுவின் தாயாகிய மரியாளின் கணவனை யோசேப்பின் சகோதரன் என்று தெரிகிறது. கிலெயோப்பாவுக்கு அல்பேயு என்று ஒரு பெயரும் உண்டு என்று தெரிகிறது (மத் 10 : 3)

## 4. லாசருவின் சகோதரியாகிய மரியாள் (லூக் 10 : 39, யோவா 11 : 1-44)

இயேசு பிரயாணமாய் எருசலேமுக்கு சமீபமான பெத்தானியா என்னும் கிராமத்துக்குப் போனார். அங்கே மார்த்தாள் என்னும் ஸ்திரீ அவரை தன்னுடைய வீட்டில் ஏற்றுக் கொண்டு உபசரித்தாள். அவளுக்கு மரியாள் என்னும் ஒரு சகோதரியும், லாசரு என்னும் ஒரு சகோதரனும் இருந்தார்கள். மார்த்தாள் வீட்டு வேலை செய்து கொண்டிருந்தாள். மரியாளோ இயேசுவின் வசனத்தைக் கேட்டுக் கொண்டு அவருடைய பாதப் படியில் உட்கார்ந்து கொண்டிருந்தாள். மார்த்தாள் வந்து, மரியாள் வேலை செய்வதில் தனக்கு உதவி செய்வதில்லை என்று முறையிட்டபொழுது, இயேசு : மரியாள் தன்னைவிட்டு எடுபடாத நல்ல பங்கைத் தெரிந்து கொண்டாள் என்றார் (லூக் 10 : 38-42) இயேசுவோடு கூட அவருடைய சீஷர்களும் இருந்தார்கள். இயேசுவானவர் எருசலேமுக்கு வரும் பொழுதும், போகும் பொழுதும் அடிக்கடி இந்த பெத்தானியாவில் மார்த்தாள், மரியாள் என்பவர்களுடைய வீட்டில் தங்கி இளைப்பாறினதாகத் தெரிகிறது இப்படி கர்த்தரையும் அவருடைய சீஷர்களையும் இந்த வீட்டார் அடிக்கடி உபசரித்ததின் மூலமாக இந்த குடும்பம் கொஞ்சம் வசதியுள்ள குடும்பம் என்று தெரிகிறது கர்த்தரை உபசரிக்கும் பெரும் சிலாக்கியம் பெற்ற இந்த சகோதரிகள் பெரும் ஆசீர்வாதத்தையும் பெற்றுக் கொண்டார்கள். இறந்து போன லாசருவை உயிரோடு எழுப்பும்படி இயேசு கிறிஸ்து வந்தபொழுது மரியாள் எதிர்கொண்டு போய் அவர் பாதப்படியில் விழுந்து அழுது அவரைத் தொழுது கொண்டாள் (யோவா 11 : 32) இயேசுவானவர் லாசருவை உயிரோடு எழுப்பிக் கொடுத்தார் (யோவா 11 : 43, 44).

நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து சிலுவையில் அறையப்படுவதற்கு முந்தின வாரத்தில் இயேசுவானவர் பெத்தானியா வந்த பொழுது அந்த குடும்பத்தார்

கர்த்தருக்கு விருந்து உபசாரம் செய்தார்கள். அப்பொழுது மரியாள் அவர் பாதத்தில் நளததைலம் பூசி தன் தலை மயிரால் அவருடைய பாதங்களைத் துடைத்து கர்த்தர் மேல் தாம் கொண்டிருந்த அன்பை வெளிப்படுத்தினாள். இதை அவள் தாம் அடக்கம் பண்ணப்படுவதற்கு எத்தனமாகச் செய்தாள் என்று கர்த்தர் சொன்னார் (மாற் 14: 1-9; மத் 26 : 7; யோவா 12 : 3). மரியாளுடைய தகப்பனுடைய பெயர் குஷ்டரோகியாயிருந்த சீமோன் என்று எழுதப்பட்டுள்ளது. இந்த சீமோன் குஷ்டரோகியாயிருந்து கர்த்தரால் சுகமாக்கப்பட்டவன் என்று தெரிகிறது. இவளும் பரிசேயன் வீட்டில் இயேசுவின் பாதத்தின் மீது பரிமளம் பூசின மரியாளும் ஒருத்தி தான் என்று சிலர் எண்ணுகிறார்கள் (லூக் 7 : 37, 38). ஆனால் நாம் சரித்திரங்களை சேர்த்து பார்த்தால் லாசருவின் சகோதரியாகிய மரியாள் வேறு; பரி லூக்கா சொன்ன ஸ்திரீ வேறு என்று கண்டு கொள்ளலாம்.

(1) அந்த பாவியான ஸ்திரீயிலுள்ள சம்பவம் லூக் 7 ஆம் அதிகாரத்தில் வருகிறது. மார்த்தாள் மரியாளைப் பற்றிய செய்தி லூக் 10 ஆம் அதிகாரத்தில் நாம் பார்க்கிறோம்.

(2) இடம் வெவ்வேறு: லாசருவின் சகோதரியாகிய மரியாள் எருசலேமுக்கு சமீபமாயிருந்த பெத்தானியாவில் தைலம் பூசினாள். மற்றவள் கலிலேயாவில் தைலம் பூசினாள்.

(3) இயேசுவுக்கு விருந்து செய்த இருவருக்கும் சீமோன் என்று பெயர் இருந்தாலும்; ஒருவர் குஷ்டரோகியாயிருந்த சீமோன் என்றும் மற்றவர் பரிசேயன் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

(4) லாசருவின் சகோதரி பாவி என்று சொல்லப்படுகிறதில்லை. கலிலேயா ஸ்திரீயோ அவ்வூரில் பொது மகள் தான் என்று யாவரும் அறிந்திருந்தார்கள்.

(5) பெத்தானியாவில் இயேசு அருளிய போதகம் வேறு கலிலேயாவில் அவர் அருளிய போதகம் வேறு.

(6) கலிலேயாவில் தைலம் பூசினவளின் பெயரை பரி லூக்கா சொல்லவேயில்லை.

(7) கலிலேயாவில் கர்த்தருக்குத் தைலம் பூசப்பட்டது அவருடைய ஊழியத்தின் ஆரம்ப காலங்களில் நடந்தது. மரியாள் தைலம் பூசியதோ அவர் சிலுவையில் அறையப்படுகிறதற்கு முந்தின வாரத்தில் பெத்தானியாவில் மரியாள் வீட்டில் விருந்தில் இருக்கும்பொழுது நடந்தது. ஆகையால லூக்கா 7 ஆம் அதிகாரத்தில் காணப்படுகிற பாவியான ஸ்திரீயல்ல இந்த மரியாள் என்பதை தெளிவாக அறிந்துக் கொள்ளவும். கர்த்தர் மேல் அன்பு கூர்ந்த ஸ்திரீகளில் இந்த மரியாளும் ஒருவளாகும். கர்த்தர் மார்த்தாளிடத்திலும், மரியாளிடத்திலும், லாசருவினிடத்திலும் அன்பாயிருந்தார் கர்த்தரால் அன்பு கூரப்பட்ட அந்த குடும்பம் இது (யோவா 11 : 5)

(தொடரும்)

இயேசு மார்த்தாளிடத்திலும், அவளுடைய சகோதரியினிடத்திலும் (மரியாள்) லாசருவினிடத்திலும் அன்பாயிருந்தார்.

யோவா 11 : 5

(தொடர்ச்சி)

# வேத பாடம்

**யாத் 26:1-14** 10 மெல்லிய பஞ்சு நூலாலும், இரத்தாம்பர நூலாலும், சிவப்பு நூலாலும், இளநீல நூலாலும் உண்டான மூடுதிரை.

இந்த மூடுதிரைகள் திரித்த மெல்லிய பஞ்சு நூலினாலும், இளநீல நூலினாலும், இரத்தாம்பர நூலினாலும், சிவப்பு நூலினாலும் செய்யப்பட்டன. அவைகளில் விசித்திர வேலையாய் கேருபீன்கள் செய்யப்பட்டிருந்தன. ஒவ்வொரு மூடுதிரையும் 28 முழ நீளமும், 4 முழ அகலமுமாயிருந்தன. இளநீல நூலினால் அவைகளுக்கு காதுகளை உண்டுபண்ணி ஒன்றோடொன்று பொன் கொக்கிகளினால் இணைக்கப்பட்டன.

ஆசரிப்புக் கூடாரத்திற்கு நான்கு வகையான மூடுதிரைகள் போடப்பட்டிருந்தன.

1. ஆசரிப்புக் கூடாரத்தில் உட்புறம் காணப்பட்ட மூடுதிரை பத்து: மெல்லிய பஞ்சு நூலாலும் இளநீல நூலாலும் இரத்தாம்பர நூலாலும், சிவப்பு நூலாலும் செய்யப்பட்டு பரிசுத்த ஸ்தலத்திலும், மகா பரிசுத்த ஸ்தலத்திலும் உட்பாகத்தில் போடப்பட்டிருந்தது (யாத் 26:1-6).

2. வெள்ளாட்டு மயிரினால் செய்யப்பட்ட பத்து மூடுதிரைகள் அதற்கு அடுத்தாற்போல் மூடப்பட்டிருந்தது.

3. சிவப்பு தீர்த்த ஆட்டுக்கடாத்தோலினால் செய்யப்பட்ட மூடுதிரை வெளிப்பக்கமாகப் போடப்பட்டிருந்தது (யாத் 26:14).

4. எல்லாவற்றிற்கும் வெளிப்புறமாக தகசுத்தோலினால் செய்யப்பட்ட மூடுதிரையினால் மூடப்பட்டிருந்தது (யாத் 26:14).

பழைய ஏற்பாட்டில் காணப்படுகிற ஆசரிப்புக்கூடாரம் அவைகளின் பொருட்கள், பலிகள், காணிக்கைகள், சடங்காச்சார சட்டங்கள் புதிய ஏற்பாட்டில் காணப்படுகிற தெய்வீக சத்தியங்களுக்கு அடையாளங்களாக மாதிரிகளாக நிழல்களாக இருக்கின்றன. (கொலோ 2:14-17; எபி 10:1) ஆசரிப்புக் கூடாரத்திலுள்ள எந்த பொருளைக்குறித்தும், காணிக்கைகளைக் குறித்தும் ஆவிக்குரிய கருத்து உண்டு. மெல்லிய பஞ்சு நூல் (Fine Linen) (வெள்ளை நூல்) தேவ நீதியைக் குறிப்பிடும் (வெளி 19:8). நீல நிறம் (Blue) வானமண்டலத்தை, பரலோகத்தை, பூரணப்படுத்தலைக் குறிக்கிறது. இரத்தாம்பரம் (Purple) இராஜரீகத்தைக் குறிக்கும். நல்ல சிவப்பு நிறம் (Scarlet) பூமிக்குரிய மகிமையைக் குறிப்பிடும் இவைகளை நாம் அப்படியே எடுத்துக் கொள்ள முடியாது. இவைகள் ஒரு மாதிரியைக் குறிப்பிடுகின்றன. ஆசரிப்புக் கூடாரமும் அது சம்பந்தப்பட்ட ஆராதனைகளும் பொதுவாக இயேசு கிறிஸ்துவினுடைய மரணம், அடக்கம் பண்ணுதல், உயிர்த்தெழுதல் பரமேறுதலுக்கு அடையாளமாக இருக்கின்றன (எபி 8:1-11; 9:1-24; 10:1-18).

**யாத் 26:15-30:** வாசஸ்தலத்தில் 48 சீத்திம் மரத்தினால் செய்யப்பட்ட பலகைகளும், 15 வெளிப்புறமான தாழ்ப்பாள்களும், ஒரு நடுத்தாழ்ப்பாளும் 96 வெள்ளிப் பாதங்களும் செய்யும்படி கட்டளையிடப்பட்டது (யாத் 36:20). இவைகளெல்லாம் சீத்திம் மரத்தினால் செய்யப்பட்டு பொன்தகட்டால் மூடப்பட்டிருக்க வேண்டும். இந்த பலகைகளை நிமிர்ந்து நிற்கும்படி தெற்கிலும், வடக்கிலும் இருபது இருபது பலகைகளும்; மேற்கில் 6 பலகைகளும் இரண்டு மூலைகளில் இரண்டு பலகைகளுமாக இணைக்கப்பட்டு தாழ்ப்பாள்களினாலும் தூண்களினாலும் பொருத்தப்பட்டு ஒரே வாசஸ்தலமாக மலையில் காண்பிக்கப்பட்ட மாதிரியின்படி நிறுத்தும்படி கட்டளையிடப்பட்டது.

**யாத் 26:31-32:** உள்திரைச்சீலை (தொங்குதிரை)யை இளநீல நூலினாலும், இரத்தாம்பர நூலாலும், சிவப்பு நூலாலும், திரித்த மெல்லிய பஞ்சு நூலாலும் விசித்திர வேலையாய் செய்

யப்பட்ட கேருபீன்கள் வைக்கப்பட்டதாய் திரைச்சீலையை உண்டுபண்ணி, சித்தீம் மரத்தால் செய்யப்பட்டு பொன் பதியப்பட்ட நான்கு தூண்களில் மகா பரிசுத்த ஸ்தலத்திற்கும், பரிசுத்த ஸ்தலத்திற்கும் நடுவில் தொங்க விட கட்டளையிட்டார் (யாத் 36:35,36).

யாத் 26:33-35: திரைக்கு உள்ளே சாட்சி பெட்டியும் பெட்டியின் மீதில் கிருபாசனத்தை வைக்கும்படியும், திரைக்கு வெளியே தெற்கே பொன் குத்துவிளக்கையும், வடக்கே மேஜையையும் வைக்க கட்டளையிடப்பட்டது (எபி 9:1-5).

யாத் 26:36,37 ஆசரிப்பு கூடார வாசலில் தொங்கிய வெளித்திரை இளநீல நூலாலும், இரத்தாம்பர நூலாலும், சிவப்பு நூலாலும், திரித்த மெல்லிய பஞ்சு நூலாலும் சித்திரத் தையல் வேலையான ஒரு தொங்கு திரையை உண்டு பண்ணி சித்தீம் மரத்தால் உண்டு பண்ணி பொன் தகட்டால் மூடப்பட்ட 5 தூண்களில் தொங்கவிட வேண்டும். தூண்களின் பாதங்கள் வெண்கலம்.

(தொடரும்)

> "மோசே அந்த வேலைகளை எல்லாம் பார்த்தான், கர்த்தர் கற்பித்தபடியே அதைச் செய்திருந்தார்கள், மோசே அவர்களை ஆசீர்வதித்தான்" (யாத் 39:43).

# சாட்சி

என்னுடைய பெயர் யோசுவா. வயது 65. நான் ஒரு பாரம்பரிய இந்துக் குடும்பத்தைச் சேர்ந்தவன். என்னுடைய பெற்றோர் எனக்கு வைத்த பெயர் காளியப்பன். நான் பிறக்கும் முன்னமே என்னுடைய பெற்றோர் இடத்தில் காளியம்மாள் என்ற பெண் தெய்வம் சொன்னதாவது; உங்களுக்கு பிள்ளை பிறந்தால் அந்தப் பிள்ளைக்கு என்னுடைய பெயர் வைக்க வேண்டும் என்று வாக்குக் கேட்டுக் கொண்டது. அதன் பிரகாரம் எனக்கு காளியப்பன் என்று பெயர் வைத்தார்கள். என்னுடைய தகப்பனார் பெயர் சூரிய நாராயண பிள்ளை. நான் சிறு வயதில் பள்ளிக்கு அனுப்பப்பட்டேன். அங்கு ஆசிரியர்கள் மூலமாக தேவாரம், திருவாசகம், திருவெம்பா, நிகண்டு, கந்தர் அநுபூதி போன்ற நூல்களைக் கற்றுக் கொள்ளும்படி போதிக்கப்பட்டேன்.

என்னுடைய தகப்பனார் இந்து தெய்வங்களை வணங்கும்படியாகவும், அவைகளை பூஜை செய்யும் படியாகவும் வழி நடத்தினார்கள். நான் அதன்படியே இந்து தெய்வங்களை வணங்கவும், பூஜை செய்யவும் ஆரம்பித்தேன். எங்கள் வீட்டில் இந்து தெய்வப் படங்கள் அநேகமுண்டு; அதோடு விநாயக விக்கிரகம் ஒன்று இருந்தது அதற்குப் பூஜை செய்யும்படியாக நந்தவனத்திற்குச் சென்று பூக்களைப் பறித்துக் கொண்டு, தண்ணீர் எடுத்துக்கொண்டு வந்து அந்த விக்கிரகத்தை அபிஷேகம் பண்ணி பூ போட்டு; நான் கற்றுக் கொண்ட பாடல்களைப் பாடி, இவ்விதமாகப் பூஜை செய்து வந்தேன். இதன் மூலமாக என்னுடைய வாழ்க்கையில் சமாதானமும், சந்தோசமும் உண்டாகவில்லை. குடும்பத்தில் நஷ்டங்களும் நெருக்கங்களும், குழப்பங்களும் உண்டாகின.

குடும்பத்தோடு வீடு விட்டு வீடு பெயர்ந்து போகும்படியான நிலை உண்டாயிற்று. அவ்விடங்களில் செய்து வந்த தொழிலில் நஷ்டங்கள் உண்டாயின. என்னிடத்தில் கிரியை செய்து வந்த பாவத்தில் இருந்தும் விடுதலை உண்டாகவில்லை. எனக்கோ மிகுந்த மன வேதனை உண்டாயிற்று. என்னுடைய இரண்டாவது மகள் கிறிஸ்துவினால் இரட்சிக்கப்பட்டு பம்பாயில் உள்ள தலைமை புதிய எருசலேம் சபையில ஐக்கியப்பட்டிருந்தாள். நான் எனது இரண்டாவது மகள் வீட்டிற்கு (பம்பாய்) சென்றேன்.

என்னுடைய மகனும், மருமகனும் என்னை தலைமை "புதிய எருசலேம் சபை"க்கு அழைத்துச் சென்றனர். அங்கு தலைமை மேய்ப்பர் (அப்போஸ்தலர்) மூலமாக இயேசு கிறிஸ்துவைக் குறித்து நான் தேவ செய்தியை கேள்விப்பட்டேன். அந்தச் செய்தியை மனப்பூர்வமாக ஏற்றுக் கொண்டேன். வானத்தையும், பூமியையும் உண்டாக்கின கர்த்தர் என்னை தம்முடைய பரிசுத்த ஆவியினால் அபிஷேகம் செய்தார். கர்த்தரால் பாவமன்னிப்பின் அதிகாரம் பெற்ற ஊழியக்காரர் இடத்தில் நான் என்னுடைய பாவங்களை அறிக்கை செய்தேன். 26-8-1979 அன்று வெள்ளிபுரியில் தலைமை மேய்ப்பர் அவர்கள் மூலமாக பாவமன்னிப்புக்கென்று முழுக்கு ஞானஸ்நானம் பெற்றுக் கொண்டேன். இவ்விதமாக நான் கிறிஸ்துவை ஏற்றுக் கொண்டு கிறிஸ்துவின் பிள்ளையாக மாறினேன். இப்பொழுது எனக்கு கர்த்தராகிய இயேசு கிறிஸ்து மூலமாக சமாதானம் கிடைத்திருக்கிறது. அவருடைய பாதுகாப்பும், பராமரிப்பும் எனக்குக் கிடைத்திருக்கிறது. கிறிஸ்துவின் மூலமாக மோட்சத்தில் பிரவேசிக்கும் பாக்கியம் எனக்கு இப்பொழுது உண்டாகி இருக்கிறது. அதை நான் பெற்றுக் கொள்வேன் என்று முழு நம்பிக்கையோடு ஆசையாய் தொடர்கிறேன்.

பூமியில் அநேக தெய்வங்கள் காணப்பட்டாலும், வானத்தையும், பூமியையும் சமுத்திரத்தையும் உண்டாக்கின இறைவன் ஒருவரே. அவர் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவே. இவர் மூலமாகவே பாவமன்னிப்பும், இரட்சிப்பும், மோட்சமும் உண்டாகியிருக்கிறது. இதை வாசிக்கும் அன்பான சகோதரனே, சகோதரியே! நீங்கள் இயேசு கிறிஸ்துவை உங்கள் சொந்த இரட்சகராக ஏற்றுக் கொள்ளாவிட்டால் இன்றே அவரை உங்கள் சொந்த இரட்சகராக ஏற்றுக் கொள்ளுங்கள். "அவராலேயன்றி வேறொருவராலும் இரட்சிப்பு இல்லை; நாம் இரட்சிக்கப்படும்படிக்கு வானத்தின் கீழெங்கும், மனுஷர்களுக்குள்ளே அவருடைய நாமமேயல்லாமல் வேறொரு நாமம் கட்டளையிடப்படவும் இல்லை..." அப் 4 : 12.

இப்படிக்கு,
S. காளியப்பப்பிள்ளை என்ற யோசுவா
புதிய எருசலேம் சபை
கழுகுமலை.

---

"நான் குருடனாயிருந்தேன். இப்போது காண்கிறேன்" யோவான் 9 : 25

---

சிறுவர் பகுதி

# தாவீதும் - யோனத்தானும்

ஞாயிற்று கிழமை ஆராதனை முடிந்த பின்னர் ஞாயிறு பள்ளியும் முடிந்து வீடு திரும்பிக் கொண்டிருந்த சிறுவர்கள் வழியிலேயே சண்டை போட்டுக் கொண்டனர். அவைகளைக் கண்ணுற்ற ஞாயிறு பள்ளி ஆசிரியைக்கு மிகுந்த வேதனையாகிவிட்டது. ஏனென்றால் அன்றைய தினத்தில் பிள்ளைகளுக்கு சொல்லிய தங்க வசனம் "நீங்கள் ஒருவரிலொருவர் அன்பாயிருங்கள்..." இந்த வசனத்தை பிள்ளைகள் இவ்வளவு சீக்கிரமாய் மறந்து விட்டனரே! என ஆசிரியை மிகவும் வருத்தப்பட்டாள்!

பிள்ளைகளுக்காக அந்த வாரம் முழுவதுமாக கர்த்தரிடத்தில் விண்ணப்பித்தார்கள். அடுத்த ஞாயிற்று கிழமையும் வந்தது. ஆராதனையும் முடிந்தது. ஞாயிறு வகுப்பில் ஜெபம், பாடல்கள் முடிந்தவுடன் கதை பகுதி ஆரம்பித்ததும் பிள்ளைகள் மிகவும் ஆவலாக கதை கேட்பதற்கு ஆயத்தமாயினர். ஆசிரியை, பிள்ளைகளே, இன்று நான் உங்களுக்கு நமது வேதாகமத்தில் (Bible) மிகவும் பிரியமாகவும், அன்பாகவும் இருந்த இரண்டு நண்பர்களைப் பற்றி கூற விரும்புகிறேன். அந்த இரு நண்பர்களும் எவ்வளவு சிநேகமாக இருந்தனர் என்பதை நீங்களும் அறிந்து ஒருவருக்கொருவர் அன்பாக இருக்க வேண்டும் என்பதே எனது வாஞ்சை. அதை நிறைவேற்றுவீர்களா! என்று கூறிவிட்டு ஆசிரியை கதையை கூற ஆரம்பித்தார்.

கதையின் தலைப்பு தாவீது யோனத்தான் என அறிவித்து, தாவீது என்பவர் ஒரு

தேவ பக்தர். இவர் கோலியாத் என்ற அரக்கனை சிறுவராய் இருந்த போதே கொன்றவர். தாவீதுக்கு மிகவும் நெருங்கிய சிநேகிதர் யோனத்தான். இந்தயோனத்தான் இஸ்ரவேலின் இராஜாவாகிய சவுல் என்பவரின் மகன். யோனத்தான் தாவீதைப் பார்த்தது முதற்கொண்டு தாவீது மேல் அன்பு செலுத்தஆரம்பித்தார். இப்படி ஒருவரிலொருவர் அன்பு செலுத்தி இணைபிரியா நண்பர்களாக இருந்தனர். இவர்களது நட்பு மரணம் வரையிலும் நீடித்தது. யோனத்தானுடைய ஆத்துமா தாவீதின் ஆத்துமாவோடே ஒன்றாய் இசைந்திருந்தது. யோனத்தான் தாவீதை உயிரைப் போல நேசித்தான். அப்படியே தாவீதும் யோனத்தானை சிநேகித்தான். அது முதல் இருவரும் உடன்படிக்கை பண்ணிக் கொண்டனர். ராஜாவாகிய சவுலின் மகன் யோனத்தான் தன் வஸ்திரத்தையும், போர்க் கருவிகளையும் தாவீதுக்குக் கொடுத்தான். இவர்களது நட்பு நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக துளிர் விட்டு வளர்ந்தது. யோனத்தான் தன் நண்பராகிய தாவீதுக்காக தன் தகப்பனிடத்தில் பரிந்து பேசி வந்தான்.

தனது தகப்பனார் தாவீதை கொல்ல வேண்டும் என நினைத்ததைக் கேள்விப்பட்டு தன் நண்பராகிய தாவீதுக்காக யோனத்தான். தாவீது தவறு செய்யவில்லை, அவர் உத்தமர், என நண்பனுக்காகப் பரிந்து பேசி வரலானார். இதினால் இராஜாவாகிய சவுல் இவர்களது நட்பை பிரிப்பதற்கு எவ்வளவோ முயற்சி செய்தும் வெற்று நிலத்திற்கு இறைத்த நீர் போலாகி விட்டது. மகனை பயமுறுத்தியும் பார்த்தார். ஆனாலும் யோனத்தான் தன் நண்பராகிய தாவீது மேல் வைத்த நட்பையோ, அன்பையோ, குறைக்கவில்லை. யோனத்தான் தாவீதை தன் உயிரைப் போல சிநேகித்தார். ஒருமுறை தனது தோழன் தாவீதை ராஜாவாகிய சவுல் நிந்தித்தபடியால் தனது தகப்பனுடன் சாப்பிட்டுக் கொண்டிருந்த யோனத்தான், சாப்பிடாமல் பந்தியிலிருந்து எழுந்து போய்விட்டார். தாவீது தனது ஜீவனை தப்புவித்துக் கொள்ள தனது நாட்டைவிட்டு ஓடும்போது தாவீது பிரிந்து போகிறார் என்பதை நினைத்து இருவரும் பிரிவால் மிகவும் அழுதனர். தாவீது மிகவும் அழுதார் (1 சாமு 20:41).

இருவரும் இணைபிரியாத நண்பர்களாக இருந்தனர். யோனத்தானும் சவுல் இராஜாவும் யுத்தத்தில் இறந்து போனார்கள் என்று கேள்விப்பட்ட தாவீது மிகவும் அழுது புலம்பினார். யோனத்தானே, உயரமான ஸ்தலங்களிலே வெட்டுண்டு போனாயே. என் சகோதரனாகிய யோனத்தானே உனக்காக நான் வியாகுலப்படுகிறேன். நீ எனக்கு வெகு இன்பமாயிருந்தாய், உன் சிநேகம் ஆச்சரியமாயிருந்தது என அவர் புலம்பினார். பின்னர் தாவீது ராஜாவானார் தனது நண்பன் யோனத்தானுக்கு ஆணையிட்டுக் கொடுத்ததினால் யோனத்தான் மீது வைத்திருந்த அன்பினிமித்தம் யோனத்தானின் மகன் இரண்டு காலும் முடமான மேவிபோசேத்திற்கு உதவி செய்தார் என வேதம் நமக்குச்சொல்லுகிறது.

பிள்ளைகளே, நீங்களும் ஏன் தாவீது யோனத்தானைப் போல ஒருவருக்கொருவர் அன்பான சிநேகிதர்களாயிருக்கக் கூடாது? என ஆசிரியை கதையை முடித்து கேட்டார். பிள்ளைகள் ஒவ்வொருவரும் ஒருவர்முகத்தை ஒருவர் பார்த்துவிட்டு டீச்சரிடத்தில் 'இனி மேல் நாங்கள் ஒருக்கொருவர் சண்டை போடாமல் இப்பொழுது கேட்ட தாவீது யோனத்தானைப்போல் சிநேகிதமாய் இருப்போம் என உறுதியளித்தனர். ஞாயிறு பள்ளி ஆசிரியரும் மிகவும் சந்தோஷப்பட்டார்கள்.

பிள்ளைகளே. நீங்கள் ஒருவருக்கொருவர் அன்பாக இருங்கள். அன்பு தேவனால் உண்டாயிருக்கிறது!

---

"நீங்கள் ஒருவரிலொருவர் அன்புள்ளவர்களாயிருந்தால், அதினால் நீங்கள் என்னுடைய சீஷர்களென்று எல்லோரும் அறிந்து கொள்வார்கள்" யோவா 13:35.

---

(தொடர்ச்சி)

# புதிய எருசலேம் சபையின் நடபடிகளில் சில

பிரியமானவர்களே, தேவனாகிய கர்த்தர் எங்களைக் கொண்டு சொன்னவைகளையும் செய்தவைகளையும் எழுதப்போனால் ஏடு போதாது. எனினும் தேவனாகிய கர்த்தர் புதிய எருசலேம் சபையைக் கட்டி எழுப்புகிறார். எருசலேமில் தேவன் வாசம் பண்ணுகிறார் (சக 8:3) என்பதை நீங்களும் அறிந்து மற்றவர்களுக்கும் அறிவிக்க வேண்டும் என்பதற்காகவே சிலவற்றைத் தொடர்ந்து உங்களுக்கு எழுதுகிறோம்.

மதுரை மாவட்டம், கொடைரோடுக்கு அருகே அம்மைய நாயக்கனூர் என்ற ஊரில் பலசரக்கு கடை ஒன்றில் வேலை பார்க்கும் ஐசக்ஞானையா என்ற வாலிபருடைய சகோதரன் கிளாரன்ஸ் மருதையா என்பவர். இவர் தற்பொழுது அசெம்பிளிஸ் ஆப்காட் (ASSEMBLIES OF GOD) சபையில் பாஸ்டராகப் பணியாற்றுபவர். கிளாரன்ஸ், ஐசக்ஞானையாவை வள்ளியூருக்கு அழைத்து வந்தார். அவருக்கு மருத்துவர்களால் குணமாக்க முடியாமற் போன வியாதி சரீரத்தில் இருந்தது. இவருடைய பழைய பெயர் சண்முகம். இவர் இளம் வயதிலேயே தன்னுடைய சொந்த குல தெய்வத்துக்கு பூசை செய்பவர். இவருடைய தகப்பனார் ஓர் பேர் பெற்ற வைத்தியர். இவருடைய சொந்த ஊர் சிங்கம்புணரியாகும்.

இவரை அழைத்து வந்த சகோதரர் கிளாரன்ஸ் மருதையா ஏற்கனவே எங்களுக்கு அறிமுகமானவர். இவனுடைய வியாதிக்காக நீங்கள் ஜெபிக்க வேண்டும் என்று கூறி அவரை எங்களிடம் விட்டு விட்டு அவர் போய்விட்டார்.

சகோதரர் ஐசக்ஞானையாவை நாங்கள் வள்ளியூரில் தங்க வைத்து அவருக்காக உபவாசித்து ஜெபித்தோம். அவருடைய சரீரம் மிகவும் வீங்கிவிட்டது. கை கால்கள் வெடித்து நீர் வடிய ஆரம்பித்தது. அவர் தரையிலே படுத்திருந்தால் அரைப்படிவரை தண்ணீர் பெருகி நிற்கும் ஆராதனையில் உட்கார்ந்தால் மூன்று வஸ்திரங்களை ஒன்றின் மேல் ஒன்றாகக் கட்டிக்கொள்வார். ஆனாலும் அவைகள் சீக்கிரமாய் நனைந்து விடும். தன் பாவங்களையெல்லாம் தேவ சமுகத்தில் அறிக்கையிட்டார். தேவன் அவரைக் குறித்த சித்தத்தை வெளிப்படுத்தினார்.

இவனை நான் சீக்கிரம் குணமாக்குவேன். இவன் தனியாக வீடு எடுத்து சமயம் கிடைக்கும் பொழுதெல்லாம் ஜெபிக்க வேண்டும். சொந்த ஊருக்குப்போகக்கூடாது சீக்கிரமாய் இவனைப் பரிசுத்த ஆவியினால் நிரப்பி சாட்சியாக நிறுத்துவேன். இவனுடைய வியாதியை நான் குணமாக்குவேன் விசுவாசத்தோடு இவன் கடந்து போகட்டும் என்று கர்த்தர் பேசினார். நாங்கள் இவருக்கு ஆறுதல் கூறி அனுப்பிவிட்டோம். திருநெல்வேலியிலிருந்து இரயில் ஏறி கொடைரோட்டில் இறங்கி இவர் வேலைப்பார்க்கும் கடைக்குப்போனார். இவர் ரயிலில் பிரயாணம் செய்யும் பொழுது கால்களைத் தொங்கவிட்டுப் போனதால் இரண்டு கால்களும் மிகப்பருமனாய் வீங்கி விட்டது. சரீரமும் ரொம்பப் பெரிதாக ஊதிவிட்டது. இவரைக் கண்ட கடையில் வேலை பார்க்கும் நண்பர்கள் மிகவும் கலங்கப் பட்டிருக்கிறார்கள்.

என்ன ஐசக் அண்ணே, போகும் பொழுது இருந்ததைவிட ரொம்பமோசமாய் வந்திருக்கிறீர்களே. அங்கு என்ன சொன்னார்கள் என்று கேட்டிருக்கிறார்கள். சீக்கிரம் சுகம் கிடைக்கும் என்று கர்த்தர் பேசினார். வண்டியில் பிரயாணம் செய்தபடியால் சரீரம் மிகவும் ஊதிவிட்டது என்பதாக இவர் கூறியிருக்கிறார். கடையிலுள்ள முதலாளியும், வேலைக்காரர்களும் சாப்பிடுவதற்கு கடையிலேயே ஓர் மெஸ் வைத்திருக்கிறார்கள். இரவு சாப்பாடு வேளை வரவே ஐசக் அண்ணே, சாப்பிட வாங்க என்று நண்பர்கள் இவரை மெஸ்ஸிக்கு அழைத்துப் போயிருக்கிறார்கள் முதலாளியும் சாப்பிட வந்திருக்கிறார். திடீரென்று முதலாளியின் பார்வை இந்த சகோதரர் ஐசக்ஞானையாவின் மீது

வின் மீது விழுந்தது. யார் இந்தஆள் என்று கேட்டிருக்கிறார். இது நம்ம அண்ணன் சண்முகம் தான் என்று கூறியிருக்கிறார்கள். யார் ஞானக்கண்ணையாவா? அய்யய்யோ இப்படி! உனைப்பார்க்க ரொம்ப பயமாக இருக்கிறது இப்படி ஒரே மெஸ்சில் சாப்பிடுவது நல்ல தல்ல. நாளைக்கே உன் சொந்த ஊருக்குப் போய்விடு. வியாதி சுகமானபிறகு வந்தால் போதும் என்று கடை முதலாளி ரொம்ப வெறுப்பாகவும் கண்டிப்பாகவும் சொல்லி விட்டார். கஷ்டப்பட்டு சாப்பிட்டு விட்டு கடையை விட்டு வெளியே வந்து தெரு ஓரத்தில் ஓர் ஒட்டுத்திண்ணையில் அமர்ந்து இனி என்ன செய்வது என்று சிந்தித்துக் கொண்டேயிருந்திருக்கிறார்.

இவர் பள்ளியூரிலிருந்து வந்துவிட்டாரா என்று இவரைப்பார்ப்பதற்காக இவருடைய கிறிஸ்தவ நண்பர் ஒருவர் அந்த வழியாக வரவே சகோதரரே, எங்கே போகிறீர்கள் என்று ஞானக்கண்ணையா கேட்டிருக்கிறார். சகோதரரேயார் நீங்கள் ஞானக் கண்ணையாவா? ஏன் இங்கு வந்து இருக்கிறீர்கள்? பள்ளியூரிலிருந்து எப்போ வந்தீர்கள் உடல் நிலை எப்படி இருக்கிறது? என்று கேட்டுக் கொண்டே கிட்ட வந்திருக்கின்றார். இவருடைய உருவத்தைப் பார்த்ததும் அவரும் பயந்துபோய் விட்டார். என்ன சகோதரரே போகும் பொழுது நன்றாகப் போனீர்களே இப்பொழுது ஏன் இப்படி ஆகிவிட்டது என்று கேட்டிருக்கிறார்.

சகோதரரே, நாளைக் காலையில உங்களைப் பார்க்க வரவேண்டும் என்று எண்ணினேன். எனக்கு வியாதி சுகமாகும். சொந்த ஊருக்குப் போகக்கூடாது. தனியாக இடம் எடுத்து சமயம் கிடைக்கும் பொழுதெல்லாம் ஜெபம் செய்ய வேண்டும் என்று ஆலோசனை சொல்லி அனுப்பினார்கள். ஆனால் கடை முதலாளியோ என்னை வெளியே அனுப்பிவிட்டார். சொந்த ஊருக்குப் போய் சுகமாக்கிவிட்டு வா என்று கூறிவிட்டார். கர்த்தருடைய வார்த்தையோ நீ சொந்த ஊருக்குப் போகக் கூடாதென்றிருக்கிறது. எனவே நான் ஒரு தீர்மானம் செய்திருக்கிறேன். கர்த்தர் என் வியாதியைக் குணமாக்கும் வரையிலும் பகல் முழுவதும் அருகிலுள்ள காடுகளில் தங்கிக் கொள்வது. இரவு உங்களைப் போன்ற நண்பர்களின் வீடுகளில் சென்று சிறிது ஆகாரம் பெற்று சாப்பிட்டுக் கொள்வது என்று முடிவு செய்துள்ளேன். உங்கள் வீட்டிற்கு வந்தால் என்னை ஏற்றுக் கொள்வீர்களா? என்று தழுதழுத்த குரலில் கேட்டிருக்கிறார். இவருடைய நண்பரும் உள்ளம் உடைந்து என்ன சகோதரனே, இப்படி கேட்டுவிட்டீர்கள். உங்களுக்கு நல்ல சுகம் கிடைக்கும் வரையிலும் எங்கள் வீட்டிலேயே இருங்கள். என் பிள்ளைகளில் ஒன்றைப் போல் நான் உங்களை நேசிப்பேன் என்று அன்பாய்க் கூறியிருக்கிறார். சரி நாளை காலை உங்களை வந்துப் பார்க்கிறேன் என்று இவர் கூற நண்பரும் தன்னுடைய வீட்டிற்கு நடந்து போய்விட்டார்.

இவர் (ஞானக் கண்ணையா) இரவு முழுவதும் அந்தத் திண்ணையிலேயே உட்கார்ந்து ஆண்டவரே! நீர் என்னை தனிமையாய் வீடு எடுத்துத் தங்கி இருக்கச் சொன்னீர். ஆனால் நான் இப்பொழுது வேலையை விட்டே வெளியேற்றப்பட்டு விட்டேன். என்னுடைய சொந்த ஊருக்கு நான் போகக்கூடாது என்று கூறினீர். நான் அங்கு போனால் பழைய விக்கிரகங்களுக்கு மீண்டும் என்னைப் பூசை பண்ணச் சொல்லி விடுவார்கள். இதையெல்லாம் நீர் அறிவீர். நான் உம்முடைய சித்தப்படியே நடக்க எனக்கு வழிகாட்டும் என்று வேண்டிக் கொண்டே இரவு வேளையைக் கழித்திருக்கிறார்

இவர் வேலை பார்க்கும் கடைக்கு மூன்று முதலாளிகள் உண்டு. அதில் மூத்தவர்தான் இவரை வெளியே போகச் சொன்னவர். இவர்களில் இளையவர் இந்த ஞானக் கண்ணையாமேல் மிகவும் பாசம் உள்ளவர். அவர் குடும்பத்துடன் வெளியே இருக்கிறார். அவருக்கு இவரை வெளியேற்றின விஷயம் தெரிந்து அதிகாலையில் மூத்த அண்ணனிடம் வந்து சத்தம் போட்டிருக்கிறார். நம்மிடத்தில் நம்பிக்கையாய் வேலைபார்த்த ஒரு பையனை வியாதி வந்ததற்காக நாம் வெளியேற்றினால் நல்லதா? நம்முடைய பிள்ளைகளில் ஒன்றுக்கு இப்படிப்பட்ட வியாதி வந்தால் வீட்டைவிட்டு வெளியே தள்ளி விடுவோமா? அப்படி செய்யமாட்டோமே.

எனவே மெஸலில் ஒன்றாக வைக்க முடியாமல் போனாலும் தனியே ஒரு ரூம் எடுத்து அவரைத் தங்கவைத்து ஆவன செய்யலாம் தானே என்று அவர் அன்னை யிடம் பேசி, உடனே கடைக்கு அருகாமை யில் ஒரு சின்ன அறை ஒன்றை வாடகைக்கு எடுத்து அதிலே ஞானக் ஞானையாவைத் தங்கவைத்து மெஸ்ஸி லிருந்து ஆகாரம் அனுப்பிக் கொடுக்க ஏற்பாடு செய்தார். ஆனாலும் சரீரத்தி லிருந்து அதிகமாகத் தண்ணீர் வெளியேறிக் கொண்டிருந்தது. இவரைப் பார்க்க வருகிற யாவரும் வாயில் கைவைத்த வண்ணமாய் பார்த்து சென்று இனி அவ்வளவுதான் என்று பேசிக் கொள்வார்களாம்.

நாங்கள் இவருக்காக ஓர் நாள் வள்ளியூரில் உபவாசித்து ஜெபித்துக் கொண்டிருந்தோம். அப்பொழுது கர்த்தர் இவரைப் பற்றி "இவனுக்கு நான் சீக்கிரம் சுகம் அளிப்பேன். இவனைக் காணுகின்ற அனேகர் என்னை விசுவாசிக்கும்படியாக இந்த வியாதி வந்துள்ளது, இவனை சீக்கிர மாய் என்னுடைய ஊழியக்காரனாக்குவேன் இவன் மூலம் ஏராளமான மக்கள் மீட்கப் படுவார்கள். இவன் மூலம் அனேக ஊழியக் காரர்களை எழுப்புவேன். இவனுக்கு ஆறுதல் கூறி கடிதம் எழுத வேண்டும் என்று தேவன் வெளிப்படுத்தினார்.

தேவன் வெளிப்படுத்திய செய்தியை இவருக்கு தெரிவிப்பதற்காக ஒரு கடிதம் எழுத ஆரம்பித்தேன். தபால்காரர் ஒரு கடிதத்தைக் கொண்டு வந்தார். எங்கிருந்து வந்திருக்கிறது என்று முகவரியைப் பார்த்தேன். ஞானக் ஞானையா, அம்பையா நாயக்கனூர் என்று எழுதியிருந்தது. மிகுந்த மகிழ்ச்சியுடன் கடிதத்தை பிரித்து வாசித்தேன். தேவன் இவரைப் பற்றி வெளிப்படுத்திய செய்திக்கு முற்றிலும் மாறான செய்தி கடிதத்தில் இருந்தது.

மௌனமாக கடிதத்தை வாசித்தேன். என ஆத்துமா எனக்குள்ளே வியாகுல மடைந் தது. என் மாமிசக் கண்களும் கண்ணீர் சொரிந்தது. என்னால் கண்ணீரை அடக்க முடியவில்லை. ஏற்கனவே வந்த கடிதம் தண்ணீர்பட்டு எழுத்துக்கள் அழிந்திருந் தது. இப்பொழுது என்னுடைய கண்களி லிருந்து வடிந்த நீரும் கடிதத்தின் எழுத்துக் கள் சிலவற்றை அழித்தது.

எழுதியிருந்த வாசகமாவது: ஐயா! நான் உங்களை அதிகமாக நேசிக்கிறேன். எனக்காக தாங்களும், உடன் ஊழியரும் செய்த தியாகத்தை ஒருபோதும் மறந்து விடமாட்டேன். நான் வேலைபார்த்த கடையை விட்டு வெளியேற்றப்பட்டு விட்டேன். என்னுடைய சரீரத்திலிருந்து நீர் வழிந்துகொண்டே இருக்கிறது. என்னைக் காணுகின்ற யாவருக்கும் நான் அரோசி கமாகிவிட்டேன், நான் உங்களுக்கு எழுதும் கடைசி கடிதம் இது. என் கண்களிலிருந்து வடிந்த கண்ணீரால் கடிதமும் நனைந்து விட்டது: என்னுடைய ஆத்துமா இந்த சரீரத்தில் நீண்ட நாட்கள் தங்கியிருக் காது. நான் சீக்கிரமாய் ஆண்டவரிடம் போய் விடுவேன், அங்கு சென்று புதிய எருசலேம் சபையின் மேன்மையையும், உங்கள் தியாகங்களையும் ஆண்டவரிடம் கூறுவேன். இத்துடன் முடிக்கிறேன். கர்த்தர் உங்களை ஆசீர்வதிப்பாராக என்று எழுதியிருந்தது.

(தொடரும்)

Pastor. S. Sundarraj,
New Jerusalem Church
Vallioor

---

"...எனக்கு சித்தமுண்டு சுத்தமாகு என்றார். உடனே குஷ்டரோகம் நீங்கி அவன் சுத்தமானான்."

மத் 8:2

---



# இப்பொழுது அவர் என்னுடனே வாசம் பண்ணுவார்

லாபானின் மூத்த குமாரத்தியாகிய லேயாள் யாக்கோபுக்கு ஆறும் குமாரனைப் பெற்று தேவன் எனக்கு நல்ல ஈவைத் தந்தார். இப்பொழுது அவர் என்னுடனே வாசம் பண்ணுவார் என்று அவனுக்கு செபுலோன் என்று பேரிட்டாள் (ஆதி 30 : 20) ஆகவே செபுலோன் என்பதற்கு இப்பொழுது அவர் என்னுடனே வாசம் பண்ணுவார் என்று அர்த்தமாம்.

யாக்கோபின் மனைவியாகிய லேயாளின் வாஞ்சையும் விருப்பமும் தன் புருஷனாகிய யாக்கோபு எப்பொழுதும் தன்னுடனே வாசம் பண்ண வேண்டும் என்பதாகும். அவளுடைய ஆசை அவள் புருஷனாகிய யாக்கோபைப் பற்றியிருந்தது. என் நேசர் எனக்கு இனியவர். அவர் என்னுடையவர். நான் அவருடையவள். அவர் எப்பொழுதும் என்னுடனே வாசமாயிருப்பது எத்தனை மகிழ்ச்சியும், இன்பமுமாயிருக்கிறது. என்னுள்ளமோ எப்பொழுதும் அவரையே நாடித் தேடுகிறது. நான் நித்திரை பண்ணும் போதும் என் இருதயம் அவருக்காக விழித்திருக்கிறது. அவருடைய நேசம் எனக்குத் தேனிலும் மதுரமன்றோ. என் நேசரின் குரல் கேட்காத வேளையெல்லாம் எனக்குத் துன்பமாயிருக்கிறதல்லவோ. அவருடைய பிரசன்னம் காணும் போது என் உள்ளம் அவர்பால் பொங்கி வழிகின்றதே. ஆ! என் நேசரே, நீர் எப்பொழுதும் என்னுடனே வாசம் பண்ணும். நீர் பேசும், நான் உம்மில் மகிழ்வேன் என்று பேதைப் பெண்ணாகிய லேயாள் எண்ணியிருக்கவேண்டும். ஆகவே தான் அவள் தன் ஆறும் குமாரனுக்கு இப்பொழுது அவர் என்னுடனே வாசம் பண்ணுவார் என்று பொருள் படும்படி செபுலோன் என்று பெயர் சூட்டுகிறாள்.

லேயாளைப் போலவே எந்த உத்தமப் பெண்ணும் தன் புருஷன் எப்பொழுதும் தன்னுடனே வாசமாயிருக்க வேண்டுமென்றே விரும்புவாள். தேவனுடைய சபையாய் (ஸ்திரீயாய்) காணப்படுகிற நம்முடைய விருப்பமும் இவ்விதமாகவே நம்முடைய (ஞான புருஷனாகிய) தேவனாகிய கர்த்தர் எப்பொழுதும் நம்முடனே கூட வாசமாயிருக்க வேண்டும் என்பதேயாகும். அவர் எப்பொழுதும் நம்முடனே கூட வாசமாயிருக்க வேண்டும் என்பதேயாகும். அவர் எப்பொழுதும் நம்முடனே கூட வாசமாயிருப்பது நமக்கு எத்தனை இன்பமும் மகிழ்ச்சியுமாயிருக்கும். அழிந்து போகின்ற இவ்வுலக ஜீவியத்தில் தன் புருஷன் தன்னோடு கூட வாசமாயிருப்பது ஒரு பெண்ணுக்கு இருந்த மகிழ்ச்சியை கொடுக்கக் கூடியதாயிருக்குமானால், சகல நன்மைகளுக்கும் ஊற்றும் காரணமுமாயிருக்கிற உன்னத தேவன் நம்மோடு கூட வாசமாயிருக்கும் இந்த நித்தியப் பேரின்பப் பெருவாழ்வு நமக்கு எவ்வளவாயிருக்கும்! நம்முயிர் நாயகராகிய அவர் பிரசன்னம் நம் உள்ளத்தை எவ்வளவாய் நெகிழச் செய்யும். ஆ! பேரின்ப நதியே, இரட்சிப்பின் ஊற்றே! என் உள்ளம் கவர்ந்த நாயகரே, நீர் வாரும். நீர் வந்து எப்பொழுதும் என்னுடனே வாசமாயிரும் என்று நம் உள்ளம் சொல்லுகிறதல்லவா!

சகோதரரே! கவனியுங்கள்.

(தொடரும்)

---

**தேவனுடைய ஜனங்களுக்கு ஓர் முக்கிய அறிவிப்பு:**

15-10-1957 வியாழக்கிழமை முதல் தலைமை சபை தேவ வெளிப்படுத்தலின்படியும், கட்டளையின்படியும், பாண்டுப் என்ற இடத்திற்கு மாற்றப்பட்டுள்ளது. அது முதற்கொண்டு தற்காலமாக தலைமை சபை பாண்டுப்பில் இருந்து இயங்குகிறது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

தலைமை சபையின் முகவரி (Address)

**Chief Pastor. N. LAZAR**
"NEW JERUSALEM CHURCH"
CHURCH LANE, TILAK NAGAR.
DURGA ROAD, BHANDUP.
BOMBAY-400078 INDIA.

பத்திரிகை சம்பந்தப்பட்ட காரியங்களுக்கும் இதே முகவரியில் தொடர்பு கொள்ளவும்.

## 4 FORM IV

1. Place of Publication — Bombay
2. Periodicity of its publication — Monthly
3. Printer's Name (if foreigner, state the country of origin) Address — Chief Pastor. N. Lazar, 7, Triloksingh Chawl, Jerimeri, Sakinaka, Bombay-400 072
4. Publisher's Name (Whether citizen of India?) (if foreigner, state the country of origin) Address — Chief Pastor N. Lazar, Yes, 7, Triloksingh Chawl Jerimeri Sakinaka, Bombay-4000 72
5. Editor's Name (Whether citizen of India?) (if foreigner, state the country of origin) Address — Chief Pastor N. Lazar, Yes, 7, Triloksingh Chawl Jerimeri Sakinaka Bombay-400072
6. Names and address of individuals who own the newspaper and partners or share holders holding more than one per cent of the total capital. — New Jerusalem Church, 7, Triloksingh Chawl Jerimeri Sakinka, Bombay-400 072

I. Chief Pastor N. Lazar hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

Dated : 27-2-1988

*Sd* ........................
(Chief Pastor, N. Lazar)
Editor Printer Publisher

### ஞானஸ்நானம் :

26-1-1988 அன்று தேவ்லேலியில் 6 பேர்களும் 30-1-88 அன்று துளசிதாஸ்புரத்தில் 9 பேர்களும் திருமுழுக்குப் பெற்று திருச்சபையின் அங்கமாகச் சேர்த்துக் கொள்ளப் பட்டார்கள்.

### விவாகம்

| மணமகன் | மணமகள் | காலம் | இடம் |
|---|---|---|---|
| Eld. ro. P [illegible] Bro. [illegible] | [illegible] | 21-1-88 1-2-88 | [illegible] |

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் - 52 ★ APRIL 1988

"புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர)ன் என்று நீங்கள் அறியீர்கள். விழித்திருங்கள்... உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

மாற்கு 13 : 35-37

EDITOR : CHIEF PASTOR N. LAZAR

BOMBAY. INDIA.

# ஆசிரியர் உரை

மனிதன் தேவனால் சிருஷ்டிக்கப்பட்டான். தேவ சாயலாக சிருஷ்டிக்கப்பட்டான். தேவனுடைய ரூபமாக சிருஷ்டிக்கப்பட்டான். (இயேசு கிறிஸ்துவின் ரூபமாக) மனிதன் என்றென்றும் உயிரோடிருக்கும் படியாகவே சிருஷ்டிக்கப்பட்டான். ஆனால் பாவத்தினால் நித்திய ஜீவனை இழந்து மரிக்க ஆரம்பித்தான், மரிக்கிறான், தன்னையே தற்கொலை செய்து கொள்ளுகிறான். நிஷ்டையிலிருக்கிறேன் சமாதியிலிருக்கிறோம் என்று சொல்லி சாவதும் தற்கொலையே. அவர்களெல்லாரும் நரகத்திலிருக்கிறார்கள். மனிதன் எல்லா நன்மைகளையும் பெற்று பாவமின்றி நித்திய ஜீவியாய் ஜீவிக்க வேண்டும். இந்த பாக்கியம் கிறிஸ்து இயேசுவின் மூலமாய் மாத்திரம் கிடைக்கிறது. இயேசு கிறிஸ்து மனிதனுக்கு நித்திய ஜீவனைக் கொண்டு வந்தார் இந்த ஜீவனைப் பெற்றுக் கொண்ட மக்களே கிறிஸ்தவர்கள். இவர்கள் நித்திய ஜீவனைப் பற்றிக் கொண்டு, நம்பிக்கையிலே நிலைத்திருந்து கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினுடைய இரண்டாவது வருகைக்கு ஆயத்தப்பட வேண்டும், ஆயத்தமாயிருக்க வேண்டும். நமக்கு பாவ விமோசனம் உண்டாகும்படி இவ்வுலகத்தில் வந்து தம்முயிரைக் கொடுத்து மரித்து, உயிர்த்த கர்த்தராகிய இயேசு கிறிஸ்து நம்மை பரலோகத்தில் சேர்த்துக் கொள்ளும்படி அழைத்துச் செல்ல திரும்பவும் வரப்போகிறார்.

வாருங்கள் ஆயத்தப்படுவோம்! அவரை சந்தோஷமாய் சந்திப்போம்!!

கிறிஸ்துவுக்குள்,
Chief Pastor N. LAZAR.

## தேவனுடைய ஜனங்களுக்கு ஓர் முக்கிய அறிவிப்பு

15-10-1957 வியாழக்கிழமை முதல் தலைமை சபை தேவ வெளிப்படுத்தலின்படியும், கட்டளையின்படியும், பாண்டுப் என்ற இடத்திற்கு மாற்றப்பட்டுள்ளது. அது முதற்கொண்டு தற்காலமாக தலைமை சபை பாண்டுப்பில் இருந்து இயங்குகிறது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்

தலைமை சபையின் முகவரி (Address)
**Chief Pastor N. LAZAR**
"NEW JERUSALEM CHURCH"
CHURCH LANE, TILAK NAGAR,
DURGA ROAD, BHANDUP,
BOMBAY-400078 INDIA

பத்திரிகை சம்பந்தப்பட்ட காரியங்களுக்கும் இதே முகவரியில் தொடர்பு கொள்ளவும்.

(தொடர்ச்சி)

# பாவ மன்னிப்பு

## பாவ அறிக்கையின் மூலமாக நான் அடைந்த தெய்வீக சுகம்

கிறிஸ்துவுக்குள் அன்பானவர்களே நான் தேவனுக்கு ஒரு சிறிய பணிவிடைக்காரன். என் பெயர் கோயில் பிள்ளை. நாங்குநேரியின் சமீபமாய் இராஜாக்கள் மங்கலம் என்ற ஊரின் பக்கத்தில் இருக்கும் புதிய எருசலேம் அனாதை ஆச்சிரமத்தில் குடும்பமாகத் தங்கி பணி புரிந்து வருகிறேன். 1952 ஆம் ஆண்டு ஆச்சிரமத்தில் உள்ள கிணற்றில் நீர் எடுக்கும் பொழுது தவறி கிணற்றில் தலை கீழாக விழுந்து விட்டேன். தேவன் அற்புதமாக என்னை தூக்கி எடுத்தார். எவ்விதமான சேதங்களின்றி சில காயங்களுடன் உயிர் தப்பினேன். இம்மட்டுமாக என்னைக் காத்த கர்த்தரை துதிக்கிறேன்! ஸ்தோத்தரிக்கிறேன்! அவர் அதிசயமானவர்!

இப்படியிருக்க திடீரென்று கடந்த 23-12-1987 அன்று இடது கண்ணில் ஒரு வேதனை ஏற்பட்டது. 24-12-87 அன்று தலை முழுவதும் தாங்க முடியாத வேதனை ஏற்பட்டது. 25-12-87 அன்று கர்த்தருடைய பிறந்த நாள் பண்டிகையை முடித்துவிட்டு தீர்க்கதரிசி தூயர் Prophet. S. YESUDHASAN அவர்கள் வந்து ஜெபம் பண்ணிவிட்டு போனார்கள். தலை வேதனை கொஞ்சம் குறைந்தது. ஆனால் கண்களில் வேதனை எடுக்க ஆரம்பித்தது. இடது கண்ணில் இரத்தம் கட்டி ஒரு பை போல வரும் சிறிது நேரம் கழித்து உடைந்து நீர் வரும். சிறிது நேரம் கழித்து பின்பும் வரும் உடைந்து நீர் வரும். இவ்விதமாக கஷ்டம் பெருக ஆரம்பித்தது.

26-12-87 அன்று பாளையங்கோட்டை பெரிய ஆஸ்பத்திரிக்குச் சென்றேன். கண் டாக்டர் வீக்கம் குறைய மாத்திரை தந்து மறுநாள் வரச் சொன்னார். மூன்றும் நாள் கண்ணைப் பரிசோதனைப் பண்ணிப் பார்த்து ஒன்றுமே தெரியவில்லையே என்று சொல்லி மாத்திரையும் தந்து மறுபடியும் வரும்படிச் சொன்னார். மறுநாள் நான் போகும் பொழுது என் கண் ஒளியிழந்து விட்டது. கண் மேல் பகுதி நன்றாகத்தான் இருந்தது. ஆனால் வேதனை எடுத்தது. முன்னால் நிற்கும் ஆள் கூட தெரியாத நிலையாகி விட்டது. நாலாவது முறை டாக்டரிடம் சென்றேன்; பெரிய டாக்டர் பரிசோதனை பண்ணி பார்த்துவிட்டு கண் நரம்பு பாதிக்கப்பட்டிருக்கிறது ஆகையால் ஒன்றும் செய்ய முடியாது என்று சொல்லி ஒரு கண்ணுக்கு கூடுதல் பவர் உள்ள லென்ஸ் பொருத்தப்பட்ட கண்ணாடி (Glass) எழுதிக் கொடுத்து கண்ணாடி வாங்கி போட்டுக் கொள்ளும்படியும், 30 மாத்திரைக்கும் எழுதிக் கொடுத்தார். மாத்திரைகள் வாங்கவில்லை. கண்ணாடி வாங்கிப் போட்டுக் கொண்டேன். ஆனாலும் இடது கண் தெரியவேயில்லை. கிணற்றில் விழுந்த சமயம் தலையில் தான் அடியும், காயங்களும் உண்டு. எனவே, தலையில் தான் நரம்பு பாதிப்பு இருக்கும் என்று எண்ணி எப்படியும் தேவ சித்தம் ஆகட்டும் என்று சொல்லி ஜெபித்தோம். அப்போஸ்தலர் Pastor S. Sundarraj தூயர் அவர்களும் மிகுந்த பாரத்தோடு ஜெபித்தார்கள். எனக்கும் ஒரு நம்பிக்கை உண்டாயிற்று. அன்று என்னைக் கிணற்றிலிருந்து தூக்கி எடுத்தவர் கண் பார்வை தர வல்லவர் என்ற நம்பிக்கை மட்டும் இருந்தது.

1988-ஆம் ஆண்டு புது வருட ஆராதனையில் ஒற்றைக் கண் பார்வையுடையவனாகத் தான் இருந்தேன். பரிசுத்தவான்களைத் தவிர வேறு ஒருவருக்கும் என் நிலைமை தெரியாது. தேவ ஆலோசனைப் படியும் என்னை தற்பரிசோதனை செய்தும் நம்பிக்கையோடும் ஜெபித்து வந்தேன். 9-1-1988 அன்று வள்ளியூர் அப்போஸ்தலர் Pastor S.Sundarraj அவர்களிடம் ஜெபிக்க வேண்டுமென்று புறப்பட ஆரம்பித்தேன். அப்பொழுது என்னுடைய முந்திய காலத்தின் பாவம் ஒன்று ஞாபகத்தில் வந்தது. அதை அறிக்கை செய்து மன்னிப்புப் பெற வேண்டுமென்ற எண்ணத்தோடு பஸ்ஸில் ஏறி வள்ளியூர் போய் இறங்கி நடந்து போகும்

போது ஒரு அதிசயம்! வலது கண்ணை மூடி பார்த்தேன் எதிரே வருகிற ஆள் தெரிந்தது. முகச்சாயல் மட்டும் தெரியவில்லை. வள்ளியூர் ஆலயத்தில் போய் ஐயாவிடம் எனக்காக ஜெபிக்க வேண்டுமென்றேன். அப்பொழுது அவர்கள் ஊழியத்துக்கு வருமுன்னால் என்னை அடிமைப்படுத்தி வைத்திருந்த ஒரு பாவத்தை ஞாபகப்படுத்தினார்கள். அதை நான் தேவ சமூகத்தில் அறிக்கை செய்த உடன் பரிசுத்த ஆவியானவர் என்னைத் தூக்கி விட்டார். ஒரு நாளும் இல்லாத கிரியை. என் ஆத்துமாவிலே ஒரு விடுதலை. என் மாம்சத்தை தாண்டிக் கொண்டிருந்த சக்தி அன்றோடு ஒழிந்தது. கர்த்தருக்கே மகிமையுண்டாவதாக.

"யூதாவின் பாவம் இரும்பெழுத்தாணியினாலும், வைரத்தின் நுனியினாலும் எழுதப்பட்டு அவர்களுடைய இருதயத்தின் பலகையிலும், உங்கள் பலி பீடங்களிலுள்ள கொம்புகளிலும் பதிந்திருக்கிறது" (எரே 17 : 1) என்ற வேத வசனம் கொண்டு தேவன் பேசினார். என்ன ஆச்சரியம்! இப்பொழுது என் கண் நன்றாகத் தெரிகிறது! என் கண்களுக்கு ஒளி கொடுத்து என்னைத் தேற்றின தேவனுக்கு ஸ்தோத்திரம்! ஸ்தோத்திரம்! இதை சாட்சியாக எழுத தூய ஆவியானவர் ஏவினதினால் இதை எழுதுகிறேன். பாவ அறிக்கையினால் ஒளி இழந்திருந்த கண் பார்வையைத் திரும்பவும் பெற்றுக் கொண்டேன். அல்லேலூயா!

கர்த்தருடைய கிருபையால் இப்பொழுது நான் நன்றாக இருக்கிறேன். கர்த்தர் என்னை ஆசீர்வதிக்கும்படியும், தம்முடைய ஊழியத்தில் எடுத்து உபயோகிக்கும் படியும் எனக்காகவும் என் குடும்பத்துக்காகவும் தேவனுடைய பரிசுத்தவான்களும், தேவனுடைய பிள்ளைகளும் ஜெபிக்கும்படி கேட்டு என் சாட்சியை முடித்துக் கொள்ளுகிறேன்.

இப்படிக்கு,

Eld Bro. கோவில்பிள்ளை
புதிய எருசலேம் ஆசிரமம்
இராஜாக்கள் மங்கலம்
திருநெல்வேலி ஜில்லா.

---

"அவர் உன் அக்கிரமங்களை எல்லாம் மன்னித்து உன் நோய்களை எல்லாம் குணமாக்கி"

சங் 103 : 3

---

# ஆதியாகமத்தைப்பற்றி ஓர் ஆராய்ச்சி

(தொடர்ச்சி)

**ஆதி 3:22 :-** நித்தியமாகவாய் மனிதனுடைய ஜீவன் பாதுகாக்கப்பட இயற்கையான தன்மை ஜீவவிருட்சத்தில் அமைந்திருக்கவேண்டும். மனிதன் என்றென்றும் ஜீவிக்கும்படியாய் சிருஷ்டிக்கப்பட்டவன், பாவம் செய்யாமலிருந்திருந்தானானால் நித்திய ஜீவனை இழந்திருக்காமல் இருந்திருக்கமுடியும். மனிதனுக்கு நித்திய ஜீவனை மறுபடியும் அளிப்பவர் கிறிஸ்து ஒருவரே (2 தீமோ 1:15). ஜீவ விருட்சத்தின் நிமித்தமாய் பாவமனிதனும் என்றென்றும் சரீரப்பிரகாரமாய் உயிரோடிருந்திருக்க முடியும். அப்படி இருக்கக்கூடாது என்பதற்காகத்தான் 22-24 வசனங்களில் சொல்லப்பட்ட நடவடிக்கைகளை தேவன் எடுத்தார்.

**ஆதி 3:23,24 :** வெளியே அனுப்பிவிடப்படல், துரத்தி விடப்படல் (ஆதி 21:14; 25:6; 28:5; 45;7). வேலை செய்யும்படியாய் சேவை செய்யும் படியாய் அனுப்பி விடப்பட்டான். ஆதி 2:5; II சாமு 9.10; எரே 27:11) ஒரு பாதை ஜீவ விருட்சத்தை அடையும் படியாய் தேவனே ஒரு அழகிய பாதையை உண்டாக்கினார் என்பதில் எவ்வித சந்தேகமுமில்லை. வெளி 2:7;; 22:2ல் சொல்லப்பட்டுள்ள ஜீவ விருட்சத்தின் நிலை, அது தோட்டத்தில் எங்கேயிருந்தது என்பதைக் குறிப்பாக (மறைமுகமாக) சொல்கிறது. தேவன் அதற்கு காவல் வைத்தார்.

**ஆதி 4:1,2 :-** ஆதாமுக்கு முதல் பிறந்த ஆண்பிள்ளை காயீன். பெண்பிள்ளைகள் இதற்கு முன்பாகப் பிறந்திருக்க முடியும். விசேஷமாக இந்த நேரத்திலே ஆண்பிள்ளையை பெற்றது குறிப்பிடப்பட்டுள்ளது (ஆதி 4:1.).

# "எருசலேம்"

"அக்காலத்திலே எருசலேமை கர்த்தருடைய சிங்காசனம் என்பார்கள்" (சகல ஜாதியாரும் எருசலேமில் விளங்கிய கர்த்தருடைய நாமத்தினிமித்தம் அதனிடமாய்ச் சேர்வார்கள்)

## "எருசலேம்"

எருசலேம் பாலஸ்தீனாவிலுள்ள யூதேயா மலைநாட்டின் நடுவில் இருக்கிறது. அதின் கிழக்கிலும், மேற்கிலும் அதற்கு எல்லைகளாக இரண்டு ஆழ்ந்த பள்ளத்தாக்குகள் உண்டு

1. கீதரோன் சிற்றாறு அல்லது யோசபாத்தின் பள்ளத்தாக்கு (II சாமு 15:23, யோவே 3:2). இது வடக்கிலிருந்து தெற்கு முகமாய் போய் எருசலேமுக்குக் கிழக்குப் பக்கத்திலே வரவர ஆழமாய் இறங்கி ஒலிவமலைக்கும் எருசலேம் பட்டணத்திற்கும் இடையில் சென்று யூதேயாவனாந்தரம் வரை எட்டி கடைசியில் சவக்கடலில் இறங்கும்.

2. இன்னோம் குமாரனின் பள்ளத்தாக்கு (எரே 7:32) இது எருசலேமுக்கு வடமேற்கேயிருந்து தெற்கே நோக்கி எருசலேமுக்கு தெற்கு பாகத்தில் சமீபமாய் போய் முன் சொன்ன கீதரோன் சிற்றாறோடே சேர்ந்து போகிறது.

3. பால்கட்டி செய்கிறவர்களின் பள்ளத்தாக்கு அல்லது தைரோபோயன் (Tyropeon) பள்ளத்தாக்கு. இது மோரியா மலை, தாவீதின் பட்டணம் என்னும் குன்றுகளுக்கு மேற்கு ஓரங்களிலிருந்தது.

4. ஓபேல் குன்று: தைரோபோயன் பள்ளத்தாக்கும் கீதரோன் பள்ளத்தாக்கும் சேருமிடத்தில் ஒரு நல்ல ஊற்று இருக்கிறது. இதற்கு சீலோவாம் என்று பெயர். அதற்கு மேலே செங்குத்தான குன்று ஒன்று இருக்கிறது. இதற்கு ஓபேல் என்று பெயர் (II நாளா 27:3). ஊற்று சமீபமாயிருந்ததினிமித்தம் எபூசியர் அந்த குன்றின்மேல் கோட்டை கட்டினார்கள். இஸ்ரவேலர்கள் எகிப்திலிருந்து வரும்போது இதை பிடிக்க முடியாமலிருந்தார்கள். ஆனால் தாவீது அரசன் அதை பிடித்தபடியால் தாவீதின் நகரம் என்றும், சீயோன் என்றும் பெயர் வழங்கினது (II சாமு 5:7). பிற்காலங்களில் உண்டான பெரிய எருசலேம் நகரத்திற்கு இந்த பெயர் பொதுவாய் வழங்கி வந்தது (சங் 50:2).

5. மோரியா மலை:- ஓபேல் குன்றுக்கு வடக்கே மோரியா மலை இருந்தது. ஆபிரகாம் தன்னுடைய குமாரன் ஈசாக்கை பலியிட அங்குதான் கொண்டு போனார். சாலமோன் இதின்மேலேயே தேவாலயம் கட்டினார். இப்பொழுது இது கிறிஸ்தவர்களுக்கும், முகமதியர்களுக்கும், யூதர்களுக்கும் பரிசுத்த ஸ்தலமாகக் காணப்படுகிறது.

6. பெதஸ்தா:- மோரியாவுக்கு மேற்கே உள்ளது. இந்த இடத்திலே பெத்செதா அல்லது பெதஸ்தா குளம் இருந்தது.

7. அக்ரா:-இது ஒரு நகரம். இது மோரியாவுக்குத் தெற்கே அல்லது மில்லோவுக்கும் மோரியாவுக்கும் நடுவே இருந்தது.

8. மில்லோ:-தாவீது அரசனும், சாலமோனும் கட்டின ஒரு பெரிய கற்குவியலான அரண். இது மோரியாவை நோக்கிய சீயோன் கோட்டைக்கு வடபாகத்தில் இருந்தது (II சாமு 5:9; I இரா 11:27).

கீகோன் ஊற்றும் சாலகங்களும்:- எபூசியரும் எபிரேயரும் இந்தக் கோட்டையை அதிகமாக விரும்பினார்கள். ஏனென்றால் சீலோவாம் ஊற்று அல்லாமல் அதற்கு கிழக்கே கீகோன் என்னும் ஒரு விசேஷ ஊற்று இருந்தது. மலைமேல் இருக்கிற கோட்டையிலிருந்து இந்த கீகோன் ஊற்றுக்கு எபூசியர் ஒரு சாலகம் குடைந்து வெட்டி இருந்தார்கள். சத்துருக்கள் முற்றுகை போடும் காலத்தில் எபூசியர் இதன் மூலமாய்போய் கீகோன் ஊற்றிலிருந்து தண்ணீர் எடுத்து வருவார்கள். இந்த சாலகத்தின் வழியாய் தாவீது அரசனின் ஆட்கள் கோட்டைக்குள் பிரவேசித்து அதைப் பிடித்தார்கள் (II சாமு 5:8). பிற்காலங்களில்

எசேக்கியா ராஜா மலைக்குள்ளே 1700 அடி நீளமான ஒரு பெரிய சுரங்கத்தை வெட்டி குடைந்து அதின் வழியாய் கீகோன் ஊற்றிலிருந்து சீலோவாம் குளத்திற்கு தண்ணீர் வருவித்தார் (II நாளா 32:30).

## எருசலேமின் சரித்திர சுருக்கம்

எருசலேமை முதலில் கட்டினவர்கள் யார் என்று தெரியவில்லை. ஆபிரகாம் காலத்தில் (கி.மு. 2000) இதற்கு சலேம் என்று பெயர். மெல்கிசேதேக் என்பவர் இதின் ராஜாவாக ஆண்டு வந்தார் என்று தெரிகிறது (ஆதி 14:18). 1450க்குப் பின் கானான் தேசத்துக்கு வந்த எபிரேயர்கள் இதில் எபூசியர்கள் குடியிருந்ததினாலே இதற்கு எபூசி என்று சொன்னார்கள் (யோசு 15:25).

தாவீதின் காலம் மட்டும் எபூசி பிடிக்கப்படவில்லை (கி.மு. 1000). தாவீது அரசன் இதைப் பிடித்த பின்பு அதற்கு தாவீதின் நகரம் என்று பெயரிட்டார்கள் (II சாமு 5:7;6:12). தாவீது உடன்படிக்கைப் பெட்டியைப் பிடித்து தாவீதின் நகரத்தில் வைத்தார் (II சாமு 6:12). ஆனால் மோரியா மலை பரிசுத்த ஸ்தலம் என்று அர்வனா என்ற எபூசியரின் களத்தண்டையில் தேவதூதன் தரிசனத்தை தாவீது பார்த்து அதில் தேவாலயம் கட்ட அதை விலைக்கு வாங்கினார் (II சாமு 24:16, 24, 25; II நாளா 3:1). சாலமோன் ராஜா பல புதுக் கட்டிடங்களைக் கட்டின பிறகு அவைகளுக்கும் பூர்வீக தாவீதின் நகரத்திற்கும் சேர்த்து புது மதிலைக் கட்டினார் (I இரா 9:15). பிற்காலங்களில் யூதேயாவில் ஆண்ட இராஜாக்கள் காலத்தில் இப்பட்டணத்தின் நாலு பாகங்களும் வர வர பெரிதாக்கப்பட்டன. எசேக்கியா சீலோவாம் சுரங்கத்தைக் கட்டினான். பல ராஜாக்கள் இப்பட்டணத்தின் மதில்களைப் பழுதுபார்த்து புதிதாகக் கட்டினார்கள். கி.மு. 586 ல் பாபிலோனிய அரசனாகிய நேபுகாத்நேச்சார் இதைப் பிடித்து முழுவதும் அழித்தான். கி.மு. 537-ல் யூதர்கள் எருசலேமுக்குத் திரும்பி வர ஆரம்பித்த காலத்தில் எருசலேமையும், அதிலுள்ள தேவாலயத்தையும் மறுபடியும் கட்டத் தொடங்கினார்கள்.

தேவாலயம் கட்டி முடித்திருந்தாலும் நெகேமியா சிறையிருப்பிலிருந்து வந்து கி.மு. 444-ல் அதின் மதில்களையும் கோட்டைகளையும் மறுபடியும் கட்டினார். நெகேமியா புஸ்தகத்தை நாம் வாசித்துப் பார்த்தால் அதின் மதில்களையும், வாசல்களையும் பற்றி நாம் விபரமாய் அறியலாம். கி.மு. 333-ல் பெர்சியரின் அதிகாரத்தை கிரேக்கர் அழித்ததினாலே யூதர்கள் கிரேக்கரின் ஆளுகைக்குட்பட்டார்கள். கி. மு. 168-ல் கிரேக்க அரசனாகிய அந்தியோகு எப்பிப்பானேஸ் (Antiochus Epiphanes) என்பவன் யூத மார்க்கத்தை முழுவதும் அழிக்கும்படி எண்ணி எருசலேமிலுள்ள தேவாலயத்தை பரிசுத்த குலைச்சலாக்கி பல தேவதைகளை வணங்கும்படி யூதர்களை வற்புறுத்தினான். இதினிமித்தம் மக்கபேர் என்னும் சகோதரர்கள் கலகம் பண்ணி எபிரேய ராஜ்யத்தை மறுபடியும் ஸ்தாபித்தார்கள். அவர்களுடைய சந்ததியார்கள் ஒருவரோடொருவர் சண்டை செய்ததினாலே கி.மு.63-ல் ரோமர் படையெடுத்து வந்து எருசலேமை பிடித்து தேவ ஆலயத்தை பரிசுத்தக் குலைச்சலாக்கி அதிலுள்ள பொக்கிஷங்களை எடுத்துச் சென்றார்கள். பின்பு ஏரோதின் குடும்பத்தாருக்கு அதை ஆளும் அதிகாரத்தைக் கொடுத்தார்கள்.

கி.மு. 43-ல் பெரிய ஏரோது யூதேயாவை அரசாண்டு எருசலேமை அலங்கரித்து அதில் மாளிகைகளையும், அந்தோனியா கோட்டையையும் இன்னும் இரண்டு கோட்டைகளையும் ஒரு பெரிய அரங்க சாலையையும் விசேஷமாக தேவ ஆலயத்தையும் மிகவும் சிறப்பாய்க் கட்டினான். இயேசுவின் காலத்தில் எருசலேமைப் பற்றிய விசேஷம் ஒன்றுமில்லை. யூதர்கள் கலகம் பண்ணினபடியால் ரோமர்கள் வந்து எருசலேமை முற்றுகைப் போட்டு அதை அழித்தார்கள். அநேக வருஷங்களுக்குப் பிறகு ரோமர்கள் மறுபடியும் அதைக் கட்டினார்கள். கி.மு. 637-ல் முகமதியர்கள் அதைப் பிடித்து சில காலம் தவிர 1917-ஆம் வருஷம் மட்டும் அதில் ஆளுகை செய்து வந்தார்கள். 1917-ஆம் வருஷம் டிசம்பர் மாத முதல் அது இங்கிலாந்துக்காரர்கள் (British) ஆளுகைக்குள்

வந்தது. இப்பொழுது மறுபடியும் அது பெரிய நகரமாய் உருவாகியுள்ளது.

எபிரேயர்கள் தங்கள் சொந்தத் தேசத்தில் அல்லது தூர தேசத்தில் அல்லது சிறையிருப்பில் எங்கே இருந்தாலும் தாவீது அரசன் காலமுதல் எருசலேம் பட்டணத்தின் மேல் அதிக வாஞ்சையும்,பிரியமுமுள்ளவர்களாய் எப்பொழுதும் அதை நினைத்து கடவுளின் ராஜ்யம் அங்கே ஸ்தாபிக்கப்படும் என்றும், எருசலேமுக்கு மேசியா வருவாரென்றும் எதிர்நோக்கியிருக்கிறார்கள் (சங் 147 : 2 ; எரே 40 - 48; ஏசா 66) எருசலேம் அல்லது சீயோனின் மகள் என்பது யூதர்களை அல்லது கடவுளின் ஜனங்களைக் குறிக்கும் (ஏசா 1:1; 40:2; செப்ப 3:14). இந்த நோக்கத்தின்படி ஆதி கிறிஸ்தவர்கள் கடவுளின் குமாரனுமிய மேசியா ஸ்தாபித்த இராஜ்யத்திற்கு மேலான எருசலேம், புதிய எருசலேம் என்று சொன்னார்கள் (கலா 4:26; வெளி 21:2).

நாம் எருசலேமைப் பற்றி சுருக்கமாய் பார்த்தபடி எருசலேமின் சரித்திரமும் இஸ்ரவேலின் சரித்திரமும் ஒன்றுதான்.

(தொடரும்)

"எருசலேமே, நான் உன்னை மறந்தால் என் வலது கை தன் தொழிலை மறப்பதாக" -சங் 137:5.

தொடர்ச்சி)

# வேத பாடம்

யாத் 27:1-8:- வெண்கல பலிபீடம் சீத்தீம் மரத்தினால் செய்யப்பட்டு வெண்கலத்தகட்டால் மூடப்படவேண்டும். நாலு மூலைகளிலும் நாலு கொம்புகள் அதிலேயே ஏகமாக உண்டாக்கப்படவேண்டும். இதற்கு வெண்கல வலைப்பின்னலான சல்லடையும் உண்டாக்கப்பட்டது. பலிபீடத்தின் இரண்டு பக்கங்களிலேயும் சீத்திம் மரத்தால் தண்டுகள் உண்டு பண்ணப்பட்டு வெண்கலத் தகட்டால் மூடப்பட்டிருக்க வேண்டும். வளையங்களிலே அது செருகப்பட்டு பலிபீடம் தண்டுகளால் சுமக்கப்பட்டது. இந்த பலிபீடத்தின் அளவு 5 முழ நீளம், 5 முழ அகலம், 3 முழ உயரம் அளவுள்ளதாக செய்யப்படவேண்டும். மலையில் காண்பிக்கப்பட்ட மாதிரியின் படியே அது செய்யப்படவேண்டும் என்று கட்டளையிட்டார் (யாத் 35:1-7)

யாத் 27:9-19:- வாசஸ்தலத்தின் பிரகாரம். இந்த பிரகாரம் 205' × 4'' நீளமும் 104' × 2'' அகலமும் 10' × 5'' உயரமுமாக அமைக்கப்பட்டிருந்தது. வெண்கலப் பாதங்களுடைய தூண்களில் வெள்ளி பூண்கள் கட்டப்பட்ட தூண்களில் வெள்ளி கொக்கிகளில் தொங்கும் திரைகளினால் உண்டாக்கப்பட்டது (யாத் 38:9-17,18)

யாத் 27:20,21:- அணையாமல் எரிந்துகொண்டிருக்கும் குத்து விளக்கு. இந்த குத்துவிளக்கின் விவரம் 25-ஆம் அதிகாரம் 31-40 முடிய குறிப்பு காணக. இந்த குத்து விளக்கு எப்பொழுதும் எரிந்து கொண்டிருக்க வேண்டும் என்ற நித்திய கட்டளை உண்டு (லேவி 24:1-4).

யாத் 28: 1-4:- ஆரோனையும் அவன் குமாரரையும் இஸ்ரவேலரிலிருந்து பிரித்தெடுத்து தேவனுக்கு ஊழியம் செய்யும்படி சேர்த்துக்கொள்ள தேவன் கட்டளையிட்டார். அதோடு கூட ஆரோனுக்கும் அவனுடைய குமாரர்களுக்கும் மகிமையும் அலங்காரமுமாயிருக்கும் பொருட்டு பரிசுத்த வஸ்திரங்களை உண்டுபண்ணும் பொருட்டு தேவன் கட்டளையிட்டார்:

யாத் 28:5-14:- ஏபோத்தும் அதின் கச்சையும்.

ஏபோத்தை இணைக்கும் கச்சைகளில் இரண்டு கோமேதகக் கற்களை எடுத்து ஒன்றில் இஸ்ரவேலின் 6 கோத்திரங்களின் பெயர்களையும், மற்றொன்றில் இஸ்ரவேலின

மற்ற 6 கோத்திரங்களின் பெயர்களையும் முத்திரை வெட்டாய் வெட்டி பொன் குவளைகளில் அவைகளைப் பதித்து ஒன்றை ஆரோனின் வலது தோளிலும், மற்றொன்றை ஆரோனின் இடது தோளிலும் பதிக்கப்பட்டு தேவ சந்நிதானத்தில் ஆரோன செல்லும் பொழுது ஞாபகக் குறியாக இஸ்ரவேலின் நாமங்களைச் சுமந்து செல்லும்படி கட்டளையிடப்பட்டது. இது எல்லா இஸ்ரவேலருடைய பொறுப்புகளையும், எல்லா சுமைகளையும் அவர் சுமக்க வேண்டும் என்பதைக் குறிப்பிடுகின்றது. பிரதான ஆசாரியனாகிய ஆரோன் தன்னுடைய வேலையில், கடமையில் தவறினால் முழு தேசமும் அழிந்து போகும். வருஷத்தில் ஒரு முறை அவர் பரிசுத்த ஆயத்தத்தோடு இஸ்ரவேலின் பாவங்களுக்காக தேவ சந்நிதியில் பிரவேசித்து பாவநிவர்த்தி செய்யும் விதம் லேவி 16-ஆம் அதிகாரத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது.

**யாத் 28:15-29 நியாயவிதி மார்ப்பதக்கம் :-** இது ஒரு சாண் நீளமும் ஒரு சாண் அகலமுமாக சமசதுரமாகச் செய்யப்பட்டது. இதில் நாலு வரிசை இரத்தினக் கற்கள் பதிக்கப்பட்டன; அவைகளில் இஸ்ரவேலின் 12 கோத்திரங்களின் நாமங்களும் வரிசைக்கிரமமாக எழுதப்பட்டிருக்க வேண்டும். இந்த மார்ப்பதக்கம் ஏபோத்தோடு பொன் கொக்கிகளினாலும், இளநீல நூல் நாடாவினாலும் இணைக்கப்பட்டு அதை விட்டு நீங்காதிருக்க வேண்டுமென்று கட்டளையிட்டார்.

**யாத் 28:30 :-** நியாயவிதி மார்ப்பதக்கத்திலே ஊரீம், தும்மீம் என்ற இரண்டு ரத்தினக் கற்கள் இருபுறங்களிலேயும் பதிக்கப்பட்டிருக்க வேண்டும். ஆரோன் தேவ சந்நிதானத்தில் பிரவேசிக்கும்பொழுது இஸ்ரவேல் கோத்திரங்களின் நாமங்களையும், இஸ்ரவேலின் நியாய விதியையும் ஞாபகக்குறியாக எப்பொழுதும் தரித்துக் கொள்ள வேண்டும்.

**யாத் 28:31-35 :- ஏபோத்தின் கீழ் அங்கி :** இதன் கீழ்ப்பாகம் சுற்றிலும் ஒரு பொன்மணியும் ஒரு மாதுளம்பழமுமாக பொன்னினால் செய்யப்பட்டு இணைக்கப்பட்டிருந்தது. ஊழியம் செய்ய தேவ சந்நிதானத்தில் ஆரோன் பிரவேசிக்கும்பொழுது அவன் சாகாதபடி அதினுடைய சத்தம் கேட்கப்படவேண்டும்.

**யாத் 28:36-38 :- பரிசுத்த கிரீடம்:** பசும் பொன்னினால் ஒரு கிரீடத்தை, பட்டத்தை உண்டு பண்ணி கர்த்தருக்கு பரிசுத்தம் என்று முத்திரை வெட்டாக வெட்டி ஆரோனுடைய நெற்றியில் இருக்கும்படி தரிப்பிக்கப்படவேண்டும். இஸ்ரவேல் புத்திரரும், அவர்களுடைய காணிக்கையும் அங்கிகரிக்கப்படும்படி எப்பொழுதும் அது ஆரோனுடைய நெற்றியில் இருக்க வேண்டும்.

**யாத் 28:39-43 :-** ஆரோனுடைய குமாரர்களாகிய ஆசாரியர்களுக்கு மகிமையும் அலங்காரமுமாயிருக்கும் பொருட்டு அங்கிகளும், உள் சட்டையும், பாகையும், இடைக்கச்சையும், குல்லாக்களும் உண்டாக்கப்படும்படி கட்டளையிடப்பட்டது. ஆசாரியர்களின் நிர்வாணம் பலி பீடத்தின்மேல் காணப்பட்டு அவர்கள் சாகாதபடிக்கு இடுப்புக்குக்கீழ் அணிந்து கொள்ளும்படி அவர்களுக்கு உள்ளாடைகள் செய்யப்பட்டது (யாத் 20:26).

(தொடரும்)

நியாயப்பிரமாணத்தின்படி கொஞ்சங்குறைய எல்லாம் இரத்தத்தினாலே சுத்திகரிக்கப்படும்; இரத்தம் சிந்துதலில்லாமல் மன்னிப்பு உண்டாகாது. (எபி 9:22)

# சிலுவையின் வெற்றி

ஒவ்வொரு மதத்திற்கும் ஒரு மதச் சின்னம் உண்டு. அவைகளுக்குச் சரியானதோ தவறானதோவான விளக்கம் உண்டு. சிலர் தங்கள் மதச் சின்னங்களை வணங்குகிறார்கள், தங்கள் சரீரங்களில் அணிந்து கொள்கிறார்கள். அதுவும் வெவ்வேறு நோக்கத்தோடு செய்கிறார்கள். ஆனால் கிறிஸ்தவத்தின் அடையாளமாகிய சிலுவையோ வணக்கத்திற்குரிய பொருளோ, சரீரத்தில் அணிந்து கொள்ளும்படியானதோ அல்ல. இது போற்றப்படத்தக்கதும், நினைவு கூறப்படத்தக்கதும், தியானிக்கக் கூடியதுமான கிறிஸ்துவின் மரணத்தை குறிப்பிடுகிறது.

நமக்கு மீட்பராக வந்த கர்த்தராகிய இயேசு கிறிஸ்து பாலஸ்தீனாவிலுள்ள கொல்கதா அல்லது கபாலஸ்தலம் என்று சொல்லப்படுகிற இடத்தில் சிலுவையில் அறையப்பட்டார். இது தேவனுடைய திட்டமும் தீர்மானமுமாயிருந்தது. இயேசு கிறிஸ்து இந்த உலகத்தில் அவதாரம் எடுத்து வந்திருக்கும் பொழுது உங்களுக்காக ஜீவனைக் கொடுக்கும்படி நான் வந்திருக்கிறேன் என்று சொன்னார் (மத் 20 : 28). அப்படி மரிப்பதும், மரத்திலே உயர்த்தப்பட்டு மரிப்போம் என்று திருவுளம் பற்றினார். அந்த மரணம் இவ்விதமாய் இருக்கும் என்று முன்னறிவித்தார் (யோவா 3: 14, 15; 12 : 32, 33). இந்த உலகத்தில் வந்து சென்ற அநேகர் தங்களை பெரிய ஆள் என்று சொல்லிக் கொண்ட போதிலும் அவர்கள் அறியாத வேளையில் அகாலமாய் மரித்தார்கள். காந்தி இந்தியா சுதந்திரத்தை அனுபவிக்குமுன் 1948-ல் கோட்சே என்பவனால் சுடப்பட்டு மரித்துப் போனார்.

இந்துக்களின் ஒரு கடவுளாகிய கிருஷ்ணன் காட்டில் ஒரு மரத்தில் ஏறி அமர்ந்து நித்திரையாயிருக்கும் பொழுது வேட்டைக்குச் சென்ற வேடன் ஒருவன் மரத்தின் அடியில் வந்து மேலே பார்த்த பொழுது கரிய தோர் உருவத்தைக் கண்டு ஏதோ ஒரு மிருகம் என்று எண்ணி அம்பை எய்து கொன்று போட்டான். கிருஷ்ணன் கரிய உருவமுடையவன்; அதனால் தான் அதை மறைக்க நீல வண்ண கண்ணா வாடா என்று பாட்டு அமைத்துக் கொண்டார்கள். இந்துக்களின் இன்னொரு கடவுளாகிய ராமர் அஸ்வமேத யாகம் நடத்திய பொழுது குசலவ சகோதரர்களால் தோற்கடிக்கப்பட்டார். பின்பு ஆற்றில் விழுந்து தற்கொலை செய்து கொண்டார். முகமது நபி வியாதியினால் பீடிக்கப்பட்டு மரித்துப் போனார். ஆனால் இறைவனாகிய இயேசு கிறிஸ்துவினுடைய மரணமோ, இறைவன் உலகத்தில் இவ்விதமாய் தோன்றுவார் என்றும், இவ்விதமாய் ஜீவிப்பார் என்றும், இவ்விதமாய் உபதேசிப்பார் என்றும், இவ்விதமாய் மனு மக்களுக்கு சேவை செய்வாரென்றும், இன்னவிதமாய் மரிப்பார் என்றும்; அடக்கம் பண்ணப்படுவார் என்றும், மூன்றும் நாள் உயிரோடு எழும்புவார் என்றும், பரத்துக்கு எழுந்தருளிப் போவாரென்றும், மறுபடியும் உலகத்தில் அரசாளும்படி வருவார் என்றும், முக்காலமும் உணர்ந்த ரிஷிகளினால் (தீர்க்கதரிசிகள்) பற்பல விதமாய் முன்னறிவிக்கப்பட்டது. அப்படியே வேத வாக்கியங்களின்படியே இயேசுகிறிஸ்து இந்த உலகத்தில் மனித அவதாரமாய் வந்தார்.

யூதர்கள் ஒரு மனிதனை கொலை செய்கிறதென்றால் கல்லெறிந்து கொல்லுவார்கள் அல்லது மரத்திலே தூக்கி கொலை செய்வார்கள் (தூக்குத் தண்டனை). இயேசு கிறிஸ்து லோ ஜூதருக்கும் நெருக்கமாக மரத்தினால் செய்யப்பட்ட சிலுவையில் அறையப்பட வேண்டியதாயிருந்தது. அதற்காக அக்காலத்தில் ரோமருடைய அரசாட்சி ஐரோப்பா, மேற்கு ஆசியா ஆகிய பாகங்களில் பரவியிருந்தது. ரோமர்கள் கொலை தண்டனைக்கு தீர்ப்பிட்டவனை சிலுவையில் அறைந்து கொலை செய்யும் வழக்கமுடையவர்கள். இயேசுகிறிஸ்து தம்முடைய மரணத்தைப் பற்றி அறிவிக்கும்பொழுது நீங்கள் (யூதர்கள்) என்னைப் பிடித்து கொலை செய்யும்படி புறஜாதியாரிடம் ஒப்புக்

கொடுப்பீர்கள் என்று முன்னறிவித்தார்: அப்படியேயாயிற்று (மத் 20:17-19; 27:22-26; யோவா 19:17-20). அங்கே அவரை சிலுவையிலறைந்தார்கள். இயேசு கிறிஸ்து நம்மெல்லாருடைய பாவத்துக்காகவும் சிலுவையில் ரத்தம் சிந்தி மரித்தார், அடக்கம் பண்ணப்பட்டார், மூன்றும் நாள் உயிர்த்தெழுந்தார் இது வெற்றியின் சின்னமாகும். அதுவரை அவமானமாகவும், அருவருப்பாகவும், பழிப்பாகவும் எண்ணப்பட்ட சிலுவை இப்பொழுது வெற்றியின் சின்னமும், விடுதலையின் சின்னமுமாயிற்று. மனித மீட்புக்கான சகலமும் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினுடைய சிலுவையின் மரணம், அடக்கம் பண்ணப்படுதல், உயிர்த்தெழுதலிலேயே இணைந்திருக்கிறது. இது தேவ ரகசியமாகும். இதுவே உலகத்திற்கு நற்செய்தி (சுவிசேஷம்) ஆகும். (I கொரி 15 : 1-4; கொலோ 2 : 15; 2 : 2; எபே 1 : 9, 10; 3 : 1-7; I தீமோ 3 : 9; கொலோ 1 : 14; I கொரி 2 : 6, 7; ரோம 16 : 25, 26; எபே 2 : 13-17; I கொரி 1 : 18, 21-25). இது தேவனுடைய அநந்த ஞானமாக இருக்கிறது (ரோம 11 : 33). இதையறிந்த சாத்தான்கள் இயேசு கிறிஸ்துவினுடைய மரணத்தை புரட்டிப் பேச, மறுதலிக்க ஆரம்பித்துள்ளன.

கிறிஸ்துவுக்கு 600 ஆண்டுகளுக்குப் பின்னும் வந்த முகமது நபி சிலுவையில் அறையப்பட்டது இயேசு கிறிஸ்துவல்ல. இயேசு கிறிஸ்துவைப் பார்க்கப் போன ஒரு ஆள் அவரைப் போல மாறிப் போனார். அவரைப் பிடித்து சிலுவையில் அறைந்தார்கள் என்று குரானில் பொய் சொல்லியிருக்கிறார். அவரைப் பின்பற்றுகிற முகமதிய மார்க்கத்தார்களில் சிலர் இயேசு கிறிஸ்து சிலுவையில் அறையப்பட்டார்; ஆனால் மரிக்கவில்லை. அவர் அங்கிருந்து புறப்பட்டு காஷ்மீர் வந்து இங்கே மரித்தார். இதோ காஷ்மீரில் அவர் கல்லறை என்று புளுகுகிறார்கள். (உதாரணம்—ரேஜ். டி. ஷம்ஸ் H. A. லண்டன் "இயேசுவின் மரணம் காஷ்மீரிலே" அகமதியா இயக்கம்) இந்த முகமதியரின் மேல் பற்றுடைய இந்துக்களில் சிலரும் இதை ஆதாரமாகக் கொண்டு பிதற்ற ஆரம்பித்துள்ளனர் இதைக் கண்டு கிறிஸ்தவர்கள் கலங்க வேண்டிய அவசியமில்லை. அவரவர்கள் தங்கள் அபிப்பிராயத்தைச் சொல்லுகிறார்களே தவிர அது உண்மையாயிருக்க வேண்டுமென்கிற அவசியம் கிடையாது.

பிசாசானவன் ஆதி முதலே பொய்யனும் பொய்க்குப் பிதாவுமாயிருக்கிறான். அவன் பொய் பேசும் பொழுது தன் சொந்தத்திலிருந்து எடுத்துப் பேசுகிறான் (யோவா 8 : 24). இயேசு கிறிஸ்து கல்வாரி சிலுவையிலே தம்முடைய பாவங்களுக்காக இரத்தம் சிந்தி மரித்தார், அடக்கம் பண்ணப்பட்டார், மூன்றும் நாளில் உயிர்த்தெழுந்தார். இது உண்மை, தெய்வீக செய்தி. இயேசு கிறிஸ்து மரணமடையாவிட்டால் எனக்கு பாவமன்னிப்பு இல்லை. பாவத்திலிருந்து விடுதலை இல்லை. அவர் உயிர்த்தெழாவிட்டால் எனக்கு வெற்றி வாழ்க்கையில்லை. தெய்வீக ஆசீர்வாதங்களையும், பரிசுத்த ஆவியையும் நான் பெற்றுக் கொண்டிருக்க முடியாது. குருடனாயிருந்தேன் இப்பொழுது காண்கிறேன் என்று திட்டமாகச் சொல்ல முடியாது. இன்று கோடான கோடி மக்கள் இயேசுவின் மரணத்தை விசுவாசித்து இவ்வித ஆசீர்வாதங்களைப் பெற்றிருக்க முடியாது. மனம் மாறியிருக்க முடியாது. காட்டுமிராண்டிகளாயிருந்த மக்கள் இயேசுவால் நாகரீகமுள்ள மனிதர்களாய் மாறியிருக்கிறார்கள். கோடிக்கணக்கான மக்கள் கொடிதான பாவங்களிலிருந்தும், கொடிய ரோகங்களிலிருந்தும் விடுதலை இயேசுவால் பெற்றிருக்கிறார்கள். கிறிஸ்து மார்க்க பகைவர்களின் உள்ளத்திலும் இறைவன் இயேசு புகுந்து அவர்களைத் தாமது பக்தர்களாக மாற்றி வருகிறார்.

கிறிஸ்துவின் சிலுவை மாபெரும் வெற்றியாகும். சாத்விகமாய் இறைவன் பாவத்தை சிலுவையில் மேற்கொண்டார். தீமையை நன்மையினால் ஜெயித்தார். மூன்றும் நாள் உயிர்த்தெழுந்ததினால் மரணத்தின் மேல் வெற்றி கொண்டார். சிலுவை இயேசு கிறிஸ்துவின் பாடு மரணங்களைக் குறிப்பிடுகிறது. சிலுவையை வணங்கும்படியாக அல்ல, நாம் கழுத்தில் மாட்டி சுமக்கும்படியாகவுமல்ல. நாம் இயேசுவின் பாடு மரணங்களை விசுவாசிக்கும் படியாகவும் தீமையின் மேல் வெற்றி நிச்சயம் என்பதையும் குறிப்பிடுகிறது. அவர் உனக்காக சிலு

லையில் மரித்தார் உன்னையும் சேர்த்து மரித்தார். உன்னுடைய இடத்தில் தம்மை ஒப்புவித்து உன்னை மரணத்தின் ஆக்கினையினின்று தப்புவித்தார். நீ விடுதலையானாய். நீ இயேசுவை விசுவாசித்தால் பாவத்தின் ஆக்கினையினின்றும், பாவத்தின் சாபத்தினின்றும், பாவத்தின் வல்லமையினின்றும் விடுதலையாவாய். சிலுவையோடு ஐக்கியப்படு. வெற்றியடைவாய். வெற்றி நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் மூலமாய் நமக்கு ஜெயம் கொடுக்கிற தேவனுக்கு ஸ்தோத்திரம்!

இது அனுபவம். தத்துவமல்ல. இயேசுவின் மரணத்தை மறுதலிக்கிற, மறுக்கிற மனிதனே, நீயோ வேண்டுமானால் ஒரு கதை உண்டாக்கி நீயும் உன் ஜனங்களும் பாவத்திலிருந்து, அஞ்ஞானத்திலிருந்து, அசுத்தத்திலிருந்து, பொய்யிலிருந்து மூட பழக்க வழக்கங்களிலிருந்து, பாரம்பரிய முட்டாள்தனத்திலிருந்து, பொருளாசையிலிருந்து விடுதலையாகுங்கள், அல்லது சுத்தமாகிக் காட்டுங்கள் பார்க்கலாம்.

*கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினால் நாங்கள் விடுதலையாகியிருக்கிறோம்.*

*கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் இரத்தம் சகல பாவங்களையும் நீக்கி நம்மை சுத்திகரிக்கும்.*

---

"நானோ கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் சிலுவையை குறித்தேயல்லாமல் வேறொன்றைக் குறித்தும் மேன்மை பாராட்டாதிருப்பேனாக. அவரால் உலகம் எனக்கு சிலுவையிலறையுண்டிருக்கிறது. நானும் உலகத்திற்கு சிலுவையிலறையுண்டிருக்கிறேன்."

(கலா 6 : 14)

---

மாதர் பகுதி

(தொடர்ச்சி)

# வேதாகம ஸ்திரீகள்

5. மாற்கு என்னும் பேர் கொண்ட யோவானுடைய தாயாகிய மரியாள்:-

இந்த மாற்கு என்பவர் அப்போஸ்தலராகிய பர்னபாவின் உறவின்முறையார் என்று தெரிகிறது. நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து தம்முடைய கடைசி பஸ்கா விருந்தை ஆசரித்தது இந்த மாற்கு வீட்டில் என்று தெரிகிறது (மாற் 14:12-16) எப்படியோ கர்த்தருக்கு அறிமுகமான குடும்பம் இது என்று தெரியவருகிறது. நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து உயிர்த்தெழுந்து 40 நாட்கள் கழித்து பரலோகத்துக்கு எழுந்தருளி போன பின்பு ஆதி அப்போஸ்தலர்களும், அவர்களோடு சேர்ந்தவர்களும் ஒருமனப்பாட்டு கூடிவந்து ஜெபத்திலும் வேண்டுதலிலும் தரித்திருந்தது இந்த மேல் வீட்டறையிலேயே (அப் 1:12-14). ஆதி சபை கூடி வந்ததும் இங்கே என்று தெரிகிறது (அப் 4:23-31, 12:12).

இந்த அம்மா மாற்கு என்னும் பேர் கொண்ட யோவானுடைய தாயார் என்று வேதத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. இந்த குடும்பம் கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவுக்கும், ஆதி சபை கூடிவருகிறதற்கும், கூடிவந்து தேவனைத் தொழுது கொள்ளுகிறதற்கும் இடமளித்து ஆதரவு செய்த ஒரு வசதியுள்ள குடும்பம் என்று அறிகிறோம். இக்கட்டுகாலங்களிலேயும் சபை நெருக்கடியில் இருந்த காலங்களிலேயும் இந்த குடும்பம் தைரியமாய் அப்போஸ்தலருக்கும், ஆதி சபைக்கும் இடமளித்து உதவி செய்தது. இது இவர்களுடைய போற்றப்படத்தக்க விசுவாசமும் தியாகமும் என்று சொல்லலாம். அதற்காக நாம் கர்த்தரை ஸ்தோத்தரிப்போமாக.

6. ரோமபுரி சபையிலுள்ள மரியாள் (ரோம 16:6)

இந்த அம்மாளைக் குறித்து நாம் இவ்விதமாக வாசிக்கிறோம். எங்களுக்காக மிகவும் பிரயாசப்பட்ட மரியாளை வாழ்த்துங்கள் என்று அப்போஸ்தலன் எழுதியுள்ளார்

(ரோம 16:6). இந்த அம்மா ஆக்கில்லா பிரிஸ்கில்லாள் குடும்பத்தைப்போல் (ரோம 16:3-5) கர்த்தருக்காக அதிகமாக பிரயாசப்பட்ட ஒரு ஸ்திரீயாகத் தெரிகிறது. சுவிசேஷ ஊழியத்தில் ஊழியர்களுக்கு உதவி செய்து திருவசனத்திற்காக பிரயாசப்பட்ட அநேக ஸ்திரீகளை வேதாகமத்தில் பார்க்கிறோம். இவர்கள் தனித்த ஊழியமாக அல்ல அப்போஸ்தலருடைய அனுமதியின் கீழ் மற்ற உடன் ஊழியர்களோடு சேர்ந்து சுவிசேஷ விஷயத்தில் அப்போஸ்தலர்களுக்கு உதவி செய்தார்கள் (ரோம 16:1,2,3,4,11,12 பிலி 4:2,3; பிலேமோன் 1, 2).

பொதுவாக மரியாள் என்ற பெயர் மிரியாமிலிருந்து ஆரம்பமானதாகத் தெரிகிறது. மரியாள் என்ற பெயருடைய ஸ்திரீகள் எல்லாரும் கர்த்தருக்காக மிகவும் பிரயாசப்பட்டு நற்பெயர் பெற்றவர்கள் என்று அறிந்து கொள்ளுகிறோம். ஆனபடியினால் மரியாள் என்ற பெயரையுடைய ஸ்திரீகள் உண்மையான மரியாளாக ஜீவித்து கர்த்தருடைய நாமத்திற்கு மகிமை கொண்டு வரும்படி பிரயாசப்படுவீர்களாக. அவன் பேர் எப்படியோ அப்படியே அவனும் இருக்கிறான் என்ற வாக்கின்படியே (1 சாமு 25:25) நீங்களும் இருப்பீர்களாக.

(தொடரும்)

---

"செய்யும்படி உன் கைக்கு நேரிடுகிறது எதுவோ, அதை உன் பெலத்தோடே செய்; நீ போகிற பாதாளத்திலே செய்கையும் வித்தையும், அறிவும் ஞானமும் இல்லையே" (பிர 9:10).

---

# சாட்சி

## தேவன் அருளிய சொல்லிமுடியாத ஈவுக்காக அவருக்கு ஸ்தோத்திரம்

என்னுடைய பெயர் தேசபாலன். நான் கன்னியாகுமரி மாவட்டத்தில் விளவங்கோடு தாலுகாவைச் சேர்ந்த எபங்குளம் என்ற ஊரில் வாழ்ந்து வருகிறேன். நான் ஒரு C.S.I. கிறிஸ்தவக் குடும்பத்தில் பிறந்தவன். ஒழுங்காக ஆலயத்துக்குச் செல்வேன். ஆனால், தேவனைப் பற்றியும் அவருடைய செய்கைகளைப் பற்றியும் அறியாமல் வாழ்ந்து வந்தேன். எனது பெற்றோர்கள் ஒரு ரோமன் கத்தோலிக்க கிறிஸ்தவப் பெண்ணை எனக்கு விவாகம் செய்து வைத்தார்கள். திருமணம் ஆகி 12 ஆண்டுகள் ஆகியும் எங்களுக்கு குழந்தை இல்லாதிருந்தது. எங்களால் முடிந்த வரையிலும் மருத்துவ சிகிச்சைகள் செய்தும் பலன் இல்லை. எங்களை மலடன், மலடி என்று பலர் மறைமுகமாய் கூப்பிடுவதை எங்கள் காதால் கேட்டு வேதனைப்பட்ட நாட்கள் உண்டு. இன்னும் சிலர் நீங்கள் இசக்கி கோயிலுக்கு ஒரு பட்டுச் சேலை வாங்கி கட்டினால் உங்களுக்கு குழந்தை கிடைக்குமே என்றெல்லாம் பேசி கூறினார்கள். அவர்களிடம்: நாங்கள் வாழ்நாளெல்லாம் இப்படியே இருந்து விட்டாலும் விக்கிரகங்களை வணங்க மாட்டோம், வானத்தையும், பூமியையும் உண்டாக்கின தேவனை மட்டுமே நாங்கள் ஆராதிப்போம். அவர் எங்களை கட்டாயம் ஆசீர்வதிப்பார் என்று பதில் கூறி வந்தோம்.

என்னுடைய மனைவியின் தாயாரும் தந்தையுங்கூட நீங்கள் ஒரு தாயும், பிள்ளையுமாகிய ஒரு இசக்கி உருவத்தைச் செய்து நேர்ச்சையாக வைத்தால் உங்களுக்குப் பிள்ளை கிடைக்குமே என்று கூறினார்கள். அவர்களிடமும் எனக்குப் பிள்ளை கிடைக்காது போனாலும் நான் பேய்களுக்கு நேர்ச்சை செலுத்தமாட்டேன் என்று கூறி விட்டேன். இதனால் என் மாமனும், மாமியாரும் என்னிடத்தில் அதிகமாய் பேசமாட்டார்கள்.

1950-ஆம் ஆண்டு நாங்கள் புதிய எருசலேம் சபையுடன் சேர்ந்து தேவனை ஆராதிக்கும் ஓர் வாய்ப்பினைப் பெற்றுக் கொண்டோம். தேவனுடைய திருச்சபையிலுள்ள பரிசுத்தவான்களிடம் எங்களுடைய குறைகளை நாங்கள் கூறுவதுண்டு.

நீங்கள் ஞானஸ்நானம் பெற்று, பரிசுத்தாவியின் அபிஷேகத்தையும் பெற்று தேவனுடைய பிள்ளைகளாக மாறுங்கள். ஆவிக்குரிய இஸ்ரவேலர்களாக நீங்கள் மாறிவிட்டால் "கர்ப்பம் விழுகிறதும், மலடும் உன் தேசத்தில் இருப்பதில்லை" (யாத் 23:26) என்று கர்த்தருடைய வார்த்தை கூறுகிறது என்று வேத வாக்கியங்களை எங்களுக்கு விளக்கிக் காண்பித்தார்கள். அதன்படி நானும், என் துணைவியும், பாவ மன்னிப்புக்கென்று மறுஜென்ம முழுக்குப்பெற்று பரிசுத்தாவியின் அபிஷேகத்தையும் பெற்றுக் கொண்டோம்.

புதிய எருசலேம் சபையின் பத்திரிகை இந்நாட்களில் வெளிவந்தது. தேவன் தங்களுக்குச் செய்த அனேக நன்மைகளை அநேக தேவ பிள்ளைகள் சாட்சியாகப் பத்திரிகையில் எழுதியிருப்பதை நான் படிப்பதுண்டு. அந்நாட்களில் நான் தேவனிடம் ஓர் பொருத்தனை செய்தேன்: ஆண்டவரே நான் பிள்ளையில்லாதவனாக இருக்கிறேன். தேவரீர் எனக்கு இரங்கி ஓர் குழந்தையைக் கொடுப்பீரானால் என் தேவன் எனக்குச் செய்த நன்மையை நான் பத்திரிகையில் சாட்சியாக எழுதுவேன் என்று ஆண்டவரிடம் வேண்டினேன்

"மெய்யாகவே தேவன் எனக்குச் செவி கொடுத்தார், என் ஜெபத்தின் சத்தத்தைக் கேட்டார். என் ஜெபத்தைத் தள்ளாமலும், தமது கிருபையை என்னைவிட்டு விலக்காமலும், இருந்த தேவனுக்கு ஸ்தோத்திரமுண்டாவதாக" (சங் 66:19,20)

1985-ம் ஆண்டு அக்டோபர் மாதம் 31-ம் தேதி புதன் இரவு 12-45 மணிக்கு எனக்கு ஓர் பெண் குழந்தையைத் தேவன் தந்தார். அவருக்கே மகிமை உண்டாவதாக. தேவன் எங்களுடைய நிந்தையை மாற்றினார். எங்களுடைய கண்ணீரைத் துடைத்தார். பரியாசக்காரருடைய வாய்களையெல்லாம் தேவன் அடைத்துப் போட்டார். கர்த்தருக்கே மகிமையுண்டாவதாக. குழந்தைக்கு "எப்சிபா" என்று பெயர் சூட்டப்பட்டுள்ளது. நானும் என் வீட்டாருமோவென்றால் கர்த்தரையே சேவிப்போம் (யோசு 24:15) கர்த்தருக்கு ஸ்தோத்திரம்!

இப்படிக்கு
Bro. E. தேசபாலன்
வெங்குளம்

---

"அப்படியே நாங்கள் உபவாசம் பண்ணி எங்கள் தேவனிடத்திலே அதைத் தேடினோம்; எங்கள் விண்ணப்பத்தை கேட்டருளினார்" (எஸ்றா 8:23)

---

(தொடர்ச்சி)

# இப்பொழுது அவர் என்னுடனே வாசம் பண்ணுவார்

நம்முடைய தேவனாகிய கர்த்தரும் நம்மோடு கூட வாசம் பண்ணவே விரும்புகிறார். "இஸ்ரவேல் புத்திரர் நடுவே வாசம் பண்ணி அவர்களுக்கு தேவனாயிருப்பேன்" (யாத் 29:45) என்றும் சொல்லியிருக்கிறாரே. இஸ்ரவேல் நடுவே வாசம் பண்ணி அவர்களுக்கு தேவனாயிருக்கவே அவர் அவர்களை எகிப்தின் அடிமைத்தனத்திலிருந்து மீட்டெடுத்தார் "தங்கள் நடுவே வாசம் பண்ணும்படி தங்களை எகிப்து தேசத்திலிருந்து புறப்படப் பண்ணின நான் தங்கள் தேவனாகிய கர்த்தர் என்று அவர்கள் அறிவார்கள். "நானே அவர்கள் தேவனாகிய கர்த்தர் என்றும் வேதத்தில் எழுதியிருக்கிறதே (யாத் 29:46).

ஆம்! இஸ்ரவேல் புத்திரர் நடுவே அவர் வாசமாயிருக்கவே தேவனாகிய கர்த்தர் அவர்களை எகிப்தின் அடிமைத்தனத்திலிருந்து மீட்டுக் கொண்டு வந்தார். அப்படிப் போலவே, ஆவிக்குரிய இஸ்ரவேலராகிய நமக்குள்ளும் வாசமாயிருக்கும்படிக்கே அவர் நம்மை பாவத்தின் அடிமைத்தனத்திலிருந்து மீட்டெடுத்தார். அல்லே

லூயா! அவர் நம்முடைய தேவன். அவர் எப்பொழுதும் சதாகாலமும் நமக்குள்ளே வாசமாயிருக்கவே விரும்புகிறார். இதோ கதவருகே நின்று தட்டும் அவர் சத்தம் கேட்டு நீ திறந்தால் அவர் உனக்குள் வாசம் பண்ண வருவார்.

ஒரு மனிதனில் தேவன் வாசமாயிருக்கிறார் என்பதை அவர் அவனுக்குத் தந்தருளின ஆவியினாலே அறிந்திருக்கிறோம். "அவர் நம்மில் நிலைத்திருக்கிறதை அவர் நமக்கு அருளின ஆவியினாலே அறிந்திருக்கிறோம்" (I யோவா 3:24) என்று எழுதியிருப்பதிலிருந்து இது விளங்கும். "தேவனுடைய ஆவி உங்களில் வாசமாயிருந்தால் நீங்கள் மாம்சத்திற்குட்பட்டவர்களாயிராமல் ஆவிக்குட்பட்டவர்களாயிருப்பீர்கள். கிறிஸ்துவின் ஆவி இல்லாதவன் அவருடையவனல்ல" (ரோம 8:9). ஆகவே, நீங்கள் எப்பொழுதும் தேவனுடைய ஆவியால் நிரப்பப்பட்டவர்களாயிருக்க வேண்டும். தேவனின் ஆவி நம்மில் நிரம்பியிருந்தால் மட்டுமே தேவன் நம்மோடே வாசமாயிருக்கிறார் என்று அறிந்து கொள்ளலாம்.

"பலிபீடத்தின் மேல் அக்கினி எப்பொழுதும் எரிந்து கொண்டிருக்க வேண்டும். அது ஒருபோதும் அவிந்து போகலாகாது" (லேவி 6:13) என்று கர்த்தர் இஸ்ரவேலருக்குக் கட்டளையிட்டிருந்தார். நியாயப்பிரமாண காலத்தில் உண்டு பண்ணப்பட்ட பலிபீடத்தில் ஏற்றப்பட்ட அக்கினியானது, ஒருபோதும் அவிந்து போகக் கூடாது. அது அவிந்து போகாமல் எப்பொழுதும் அனல்மூட்டி எழுப்பப்பட்டுக் கொண்டேயிருக்க வேண்டும். அப்படிப் போல கிருபையின் காலமாகிய இக்காலத்திலும் நம்மீது ஊற்றப்பட்ட பரிசுத்தாவியாகிய அக்கினியும் அவிந்து போகாமல் நாம் எப்பொழுதும் அதை அனல்மூட்டி எழுப்பிக் கொண்டேயிருக்க வேண்டும். இதைக் குறித்தே "ஆவியை அவித்துப் போடாதிருங்கள்" என்றும் (I தெச 5:19) இதினிமித்தமாகவே நான் உன்மேல் என் கைகளை வைத்ததினால் உனக்குண்டான தேவவரத்தை அனல் மூட்டி எழுப்பி விடும்படி உனக்கு நினைப்பூட்டுகிறேன் (II தீமோ 1:6) என்றும் அப்போஸ்தலனாகிய பவுல் எழுதுகின்றார். நம்மில் ஊற்றப்பட்டிருக்கிற அக்கினியானது எப்பொழுதும் அனல் கொண்டு எரிந்து கொண்டிருந்தால் தேவனாகிய கர்த்தர் எப்பொழுதும் நம்மோடே கூட இருக்கிறார். இந்த பரிசுத்தாவியாகிய அக்கினியை நாம் அவித்துப் போட்டோமானால் அவர் ஒருபோதும் நம்முடனே கூட இருப்பதில்லை. இப்படி தேவனாகிய கர்த்தர் நம்மோடுகூட வாசமாயிருக்கவும் நாம்பெற்றுக் கொண்ட பரிசுத்தாவியை அனல் மூட்டி எழுப்பி விடவும் நாம் செய்ய வேண்டுவது என்ன? வேதம் இது குறித்துஎன்ன சொல்லுகிறது?

கவனியுங்கள்! இப்பொழுது அவர் என்னுடனே வாசம் பண்ணுவார் என்ற பொருளில் நாமம் தரிக்கப்பட்ட செபுலோனுக்கு மூன்று குமாரர் இருந்தார்கள் (ஆதி 46:14) அப்படிப் போல இப்பொழுதும் கர்த்தர் என்னோடே வாசம் பண்ணுவார் என்று நாம் சொல்ல மூன்று காரியங்களை நாம் எப்பொழுதும் கைக்கொள்ளுகிறவர்களாயிருக்க வேண்டுமென்று பரிசுத்தாவியானவர் திருவுளம் பற்றுகிறார். அப்பொழுது ஆவியானவரின் நிறைவுண்டாகி நீங்கள் பெற்ற அக்கினியை அனல்மூட்டி எழுப்பி விடுகிறவர்களாயிருப்பீர்கள்.

1 "நித்தியவாசியும், பரிசுத்தர் என்கிற நாமமுள்ளவருமாகிய மகத்துவமும் உன்னதமுமானவர் சொல்லுகிறார், உன்னதத்திலும் பரிசுத்த ஸ்தலத்திலும் வாசம் பண்ணுகிற நான் பணிந்தவர்களின் ஆவியை உயிர்ப்பிக்கிறதற்கும், நொறுங்கினவர்களின் இருதயத்தை உயிர்க்கிறதற்கும், நொறுங்குண்டு பணிந்த ஆவியுள்ளவர்களிடத்திலும் வாசம் பண்ணுகிறேன்" (ஏசா 57:15). அல்லேலூயா! உன்னதத்திலுமுள்ள பரிசுத்த ஸ்தலத்தில வாசம் பண்ணுகிற வானாதி வானங்களும் கொள்ளாத அற்புதராகிய நித்திய தேவன் சொல்லுகிறார் "நான் நொறுங்குண்டு பணிந்த ஆவியுள்ளவர்களிடத்தில் வாசம் பண்ணுகிறேன்" என்று. ஆ! எத்தனை பெரிய சிலாக்கியத்தை அவர் இம் மனுக் குலத்திற்குத் தந்திருக்கிறார். வானம் எனக்குச் சிங்காசனமும், பூமி எனக்கு பாதப்படியுமாயிருக்கிறது. எனக்காக நீங்கள் எப்படிப்பட்ட வீட்டை கட்டுவீர்கள். நான் தங்கியிருக்கத்தக்க ஸ்தலம் எது?

என்று கேட்ட எங்கள் அன்பின் தேவரீர் தான் நொறுங்குண்டு பணிந்த ஆவியுள்ளவர்களிடத்தில் வாசம் பண்ணுகிறேன் என்று சொன்னீரே! ஒரு தேசத்தின் ராஜா அத்தேசத்திலுள்ள ஒரு ஏழைக் குடியானவனிடம் நான் உன்னோடே கூட வாசமாயிருப்பேன் என்று சொல்வானேயானால் அந்த ஏழைக் குடியானவன் எத்தனை மகிழ்ச்சியடைவான். அதை யாராலும் அளவிட முடியுமோ! இதைக் கேட்ட மற்றோரும் இவன் எவ்வளவு பேறு பெற்றவன் என்பார்களல்லவா? குடியானவனின் இருதயமும் மற்றவர்கள் முன் மிகுந்த பெருமிதம் கொள்ளுமே. ஒரு இராஜாவின் பிரவேசம் ஒரு ஏழைக்குடியானவனுக்கு மிகுந்த மகிழ்ச்சியைக் கொடுக்கக் கூடியதாயிருக்குமானால் சர்வலோகத்தின் அதிபதி இராஜாதி ராஜா கர்த்தாதி கர்த்தர் நம்முடைய நித்திய தேவன் நம்மோடு கூட வாசம் பண்ணுவேன் என்கிறாரே இது நமக்கு எத்தனை மகிழ்ச்சி எத்தனைமேன்மை. அவர் நான் எல்லாரோடும் கூடவாசம் பண்ணுகிறேன் என்று சொல்லாமல் நொறுங்குண்டு பணிந்த ஆவியுள்ளவர்களிடத்தில் வாசம் பண்ணுகிறேன் என்றார். எப்பொழுதும் நொறுங்குண்டு பணிந்த ஆவியுள்ளவர்களாயிருந்தால் அவர் நம்மோடு கூட வாசமாயிருப்பார்.

"தேவனுக்கேற்கும் பலிகள் நொறுங்குண்ட ஆவிதான் தேவனே நொறுங்குண்டதும் நறுங்குண்டதுமான இருதயத்தைப் புறக்கணியீர்" (சங் 51:17) என்று தாவீது ராஜா சொல்லுகிறார். தன்னுடைய குறைவுக்காக தாவீது ராஜா தன் இருதயத்தை நொறுக்கி தேவ சமூகத்தை தேடினபோது தேவன் அவரை புதிய ஆவியால் நிரப்பினார். ஆசரியராலும், சதுசேயராலும் ஆலயத்து சேனைத் தலைவனாலும் ஆதிசபை உபத்திரவப்பட்ட போது அவர்கள் நொறுங்குண்ட இருதயத்தோடும், பலத்த சத்தத்தோடும் தேவனைத் தேடியபோது அவர்கள் யாவரும் பரிசுத்தாவியால் நிரப்பப்பட்டு தேவ வசனத்தை தைரியமாய் சொன்னார்கள் அல்லவா? அன்னாள் தன் சக்களத்தியால் அற்பமாய் எண்ணப்பட்ட போது தன் இருதயத்தை நொறுக்கி தேவ சமூகத்திலே ஊற்றினாளே. அப்படிப்போல நீங்களும் தேவனைத்தேடும்போதெல்லாம் உங்கள் இருதயத்தை நொறுக்கி தேவ சமூகத்திலே ஊற்றுங்கள். ஆம்! இதுவே தேவனைச் சேரும் வழி.

"நாம் தேவனிடத்தில் சேர்ந்தால் அவர் நம்மோடு கூட வாசம் பண்ண வருவார்." தேவனிடத்தில் சேருங்கள் அப்பொழுது அவர் உங்களிடத்தில் சேருவார். பாவிகளே உங்கள் கைகளை சுத்திகரியுங்கள், இருமனமுள்ளவர்களே உங்கள் இருதயங்களை பரிசுத்தமாக்குங்கள், நீங்கள் துயரப்பட்டு துக்கித்து அழுங்கள் உங்கள் நகைப்பு துக்கிப்பாகவும் உங்கள் சந்தோஷம் சஞ்சலமாகவும் மாறக் கடவது (யாக் 4:8,9). என்று வேதத்தில் வாசிக்கிறோமே. நம் இருதயத்தை நொறுக்கி நாம் தேவனைத் தேடும்போது, நம்மிலுள்ள சுயம், நான் என்ற அகங்காரம், மனமேட்டிமையெல்லாம் நொறுக்கப்படுகிறது.

இப்பொழுது நாம் நம்மையல்ல நம்மை இரட்சித்த தேவனை சார்ந்திருக்கிறோம். "கர்த்தாவே என் இருதயம் இறுமாப்புள்ளதல்ல, என் கண்கள் மேட்டிமையானவைகளுமல்ல" (சங் 131:1) என்று நாம் இப்பொழுது சொல்லலாமல்லவா?

கவனியுங்கள்! தேவனுக்கு முன்பாக நொறுங்குண்டது மட்டுமல்ல பணிவுள்ள மனமும் நமக்கு வேண்டும். பணிவு தாழ்மையைக் குறிக்கும். பணிவுள்ள மனம் மற்றவர்களை தம்மிலும் மேன்மையானவர்களாக எண்ணுவதில் வெளிப்படும். "ஒன்றையும் வாதினாலாவது வீண் பெருமையினாலாவது செய்யாமல் மனத்தாழ்மையினாலே ஒருவரையொருவர் தங்களிலும் மேன்மையானவர்களாக எண்ணக் கடவீர்கள்" (பிலிப் 2:3) என்று அப்போஸ்தலர் சபைக்கு எழுதுகிறார். சிலர் தங்களை தேவனுக்கு முன்பாக பணிவுள்ளவர்கள் என்று எண்ணிக் கொள்வார்கள். ஆனால் மற்றவர்கள் முன்பு தாழ்மைப்படமாட்டார்கள். இப்படிப்பட்டவர்கள் பணிந்த மனம் உடையவர்களல்ல. நாம் அப்படியிருக்கக் கூடாது. அப்போஸ்தலராகிய பேதுருவைக் கண்ட கொர்நேலியு என்கிற நூற்றுக்கு அதிபதி பாதத்தில் விழுந்து பணிந்து கொண்டார்.

பணிந்த மனம் அவரில் வெளிப்பட்டது. ஆகவே, அவரும் அவருடைய வீட்டார் யாவரும் பரிசுத்தாவியினால் நிரப்பப்பட்டார்கள். நாம் நம்மை அற்பமாக எண்ணாமல் நம்மை நாமே ஒரு பொருட்டாக எண்ணிக் கொண்டோமானால் நம் உள்ளம் அகந்தை கொள்ளும். இதுவே ஆவியானவரின் நிறைவுண்டாக தடையாயிருக்கும். எனவே நாம் அக்கினியை பெற்றுக் கொள்ள, பெற்றுக் கொண்ட அக்கினியை அனல்மூட்டி எழுப்பி விட நொறுங்குண்ட மனதோடும், பணிந்த ஆவியோடும் இறைவனைச் சேருவோமாக.

2. "இஸ்ரவேலின் துதிகளுக்குள் வாசமாயிருக்கிற தேவரீரே பரிசுத்தர்" (சங் 22:4).

அல்லேலூயா! வானத்தையும், பூமியையும் சிருஷ்டித்த சர்வவல்லமையுள்ள தேவன், தம்முடைய சிருஷ்டிகளாகிய நமக்குள், நமது துதிக்குள் வாசமாயிருக்கிறார். அற்ப மனிதர்களாகிய நமக்கு தேவன் எத்தனைப் பெரிய கிருபையை தந்திருக்கிறார். "இந்த ஜனத்தை எனக்கென்று ஏற்படுத்தினேன் இவர்கள் என் துதியை சொல்லி வருவார்கள்" (ஏசா 43:21) என்ற வார்த்தையின்படி நாம் அவரைத் துதிக்கவும் அப்படி நாம் துதிக்கும் போது நம்முடைய துதிக்குள் வாசமாயிருக்கவும் வேண்டுமென்று அவர் நம்மை ஏற்படுத்தியிருக்கிறார் இதை அறிந்து கொண்ட தாவீது ராஜா "தேவனுடைய நாமத்தைப் பாட்டினால் ஸ்துதித்து அவரை ஸ்தோத்திரங்களால் மகிமைப்படுத்துவேன், கொம்பும் விரிகுளம்புமுள்ள காளை எருதைப் பார்க்கிலும் இதுவே கர்த்தருக்குப் பிரியமாயிருக்கும் (சங் 69:30,31) என்றார். அதுமட்டுமல்ல 'என் வாய் உமது துதியினாலும் நாள் தோறும் உமது மகத்துவத்தினாலும் நிறைந்திருப்பதாக" (சங் 71:8)." என் நாவு உமது நீதியையும் நாள் முழுவதும் உமது துதியையும் சொல்லிக் கொண்டிருக்கும் (சங் 35:28) என்று கூறினார். நாள் முழுவதும் தேவனாகிய கர்த்தர் தம்மோடுகூட இருக்க வேண்டுமென்று தாவீது ராஜா வாஞ்சித்தார். ஆகவே நாள் முழுவதும் தேவனைத் துதித்துக் கொண்டும், அவரை ஸ்தோத்தரித்து மகிமைப் படுத்திக் கொண்டும், அவருடைய மகத்துவங்களைப் புகழ்ந்து கொண்டுமே இருந்தார். அவர் தம்முடைய நாவை வேறு எதற்கும் ஒப்புக் கொடுக்கவில்லை. எனவே, அவரிடம் கர்த்தருடைய கிருபை பெருகிற்று. என் தாசனாகிய தாவீதை என் இருதயத்திற்கு ஏற்றவனாகக் கண்டேன் என்று தேவனே சாட்சி கொடுத்தார். நாமும் பக்தனாகிய தாவீது ராஜாவைப் போல நாள் முழுவதும் நொறுங்குண்ட இருதயத்தோடும், பணிந்த ஆவியோடும் அவரைத் தேடி, கர்த்தரைத் துதித்து ஸ்தோத்தரித்து மகிமைப்படுத்திக் கொண்டேயிருந்தால் அவர் எப்பொழுதும் நம்மோடேகூட வாசமாயிருப்பார்.

நீங்களோ இப்படிச் செய்யமனதாயிராமல் வம்பும் புத்தியீனமான காரியங்களையும் பெருமையான வீணான காரியங்களையும் பேசுவதற்கும் உங்கள் நாவை ஒப்புக் கொடுக்கிறீர்கள். "அப்படியே வம்பும் புத்தியீனமான பேச்சும், பரியாசமும் தகாதவைகள் ஸ்தோத்திரம் செய்தலே தகும்." (எபேசி 5:4). மனிதர் பேசும் வீணான வார்த்தைகள் யாவையும் குறித்து நியாயத்தீர்ப்பு நாளிலே கணக்கு ஒப்புவிக்க வேண்டும் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன் (மத் 12:36). ஆகவே, அவருடைய நாமத்தை துதிக்கும் உதடுகளின் கனியாகிய ஸ்தோத்திரப் பலியை அவர் மூலமாய் எப்பொழுதும் செலுத்தக் கடவோம் (எபி 13:15). உங்களுடனே கூட வாசமாயிருப்பார் அல்லேலூயா!

3 "மேலும், பரலோகத்திலிருந்து உண்டான பெருஞ்சத்தத்தைக் கேட்டேன்; அது இதோ மனுஷரிடத்தில் தேவனுடைய வாசஸ்தலம் இருக்கிறது. அவர்களிடத்தில் அவர் வாசமாயிருப்பார், அவர்களும் அவருடைய ஜனங்களாயிருப்பார்கள். தேவன் தாமே அவர்களோடே இருந்து அவர்கள் தேவனாயிருப்பார். அவர்களுடைய கண்ணீரையெல்லாம் துடைப்பார்; இனி மரணமுமில்லை, துக்கமுமில்லை, அலறுதலுமில்லை, வருத்தமுமில்லை; முந்தினவைகள் ஒழிந்து போயின என்று விளம்பினது." (வெளி 21:3,4).

ஆமென், அல்லேலூயா!

## கன்வென்ஷன்! கன்வென்ஷன்!! கன்வென்ஷன்!!!

# "புதிய எருசலேம் சபை"
# கன்வென்ஷன்

**இடம் : தூத்துக்குடி VVD பார்க் அருகில், தருவை மைதானம்**
**நாள் : 27,28,29 மே 1988,**
**பேசுபவர் : Chief Pastor N. லாசர் (மும்பாய்)**

அனைவரையும் அன்புடன் அழைக்கிறோம், வாருங்கள் வந்து தேவாசீர் பெறுங்கள். ஜெபியுங்கள், கர்த்தரால் ஏவப்பட்டபடி உதவி செய்யுங்கள்.

தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி :-
**"NEW JERUSALEM CHURCH"**
**Eld. Bro : Paul Anbazagan**
195-C Cruz Puram,
Tuticorin-1
Tamilnadu-India.

## புதிய எருசலேம் சபையின் ஊழியர் மாநாடு

மே மாதம் 16ம் தேதி திங்கள் கிழமை முதல், 10 நாட்கள் தூத்துக்குடியில் புதிய எருசலேம் சபையின் ஊழியர் மாநாடு நடைபெறும் என்பதை இயேசுவின் நாமத்தில் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

CHIEF PASTOR N. LAZAR.

## கர்த்தருக்குள் நித்திரையடைந்தார்

27-2-1988 சனிக்கிழமை அன்று திருமதி. எப்சிபாள் அம்மாளுடைய கணவரும், ஊழியர் ராபின் பாக்கியராஜ் அவர்களுடைய தகப்பனுமான திரு. ஆசீர்வாதம் சாமுவேல் அவர்கள் கர்த்தருக்குள் நித்திரையடைந்தார்கள் என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம். பரிசுத்தவான்கள் கூடி நல்லடக்கம் செய்தார்கள். அவர் தன்னுடைய அந்திய காலத்திலும் கர்த்தருக்குள் விசுவாசத்தோடு நித்திரையடைந்தார். அவருடைய ஆத்துமா இளைப்பாறுதலுக்குள் பிரவேசித்தது. அவருடைய இழப்பினால் துக்கத்தோடிருக்கும் அம்மாளுக்கும், சகோதர சகோதரிகளுக்கும், உறவினர்களுக்கும் எங்களுடைய மனதார்ந்த ஆறுதலை இயேசுவின் நாமத்தில் கூறிக் கொள்ளுகிறோம்

# புதிய எருசலேம் செய்தி

## PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் - 53 ★ MAY 1988

"புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள்.... விழித்திருங்கள்...உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

மாற்கு 13 : 35-37

**EDITOR : CHIEF PASTOR N. LAZAR**

BOMBAY. INDIA.

# ஆசிரியர் உரை

தேவனுடைய ஜனங்கள் சாத்தானைக் குறித்து எச்சரிக்கையாயிருக்க வேண்டும். அவன் தன்னுடைய ஊழியக்காரர்களை தேவனுடைய ஊழியக்காரர்களுடைய வேஷத்தில் உலகத்தில் நடமாடவிட்டிருக்கிறான். அது ஆச்சரியமல்ல (II கொரி 11:11-15). மனசாட்சியில் சூடுண்ட பொய்யர்கள் திருடி, பொய் சொல்லி, மாறாட்டம் பண்ணி தாங்கள் கண்டு பிடிக்கப்பட்ட பொழுது சீர்திருத்தி அடங்கியிருக்க மனதில்லாமல் பொருளாசையுடையவர்களாய் வெளியே ஓடி தங்களுக்கென்று ஒரு கோட்டையைக் கட்டிக்கொண்டு கர்த்தர் வெளிப்படுத்தினார், கர்த்தர் வெளிப்படுத்தினார் என்று கருத்தவர் வெளிப்படுத்தியதைக் கூறிக்கொண்டு நடக்கிற கள்ள ஊழியர்களுக்கு தேவ ஜனங்கள் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். தேவனுடைய நோக்கம், திட்டங்களுக்கு மாறான வெளிப்படுத்தல்கள் கிடையாது. அவர்களுடைய கனிகளினாலே அவர்களை அறிவீர்கள் (மத் 7:15-23). தேவதூதர்களைப்போல பிரசங்கித்து பிசாசுகளைப் போல ஜீவிக்கிற அநேக கள்ளப் பிரசங்கிகள் உண்டு. அவர்கள் யாருடைய கையாட்கள் என்பதை அவர்களுடைய நோக்கங்களிலிருந்து தேவனுடைய ஜனங்கள் அறிந்து கொள்ளலாம். இவர்களுடைய ஒரே நோக்கம் இவர்களுடைய வாழ்க்கைக்கு ஒரு வழி உண்டு பண்ணிக் கொள்வதே. அவர்களுடைய முடிவு அழிவு. அவர்களுடைய தேவன் வயிறு அவர்களுடைய மகிமை அவர்களுடைய இலச்சையே... (பிலி 3:18, 19) நீங்களோ எங்களைப் பின்பற்றுகிறவர்களாகி நாங்கள் உங்களுக்கு வழி காட்டுகிறபடி நடக்கிறவர்களை மாதிரியாக நோக்குங்கள் (பிலி 3:17; எபே 5:1; பிலி 4:9; I பேது 5:3; I கொரி 11:1). இந்த நாட்களிலே சபைக்கு மாதிரி தேவை. மாதிரி 'அப்போஸ்தலரே; தேவன் திருச்சபைக்கு அப்போஸ்தலரைக் கொடுக்கிறார், தீர்க்கதரிசிகளைக் கொடுக்கிறார். திருச்சபையல்லாதவைகளுக்கு அப்போஸ்தலரோ, தீர்க்கதரிசியோ கிடையாது. தீர்க்கதரிசனம் யாரும் சொல்லலாம், ஆனால் தீர்க்கதரிசி என்பது முற்றிலும் வேறான நிலையாகும். எப்படி ஒரு தீர்க்கதரிசியை மனிதன் உருவாக்க முடியாதோ அப்படியே அப்போஸ்தலரை மனிதர்கள் உருவாக்கவும் ஏற்படுத்தவும் முடியாது. தேவன் திருச்சபைக்கே மாதிரியைக் கொடுக்கிறார். அவர்களோடு ஐக்கியமாயிருந்து அவர்களைப் பின்பற்றுகிறவர்களே திருச்சபையாகும். அவர்களுடைய (அப்போஸ்தலர்களுடைய) வார்த்தைகளே அப்போஸ்தல உபதேசம். ஆனபடியால் வார்த்தையினாலாவது நிருபத்தினாலாவது நாங்கள் உங்களுக்கு உபதேசித்த முறைமைகளைக் கைக்கொள்ளுங்கள். கர்த்தர் உங்களை இரட்சிப்பார், பூரணப்படுத்துவார் (II தெச 2:15). கர்த்தர் உங்களை ஆசீர்வதிப்பாராக.

கிறிஸ்துவுக்குள்,

N. Lazar

Chief Pastor N. LAZAR

# பாவ மன்னிப்பு (தொடர்ச்சி)

நான் ஒரு கிறிஸ்தவ குடும்பத்தில் பிறந்தவன். என்னுடைய பெயர் பெஞ்சமின். மதுரை மாவட்டம் பெரிய குளத்தில் வசித்து வருகிறேன். எனக்கு மனைவியும் மூன்று பிள்ளைகளும் உள்ளார்கள்; என்னுடைய பூர்வீக சபை லுத்தரன் சபை. என்னுடைய தாயும் தகப்பனும் என்னை தேவ பக்தியில்தான் வளர்த்து வந்தார்கள். நான் சிறு வயதிலிருந்தே சந்தோஷம் இல்லாமல், சமாதானம் இல்லாமல் ஒரு வெறுமை நிலையில் வாழ்ந்து வந்தவன். நான் என்னுடைய லுத்தரன் சபையில் இருந்து கொண்டே அந்த சபை எனக்குப் பிடிக்காமல் யுனைடெட் பெந்தெகொஸ்தே சபை, மாரநாதா சபை, இலங்கை பெந்தெகொஸ்தே சபை ஆகிய சபைகளுக்குச் சென்று எங்கேயாவது சமாதானம் கிடைக்குமா என்று அலைந்து கொண்டு இருந்தேன். ஆனாலும் என்னால் பாவத்திலிருந்து விடுதலையும், சந்தோஷமும், சமாதானத்தையும் என்னால் பெற்றுக்கொள்ள முடியவில்லை.

எந்த சபையிலும் பாவத்தை கண்டித்து, பாவத்தை எவ்வாறு விட்டுவிடுவது, பாவத்திலிருந்து விடுதலை பெறுவது எப்படி என்று போதிக்கவில்லை. இருந்தபோதிலும் நான் 15 வது வயதில் எப்படியாவது கிறிஸ்துவுக்குள்ளாக ஜீவிக்க வேண்டும், பரலோகத்தை எப்படியாவது அடைய வேண்டும் என்ற வாஞ்சையோடு யுனைடெட் பெந்தெகொஸ்தே சபையில் "இயேசுவின் நாமத்தினால்" ஞானஸ்நானம் எடுத்தேன். நான் ஞானஸ்நானம் எடுக்கும் போது பாவத்தை அறிக்கை செய்து விட்டு விட்டு ஞானஸ்நானம் பெறவேண்டும் என்று எனக்கு போதிக்கவில்லை எனவே என்னுடைய ஜீவியம் பழைய மனிதனைப் போலவே காணப்பட்டது. என்னுடைய ஜீவியம் தொடர்ந்து பாவஜீவியமாகவே காணப்பட்டது.

நான் 20 வது வயதில் அரசாங்க வேலையில் சேர்ந்தேன். அரசாங்க வேலையைப் பெற்றுவிட்டோம் என்ற பெருமையில் என்னுடைய பாவங்கள் அதிகரித்தது வேதாகமத்தில் எது எது பாவம் என்று சொல்லப்பட்டிருக்கிறதோ அவைகளை எல்லாம் செய்து என்னுடைய ஆவி, ஆத்மா, சரீரம் ஆகியவற்றை கெடுத்துக் கொண்டிருந்தேன். என்னுடைய பாவங்கள் அதிகரித்தது. அவனவன் தன் தன் சுய இச்சையினாலே இழுக்கப்பட்டு, சிக்குண்டு சோதிக்கப்படுகிறான். பின்பு இச்சையானது கர்ப்பம் தரித்து பாவத்தை பிறப்பிக்கும் பாவம் பூரணமாகும் போது, மரணத்தை பிறப்பிக்கும் (யாக் 1:14,15) என்ற வேதவாக்கியங்களின்படி என்னுடைய இச்சையின்படியெல்லாம் நடந்து நான் தேவனுக்கு ஒரு துரோகியாக, பாவியாக மாறிவிட்டேன். என்னுடைய பாவங்களின் நிமித்தமாக நெஞ்சுவலி, இரத்தக்கொதிப்பு, நரம்பு தளர்ச்சி ஆகிய வியாதிகளாலும் சில அசுத்த ஆவியினாலும் அவதிப்பட்டுக் கொண்டிருந்தேன். ஒவ்வொரு நிமிஷமும் துக்கமாகவே கண்ணீரோடு என்னுடைய வாழ்நாள் காணப்பட்டது

"உன் ஜீவன் உனக்குச் சந்தேகத்தில் ஊசலாடும், உன் ஜீவனைப் பற்றி நம்பிக்கையில்லாமல் இரவும் பகலும் திகில் கொண்டிருப்பாய் நீ பயப்படும் உன் இருதயத்தின் திகிலினாலும், உன் கண்கள் காணும் காட்சியினாலும் விடியற் காலத்தில் எப்பொழுது சாயங்காலம் வருமோ என்றும், சாயங்காலத்தில் எப்பொழுது விடியற்காலம் வருமோ என்றும் சொல்லுவாய்" (உபா 25:66,67) என்ற வேத வாக்கியங்களின்படி என்னிடத்தில் பயம் அதிகரித்தது

உலகப் பிரகாரமான மருத்துவரிடம் சென்றேன். பல மருத்துவரிடம் சென்றேன். ஒரு மருத்துவர் உனக்கு மார்பு அடைப்பு இருக்கிறது என்றும், இன்னொரு மருத்துவர் இரத்தக் கொதிப்பு இருக்கிறது என்றும் சொன்னார்கள். எனவே நான் மரித்து விடுவேன் என்ற பயத்தினால் நான் போட்ட ஊசிக்கும் சாப்பிட்ட மாத்திரைகளுக்கும்

மருந்துகளுக்கும் அளவே கிடையாது. இந்த உலகத்தில் எல்லோரும் என்னை கைவிட்டார்கள் என நான் நினைத்து இனி நம்மால் என்ன செய்ய முடியும், மரிக்க வேண்டியது தான் என ஒரு முடிவுக்கு வந்தேன். என்னுடைய மனைவி பிள்ளைகளுடைய கவலை வேறு என்னை ஆட்டிப் படைத்தது. இந்த நிர்பந்தமான நிலையில் என்னுடைய வாழ்நாள் கண்ணீரோடு ஓடிக் கொண்டிருந்தது.

1985-ம் ஆண்டில் ஒருநாள் வள்ளியூர் புதிய எருசலேம் சபையைச் சேர்ந்த அப்போஸ்தலர் சுந்தர்ராஜ் ஐயா அவர்களும் தீர்க்கதரிசி ஏசுதாசன் ஐயா அவர்களும் பெரிய குளம் புதிய எருசலேம் சபைக்கு வந்திருக்கிறார்கள் என்று என் வீட்டுக்கு அருகாமையில் இருந்த ஒரு புதிய எருசலேம் சபை விசுவாசி மூலமாக அறிந்தேன். கர்த்தருடைய கிருபையால் சபைக்கு அழைத்துச் செல்லப்பட்டேன். அன்று நான் ஆராதனையில் கலந்து கொண்டேன். ஆராதனை முடிந்தவுடன் அப்போஸ்தலர், தீர்க்கதரிசி, இருவரும் என்னுடைய தலையில் கைவைத்து ஜெபித்தார்கள். ஜெபித்துக் கொண்டிருந்த வேளையில் நான் திடீரென்று எழுந்து அப்போஸ்தலர் ஐயா அவர்களுடைய வேட்டியை பிடித்து இழுக்கவும் அடிபிடி சண்டையில் இறங்கவும் ஆரம்பித்தேன். அவர்கள் என்னை பிடித்து மீண்டும் முழங்காலில் நிற்கும்படி செய்து ஜெபித்தவுடன் எனக்குள்ளாக ஒரு பெரிய மாற்றம் உண்டாயிற்று. சந்தோஷம் காணப்பட்டது. இதிலிருந்து என்னிடத்தில் ஒரு அசுத்தாவி இருந்ததென்றும் அய்யா அவர்கள் ஜெபத்தில் அசுத்த ஆவி விரட்டப்பட்டது என்றும் என்னால் உணர்ந்து கொள்ள முடிந்தது

அப்பொழுதுதான் "ஒருவனை அவன் தாய் தேற்றுவது போல உங்களைத் தேற்றுவேன். நீங்கள் எருசலேமில் தேற்றப் படுவீர்கள்" (ஏசா 66:13) என்ற வேத வசனத்தின் பிரகாரம் நான் புதிய எருசலேமில் தேற்றப்பட்டேன். நான் தொடர்ந்து தேவனை அதிகமாகத் தேட ஆரம்பித்தேன்.

புதிய எருசலேம் சபைக்கு சென்று தேவனை ஆராதித்து வந்து கொண்டிருந்தேன். அங்கு நான் தெரிந்து கொண்டது, ஒருவன் போதித்தால் தேவனுடைய வாக்கியங்களின்படி போதிக்கக்கடவன் (I பேது 4:11) என்ற வேத வாக்கியத்தின்படி சத்தியம் சத்தியத்தின்படி அங்கு அறிவிக்கப்படுகிறது என்று தெரிந்து கொண்டேன். பின் நான் 1985-ம் ஆண்டு செப்டம்பர் 2-ம் தேதி மாற்கு 1:5-ல் உள்ள தேவனுடைய வசனத்தின்படி என்னுடைய பாவங்களையெல்லாம் வெளிப்படையாக தேவ சந்நிதானத்தில் பரிசுத்தவான்களிடத்தில் அறிக்கையிட்டு அப்போஸ்தலர் சுந்தர்ராஜ் அவர்களால் மத் 28:19 வசனத்தின்படி ஞானஸ்நானமும் அபிஷேகமும் பெற்று இப்பொழுது கிறிஸ்துவின் சரீரமாகிய புதிய எருசலேம் சபையில் ஒரு அவயமாக இணைக்கப்பட்டுள்ளேன்.

பின் பாவ அறிக்கையின் உபதேசத்தைப் பற்றி எனக்கு ஆணித்தரமாக அறிவுறுத்தப்பட்டது. இந்த காலத்தில் பாவ அறிக்கையின் உபதேசம் இல்லாத சபையெல்லாம் விழுந்து போய் கொண்டிருக்கிற இந்த கடைசி காலத்தில் தேவன் புதிய எருசலேம் சபையில் பாவ அறிக்கையின் உபதேசத்தை ஏற்படுத்தி சபை பரிசுத்தப்படுத்தப்பட்டு வருகிறதை உணர்ந்த நான் பாவத்தையெல்லாம் பரிசுத்தவான்களிடத்தில் தான் அறிக்கை செய்ய வேண்டும் எனவும் பாவங்களை மன்னிக்க பரிசுத்தவான்களுக்கு அதிகாரம் இருக்கிறது என்பதை லூக்கா 5:16, யோவா 20:23, அப் 5:1-12, எண் 14:19,20 ஆகிய வேத வாக்கியங்களின்படி எனக்கு உணர்த்துவிக்கப்பட்டு நான் இப்பொழுது என்னுடைய பாவங்களையெல்லாம் தேவ சந்நிதானத்தில் பரிசுத்தவான்களிடத்தில் அறிக்கை செய்து விட்டுவிட்டு பரிசுத்தமாக்கப்பட்டு, தேவனுடைய பிள்ளையாக, புது சிருஷ்டியாக மாற்றப்பட்டு கிறிஸ்துவுக்குள்ளாக வியாதிகளிலிருந்து விடுதலை பெற்று பயமின்றி அதிக சந்தோஷத்தோடே கர்த்தருடைய வருகைக்கு ஆயத்தமாகிக் கொண்டிருக்கிறேன். நான் பரிசுத்த யோவானுக்கு வெளிப்படுத்தப்பட்ட பரலோகத்திலிருந்து இறங்கி வந்த புதிய எருசலேம் சபையில் ஒரு விசுவாசியாக இருக்கிறேன் என்பதை இதன் மூலம் தெரிவித்து என்னுடைய சாட்சியை இயேசுவின் நாமத்தில் முடிக்கிறேன். அல்லேலூயா ஆமென்.

சகோ. அ. பென்யமீன்
புதிய எருசலேம் சபை
வடகரை பெரியகுளம்
மதுரை மாவட்டம்.

---

"அவன் மனுஷரை நோக்கிப் பார்த்து, நான் பாவஞ் செய்து செம்மையானதைப் புரட்டினேன் என்று சொல்லுவான் (யோபு 33:27,28.)

---

# "எருசலேம்" (தொடர்ச்சி)

தேவன இஸ்ரவேல் ஜனங்கள் மத்தியில் வாசம் செய்யும்படி அவருக்கு ஒரு பரிசுத்த ஸ்தலத்தை இஸ்ரவேல் புத்திரர் நடுவில் உண்டாக்கும்படி கட்டளையிட்டார். அந்த பரிசுத்த ஸ்தலத்தின் மாதிரியை கர்த்தர் மோசேக்கு காண்பித்தார். அந்த மாதிரியின்படி பழைய ஏற்பாட்டின் காலத்தில் பரிசுத்த ஆசரிப்பு கூடாரம் உருவாக்கி ஸ்தாபிக்கப் பட்டது (யாத் 25 : 8, 9).

தேவன் காண்பித்த மாதிரியின்படி ஆசரிப்புக் கூடாரம் ஆயத்தமாக்கப்பட்டு ஸ்தாபிக்கப்பட்ட பொழுது கர்த்தருடைய மகிமை ஆசரிப்புக் கூடாரத்தை நிரப்பிற்று. ஒரு மேகம் ஆசரிப்புக் கூடாரத்தை மூடினது. கர்த்தருடைய மகிமை ஆலயத்தை நிரப்பிற்று. இந்த மேகமானது தேவனுடைய வெளிப்படையான பிரசன்னத்திற்கு அடையாளமாயிருக்கிறது.

இதே பிரசன்னம் சாலமோன் கர்த்தருக்கு எருசலேமின் ஆலயத்தைக் கட்டி பிரதிஷ்டை செய்தபொழுது ஆலயத்தை நிரப்பிற்று (1 இரா 8 : 10, 11).

எருசலேம் தேவனுடைய பரிசுத்த நகரமென்று அழைக்கப்பட்டது. எருசலேம் பதினாலு விதமான பெயர்களினால் அழைக்கப்படும் என்று வேதாகமத்தில் முன் அறிவிக்கப்பட்டது

(1) நீதிபுரம் (ஏசா 1 : 26)

(2) விசுவாச நகரம் (ஏசா 1 : 26)

(3) எருசலேம் கர்த்தருடைய சிங்காசனம் (எரே 3 : 17)

(4) எருசலேம் கர்த்தருடைய நகரம் (ஏசா 60 : 14)

(5) இஸ்ரவேலுடைய பரிசுத்தரின் சீயோன் (ஏசா 60 : 14)

(6) எப்சிபா (ஏசா 62 : 4)

(7) தேடிக் கொள்ளப்பட்ட நகரம் (ஏசா 62 : 12)

(8) கைவிடப்படாத நகரம் (ஏசா 62 :12)

(9) பச்சையான ஒலிவ மரம் (எரே 11 : 16)

(10) எங்கள் நீதியாயிருக்கிற கர்த்தர் (எரே 33 : 16)

(11) கர்த்தர் அங்கே இருக்கிறார் (எசே 48 : 35)

(12) சத்திய நகரம் (சக 8 : 3)

(13) சேனைகளுடைய கர்த்தரின் பர்வதம் பரிசுத்த பர்வதம் (சக 8 : 3)

(14) பரிசுத்த பர்வதம் (சக 8 : 3).

இதற்கு முன்னாலோ இப்பொழுதோ காணப்படுகிற எருசலேமுக்கு இந்த பெயர்கள் பொருந்தாது. கர்த்தராகிய இயேசு கிறிஸ்து ஆளுகை செய்யும்படியாக எருசலேமில் வந்து அமரும் பொழுதே இந்த பெயர்களின் அர்த்தம் எருசலேமில் நிறைவேறும் (கலா 4 : 25). அந்த பிரகாரம் காணப்பட்ட எருசலேமில் ஆவியின் பிரகாரமாக "புதிய எருசலேமை" திருச்சபையை தேவன் ஸ்தாபித்தார். அத்திருச்சபையின் பெயர் மேலான எருசலேம் (கலா 4 : 26) என்றும் புதிய எருசலேம் என்றும் (வெளி 3 : 12), ஆட்டுக் குட்டியானவருடைய மணவாட்டி என்றும் (வெளி 19 : 7; 21 : 2); பரிசுத்த நகரம் என்றும் (வெளி 21 : 10) பரம எருசலேம் என்றும் (எபி 12 : 22); சீயோன் மலை என்றும் (எபி 12 : 23) ஜீவனுள்ள தேவனுடைய பரிசுத்த நகரம் என்றும் (எபி 12 : 23); நாமெல்லாருக்கும் தாயானவள் என்றும் (கலா 4 : 26) புதிய ஏற்பாட்டில் குறிப்பிடபட்டுள்ளது

திருச்சபையின் பெயர் "புதிய எருசலேம்" சில மனிதர்கள் பெயரினாலும் மனித அபிப்பிராயங்களின் படியும், மனிதர் ஆலோசனை பண்ணி தங்களுடைய கூட்டங்களுக்கு தங்களுக்கு நலமாய் தோன்றுகிற பெயர்களைச் சூட்டிக் கொள்கிறார்கள். அப்படியே ரோமன் கத்தோலிக் என்றும்; லூத்தரன் சபை என்றும், லூத்தரன் மிஷன் என்றும்; மெதடிஸ்ட் என்றும், C. S. I. என்றும், சீலோன் பெந்தெகொஸ்து, மெட்ருஸ் பெந்தெகொஸ்து, சீயோன் பெந்தெகொஸ்து என்றும், பிரதரன் மெதடிஸ்டு, பாப்டிஸ்ட் என்றும், கிருபாசனம், அசம்ப்ளி ஆப் காட், சர்ச் ஆப் காட் இன்னும் பற்பல பெயர்களை

தங்கள் கூட்டத்திற்கு வைத்துக்கொள்ளுகிறார்கள். ஒருவருடைய மனைவியை இன்னாருடைய மனைவி என்று நாம் சொல்லுகிறோம். ஆனால் அந்த ஸ்திரீக்கு ஒரு பெயர் உண்டு. அப்படியே தேவனுடைய திருச்சபையினுடைய பெயர் "புதிய எருசலேம்" என்பதே.

இந்த மனிதர்கள் வைத்துக் கொண்ட பெயர்களான லுத்தரன், பாப்டிஸ்ட், பெந்தெகொஸ்து, மெதடிஸ்ட், பிராட்டெஸ்டண்ட், ரோமன் கத்தோலிக் என்ற எந்தப் பெயர்களும் பரலோகத்தில் கிடையாது. அந்தந்த கூட்டங்களுக்கோ ஜாதிக்கோ தனித் தனி மோட்சமும் அங்கே கிடையாது. இங்கே வேண்டுமானால் நாடாருக்கு தனிக் கல்லறையும் தனி கோயிலையும், கோனாருக்கு தனிக் கோவிலையும், அரிஜனக்கு கோவிலையும், மற்றவருக்கு தனி சபையையும்; ஒவ்வொரு ஜாதிக்கு, பாளையாருக்கு தனித் தனி சபையையும், கல்லறையையும் கட்டிக் கொள்ளலாம். ஆராதனை ஸ்தலத்தில் கூட வெவ்வேறு பகுதியாகப் பிரித்துக் கொண்டு அமர்ந்து கொள்ளலாம். ஆனால் பரலோகத்திலோ இந்த மாதிரி எந்த பெயரும் கிடையாது. இவைகளுக்கு அங்கே இடமும் இல்லை.

பரலோகத்தில் தேவனுடைய நகரமாகிய தேவனுடைய திருச்சபைக்கு "புதிய எருசலேம்" என்று பெயர். பூரணமாக்கப்பட்ட பரிசுத்தவான்கள் புதிய எருசலேமுக்குப் போகிறார்கள். திருச்சபையானது ஆதியிலே பூலோக எருசலேமில் புதிய எருசலேமாகக் கட்டப்பட்டது. பரலோகத்திலேயும் அது புதிய எருசலேமாகக் கட்டப்பட்டது. அது புதிய எருசலேமாகவே இருக்கிறது.

எருசலேமைக் குறித்து இவ்விதமாக அழைக்கப்படும் என்ற பெயர் அர்த்தங்களின் படி தேவன் 'புதிய எருசலேம் சபையில்' வீற்றிருக்கிறார். தேவன் திருச்சபையைப் பற்றி வெளிப்படுத்தி அதற்கு 'புதிய எருசலேம் சபை' என்று பெயர் வைக்கும்படியாய் எனக்கு(Chief pastor N.Lazar)கட்டளையிட்டார். நான் இறைவனிடம் அது புதிய வானம் புதிய பூமியில் பரலோகத்திலிருந்து இறங்கி வருகிற பரிசுத்த நகரமல்லவா! என்றேன். அதற்கு தேவன் இல்லை, இங்கே பூலோகத்தில் கட்டுவது எதுவோ அது பரலோகத்திலும் கட்டப்படும். பூலோகத்திலே புதிய எருசலேம் கட்டப்பட்டு நிறைவடையும் பொழுது அது பரலோகத்திலேயும் நிறைவடையும். பரலோகத்திலே திருச்சபையின் பெயர் 'புதிய எருசலேம் சபை' என்பதே. அதுவே தேவனுடைய நகரமாக பரலோகத்திலிருந்து இறங்கி வருகிறது. திருச்சபையின் பெயர் புதிய எருசலேம் சபை ஆகும். அதற்கு 'புதிய எருசலேம் சபை' என்று பெயர் சூட்டு என்று தேவன் எனக்கு கட்டளையிட்டார்.

பெயரில் என்ன இருக்கிறது? எந்த பெயர் வைத்துக் கொண்டாலும் எல்லோரும் அங்கே தான் போகிறோம் என்று சில மனிதர்கள் சொல்லிக் கொள்ளலாம். பெயர் ஆளைக் குறிப்பிடுகிறது. ஒரு ஆளிலிருந்து இன்னொரு ஆளை வித்தியாசப்படுத்துகிறதற்காக பெயர் சூட்டப்படுகிறது. ஒருவருடைய பெயரை சொல்லும் பொழுது அவருடைய உருவம், தன்மை, அவர் செய்த நன்மை தீமைகள் எல்லாம் மனதில் தோன்றும் பெயர் ஆளைக் குறிப்பிடுகிறது

கர்த்தராகிய இயேசு கிறிஸ்து தமது டைய திருச்சபைக்கு (மணவாட்டிக்கு) சூட்டியிருக்கிற பெயர் 'புதிய எருசலேம் சபை' என்பதே. இது இடுகுறி பெயர். காரணப் பெயர் அல்ல.இடுகுறி பெயர்(original name) தொப்பி மாற்றுகிறது போல தங்களுடைய சபைகளுக்குப் பெயரை மாற்றிக்கொண்டே இருக்கிற அநேகரைப் பார்க்கிறோம். தேவனால் கட்டப்படாததெல்லாம் இடிக்கப்படும். தேவனால் சூட்டப்படாத பெயர்களெல்லாம் அழிக்கப்படும். தேவனால் எழுப்பப்பட்டதையும் தேவனால் சூட்டப்பட்ட பெயரையும் ஒழித்துவிட ஒருவனாலும் கூடாது (அப் 5 : 38, 39). நாமத்தில் என்ன இருக்கிறது? நாமத்தில் விசேஷம் இருக்கிறது இயேசுவின் நாமம் ஜெயம்! இயேசுவின் நாமத்தில் ஒன்றுமில்லையா? நாமத்தில் விசேஷம் இருக்கிறது அது தேவனுடைய சித்தம், திட்டம்.

புதிய—புதியதும் விசேஷங்கள் நிறைந்ததும்

எருசலேம்—கர்த்தருடைய நகரம்

சபை—தேவன் அங்கே வாசம் பண்ணுகிறார் மறுபடியும் புதிய எருசலேமாய் சபை கட்டப்படுகிறது.

"யேகோவா ஷம்மா!"

---

"யோவானாகிய நான், புதிய எருசலேமாகிய பரிசுத்த நகரத்தைத் தேவனிடத்தினின்று பரலோகத்தைவிட்டு இறங்கி வரக் கண்டேன்."

வெளி 21 : 2

---

(தொடர்ச்சி)

# ஆதியாகமத்தைப் பற்றி ஒரு ஆராய்ச்சி

ஆதி 4:17:- காயீனுக்கு ஏனோக்கு என்று ஒரு குமாரன் பிறந்தான். இவன் காயீனுடைய சந்ததி ஆதாமுக்கு மூன்றாம் தலைமுறையானவன். சேத்தினுடைய வம்ச பரம்பரையிலே வந்த ஆதாமுடைய ஏழாம் தலைமுறையான தேவனுடைய மனுஷனான ஏனோக்கு அல்ல. இந்த ஏனோக்கு.

ஆதி 4:18, 19:- காயீனுடைய வம்ச பரம்பரையில் ஆதாமுக்கு ஏழாம் தலைமுறையான லாமேக்கு முதலாம் இருதாரம் படைத்தவனாகவும் (வச 19) இரண்டாம் கொலைபாதகனாகவும் ஆனான் (வச. 23).

ஆதி 4:23; 24:- லாமேக்கினுடைய தோல்வி. லாமேக்கு இரண்டாம் கொலைப்பாதகன் என்னுடைய தற்பாதுகாப்புக்காக ஒரு வாலிபனைக் கொலை செய்தேன் என்று சொல்லுகிறதைப் பார்க்கிறோம். திட்டமிட்டு கொலை செய்த காயீனை தேவன் பாதுகாத்திருக்க என்னையும் பாதுகாப்பார் என்று தன்னை தேற்றிக் கொள்கிறான்.

ஆதி 4:25, 26:- விக்கிரக ஆராதனையின் ஆரம்பம்; பொதுவாக மனித இனத்தில் இரண்டு கிளைகள் இருந்ததாக சிலர் நினைக்கிறார்கள். ஒன்று காயீனுடைய பாரம்பரையென்றும் இன்னொன்று சேத்தினுடைய பாரம்பரையென்றும் எண்ணிக் கொள்கிறார்கள். அது தவறாகும். மனித இனம் அநேக கிளைகளாகப் பிரிந்திருந்தது (ஆதி 4:20-22). சேத்துக்கு ஒரு குமாரன் பிறந்தான், அவனுக்கு ஏனோஸ் என்று பெயர். அப்பொழுது மனுஷர் கர்த்தருடைய நாமத்தை தொழுது கொள்ள ஆரம்பித்தார்கள் என்று எழுதப்பட்டுள்ளது. அதற்கு முன்னால் ஆதாம், ஆபேல் ஆகியோர் செய்த தொழுகை எத்தன்மையானது. காயீனுடைய சந்ததி ஏழாம் தலைமுறை மட்டும் குறிக்கப்பட்டுள்ளது (ஆதி 4:16-18). சேத்தினுடைய சந்ததியோ ஆதாம் முதல் கிறிஸ்துவரை பதிவு செய்யப்பட்டுள்ளது (ஆதி 4:25-5:32; லூக் 3:23-38). இங்கே கர்த்தருடைய நாமத்தை தொழுது கொள்ள ஆரம்பித்தார்கள் என்று எழுதியிருப்பது மெய்யான ஆராதனை அல்ல, விக்கிரக ஆராதனையின் துவக்கமே. ஆதாமின் குமாரர்களும் குமாரத்திகளும் பிரளயத்திற்கு முந்தி பல பிரிவுகளாகப் பெருகியிருந்தார்கள். அப்பொழுது ராட்சதரும், தேவகுமாரர்களுடைய சந்ததியும், மனுஷகுமாரத்திகளும் இருந்தார்கள். மக்கள் கோடிக்கணக்காகப் பெருகியிருந்தார்கள். சேத்தின் சந்ததியாரும் எல்லாரையும் போல தேவபக்தியற்றவர்களாகவே இருந்தார்கள். இந்த காலத்தில் ஆபேல், ஏனோக்கு, நோவா என்பவர்கள் மாத்திரமே தேவபக்தியுடையவர்களாயிருந்தார்கள். ஏனோக்கு, அவனுடைய காலத்திலேயே மனிதனுடைய அழிவைக் குறித்து தீர்க்கதரிசனம் உரைத்த போது சேத்தின் சந்ததியாரும் மற்றமனுஷர்களைப் போலவே தேவபக்தியற்றவர்களாகவே இருந்தார்கள் (யூதா 14).

ஜலப்பிரளயத்தைக் குறித்து ஏனோக்கு முன்னறிவித்து தன் குமாரனுக்கு மெத்தூசலா என்றுபெயரிட்டார். மெத்தூசலா என்றால் இவன் இறக்கும் பொழுது பிரளயம் உண்டாகும் என்று அர்த்தம். மாம்சமான யாவரும் தங்களைக் கெடுத்துக் கொண்டிருந்தார்கள் சேத்தின் வம்ச பரம்பரையிலே எட்டுபேரைத் தவிர மற்றெல்லார் மேலும் நியாயத் தீர்ப்பு உண்டாயிற்று. சேத்தின் பாரம்பரையார் தேவ குமாரர் என்றோ, தேவபக்தியுள்ளவர்களென்றோ வேதாகமத்தில் குறிப்பிடப்படவில்லை. மற்ற மனிதர்களோடு கூட சேத்தின் வம்சத்தாரும் நியாயத் தீர்ப்புக்கு உட்பட்டு மற்ற மனிதர்களோடு அழிக்கப்பட்டார்கள். நோவாவின் குடும்பம் காப்பாற்றப்பட்டதற்கு காரணம் அவர்கள் ஆதாமுடைய சுத்தமான பரம்பரை என்பதற்காகவே நோவா மாத்திரமே அந்தக் ஜனக் கூட்டத்தில் நீதிமானாகக் காணப்பட்டார்.

(தொடரும்)

# நீங்கள் யாருடைய பட்சத்தில்?

## கர்த்தராகிய இயேசு கிறிஸ்து (தேவன்)

1. பரிசுத்தர்
2. எல்லாவேளையும் பொய்யுரையாதவர்.
3. சர்வ வல்லமை உள்ளவர்.
4. சர்வத்தையும் ஆளுகிறவர்.
5. சர்வ ஞானமுள்ளவர்.
6. நன்மையே செய்கிறவர்.
7. நல்லவர்
8. சத்தியமுள்ளவர்
9. பூரண சற்குணர்
10. நீதிபரர்
11. சர்வத்துக்கும் அதிபதி.
12. ஒளியாயிருக்கிறார்.
13. ஜீவனைக் கொடுக்கிறவர்.
14. சத்தியத்தில் நடத்த மனுஷனை ஆட்கொள்கிறார்.
15. பரிசுத்தவான்களை ஆட்கொண்டு அவர்கள் மூலம் தீர்க்கதரிசனமாய் தம்முடைய வார்த்தைகளை வெளிப்படுத்துகிறவர். அற்புத அடையாளங்களை செய்கிறவர்.

## பரிசுத்த ஆவி பரிசுத்தாவி பெற்றவர்கள்

1. மனுஷனிடத்தில் வந்து சகல சத்தியத்திற்குள்ளும் நடத்துவார்.
2. சத்தியத்தினால் ஜனங்களை பரிசுத்தமாக்குவார்.
3. தவறு செய்யும் போது துக்கப்படுவார்.
4. தமது தாசர்கள் மூலம் உலக மக்களை அவர்கள் பாவத்தினிமித்தம் கண்டித்து உணர்த்துவார்.
5. அந்நிய பாஷைகள் பேசி தேவனைப் புகழச் செய்வார்.
6. இயேசு கிறிஸ்துவை மகிமைப் படுத்துவார்கள்.

## சாத்தான் (பிசாசு)

1 அசுத்தன்.
2. பொய்யும் பொய்க்குப் பிதாவுமானவன்.
3 வல்லமை உள்ளவன்.
4. பாவிகளை ஆளுகிறவன்
5. ஞானமுள்ளவன்
6. தீமையையே செய்கிறவன்
7. பொல்லாதவன்
8. வஞ்சிக்கிறவன்
9 பூரண பாவி.
10. அக்கிரமக்காரன்.
11. உலகத்தின் அதிபதி
12. இருளாயிருக்கிறான்.
13. மனுஷ கொலைபாதகன்
14. தன்னுடைய இச்சையை நிறைவேற்ற மனிதனைப் பிடிக்கிறவன்.
15. பாவத்தில் நிலை நிற்கிறவர்களை ஆட்கொண்டு தீர்க்கதரிசனம் சொல்லுவான. பொய்யான அற்புத அடையாளங்களைச் செய்வான.

## அசுத்த ஆவி/அசுத்த ஆவியினால் பிடிபட்டவர்கள்

1. மனுஷனிடத்தில் வந்து வேதப் பிரமாணத்துக்கு மாறுபட்ட உபதேசத்தில் நடத்தும்.
2. தவறான உபதேசத்தினால் ஜனங்களை தீட்டுப்படுத்தும்.
3. தவறு செய்தாலோ, அவர் செய்தாரே, இவர் செய்தாரே, தாவீதே செய்தாரே என்று தேற்றும்.
4. கள்ளப் போதகர்கள் மூலம் இயேசு அன்பானவர், அற்புதங்களைச் செய்கிறவர் என்பதை மாத்திரம் முக்கியப் படுத்தி ஜனங்களின் பாவத்தை மூடி மறைக்கும்.

7. தெளிந்த புத்தியுள்ளவர்களாய், ஆவியால் ஆட்கொள்ளப்படும் போது சுய நினைவிலிருந்து என்ன நடக்கிறது என்பதை அறிவார்கள்.

8. இயேசுவை கர்த்தர் (எஜமான், ஆண்டவர்—LORD) என்று அறிக்கை செய்து, அவருடைய வார்த்தைகளுக்கு நடுங்கி கீழ்ப்படிவர்.

9. தேவ பக்தியாயிருந்து தேவனுடைய வல்லமையை (பரிசுத்த ஜீவியத்தை) நடைமுறையில் காண்பிப்பார்கள்.

10. சொப்பனங்களைக் காண்பார்கள், தரிசனங்களைக் காண்பார்கள். தீர்க்கதரிசனம் சொல்லுவார்கள். ஆனால் அவைகள் வேத வாக்கியங்களுக்கு ஒரு போதும் முரண்பட்டிராது.

11. சத்தியத்தில் பிரியப்படுவார்கள்.

12. ஜனங்கள் இவர்களோடே சேரப் பயப்படுவார்கள். ஆனால் மேன்மைப் படுத்துவார்கள்.

## நல்ல மேய்ப்பர்கள்/ தேவ ஊழியர்கள்

1. தேவனை பிரியப்படுத்துவார்கள்.

2. தேவனால்/தேவ மனிதனால் கட்டளைப் பெற்று ஊழியம் செய்வார்கள்.

3. போதிக்கிறபடி நடப்பார்கள்.

4. சத்தியத்தை முழுமையாய் அறிவிப்பார்கள்.

5. தேவனிடம் கண்டு கேட்டு அறிந்ததை அறிவிப்பார்கள்.

6. எங்கும் சாட்சி உள்ள வாழ்க்கை வாழ்வார்கள்.

7. தேவனோடே சஞ்சரித்து ஆவியினாலேயே நடத்தப் படுவார்கள்.

8. எவ்வளவு ஊழியம் இருந்தாலும் தனி ஜெபம், வேத வாசிப்பு இவைகளை அதிகமாய் முக்கியப்படுத்தி நேரம் ஒதுக்குவார்கள்.

5. அந்நிய பாஷை பேசி தேவனையும், தேவ மனிதர்களையும் தூஷிக்கும்.

6. சுய மகிமையைத் தேடுவர்.

7. ஆவி வரும் போது கட்டுப்பாடற்று, தெளிவற்று, சுய நினைவிழந்து வஸ்திரம் விலகுவதையும், தாறுமாறாக இடம் விட்டு இடம் அலைவதையும் அறியாதிருப்பார்கள்.

8. இயேசுவை கர்த்தர் என்று அறிக்கை செய்தும் அவருடைய வார்த்தைகளை அசட்டை பண்ணி அவமதிப்பார்கள்.

9. தேவ பக்தியின் வேஷத்தை தரித்துக் கொண்டு அதன் பெலனை மறுதலிப்பார்கள்.

10. சொப்பனங்கள் (பேய் கனுக்கள்) தரிசனங்கள் காண்பார்கள். தீர்க்கதரிசனம் சொல்வார்கள். ஆனால் அவைகள் வேதத்தின்படி இராது. வேதத்திற்கு மாறுபாடாயிருக்கும்.

11. அநீதியில் பிரியப்படுவார்கள்.

12. ஜனங்கள் இவர்களோடே சேரப் பயப்படுவார்கள். அத்துடன் அவர்களை இகழ்வார்கள்.

## கள்ள மேய்ப்பர்கள்/ கள்ள ஊழியர்கள்

1. மனுஷரை பிரியப்படுத்துவார்கள்.

2. தான தோன்றித்தனமாய் யாருக்கும் கீழ்ப்படியாது அலைந்து திரிவர்.

3. போதகம் ஒன்றாயிருக்கும், செய்கை ஒன்றாயிருக்கும்.

4. இடம் கண்டு, ஆள் கண்டு உபதேசத்தை மாற்றிக் கொள்வார்கள்.

5. காணாததைக் கண்டேன் என்றும், கேளாததைக் கேட்டேன் என்றும் பொய் சொல்வார்கள்.

6. அந்தரங்கத்தில் அசுத்தமான வாழ்க்கை வாழ்வார்கள்.

7. சுயமாய் சிந்தித்து சுயமாய் திட்டம் போட்டு நடப்பார்கள்.

8. தனி ஜெபம், வேதம் வாசிக்க நாள் கணக்காய், மாதக் கணக்காய், வருடக் கணக்காய் நேரம் இருக்காதென்பர். அவ்வளவாய் ஊழியம் செய்வர்.

9. இவர்களுடைய மேன்மை கிறிஸ்துவாயிருக்கும்.

10. இவர்களை நேசிப்பவர்கள் சுகிப்பார்கள். பகைக்கிறவர்கள் சாவார்கள்.

11. பிசாசுகளைத் துரத்துவார்கள், தீர்க்கதரிசனம் சொல்வார்கள், அற்புதங்களைச் செய்வார்கள், அத்துடன் ஜீவியத்தையும் சுத்தமாய் காப்பார்கள்.

12. யாராவது அழைத்தால் அல்லது தேவனால் அனுப்பப்பட்டு தேவ செய்தியுடன் ஒரு வீட்டிற்குள் பிரவேசிப்பார்கள்.

13. இவர்கள் தேவன் கர்த்தராகிய இயேசு கிறிஸ்து

14. தன்னையே தேவனுக்காய் தியாகம் செய்வார்கள்.

15. திருச்சபையில் நிலைத்திருந்து கீழ்ப்படிதலோடு ஊழியம் செய்வர்.

16. மனிதர்களை (ஆத்துமா) ஆதாயப்படுத்துவதே இவர்கள் நோக்கம்.

17. விசுவாசிகள் இரண்டு பேர் இருந்தாலும் அவர்களை பராமரித்து அவர்களோடே தவறாது தேவனை ஆராதிப்பார்கள்.

18. எதிரியானவன் நிந்திக்க இடம் கொடுக்க மாட்டார்கள்.

19. போதுமென்ற மனதுடன் இருப்பார்கள்.

20. பரிசுத்தவான்கள்.

21. உண்மை உள்ளவர்கள்.

9. இவர்களுடைய மேன்மை பொய்யும், சூதும், ஐசுவரியமுமாயிருக்கும்.

10. இவர்களை நேசிப்போர் அழிவார்கள், பகைப்போர் பிழைப்பார்கள்.

11. பிசாசுகளை துரத்துவார்கள், தீர்க்கதரிசனம் சொல்வார்கள், அற்புதங்களைச் செய்வார்கள். ஆனால் அக்கிரம செய்கைக்காரராய் இருப்பார்கள்.

12. வீடுவீடாய் போய் அலப்பி வீண் அலுவற்காரராய் இருப்பார்கள்.

13. இவர்கள் தேவன் வயிறு.

14. கூலி வாங்குவதற்கு ஊழியம் செய்வர். கூலி நின்றால் ஊழியம் நிற்கும்.

15. வருவாய் கிடைக்கும்படி சபை விட்டு சபை தாவுவார்கள்.

16. மக்களுடைய உடமைகளை ஆதாயப்படுத்துவதே இவர்கள் நோக்கம்.

17. எங்கே காசு கிடைக்கும் என்று தன் சபையை விட்டுவிட்டு எங்கேயாவது போய் பிரசங்கம் பண்ணப் போவார்கள்.

18. ஆண்கள் இல்லா வீடுகளில் தனியாய் சென்று குழப்பம் உண்டாக்குவார்கள்.

19. இழிவான ஆதாயத்தை இச்சிப்பார்கள்.

20. விபச்சார மயக்கத்தால் நிறைந்தவைகளும், பாவத்தை விட்டோயாத கண்களையுமுடையவர்கள்.

21. பொய் சொல்வதில் பெரியவர்கள்.

---

"...கர்த்தருடைய பட்சத்தில் இருக்கிறவர்கள் யார்? அவர்கள் என்னிடத்தில் சேரக் கடவர்கள்"

யாத் 32:26

---

## வேதபாடம்

(தொடர்ச்சி)

யாத்29-1-9: பிரதான ஆசாரியனாகிய ஆரோனையும், அவனுடைய குமாரரையும் ஆசாரிய ஊழியத்திற்கென்று ஒப்புக்கொடுத்தலும், பிரதான ஆசாரியனை அபிஷேகம் பண்ணுதலும்

ஆரோனையும் அவனுடைய குமாரர்களையும் ஆசரிப்புக்கூடாரத்தண்டையில் கொண்டுவந்து அவர்களைத் தண்ணீரால் கழுவ வேண்டும் (வசனம் 4) ஆரோனுக்கு பரிசுத்த வஸ்திரங்களை உடுத்தி பரிசுத்த தைலத்தை அவன் தலையின்மேல் வார்த்து அவனை அபிஷேகம் பண்ணவேண்டும் (வசனம் 5,6) ஆசாரியர்களுக்கு ஆசாரிய வஸ்திரம் தரித்து அவர்களை பிரதிஷ்டை பண்ணுதல் (வசனம் 8,9).

யாத் 29:10-28 : ஆசாரியர்கள் அவர்களுக்காக செலுத்த வேண்டிய பலி காணிக்கைகள். (வசனம் 10-14) அவருக்குச் செலுத்த வேண்டிய பாவ நிவாரண பலி.

யாத் 29:15-18 : அவர்கள் செலுத்த வேண்டிய தகனபலி

யாத் 29:19-21 : பிரதிஷ்டை பலி

யாத் 29:22-28 : அவருக்குச் செலுத்த வேண்டிய போஜன பலி, சமாதான பலி.

யாத் 29:29-42 :- ஆசாரியத்துவ கட்டளையும், பலிபீடம் பரிசுத்தப்படுத்தலும். பலி பீடத்தை பரிசுத்தம் பண்ணும்படியாக அதை அபிஷேக தைலத்தால் அபிஷேகம் பண்ண வேண்டும்

ஆசாரியர்கள் அர்ப்பணமாகக் கைக்கொள்ள வேண்டிய 10 கட்டளைகள் இங்கு அடங்கி இருக்கின்றன.

(1) பலி மிருகங்களையும், சமைத்து ஆயத்தமாக்கப்பட்டவைகளையும் தேவனுடைய சந்நிதானத்திற்கு கொண்டு வர வேண்டும் (வச. 1-3).

(2) ஆரோனையும் அவனுடைய குமாரர்களையும் ஆசரிப்புக் கூடாரத்தின் வாசலுக்கு முன் கொண்டுவந்து அவர்களைத் தண்ணீரினால் கழுவ வேண்டும்

(3) பிரதான ஆசாரியனை பரிசுத்த வஸ்திரங்களினால் அலங்கரிக்க வேண்டும் (வச. 5,6)

(4) பிரதான ஆசாரியனை தைலத்தால் அபிஷேகம் பண்ண வேண்டும் (வச 7).

(5) ஆசாரியர்களுக்கு வஸ்திரம் உடுத்த வேண்டும் (வச 8,9)

(6) ஆசாரியனை பரிசுத்தப்படுத்தும்படி, பலியிட்டு பலியின் இரத்தத்தினாலும், அபிஷேக தைலத்தினாலும் பிரதிஷ்டை பண்ண வேண்டும் (வச. 10-21)

(7) போஜனபலி, அசைவாட்டும் பலி இவைகளை பலி பீடத்தின்மேல் செலுத்த வேண்டும்.

(8) ஆசாரியனுடைய பிரதிஷ்டை பலியை பரிசுத்த ஸ்தலத்தில் வேக வைக்க வேண்டும்

(9) ஆசாரியர்கள் அவர்களுடைய பங்கை ஆசரிப்புக் கூடாரத்திலேயே புசிக்க வேண்டும் விடியற்காலமட்டும் மீதியாய் வைக்கக்கூடாது. மீதியாயிருப்பவைகளை அக்கினியினால் சுட்டெரித்துவிட வேண்டும். (வச 35)

(10) ஆசாரியர்களையும் பலிபீடத்தையும் 7 நாட்கள் பிரதிஷ்டை செய்ய வேண்டும் ஆசாரியர்களும் பலிபீடமும் மகா பரிசுத்தமாயிருக்கும்.

அது முதற்கொண்டு ஒவ்வொரு நாளும் தேவனுக்கு ஆராதனை செய்ய வேண்டும்.

யாத் 29:43-46:- கடவுளுடைய மகிமையும் அவருடைய பிரசன்னமும் அவருடைய ஜனங்களுக்கு வாக்களிக்கப்படுகிறது.

1. அங்கே நான் உன்னை சந்தித்து உன்னோடே பேசுவேன் (வச. 42,43)
2. ஆசரிப்புக்கூடாரத்தையும் பலிபீடத்தையும் பரிசுத்தமாக்குவேன்
3. ஆரோனையும் அவனுடைய குமாரரையும் பரிசுத்தமாக்குவேன்
4. நான் உங்கள் மத்தியிலே (இஸ்ரவேல் மத்தியிலே) வாசம் பண்ணுவேன் (வச 45).
5. நான் அவர்கள் தேவன் (வச 46)

(தொடரும்)

"மலையிலே உனக்குக் காண்பிக்கப் பட்டபடியே அதைப் பண்ணக் கடவீர்கள்" (யாத் 27:8)

(தொடர்ச்சி)

# மோட்ச வழி

## (குரு- சிஷ்ய உரையாடல்)

**குரு :- 2 தேவன் பேரில் நன்றியுள்ளவனாயிருந்து அவரை ஸ்துதித்து அவருக்குச் செலுத்தவேண்டிய ஆராதனை, கன மகிமைகளைச் செலுத்த வேண்டும்.**

தேவன் நமக்கு எத்தனையோ விதமான நன்மைகளைச் செய்கிறார். தினந்தோறும் நாம் தேவனிடத்திலிருந்து ஏராளமான நன்மைகளைப் பெற்று அநுபவிக்கிறோம். மேலும் நாம் விரும்பிக் கேட்டு அநேக நன்மைகளைத் தேவனிடத்திலிருந்து பெற்றுக் கொள்கிறோம். இவைகளுக்கு நாம் சரியாக நன்றி செலுத்தவேண்டும். அநேகர் அநேக நாட்களாக வாரங்களாக, வருஷங்களாக வருந்திக் கேட்டு தேவனிடத்திலிருந்து அநேக ஆசீர்வாதங்களைப் பெற்றுக்கொள்வார்கள். ஆனால் அதற்குத் தக்கபடி நன்றியுள்ளவர்களாயிருக்க மாட்டார்கள். அந்த அளவுக்கு நன்றி செலுத்தமாட்டார்கள். இது மனிதனிடத்தில் காணப்படுகிற பெருங்குறையாகும். சிலர் பொருத்தனையும் செய்திருப்பார்கள். அதை நிறைவேற்றாமல் இருப்பார்கள் அது பாவமாகும். கண்டிப்பாக நிறைவேற்றியே தீரவேண்டும்.

அடுத்தபடி மனிதன் தேவனை ஸ்துதித்துப் போற்றி மகிமைப்படுத்த வேண்டும். சதா தேவனை போற்றி ஸ்துதிக்கும்படிக்கு மனிதன் சிருஷ்டிக்கப்பட்டிருக்கிறான் (ஏசா 43:7). ஒரு விசுவாசி எல்லாவற்றிற்காகவும் எப்பொழுதும் இறைவனுக்கு நன்றி செலுத்துபவனும், அவரை ஆராதித்து அவருக்குக் காணிக்கை செலுத்தி அவரை மகிமைப்படுத்தவும் வேண்டும். அநேகர் இக்காரியங்களில் குறைவுபடுகிறார்கள். அவருக்குரிய காணிக்கையை அவருக்குச் செலுத்துவதில்லை, அவருக்கு குறித்த வேளையில் ஸ்துதி பலி ஆராதனைகளை செலுத்தவில்லை. அவருடைய வார்த்தைகளை உதாசீனப்படுத்திவிட்டு தங்கள் விருப்பப்படியே ஜீவியத்திலும் ஜெபத்திலேயும் நடந்து கொள்கிறார்கள். மனிதன் எப்போதும் தேவனுக்கு நன்றி செலுத்தி அவரை ஸ்துதித்துப் போற்ற வேண்டும். தேவனே! நீர் எனக்கு இதைச் செய்ததற்காக ஸ்தோத்திரம் என்று சொல்லுவது நன்றி செலுத்துதல். தேவனே! நீர் எனக்காக இருக்கிறீர் என்று ஸ்தோத்தரிப்பது அவரைப் போற்றி புகழ்வதாகும். இது கட்டாயமான அவசியம். அவரை, ஸ்துதித்துப் போற்றும்படிக்கே மனிதன் சிருஷ்டிக்கப்பட்டிருக்கிறான் (சங் 102:18, ஏசா 43:7; சங் 69:30,31).

**3. கர்த்தருக்குப் பயந்து பாவத்தை விட்டு விலகி தேவ கர்த்தருக்கு முன்பாகவும் மனுஷருக்கு முன்பாகவும் உண்மையுள்ளவனாய் நடந்து கொள்ள வேண்டும்.**

கர்த்தருக்குப் பயப்படுகிறதினால் மனிதர் பாவத்தைவிட்டு விலகுவார்கள். கர்த்தருக்குப் பயப்படுகிற பயம் சுத்தமும், என்றென்றைக்கும் நிலைக்கிறதுமாய் இருக்கிறது. ஒரு கிறிஸ்தவன் கர்த்தர் வெறுக்கிற காரியங்களைத் தானும் வெறுப்பான். இறைவனை அறிந்து அவருக்குப் பயப்படுகிறதினால் மாத்திரம் நாம் பாவத்தைவிட்டு விலகுவோம், பாவம் செய்யாதிருப்போம்.

நாம் தேவனுக்குப் பயந்து நடுங்கவேண்டும். தேவ பயம் மனிதனுடைய இருதயத்தில் இல்லாததினால் தான் சிலர் துணிகரமான பாவங்களைச் செய்துவிட்டு தேவ பக்தியுள்ளவர்கள் போல் நடித்துக்கொண்டிருக்கிறார்கள். கர்த்தர் பாவத்தை வெறுக்கிறார். தேவனுக்கு விரோதமாய் இவ்வளவு பெரிய பொல்லாப்பு செய்வது எப்படி என்று அன்று பக்தர்கள் ஓடித் தப்பினார்கள். நாமும் அப்படியே செய்வோமாக. நீர் என்னைக் காண்கிற தேவன் என்று சொல்லி எப்பொழுதும் தேவபயத்தோடு நம்முடைய வாழ்வில் நடந்து கொள்வோமாக. ஒரு கிறிஸ்தவன் தேவனுடைய பார்வையிலும், மனிதனுடைய பார்வையிலும் உண்மையுள்ளவனாயிருக்க வேண்டும். கிறிஸ்தவனை எங்கும் எப்பொழுதும் எல்லா காரியங்களிலும் நம்பலாம். நாம் அப்படி ஜீவித்து தேவனைப் பிரியப்படுத்துவோமாக.

(தொடரும்)

(தொடர்ச்சி)

மாதர் பகுதி

# பிரிஸ்கில்லாள் (அப் 18:2)

புதிய ஏற்பாட்டில் காணப்படுகிற வேதாகம ஸ்திரீகளில் பிரிஸ்கில்லாள் முக்கிய பங்கு வகிக்கிறாள். பொந்து தேசத்தானாகிய ஆக்கில்லா என்னப்பட்ட ஒரு யூதனுடைய மனைவியாகும் பிரிஸ்கில்லாள். இவர்கள் அப். பவுலினுடைய ஊழியத்தில் பங்குபெற்று சுவிசேஷ ஊழியத்தில் அப்போஸ்தலனுக்கு மிகவும் உறுதுணையாக இருந்தார்கள். அப். பவுல் கொரிந்துவுக்கு ஊழியத்திற்கு சென்ற பொழுது முதன் முறையாக இவர்களைக் கண்டு இவர்களோடு தங்கினதாகப் பார்க்கிறோம். அப்பொழுது இவர்கள் கிறிஸ்தவர்களானார்கள். அது முதற்கொண்டு இவர்கள் அப்போஸ்தலனுக்கு உற்ற சிநேகிதர்களாக இருந்தார்கள் (அப் 18:1-3 காலம் கி.பி. 52). அப். பவுல் ஒரு வருஷம் ஆறு மாதம் கொரிந்துவில் தங்கியிருந்தார். பின்பு அப்போஸ்தலன் அங்கிருந்து எபேசுவுக்குப் போனபொழுது இவர்களும் அங்கேயிருந்து அப். பவுலோடுகூட எபேசுவுக்குப் போனார்கள். அங்கே தங்கியிருந்து அப்பொல்லோ என்னும் வேதசாஸ்திரியை சந்தித்து அவருக்கு உபதேசம் செய்தார்கள் (அப் 18:18-28). அப். பவுல் பிரிஸ்கில்லாளையும், ஆக்கில்லாவையும் தன் உடன் வேலையாட்கள் என்று குறிப்பிட்டிருக்கிறார் (ரோம 16:3) கிலவுதிய ராயன் காலத்தில் யூதர்களெல்லாரும் ரோமபுரியை விட்டு வெளியேறும்படி கட்டளையுண்டாயிற்று. ஆனாலும் மறுபடியும் ஆக்கில்லாவும், பிரிஸ்கில்லாளும் ரோமபுரியிலுள்ள தங்கள் வீட்டில் போய் குடியிருந்ததாகவும்; அவர்களுடைய வீட்டிலே சபை கூடி வந்ததாகவும் அறிகிறோம் (ரோம 16:3-5). ஆதிசபை பக்தர்களுடைய வீட்டிலே கூடி வந்ததாக தெரிகிறது (கொலோ 4:15, பிலேமோன் 1,2; I கொரி 16:19). அப். பவுல் ரோமபுரி சபையாரை வாழ்த்தும்பொழுது இந்த குடும்பத்தையும் வாழ்த்துகிறார் (ரோம 16:3,19). இதில் நாம் முக்கியமாய் கவனிக்க வேண்டிய குறிப்பு ஒன்று உண்டு.

பிரிஸ்கில்லாளுடைய பெயர் ஆக்கில்லாவுடைய பெயருக்கு முந்திவருகிறது (அப் 18:18; ரோம 16:3; II தீமோ 4:19). இதன் மூலமாக பரிசுத்த ஆவியானவர் போதிப்பது என்னவென்றால் பிரிஸ்கில்லாள் கர்த்தருடைய ஜீவியத்திலும் ஊழியத்திலும் தன் கணவனாகிய ஆக்கில்லாவுக்கு முன்னே இருந்தாள் என்று தெரிகிறது. இவர்களைப்பற்றி அப்போஸ்தலர் புகழ்ந்து எழுதும்போது: அப்போஸ்தலனுடைய உயிரை பாதுகாக்கும்படி இவர்கள் தங்கள் கழுத்தை கொடுத்தவர்கள் என்று குறிப்பிட்டுள்ளார். புறஜாதியாரிலுண்டான சபைகள் எல்லாம் இவர்களை மிக மேன்மையாக எண்ணியிருந்தார்கள் என்று அறிகிறோம் (ரோம 16:3,4). அப்படியே ஸ்திரீகளும் பிரிஸ்கில்லாளைப்போல கிறிஸ்தவ ஜீவியத்திலும், கர்த்தருடைய ஊழியத்திலேயும் அப்போஸ்தலர்கள் ஊழியர்களுக்கு உதவியாயிருந்து ஊழியத்தை தாங்குவதின் மூலம் பிரிஸ்கில்லாளைப் போல் தேவனாலும், பரிசுத்தவான்களாலும், திருச்சபையாரெல்லாராலும், புகழப்படுவார்கள். நீங்களும் அப்படியே செய்யுங்கள்.

> "அந்தப்படியே ஸ்திரீகளும் நல்லொழுக்கமுள்ளவர்களும், அவதூறு பண்ணாதவர்களும், தெளிந்த புத்தியுள்ளவர்களும், எல்லாவற்றிலும் உண்மையுள்ளவர்களுமாயிருக்க வேண்டும்."
>
> I தீமோ 3:11

# வேசித்தனமும் விக்கிரக ஆராதனையும்

ஒருவன் பலமுள்ளவனாய் இருக்க வேண்டுமானால் அவன் ஒழுங்காய் போஜனம் பண்ண வேண்டும். நாம் பலம் கொள்ள உணவு அருந்த வேண்டும் (பிர 10:17). நாம் உணவு உட்கொள்ளத்தக்க வகையில் கர்த்தர் நாக்கிலே சுவையை வைத்திருக்கிறார். சுவை வைத்திருப்பதின் நோக்கம், நாம் சுவைத்து விரும்பி உணவருந்தி பலம் பெற்று ஜீவித்து கர்த்தரை சேவிக்கவே, நாம் பலம் பெறவே உணவருந்த வேண்டும். வெறும் சுவைக்காக உணவருந்துவோர் பெருந்தீனிக்காரர்களாகவும், சுவையான பதார்த்தங்களைத் தேடி அலைகிறவர்களாகவும், சாப்பிட்டு சாப்பிட்டு பெருத்துபோய் பலமில்லாமல் போய் சோம்பேறிகளாகி விடுகிறார்கள்.

நாம் பலம் கொள்ள ஒழுங்காய் உணவருந்தும்படியாய் அதில் ஒரு சுவை இருப்பதுபோல, மனித இனம் பலுகிப் பெருகும்படியாய், கணவனும் மனைவியும் கூடி வருவதில் ஒரு இன்பம் வைக்கப்பட்டிருக்கிறது (ஆதி 18: 12). அதற்கான எழுச்சிகளும் மனிதனுக்குள் இயற்கையாய் உள்ளது. தேவன் நியமித்தது கணவனும், மனைவியும் கூடி வந்து, இன்பம் அனுபவித்து பலுகிப் பெருகும்படியே. ஆனால் பாவியான மனிதர்கள் இந்த இன்பத்தையே முக்கியப்படுத்தி, தங்களுக்குண்டாகிற எழுச்சியை சரியான முறையில் கட்டுப்படுத்தி அனுபவிக்காமல் தாறுமாறாய் நடக்கிறார்கள்.

பாருங்கள் சுயபுணர்ச்சி, ஆண்புணர்ச்சி மிருகத்தோடே புணர்ச்சி, ஆணோடே ஆண், பெண்ணோடே பெண் இப்படி தகாத விதமாய் இயற்கைக்கு மாறாக அவலட்சணத்தைச் செய்து தகாத இன்பங்கொண்டு தேவனால் அருவருக்கப்படுகிறார்கள் மனிதர்கள் (I கொரி 6:9, 10).

அப்படியே தெய்வத்தை தொழுது கொள்ளும் மனப்பான்மை இயற்கையாகவே மனிதனுக்கு இருக்கிறது. படைத்தான் படைப்பெல்லாம் மனுவுக்காக; மனுவைப் படைத்தான் தன்னை வணங்க என்றபடி. தேவன் தமது மகிமைக்கென்று மனிதனை உருவாக்கியிருக்கிறார். மனிதன் தேவனைத் தொழுகையில் பரமானந்தம் அடைகிறான். பக்தர்களுக்கு ஆயிரம் நாளைப்பார்க்கிலும் இறைவனுடைய சபைக்குச் செல்லும் ஒரே நாள் நல்லதாக இருக்கிறது. ஆகாமியக் கூடாரங்களைப் பார்க்கிலும் தேவாலயத்தின் வாசற்படியில் காத்திருப்பது பெரிதாக இருக்கிறது (சங் 84:10).

தேவனை தொழுது கொள்வோர் ஆவியோடும், உண்மையோடும் தொழுது கொள்ள வேண்டும் (யோவா 4:23). ஆனால் அசுத்த மனிதனோ ஆவியாயிருக்கிற கர்த்தரை மனுஷசாயலாகவும், ஆண் உருவு பெண் உருவு, பறவைகள், மிருகங்கள் முதலான சாயலில் விக்கிரகங்களாக சமைத்து, மனைவியோடே சம்போகம் பண்ணுவதாக நினைத்துக்கொண்டு தகாத புணர்ச்சியில் ஈடுபடும் அயோக்கியனைப் போல், இறைவனை தொழுது கொள்வதுபோல் கற்பனை பண்ணிக்கொண்டு விக்கிரகாராதனை செய்கிறார்கள். இப்படி சுபாவத்திற்கு மாறாய் செய்யப்படும் வழிபாடுகளை வேசித்தனம் என்று கர்த்தர் சொல்கிறார்.

மனிதன் இறைவனோடு இசைந்து இன்பம் அடைய வேண்டும். இது தேவ நியமம். மாறாக விக்கிரகங்களோடே இசைந்து, இறை இன்பம் அடைய முற்படுவோன்; ஆவிக்குரிய ரீதியில் விபச்சாரம் பண்ணுகிறான். புருஷனைவிட்டு வேறு மனிதனோடு சேருகிற ஸ்திரீ புருஷனால் அருவருக்கப்பட்டு தள்ளப்படுவாள். அப்படியே கர்த்தரை ஆவியோடும் உண்மையோடும் தொழுது கொள்வதைவிட்டு, மனிதன் உருவாக்கின விக்கிரகங்களை வழிபடுவோனும் இறைவனால் அருவருக்கப்பட்டு, அவனுடைய இராஜ்ஜியத்தை விட்டு தள்ளப்படுவான்.

ஒரு குணசாலியான குடும்பப் பெண்ணிடம் எப்பேர்பட்ட மனிதன் வந்து நயங் காட்டினாலும்; அவள் அவனை சீ என்று

கடிந்து கொள்வாள். அவளுக்கு அது மிகவும் அருவருப்பாயிருக்கும். நம்முடைய சிருஷ்டி கர்த்தரே நமக்கு நாயகர் (Husband) (ஏசா 54:5). இவரோடே இணைந்து வாழ்ந்து ஆவியோடும் உண்மையோடும் அவரைத் தொழுது சேவிக்கிறவர்கள், விக்கிரகங்களை சீ, போ என்று அருவருப்பார்கள் (ஏசா 30:22).

ஒரு தேசத்தில் மழையில்லாமல் போய் தண்ணீருக்காய் மக்கள் அலைவதின் காரணம் விக்கிரக ஆராதனையே என வேதம் கூறுகிறது. மெய் பக்தர்கள் நிமித்தமோ மழை பெய்கிறது (ஏசா 30:23).

ஒரு குடும்பத்தின் பிள்ளைகள் ஒழுக்கம் கெட்டு காமவேட்டைக் கொண்டு, முறைகேடாய் நடந்து குடும்பப் பெயரைக் கெடுத்துப் போட காரணம் விக்கிர ஆராதனையே என்று வேதம் சொல்லுகிறது (ரோம 1:21-32).

தேவனைத் தொழுது கொள்ளும்போது, தேவபிரசன்னம் உண்டாகிறது. அதனால் அவரைத் தொழுகிறவன் பரிசுத்தமாகிறான். அசுத்த சக்தியை வழிபடுவோர் மேலும் அந்த ஆவி இறங்கி வந்து அவர்களை அசுத்தர்களாக்கி விடுகின்றன (I கொரி 10:20). பொருளாசையும் விக்கிரக ஆராதனைக்கு சமமே. இப்படி பொருளாசை உடையவர்கள், பொருளுக்காய் ஊழியம் செய்கிறவர்கள் குடும்பத்திலும் சீர்கேடுகள் நடக்கும். தேவ சித்தத்திற்கு மாறாய் செயல்பட்டு சுய சித்தம் செய்கிறவர்களும் விக்கிரக ஆராதனை செய்கிறவர்களாவார்கள். இவர்கள் குடும்பத்திலும் தகாத நடபடிகள் காணப்படும்.

இறைவனைத் தொழுது கொள்ள வேண்டிய நியமத்தின்படி தொழுது கொள்ளுங்கள். உங்கள் ஆத்துமா செழிக்கும். உங்கள் வாழ்வு வளம் பெறும். பரிசுத்த ஜாதியாய் இருப்பீர்கள். விக்கிரக ஆராதனைக்கும் வேசித்தனத்திற்கும் விலகி ஓடுங்கள்.

---

"நீ உன் தேவனுடைய வேதத்தை மறந்தாய் ஆகையால் நானும் உன் பிள்ளைகளை மறந்து விடுவேன்" —ஓசி 4:6

---

(மார்ச் மாத தொடர்ச்சி)

# புதிய எருசலேம் சபையின் நடபடிகளில் சில

...துக்கம் தாளாமல் கையிலிருந்த கடிதத்தை மேஜையின் மீது வைத்துவிட்டு சிறிது நேரம் கண்ணீரோடு ஜெபித்தேன். ஆ! கர்த்தாவே நீர் இந்த சகோதரனைக் குறித்து மேன்மையான காரியங்களை வெளிப்படுத்தினீரே. அவரிடமிருந்து நேர்மாறான செய்தி வந்திருக்கிறதே என்று இறைவனிடம் வேண்டினேன். கர்த்தருடைய ஆவியானவர் பேசினார் 'மகனே! கலங்காதே. அவனுடைய சரீர வேதனையின் மிகுதியினால் இவ்வாறு எழுதியுள்ளான் உனக்கு நான் வெளிப்படுத்திய காரியங்களை நீ அவனுக்கு எழுது அதிசீக்கிரமாய் நான் அவனைக் குணமாக்குவேன். சீக்கிரமாய் அவனிடமிருந்து நல்ல செய்திகள் வரும் என்று.

உடனே என்னுடைய மனக்கலக்கங்களை மாற்றிக்கொண்டு கர்த்தர் வெளிப்படுத்திய செய்தியை அவருக்கு எழுதி அனுப்பினேன். சில நாட்களுக்குப் பின் சகோதரர் ஜாக் ராஜையாவிடமிருந்து மீண்டும் கடிதம் வந்தது. "ஐயா! தேவன் எனக்கு அற்புதமான சுகம் தந்தார். என்னுடைய சரீரத்திலுள்ள ரணங்களெல்லாம் மாறி நல்ல பெலனடைந்து மீண்டும் நான் வியாபாரத்தைக் கவனித்து வருகிறேன். நான் நல்ல சுகமடைந்துள்ளதைக்கண்ட என் கடை முதலாளி மீண்டும் நீ கடையில் வந்து தங்கிக் கொள்ளலாமே என்று கேட்டார்; நான் அதற்கு சம்மதிக்கவில்லை. நான் தனிமையாய் வீடு எடுத்துத் தங்க வேண்டும்; நீண்ட நேரம் ஜெபிக்க வேண்டுமென்று கர்த்தர் எனக்குக் கொடுத்த கட்டளையின்படி இப்பொழுது கிடைக்கும் சமயங்களை ஜெபத்தில் கழித்து

வருகிறோம். இங்குள்ள சில சகோதரர்களும் என்னோடு ஜெபித்து வருகிறார்கள். மீண்டும் உங்களுடைய வருகையை நாங்கள் எதிர்பார்க்கிறோம் எங்களுக்காக வேண்டிக் கொள்ளுங்கள் என்று எழுதியிருந்தார்.

சில நாட்களுக்குப் பின் தேவ உத்தரவு பெற்று நாங்கள் அம்மை நாயக்கனூர் (கொடை ரோடு) சென்றோம். அங்கே சகோதரரை சந்தித்து அவருக்காக ஜெபித்தோம். கர்த்தர் இவரைத் தம்முடைய பரிசுத்த ஆவியினால் அபிஷேகித்தார். அவரை மாத்திரமல்ல அவர் மூலமாய் இயேசுகிறிஸ்துவிடம் வந்திருந்த சில சகோதரர்களையும் தேவன் அபிஷேகித்தார். கர்த்தருக்கே மகிமையுண்டாவதாக!

சகோதரர் ஐசக் ஞானையாவைக் கர்த்தர் தம்முடைய சேவையைச் செய்வதற்காக அழைத்திருந்தபடியால் மருத்துவர்களால் தீர்க்கமுடியாத கொடிய வியாதியினின்று இவர் விடுதலை பெற்றுக் கொண்டபடியாலும் போகிற வருகிற எல்லா இடங்களிலும் தனக்குப் பூரணமான பரம வைத்தியரான கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் அன்பை எடுத்துக்கூறி வந்தார்.

அம்மை நாயக்கனூருக்கு அருகே பள்ளப்பட்டி என்றொரு ஊர் இருக்கிறது. அங்கே வேலை பார்க்கும் வாசகர் இம்மானுவேல் என்பவரும் அவரது குடும்பமும் இருந்தார்கள். இவர்களுக்குப் புதிய எருசலேம் சபையின் உபதேசங்களையும் அங்கே கர்த்தருடைய ஆராதனை செய்யும் முறைகளையும் எடுத்துக் கூறியிருக்கிறார். அந்த ஆசிரியர் குடும்பம் C.P.M. சபையைச் சேர்ந்தவர்கள். இவர்களும் மேலான உபதேசங்களை அறிந்து கொள்ள விரும்பி எங்களுக்கு செய்தி அனுப்பினார்கள். நாங்கள் பள்ளப்பட்டிக்குப் போய் மேற்படி ஆசிரியர் குடும்பத்தை சந்தித்து மனிதன் பூரண மீட்படையும் வழிமுறைகளைக் கர்த்தருடைய வேதத்திலிருந்து எடுத்துக் காண்பித்த பொழுது அவர்களும் இந்த மேலான உபதேசங்களை ஏற்றுக்கொள்ள முன்வந்ததோடு இந்த பள்ளப்பட்டியில் ஓர் கன்வென்ஷன் நடத்த வேண்டும். அதற்கான செலவுகளை நாங்கள் ஏற்றுக் கொள்ளுகிறோம். இங்கே எங்களுக்கு ஒரு சபையை உருவாக்கித் தரவேண்டும் என்று கேட்டுக் கொண்டார்கள்.

அப்படியே கர்த்தரிடம் ஆலோசனைப் பெற்று பம்பாய்க்குத் தலைமை மேய்ப்பருக்குத் தெரிவித்து; அவர்களுடைய அனுமதியோடு பள்ளப்பட்டியில் ஒரு கன்வென்ஷன் கூட்டம் ஒழுங்கு செய்யப்பட்டது. தலைமை மேய்ப்பர் கடந்து வந்து தேவ செய்தியைக் கொடுத்தார்கள். கொடிய துன்மார்க்கர்கள் நிறைந்த ஊர். கர்த்தருடைய வார்த்தை கன்மலையை நொறுக்கும் சம்மட்டியைப் போல் ஆத்துமாக்களின் உள்ளங்களை நொறுக்கினது. ஏராளமான மக்கள் கர்த்தரிடமாய் மனந்திரும்பினார்கள். மறுநாள் நடந்த ஞானஸ்நான கூட்டத்தில் 12 பேர்கள் ஞானஸ்நானம் பெற்று கர்த்தரோடு உடன்படிக்கை செய்து கொண்டார்கள். அன்றைய தினமே அவ்வூரில் புதிய எருசலேம் சபையின் பரிசுத்த ஆராதனை ஆரம்பமானது. ஆசிரியர் வாசகர் இம்மானுவேல் அவர்கள் தங்கியிருந்த வீட்டை கர்த்தருடைய ஆராதனை நடத்துவதற்காகத் தந்துவிட்டு அவர்கள் வேறே வீட்டில் குடியேறி விட்டார்கள்.

இந்தப் பள்ளப்பட்டியில் நற்செய்தி கேட்ட மக்களில் சிலர் அருகேயிருக்கும் எங்கள் ஊரிலும் ஒருநாள் நற்செய்தி அறிவிக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்கள். அப்படி மறுநாளிலே சாண்டலர்புரம் என்ற ஊரில் கர்த்தருடைய நற்செய்தி அறிவிக்கப்பட்டது. சின்ன கிராமந்தான். மக்கள் மிகவும் வாஞ்சையோடு கர்த்தருடைய வசனத்தைக் கேட்டார்கள். அன்று லீதியாளின் இருதயத்தைத் தேவன் திறந்தது போல் இந்தக்கூட்டத்திலும் அநேகருடைய இருதயங்களை கர்த்தர் திறந்தார். இவர்களில் 8 பேர்கள் மறுநாளிலே பாவமன்னிப்புக்கென்று ஞானஸ்நானம் பெற்று திருச்சபையுடன் சேர்த்துக் கொள்ளப்பட்டார்கள் (அப் 2:37, 39) இவ்விதமாய் மதுரை மாவட்டத்

தில் பள்ளப்பட்டி என்ற ஊரில் புதிய எருசலேம் சபை உருவானது. கர்த்தர் பெரிய காரியங்களைச் செய்து வந்தார். பின்பு சகோதரர் ஜேக் ஞானையாவை கர்த்தர் தம்முடைய சேவைக்காக அழைத்து அதிகாரப்படுத்தி இந்தப் பள்ளப்பட்டி சபைக்கு ஓர் ஊழியக்காரனாக தேவன் ஏற்படுத்தினார்; அவருக்கே மகிமையுண்டாவதாக.

(தொடரும்)

Pastor S. SUNDARRAJ
VALLIOOR.

# சிறுவர் பகுதி

பிரேம் நகர் என்ற கிராமத்தில் இருக்கும் சபையின் விசுவாசக் குடும்பங்களுள் தாவீதின் குடும்பம் ஏழ்மையான ஒரு குடும்பம். ஆனால் தாவீதின் குடும்பத்தினர் மிகவும் தேவபக்தியுள்ளவர்களும் ஜெப ஜீவியமும் உள்ள குடும்பம். தேவனாகிய கர்த்தர் அவர்களை வழி நடத்துவதைக் குறித்து அவர்கள் அடிக்கடி பேசிக் கொள்வதும்; தேவனின் வழி நடத்துதலுக்காக நன்றிக் கடன் ஏறெடுப்பதும் அவர்களின் கடமையாக இருந்தது. இவர்கள் மகன் ஏகநாதனும் ஒரு ஜெபவீரனாக, கர்த்தரையே எல்லாவற்றிலும் முதன்மையாகக் கொண்டு ஜீவித்து வந்தான்.

அதே சபையில் இருந்த சாலுவின் குடும்பத்தினர் கொஞ்சம் வசதிபடைத்தவர்கள், மாத வருமானம் பெற்றுக் கொண்டிருந்தனர். ஒரு பகட்டான கிறிஸ்தவ ஜீவியம் ஜீவித்து வந்தனர். இவர்களது மகன் செபஸ்தியான். இவனும் அவனுடைய பெற்றோரைப் போலவே பேருக்கு கிறிஸ்தவனாக ஜீவித்து வந்தான்.

இந்நாட்களில் அவர்களது சபையின் கன்வென்ஷன் ஒன்று தூரத்திலுள்ள ஒரு பட்டணத்தில் நடக்க இருக்கின்றது என ஒரு மாதத்திற்கு முன் அறிவிப்பு வெளியானது. அது முதற் கொண்டு யாவரும் கன்வென்ஷன் செல்வதற்கான ஆயத்தங்கள் செய்ய ஆரம்பித்தனர். தாவீதின் குடும்பத்தினர் ஏழ்மையானவர்கள். ஆனபடியால் அறிவிப்பு வந்த நாட்கள் முதற்கொண்டு ஜெபிக்க ஆரம்பித்தனர். சிறுவர்கள் ஏகநாதனும் செபஸ்டியானும் கன்வென்ஷனைக் குறித்துப் பேசிக்கொண்டார்கள்.

அப்பொழுது செபஸ்டியான் எங்க வீட்டில் பணவசதி இருக்கின்றபடியால் நானும் எனது பெற்றோரும் கட்டாயம் கன்வென்ஷனுக்குப் போவோம் என்று பெருமிதத்துடன் கூறினான். ஆனால் ஏகநாதனோ எங்களிடத்தில் பணம் இல்லாதபடியால் நாங்கள் தினமும் எங்களது ஜெபவேளையில காலை, மாலை தேவனிடத்தில் விண்ணப்பித்துக் கொண்டிருக்கிறோம். கர்த்தர் எங்களுக்கு எப்படியும் ஒத்தாசை செய்வார் என நம்புகின்றோம் எனது பெற்றோரும். கர்த்தர் நமக்கு எப்படியும் ஒத்தாசை செய்வார் என்று கூறுகின்றார்கள். எனவே நானும் கர்த்தரிடத்தில் விண்ணப்பித்துக் கொண்டிருக்கின்றேன் என்றான்.

செபஸ்டியான், ஏகநாதனிடத்தில் எங்கள் அப்பா, நாங்கள் கன்வென்ஷன் போவதற்கான ஏற்பாடுகள் செய்துவிட்டார் எனவே நாங்கள் கட்டாயம் போவோம் என தெரிவித்தான்.

நாட்கள் நெருங்கிக் கொண்டிருந்தன. இன்னும் ஒரு நாட்கள்தான் இருந்தன. எனவே தாவீதின் குடும்பத்தினர் கன்வென்ஷனுக்காக உபவாசித்து ஜெபித்தனர். கர்த்தாவே கன்வென்ஷனுக்காக விண்ணப்பிக்கின்றோம் கன்வென்ஷனுக்குவரவாஞ்சிக்கிற யாவரையும் கன்வென்ஷனுக்கு கொண்டு வந்து சேரும் என விண்ணப்பித்தனர். அது முதற்கொண்டு அவர்களுக்கு அசைக்க முடியாத நம்பிக்கை பிறந்தது.

நாட்கள் நெருங்கிக் கொண்டிருந்தபடியால் யாவரும் உற்சாகமாகக் காணப்பட்டனர். ஒருநாள் மாலையில் விளையாடுவதற்காக மற்ற பிள்ளைகளுடன் செபஸ்டியான் வெளியே சென்றிருந்தான். விளையாடிக் கொண்டிருக்கும் போது கால் தடு

மாடி கீழே விழப்போனபோது, தனது கையை கீழே ஊன்றினான், கை சிறிது பிசகி எலும்பில் முறிவு ஏற்பட்டுவிட்டது. அவனை அவசரமாக ஆஸ்பத்திரியில் சேர்த்தனர். டாக்டர்களும் சிறிது நாட்கள் கட்டாயமாக ஓய்வு எடுக்க வேண்டும் என்று கூறிவிட்டார்.

எனவே தனது மகனின் நலனைக் கருதி செபஸ்தியானின் பெற்றோர்கள் கன்வென்ஷனில் கலந்து கொள்ள முடியாத சூழ்நிலைக்கு தள்ளப்பட்டனர். தாவீது குடும்பத்தின் சின் வாஞ்சையை அறிந்த அவர்கள் சபைபோதகர் அவர்களுக்கு பண உதவியளித்தார். தாவீது அவர்கள் குடும்பத்தினர் போதகர் அளித்த பண உதவியை அன்பளிப்பைப் பெற்றுக் கொண்டு கன்வென்ஷனில் கலந்து கொண்டு தேவ ஆசீர்வாதம் பெற்றுத் திரும்பினர். போதகர் செய்த உதவிக்காக கர்த்தரை ஸ்தோத்தரித்தனர். செபஸ்டியான் உடல் நிலையும் தேறி ஆஸ்பத்திரியில் இருந்து வீடு திரும்பினான்.

பிள்ளைகளே, ஏசுதாசனின் குடும்பத்தினர் கன்வென்ஷனில் பங்கு கொண்ட விபரத்தை அறிந்தீர்களே, ஏசுதாசனும், அவனது பெற்றோர்களும் கர்த்தரை நம்பியிருந்தனர். கர்த்தர் அவர்களை அவர்களின் ஜெபத்தைக் கேட்டு அதிசயமாக வழி நடத்தினார்.

ஆனால் செபஸ்டியானின் குடும்பத்தினர் தங்களிடத்தில் இருந்த பணத்தையே நம்பியிருந்த படியால் அவர்கள் நினைத்த காரியம் அவர்களுக்கு கைகூடாமற் போயிற்று.

நாமும் நமது பலத்தையோ பணத்தையோ நம்பி ஜீவித்தோமானால் அதினால் நமக்கு லாபமில்லை, ஆனால் எல்லாவற்றிற்காகவும் தேவனை (கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை) நம்பி ஜெபிக்க வேண்டும், ஒன்றும் குறைவுபடாது, நாம் கர்த்தரையே நம்புவோமாக.

“விசுவாசமில்லாமல் தேவனுக்குப் பிரியமாயிருப்பது கூடாத காரியம்; ஏனென்றால், தேவனிடத்தில் சேருகிறவன் அவர் உண்டென்றும், அவர் தம்மைத் தேடுகிறவர்களுக்குப் பலன் அளிக்கிறவரென்றும் விசுவாசிக்க வேண்டும். (எபி 11:6)

# புதிய எருசலேம் செய்தி

## PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம்-54-55 ★ JUNE-JULY 1988



"புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள் ... விழித்திருங்கள்...உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள் ."

மாற்கு 13 : 35-37

EDITOR : CHIEF PASTOR N. LAZAR

BOMBAY. INDIA.

# ஆசிரியர் உரை

கிறிஸ்துவுக்குள் அன்பான சகோதர, சகோதரிகளுக்கு இயேசுவின் நாமத்தில் வாழ்த்துக்கள் பல. 10. 5. 1988 அன்று நானும், ஊழியர்களும், ஊழியர்களின் குடும்பங்களும், தூத்துக்குடியில் நடைபெறவிருந்த ஊழியர் மாநாடு, கன்வென்ஷனுக்காக புறப்பட்டோம். ஒரு நாள் சென்னையில் தங்கிவிட்டு 13-ந்தேதி தூத்துக்குடியில் போய் இறங்கினோம். இறங்கின அன்றுதானே ஊழியர் மாநாடு நடப்பதற்காக ஆயத்தமாக்கப் பட்டிருந்த இடத்தையும், கன்வென்ஷன் நடப்பதற்காக ஏற்பாடு செய்யப் பட்டிருந்த தருவை மைதானத்தையும், சபை மக்கள் தங்கும்படி ஏற்பாடு செய்திருந்த C. M. S. School- ஐயும் சென்று பார்வையிட தேவன் அனுக்கிரகம் செய்தார். C. M. S. School - ஐ சுற்றிப்பார்த்து ஜெபித்துவிட்டு கடந்து வரும்போது அங்கே இருந்த காவல்காரர்கள் மூலமாய், தூத்துக்குடியில் உள்ள பெந்தெகொஸ்து சபைகள் எல்லாம் கூடி முழு இரவு ஜெபம் செய்ய ஆயத்தமாகியிருக்கிறார்கள் என்று சொல்லக் கேள்விப்பட்டோம். அவர்களுக்கு முன்னதாகவே அந்த இடத்தில் நாங்கள் ஜெபம் பண்ணிவிட்டு கடந்து வந்துவிட்டிருந்தோம். 27, 28, 29 மே 1988-ல் தூத்துக்குடியில் நடைபெறப்போகிற புதிய எருசலேம் கன்வென்ஷனுக்கு விரோதமாக இவர்கள் கூடிப்பேசி ஜெபித்து 'சகல பெந்தெகொஸ்தே ஐக்கியம்' என்ற ஒரு இயக்கத்தை உருவாக்கி, புதிய எருசலேம் கன்வென்ஷன் நடக்கும் அதே நாளில் ஆங்காங்கு கன்வென்ஷன் நடத்தி, புதிய எருசலேம் சபை நடத்தும் கன்வென்ஷனுக்கு மக்களைப் போகவிடாமல் தடுக்க முடிவு செய்ததாகக் கேள்விப்பட்டோம். ஏற்கெனவே, மேற்படி நாட்களில் தூத்துக்குடியில் நடக்கவிருக்கும் கன்வென்ஷனுக்காக சுவரொட்டிகள் (wall posters) மூலம் விளம்பரங்கள் ஒரு மாதத்திற்கு முன்னதாகவே தூத்துக்குடியிலும், சுற்றுப்புறங்களிலும், செய்யப்பட்டிருந்தன. அப்படியிருந்தும், இந்த வேதக்கார கிறிஸ்தவர்கள் எதிர்வேலைகள் செய்ய ஆரம்பித்தது எங்களுக்கு ஆச்சரியமாக இருந்தது. என்னே, இவர்களது கிறிஸ்தவ பண்பாடு. வேகமாக, சகல பெந்தெகொஸ்தே ஐக்கிய கன்வென்ஷன்களின் வால்போஸ்டர்கள் அச்சிடப்பட்டு புதிய எருசலேம் சபை கன்வென்ஷன் வால்போஸ்டர்கள் மேல் சில இடங்களில் ஒட்டப்பட்டன. சில இடங்களில் புதிய எருசலேம் சபையின் banner கள் அறுக்கப்பட்டன. பழைய செய்தித்தாள்களை (News paper) அளவாக வெட்டி புதிய எருசலேம் சபை என்ற எழுத்துக்களின் மேல் ஒட்டப்பட்டன. சபை மக்களில் சிலர் வந்து செய்திகளைச் சொன்னார்கள், ஆத்திரப்பட்டார்கள். நான் சொன்னது இது தான்: அவர்கள் அவர்களது தகப்பனின் கிரியைச் செய்கிறார்கள். நாம் நமது பிதாவின் கிரியைச் செய்வோம் என்பதே. ஊழியர் மாநாடு வெற்றிகரமாக 10 நாட்கள் நடந்து முடிந்தது. 20 ஊழியர்கள் புதிதாக ஊழியப் பயிற்சிக்காக சேர்த்துக் கொள்ளப் பட்டனர். கர்த்தருடைய ஆசீ

வரதம் அபரிமிதமாய் ஊழியர் மாநாட்டில் விளங்கிற்று. அதிகாரங்கள் பகிர்ந்து கொடுக்கப் பட்டன. வரங்களினால் ஊழியர்கள் பெலப்படுத்தப் பட்டனர். CSI-ல் கன்வென்ஷன், IPC-ல் கன்வென்ஷன், அசெம்பிளி ஆப்காட் (Assembly of god) ல் கன்வென்ஷன், புதிய எருசலேம் சபைக் கன்வென்ஷனுக்கு ஆயத்தமாக்கப் பட்டிருந்த தருவை மைதானத்துக்கருகேயுள்ள அடுத்த காம்பவுண்டில் கன்வென்ஷன். இவர்களுடைய நினைப்பெல்லாம் புதிய எருசலேம் சபைக்கு ஆட்களைப் போக விடாது புதிய எருசலேமை அணைத்துப் போடுவது என்பதே. சூரியனைக் கையைக் கொண்டு மறைத்தது போல இவர்களுடைய செயல் ஆயிற்று. என்னே, அருமையான ஆண்டவர் கர்த்தராகிய இயேசு கிறிஸ்து! இயேசு கிறிஸ்துவின் மகிமையின் பிரசன்னம்! கன்வென்ஷன் ஆரம்பம் முதல் முடிவு மட்டும் ஆயிரமாயிரமான மக்கள் வந்து கூடினர். தேவனுடைய மகிமை இறங்கிற்று. தேவனுடைய சத்தியம் நிலை நாட்டப்பட்டது. நூற்றுக் கணக்கான மக்கள் இயேசுகிறிஸ்துவை சொந்த இரட்சகராக (Personal saviour) ஏற்றுக் கொண்டார்கள். அநேகரில் இருந்த அசுத்த ஆவிகள் நீங்கிப் போயின. நூற்றுக்கணக்கான தீரா வியாதியஸ்தர்கள் சுகம் பெற்று பெருமகிழ்ச்சியடைந்தார்கள். ஆவிக்குரிய ஜீவியத்தில் விழுந்திருந்த அநேகர் எழுந்திருந்தார்கள். தெளிவில்லாதிருந்த கிறிஸ்தவர்களும் மற்றவர்களும் தெளிவடைந்து சத்தியத்தையும், திருச்சபையையும் பற்றிக் கொண்டார்கள். தூத்துக்குடி பட்டணமே அசைந்தது. அந்தப் பட்டணத்தில் பெரிய சந்தோஷமும் உண்டாயிற்று. வேதப்புரட்டர்கள், கள்ளக் கிறிஸ்தவர்கள் முகத்திலே கரி பூசப்பட்டது. அந்த நாட்களில் என்னைச்சந்தித்து தனிப்பட்ட ஆலோசனைக் கேட்கவும், சந்தேக நிவர்த்தி செய்யவும், விளக்கம் பெறவும் நேரம் ஒதுக்கியிருந்தேன். அதை துண்டு பிரதிகளில் ஏற்கெனவே விளம்பரப்படுத்தியிருந்தேன். தேவன் ஜெயம் கொண்டார். கன்வென்ஷனின் பிரதிபலிப்பு தொடர்ந்து காணப்படுகிறது. தூத்துக்குடி சபையில் அநேகர் அங்கமாக சேர்ந்து கொண்டார்கள். இவ்விதமாய் கர்த்தருடைய சித்தம் தூத்துக்குடியில் நிறைவேறிற்று. தொடர்ந்து அடியேனும், அடியேனோடு Ap. Pr. S. Sundarraj-ம் Prophet Yasudasan ஐயாக தமிழ்நாட்டில் உள்ள எல்லா சபைகளுக்கும் சென்று அவைகளைப் பலப்படுத்தி, ஸ்திரப்படுத்தி, ஆசீர்வதித்து விட்டு, சபைகளிலுள்ள முக்கியமான விழாக்களை நடப்பித்து கொடுத்து விட்டு அங்கிருந்து கர்நாடகாவின் தலைநகரான பெங்களூரிலுள்ள புதிய எருசலேம் சபைக்கும் சென்று சபையைப் ஸ்திரப்படுத்தி விட்டு அங்கிருந்து சுகமாக பம்பாய் வந்து சேர்ந்தோம். கர்த்தர் தம் வாயினால் சொன்னதை தமது கரத்தினால் நிறைவேற்றி முடித்தார். கர்த்தருடைய பூரணமான சத்தியம் பிரசித்தப் படுத்தப்பட்டது. புதிய எருசலேம் பூலோகமெங்கும் எழும்பும். எந்த தீய சக்தியோ, பொய்யான மனிதர்களது கூட்டமோ புதிய எருசலேமை தடுக்க முடியாது.

புதிய எருசலேம் தேவனால் உண்டாகியிருக்கிறது. மனிதனால் உண்டாயிருந்தானால் ஒழிந்து போயிருக்கும். ஆனபடியினால், எதிர்த்து நிற்கிறவர்கள் எங்களோடு அல்ல தேவனோடு போர் செய்கிறார்கள் (அப். 5:38,39). புதிய எருசலேமே தேவனுடைய பரிபூரணமான சபை என்பதை தேவன் நிரூபித்துக்காட்டத் துவங்கியுள்ளார். இந்த நாட்களில் எங்கள் ஆத்துமாவுக்கு மிக வருத்தமாகக் காணப்பட்ட சம்பவம் ஆத்துமாக்கள் கூட்டம் கூட்டமாக தாகத் தவனமாய் வந்து குவிகிறதை கண்டோம். மக்கள் ஆங்காங்கு சபை எழுப்பித் தரும்படி கேட்டுக் கொண்டார்கள். சில இடங்களில் புதிய கிளைகள் எழுப்பப்பட்டன. ஆனால், மக்களின் விருப்பத்தின்படி சபைகள் எழுப்பிக் கொடுக்க ஆயத்தமாக்கப்பட்ட போதுமான ஊழியர்கள் இல்லை என்கிற மனவருத்தமே எங்களில் காணப்பட்டது. மற்றவர்கள் பிரயாசப் பட்டதை அறுக்கும் படியாகவே புதிய எருசலேம் ஊழியர்களாகிய எங்களை தேவன் அனுப்பியிருக்கிறார் (யோவா. 4:35-38) என்பதை தேவனுடைய வசனம் உறுதிப்படுத்திற்று. ஆகையால் அறுப்புக்கு எஜமான் அநேக வேலையாட்களை ஆயத்தப் படுத்தித் தரும்படியாக நீங்கள் எல்லாரும் ஜெபிக்கும்படி இயேசுவின் நாமத்தில் கேட்டுக் கொள்கிறோம். கர்த்தர் உங்கள் எல்லோரையும் ஆசீர்வதித்து தம்முடைய வருகைக்கு ஆயத்தப் படுத்துவாராக! எருசலேமை நேசிக்கிற நீங்களெல்லாரும் சுகித்திருப்பீர்களாக! (சங். 122;6)

கிறிஸ்துவுக்குள்,

CHIEF PASTOR : N. LAZAR

---

கடந்த மே மாதம் 10-ம்தேதி முதல் புதிய எருசலேம் சபையின் தலைமைப் போதகரும் புதிய எருசலேம் செய்தியின் பத்திரிக்கை ஆசிரியருமான CHIEF PASTOR N. LAZAR அவர்கள் தெய்வீக ஊழியத்தினிமித்தம் தூத்துக்குடியில் நடைபெற்ற ஊழியர் மாநாடு, கன்வென்ஷன் ஆகியவைகளில கலந்து கொள்ளவும், தமிழ்நாட்டிலும் கர்நாடகத்திலும் சுவிசேஷத்தினிமித்தம் பிரயாணம் செய்து கொண்டிருந்தபடியாலும் ஜுன் மாத பத்திரிகை வெளியிட தடைப்பட்டது. இப்பொழுது இந்தப் பிரதி ஜுன்-ஜுலை மாதத்திற்கு சேர்த்து வெளியிடப்படுகிறது என்பதை அறிவித்துக் கொள்கிறோம்.

புதிய எருசலேம் தேவனால் உண்டாகியிருக்கிறது. மனிதனால் உண்டாயிருந்ததானால் ஒழிந்து போயிருக்கும். ஆனபடியினால், எதிர் நிற்கிறவர்கள் எங்களோடு அல்ல தேவனோடு போர் செய்கிறார்கள் (அப். 5:38,39). புதிய எருசலேமே தேவனுடைய பரிபூரணமான சபை என்பதை தேவன் நிரூபித்துக்காட்டத் துவங்கியுள்ளார். இந்த நாட்களில் எங்கள் ஆத்துமாவுக்கு மிக வருத்தமாகக் காணப்பட்ட சம்பவம் ஆத்துமாக்கள் கூட்டம் கூட்டமாக நாகத் தவளமாய் வந்து குவிகிறதை கண்டோம். மக்கள் ஆங்காங்கு சபை எழுப்பித் தரும்படி கேட்டுக் கொண்டார்கள். சில இடங்களில் புதிய கிளைகள் எழுப்பப்பட்டன. ஆனால், மக்களின் விருப்பத்தின்படி சபைகள் எழுப்பிக் கொடுக்க ஆயத்தமாக்கப்பட்ட போதுமான ஊழியர்கள் இல்லை என்கிற மனவருத்தமே எங்களில் காணப்பட்டது. மற்றவர்கள் பிரயாசப் பட்டதை அறுக்கும் படியாகவே புதிய எருசலேம் ஊழியர்களாகிய எங்களை தேவன் அனுப்பியிருக்கிறார் (யோவா. 4:35-38) என்பதை தேவனுடைய வசனம் உறுதிப்படுத்திற்று. ஆகையால் அறுப்புக்கு எஜமான் அநேக வேலையாட்களை ஆயத்தப் படுத்தித் தரும்படியாக நீங்கள் எல்லாரும் ஜெபிக்கும்படி இயேசுவின் நாமத்தில் கேட்டுக் கொள்கிறோம். கர்த்தர் உங்கள் எல்லோரையும் ஆசீர்வதித்து தம்முடைய வருகைக்கு ஆயத்தப் படுத்துவாராக! எருசலேமை நேசிக்கிற நீங்களெல்லாரும் சுகித்திருப்பீர்களாக! (சங். 122:6)

கிறிஸ்துவுக்குள்,

N. Lazar

CHIEF PASTOR : N. LAZAR

நடந்த மே மாதம் 10-ம் தேதி முதல் புதிய எருசலேம் சபையின் தலைமைப் போதகரும் புதிய எருசலேம் செய்தியின் பத்திரிகை ஆசிரியருமான CHIEF PASTOR N. LAZAR அவர்கள் தெய்வீக ஊழியத்தினிமித்தம் தூத்துக்குடியில் நடைபெற்ற ஊழியர் மாநாடு, கன்வென்ஷன் ஆகியவைகளில கலந்து கொள்ளவும், தமிழ்நாட்டிலும் கர்நாடகத்திலும் சுவிசேஷத்தினிமித்தம் பிரயாணம் செய்து கொண்டிருந்தபடியாலும் ஜூன் மாத பத்திரிகை வெளியிட தடைப்பட்டது. இப்பொழுது இந்தப் பிரதி ஜூன்-ஜூலை மாதத்திற்கு சேர்த்து வெளியிடப்படுகிறது என்பதை அறிவித்துக் கொள்கிறோம்.

# பாவ மன்னிப்பு

கிறிஸ்துவுக்குள் அன்பானவர்களே, பாவ மன்னிப்பு என்பது மிக முக்கியமானது. ஏனெனில், ஒரு ஆத்துமாவின் பாவம் மன்னிக்கப்பட்டு பரிசுத்தமாய் ஜீவித்தால் மாத்திரமே பரலோகம் செல்ல முடியும் என்பது யாவரும் அறிந்த உண்மையாகும். இந்த இரகசியத்தை அறிந்த சாத்தான், இந்நாட்களில் மக்கள் பாவ மன்னிப்பு அடைந்து பரிசுத்த வாழ்க்கை செய்ய விரும்பாதபடி கிறிஸ்தவ மண்டலத்தில் புகுந்துவிட்டான். எங்கு பார்த்தாலும் ஜெபக் குழு, காத்திருப்புக் கூட்டம், கன்வென்ஷன் கூட்டம் என்று சொல்லி தங்கள் மனதின் ஆவியினால் தூண்டப்பட்டு செய்கிறார்கள். ஆனால், இக்கூட்டத்தார் யாராவது மக்கள் பூரணமாய் பாவ மன்னிப்படைவதற்கான வழி முறைகளை தேவன் தமது வேதத்தில் சொல்லியிருப்பதை அறிந்தார்களா? அறிந்து மக்களுக்கும் போதித்தார்களா? இல்லையே. ஏனெனில், ஒரு மனிதனுக்கு பிதாவாகிய தேவன் தமது இரகசியத்தின் ஆழத்தை இன்னதென்று வெளிப்படுத்தாது போனால் ஒருவரும் அறிந்து கொள்ளமாட்டார்கள். பாவ மன்னிப்பின் உபதேசத்தால் நான் அடைந்த அனுபவத்தையும், பரிசுத்தத்தையும் குறித்து தேவ ஜனங்களுக்கு எழுதியுணர்த்த தேவ ஆவியானவரால் ஏவப்பட்டபடியால் அவைகளைச் சுருக்கமாய் சொல்லுகிறேன், கேளுங்கள்.

தமிழ்நாட்டில், திண்டுக்கல் வட்டத்தில் உள்ள சித்தரேவு என்ற ஊரிலுள்ள ஒரு C. S. I. கிறிஸ்தவ குடும்பத்தைச்சேர்ந்தவன் கிறிஸ்தவ குடும்பமே தவிர கிறிஸ்தவத்திற்கும் என் குடும்பத்திற்கும் எந்த வித சம்பந்தமும் இல்லாத ஒரு பெயர். கிறிஸ்தவ குடும்பத்தில் பிறந்தவன் நான் 15 வயதிலிருந்தே புகைப்பிடிப்பதும் மது குடிப்பதும் சினிமா மற்றும் களியாட்டுகள் பார்ப்பதும், வீட்டிலுள்ள பொருட்களை திருடுவதுமான மிக மோசமானவனாகவே வாழ்ந்து வந்தேன். அப்படிப்பட்ட காலத்தில் ஒரு நாள் 1970 ஜனவரி 1-ம் தேதியன்று சினிமா பார்ப்பதற்காக அருகாமையில் உள்ள ஊருக்கு சைக்கிளில் வேகமாக சென்று கொண்டிருக்கும்போது எதிரே வந்த சைக்கிளில் மோதி எனக்கு நெஞ்சில் பலத்த அடிப்பட்டு மிகுந்த வேதனைப்பட்டேன். அப்போது என்னுடைய தாயார் என்னை அருகாமையில் உள்ள ஒரு ஊரில் ஆவிக்குரிய கூட்டம் நடக்கிறது, அங்கு வா அப்போது உனக்கு சுகம் கிடைக்கும் என்று சொல்லி என்னை அழைத்துச் சென்றார்கள். அதன்படியே போனேன். தேவன் அற்புதமாய் சுகப்படுத்தினார். அந்த நாட்களிலிருந்தே என் உள்ளத்தில் பாவ உணர்வடைந்து வருத்தப்பட ஆரம்பித்தேன். நாட்கள் செல்லச்செல்ல நரகத்தைப்பற்றிய பயம் அதிகரித்தது. ஐயோ, நாம் மகாபாவி. இந்தப்பாவத்தோடு செத்தால் நமக்கும் நரகம்தானே கிடைக்கும் அங்கு போய் எப்படி அந்த வேதனைகளை சகிப்பது என்று புலம்பிக்கொண்டிருந்தேன். இந்த பயத்தால் சினிமா, பீடி, மது, திருடு ஆகியவற்றை விட்டு விட்டேன். ஆனாலும் ஜெபம் பண்ண கண்களை மூடியதும் ஒரே இருட்டாயிருக்கும். கடந்த கால பாவமெல்லாம் ஞாபகத்தில் வந்து அழுத்தும்.

ஆனாலும் இராக்காலங்களில் என் பாவங்களை ஜெபத்தின் மூலம் ஒவ்வொன்றாக சொல்லி அறிக்கை செய்து கண்ணீர் விட்டு அழுவதுண்டு. அப்படி செய்யும்படி நான் ஐக்கியம் வைத்திருந்த சபையிலுள்ளவர்கள் எனக்கு உபதேசம் பண்ணியிருந்தார்கள் அப்படி செய்தும் நான் எதிர்பார்க்கும் விடுதலை, பரிசுத்தம் கிட்டவில்லை. பின்பு மதுரையில் உள்ள ஆவிக்குரிய அநேக சபைகளுக்குச் சென்று அங்குள்ள ஊழியர்களை சந்தித்து என் நிலைமையைச் சொன்னேன். சிலர் பிரதர், பின்வாங்கி போய் விடுவீர்கள் என்றும், சிலர் உங்களுக்கு விசுவாசமில்லை சகோதரரே என்றும் சொல்லிவிட்டார்கள். இன்னும் சிலர் என் தோற்றத்தைப் பார்த்தவுடனே சகோதரரே, இந்த இளம் வயதிலேயே இரட்சிக்கப்பட்டு ஊழியத்துக்கு வந்து விட்டீர்களே என் வீட்டிற்கு வாருங்க பிரதர், எனக்குபரிசுத்தாவி கிடைக்கும்படி நீங்கள் எனக்காக ஜெபிக்க வேண்டும்

என்று சொல்லி ஒரு ஆசிரியர் என்னை அழைத்துச் சென்றார். ஏனெனில் நான் கிறிஸ்துவை அறிய ஆரம்பித்த நாளில் இருந்தே நான் ஊழியர்கள் போல ஜிப்பா சட்டை போடுவது வழக்கம். அந்த தோரணையைப் பார்த்து என்னை அழைப்பது வழக்கம். இப்படித்தான் தோற்றத்தை பார்த்து அநேகர் ஏமாந்து கொண்டிருக்கிறார்கள். வேதவாக்கியத்தை வாசித்து அதன் வாயிலாகவும் உபதேசத்தை அறிந்து கொள்ள முடியாதவனாக தவித்த காலத்தில் நான் சென்று வந்த சபைகளில் யாரும் என்னைச் சீர்படுத்தி அவர்களோடே சேர்த்துக் கட்டவில்லை நான் அவர்களிடம் ஓடினேனே தவிர அவர்கள் என்னை சேர்க்கவில்லை. இப்படியே 5 ஆண்டு காலம் சென்றது. 1975-ல் பள்ளப்பட்டியில் புதிய எருசலேம் சபை கன்வென்ஷன் நடந்தது. நான் அங்கு சென்று தலைமை பரிசுத்த மேய்ப்பர் ஐயா அவர்களை சந்தித்து என் நிலைமையைச் சொன்னபோது நான் எதிர்பார்த்த ஆலோசனை என் ஆத்துமாவுக்கு கிடைத்தது. அப்படியே சங்கரன்கோவில் அருகேயுள்ள மலையடிப்பட்டியில் கன்வென்ஷன் நடத்தினார்கள் அங்குச் சென்று என் பாவங்களை முறையாக சரியாக வெளிப்படையாக பரிசுத்தவான்கள் காதில் கேட்கும்படி பாவங்களை அறிக்கையிட்டு ஞானஸ்நானம் பெற்றேன். மாற் 1:5ன் படி இஸ்ரவேலின் பிரகாரம் பாவம் செய்தேன் என்று அறிக்கை செய்தேன் (யோசு7:19-21) என் ஆத்துமா சாகாதபடி ஜீவனுள்ளோர் சபையில் நிலைத்திருக்கும்படி என்பாவம் நீங்கத்தக்கதாக அறிக்கை செய்தேன் (IIசாமு 12:12) நினைவுக்கு வந்த பாவத்தை அறிக்கை செய்தேன். மறந்து போனபாவங்களை புதிய எருசலேம் சபை தமிழ்நாடு பரிசுத்த அப்போஸ்தலர், தீர்க்கதரிசி ஐயா (பாஸ்டர் சுந்தர் ராஜ், தீர்க்கதரிசிஏசுதாசன்) மூலம் கர்த்தர் வெளிப்படுத்தினார். அவைகளை நேரடியாகவும் தபால் மூலமாகவும் சொல்லி ஆலோசனை கொடுத்தார்கள்.

அதன்படி என் பாவத்தை ஒத்துக் கொண்டு அறிக்கை செய்தேன். இப்படி பாவ அறிக்கை செய்து என் உள்ளத்தை சந்தித்தபோது பள்ளப்பட்டி கிளை சபையில் பாஸ்டர் ராஜ் ஞானையா ஐயா அவர்கள் என் தலையில் கை வைத்து ஜெபித்தார்கள். அப்போது தேவன் தமது தூய ஆவியால் நிரப்பினார். என்னே! ஆச்சரியம் தேவனால் அதிகாரம் பெற்ற பரிசுத்தவான்களிடம் பாவ அறிக்கை செய்ததின் மூலம் என் ஆத்துமாவில் பெரிய விடுதலை உண்டாயிற்று. கடந்த கால பாவத்தின் சக்தியும் என்னை விட்டு நீங்கிற்று இப்போது கடந்த கால பாவம் ஞாபகத்தில் வருவதில்லை. மேற்குக்கும் கிழக்குக்கும் எவ்வளவு தூரமோ அவ்வளவு தூரமாய் அவர் நம்முடைய பாவங்களை நம்மை விட்டு விலக்கினார் (சங். 103.12) என்ற திருவசனம் என்னில் நிறைவேறியது. இப்பொழுது தேவத் தொடர்பும் தெய்வீக அன்பும். ஆத்துமாவுக்கு இளைப்பாறுதலும் கிட்டியது.

நீதியுண்டாக இருதயத்திலே விசுவாசிக்கப்படும். இரட்சிப்புண்டாக வாயினால் அறிக்கை பண்ணப்படும் (ரோம 10 : 10) அறிக்கை என்றால் வெளிப்படுத்தி அறிவிப்பதே. பாவ அறிக்கையும் அப்படியே செய்யப்பட வேண்டும் (அப். 19:18)

இந்தக் கடைசி காலத்தில் தேவன் தம்முடைய இரகசியத்தை பாவமன்னிப்பின் உபதேசத்தை புதிய எருசலேம் சபைக்கு வெளிப்படுத்தி. மக்கள் பூரணமான பாவமன்னிப்பின் நிச்சயத்தை பெற்றுக் கொண்டவர்களாக வழி நடத்தப்பட்டு வருகிறார்கள். அதற்காக என் தேவாதி தேவனை ஸ்தோத்தரிக்கிறேன். இதற்கு நான் ஒரு சாட்சி.

Eld. Bro. A. பாக்கியதாஸ்

''புதிய எருசலேம் சபை''
சித்தரேவு (கிளை)

---

''...தம்முடைய பாவங்களையெல்லாம் சமுத்திரத்தின் ஆழங்களில் போட்டு விடுவார்''
மீகா 7:19

---

(தொடர்ச்சி)

# ஆதியாகமத்தைப் பற்றி ஒரு ஆராய்ச்சி

**ஆதியாகமம்** 5:1-5:— எபிரேய பாஷையில் டோலெடா (Toledaa) என்றால் பரம்பரையான குடும்ப சரித்திரம் என்று அர்த்தம். ஸ்திரீயின் வித்தாகிய இரண்டாம் ஆதாம் உலகத்தில் வரவேண்டுமென்பதற்காக முதலாம் ஆதாமின் குடும்ப வரலாற்றை நாம் இங்கே காண்கிறோம் (ஆதி. 2:4ல் தேவன் வானத்தையும், பூமியையும் உண்டாக்கின வரலாற்றைக் காண்கிறோம்.) மத். 1:1-17, லூக். 3:23-38 ல் இரண்டாம் ஆதாமாகிய கிறிஸ்துவின் குடும்ப வரலாற்றை நாம் காண்கிறோம். இளவயதிலேயே பிள்ளைகளையுடைய மனிதன் ஆதாம் தான் (ஆதி 4:1:2 6:1.) அடுத்து இந்த அதிகாரத்திலே 65 வயது உடையவர்களே வாலிபர்களாம் (ஆதி. 5: 15, 21, 18).

ஆதாம் தேவனுடைய சாயலாய் சிருஷ்டிக்கப்பட்டான். (ஆதி. 1:26-28) மனிதர்கள் எல்லாம் ஆதாமின் சாயலில் உண்டாக்கப்பட்டார்கள் (ஆதி 5:3). தேவனுடைய சாயல் ஆதாமில் பூர்த்தி செய்யப்பட்டதாக இருந்தது. ஆதாமின் பாவத்தினால் ஆதாமுடைய சாயல் முடிவடையாததும் பாவத்தின் பிரமாணத்திற்குட்பட்டு சாபத்திற்குள்ளானதும் மரணமானது உள்ளே கிரியை செய்து அழிவை நோக்கி வழி நடத்திக் கொண்டிருந்ததுமாய் இருந்தது. (யோபு 14:4; 25:4, சங். 51 : 5 ரோம. 5:12-21; I கொரி 15:39, 40; எபே.2:1-3). ஆதாமுக்கு சேத் பிறந்த பின்பு குமாரரும் குமாரத்திகளும் இருந்தார்களென்றால் காயீன், ஆபேலுக்குப் பின்பாகவும் குழந்தைகள் இருந்தார்களென்பதில் சந்தேகமில்லை. ஒரு பாரம்பரியத்தில் ஆதாமுக்கு 30 குமாரர்களும் 30 குமாரத்திகளும் இருந்தார்களென்றும், இன்னொன்றில் 300 குமாரத்திகளும் இருந்தார்களென்றும் சொல்லப்பட்டுள்ளது. (ஆதி. 4:16-25) காயீனின் தலைமுறைகளிலும் சேத்தின் பின் ஏனோக்கின் 308-ம் வயது வரைக்கும் அதாவது மெத்தூசலாவின் 243-ம் வயது வரைக்கும் ஆதாம் உயிரோடிருந்து கொண்டிருந்தார். இவ்விதமாய் இரண்டு மனிதர்களும் (ஆதாமும், மெத்தூசலாவும்) ஜலப்பிரளயத்திற்கு முன்புள்ள காலம் வரைக்கும் வாழ்ந்து வந்தார்கள் (ஆதி. 5:5, 27). ஆதி 5-ம் அதிகாரம் மேசியா வரப்போகிற மனித பரம்பரையைச் சுட்டிக்காட்டுகிறது

மேலும் நீ அதைப் புசிக்கும் நாளில் சாகவே சாவாய் (ஆதி 2:17) என்ற தேவ வாக்குப்படி இன்னார் இன்னார் வாழ்ந்தான், இன்ன வயதில் மரித்தான் என்று இந்த அதிகாரத்தில் வேதாகமம் பதிவேடு குறிப்பிட்டுள்ளது. இதில் ஏனோக்கைத் தவிர மற்றவர்களெல்லாரும் ஆயிரம் வயது ஆகிறதற்குள் மரித்தார்களென்று வேதம் குறிப்பிட்டுள்ளது. தேவனுக்கு ஆயிரம் வருஷம் ஒரு நாள் ஆகும் (II பேது. 3:8). அப்படியானால், மனிதன் தேவனுடைய பார்வையில் ஒரே நாளில் மரித்தான். ஆதாம், காயீன், சேத் ஆகியோரின் வம்சத்தில் ஆபேல், ஏனோக்கு, நோவா மாத்திரமே நல்லவர்கள், தேவ பக்தியுள்ளவர்கள், தேவனுக்குப் பிரியமானவர்களாகும்.

**ஆதியாகமம்** 5:1-31

| | ஆள்பெயர். | குழந்தைப்பேறு | மரணம். |
|---|---|---|---|
| 1) | ஆதாம். | 130-வது வயதில் சேத்<br>பின்பு குமாரர், குமாரத்திகள். | 930 |
| 2) | சேத் | 105-வது வயதில் ஏனோஸ்<br>பின்பு குமாரர், குமாரத்திகள் | 912. |
| 3) | ஏனோஸ் | 90-வது வயதில் கேனான்<br>பின்பு குமாரர், குமாரத்திகள் | 905. |

| | | |
|---|---|---|
| 4) கேனான் | 70-வது வயதில் மகலாலெயேல் பின்பு குமாரர் குமாரத்திகள். | 910 |
| 5) மகலாலெயேல் | 65-வது வயதில் யாரேத் பின்பு குமாரர், குமாரத்திகள் | 895 |
| 6) யாரேத் | 62-வது வயதில் ஏனோக்கு பின்பு குமாரர் குமாரத்திகள் | 962 |
| 7) ஏனோக் | 65-வது வயதில் மெத்தூசலா பின்பு 300 வருஷம் குமாரர், குமாரத்திகள் பெற்றார். | 365 உயிரோடு பரலோகம். |

ஏனோக்கு மெத்தூசலாவைப் பெற்ற பின்பு 300 வருஷம் தேவனோடு சஞ்சரித்துக் கொண்டிருக்கையில் 365-வது வயதில் பரலோகத்திற்கு எடுத்துக்கொள்ளப்பட்டார். விசுவாசத்தினாலேயே ஏனோக்கு மரணத்தைக் காணாதபடி எடுத்துக் கொள்ளப்பட்டார். தேவன் அவரை எடுத்துக் கொண்டபடியால் அவர் பூமியிலே காணப்படாமற் போனார். எடுத்துக்கொள்ளப்படுவதற்கு முன்னமே தேவனுக்குப் பிரியமானவர் என்று தேவனால் நற்சாட்சி பெற்றார் (எபி. 11:5).

ஏனோக்கு 300 வருஷம் தேவனோடு சஞ்சரித்துக் கொண்டிருந்து குமாரரையும், குமாரத்திகளையும் பெற்றார் என்று வேதம் குறிப்பிட்டுள்ளது. அவர் குடும்ப வாழ்க்கையில் இருந்து தேவனுக்கு பிரியமாய் ஜீவித்தார், தேவனால் புகழப்பட்டார் (நற்சாட்சி பெற்றார்), தேவன் அவரை உயிரோடு பரலோகத்துக்கு எடுத்துக் கொண்டார். இவர் தம்முடைய 56-வது வயதில் மெத்தூசலாவைப் பெற்ற பின்பே தேவனால் வெளிப்படுத்தல் பெற்று விசுவாசியானார். ஏனோக்கு பூமியில் 300 வருஷம் பரிசுத்த வாழ்க்கை வாழ்ந்தார். (சுமார் 1, 09, 500 நாட்கள்), தினந்தோறும் தேவனோடு சஞ்சரித்தார். பரிசுத்த வாழ்க்கைக்கு குடும்பம் ஒரு தடையல்ல. பரலோகத்துக்கு உயிரோடு எடுத்துக் கொள்ளப்பட்ட முதல் மனிதன் ஏனோக்கே, அவர் ஒரு சம்சாரி. இரண்டாம் மனிதன் தீர்க்கதரிசியாகிய எலியா, இவர் ஒரு துறவி. மூன்றும் மனிதர், தம்முடைய பாவங்களுக்காக மரித்து உயிர்த்த தம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து. இது மறுரூப நிலை, விசேஷித்தது. (மாற். 16:19).

| ஆண் பெயர் | குழந்தைப் பேறு | மரணம் |
|---|---|---|
| 8) மெத்தூசலா | 157 ல் லாமேக்கு பின்பு, குமாரர், குமாரத்திகள். | 969 |
| 9) லாமேக்கு | 182 ல் நோவா பின்பு, குமாரர் குமாரத்திகள். | 777 |
| 10) நோவா | 500-ல் சேம், காம் யாப்பேத். | |

நோவா தன் காலத்தில் இருந்தவர்களுக்குள்ளே நீதிமானும் உத்தமனுமாய் இருந்து தேவனோடு சஞ்சரித்துக் கொண்டிருந்தான். நோவாவுக்கு 600 வயதாய் இருந்த போது பூமியில் ஜலப்பிரளயம் உண்டாயிற்று.

(தொடரும்)

"...அதை நீ புசிக்கும் நாளில் சாகவே... சாவாய்..."

ஆதி. 2:17

# சுவிசேஷம்

உலகத்தில் இரண்டு வித சக்திகள் கிரியை செய்கின்றன. ஒன்று பரிசுத்த சக்தி மற்றொன்று அசுத்த சக்தி, ஒளியும் இருளும் இருக்கிறது போன்று இவைகள் இருக்கின்றன. இவைகள் இருக்கிறதை ஒவ்வொரு மனிதனும் தனக்குள்ளே காணலாம். ஒரு சிறுவன் தன்னுடைய உறவினர் வீட்டுக்கு விளையாடச் செல்கிறான். வீட்டில் ஒரு அறையிலுள்ள மேஜையின் மேல் ஒரு ஐந்து ரூபாய் நாணயம் இருக்கிறது. இவன் அதைப் பார்க்கிறான் சுற்றிலும் பார்க்கிறான் வீட்டில் வேறு யாருமில்லை. அவனுடைய உள்ளத்தில் ஒரு தூண்டுதல் உண்டாகிறது அதை எடுத்துக் கொள். எடுத்துக் கொள் என்று. அதே சமயம் எடுக்காதே, தவறு, நீ பிடிபட்டால் எவ்வளவு அவமானம்! அப்பாவுக்கு தெரிந்தால் தோலை உரித்து விடுவார்கள் என்று அவனுக்குள் இன்னொரு எச்சரிப்பு உண்டாகிறது. இப்போது இவனோ மதில் மீது உள்ள பூனையைப் போல் இருக்கிறான். அதை எடுப்பது தவறு என நன்கு அறிகிறான். ஆனாலும் எடு எடு என்ற தூண்டுதலுக்கு இணங்குகிறான். எடுக்கிறான். விளக்கு அணைகிறது. அது முதற்கொண்டு திகில் அவனைப் பிடிக்கிறது. பயந்து நடுங்குகிறான். உடனே அறையை விட்டு, வீட்டை விட்டே வெளியேறுகிறான். அதிகமாகப் பயந்து கலங்கி போனதால் அவனுக்கு காய்ச்சல் வந்து விடுகிறது. எடு எடு என்ற ஏவுதலுக்கு கீழ்ப்பட்ட படியால் கிடைத்தது என்ன? ஐந்து ரூபாய், அத்துடன் எவ்வளவு வேதனை? இந்த சிறுவனை எடுக்காதே, எடுக்காதே என்று தடைசெய்த சத்தத்திற்கு கீழ்ப்பட்டிருப்பானால் இவனுடைய சந்தோஷ சமாதானத்துக்கு ஒரு பாதிப்பும் வந்திராது. உறவினர் வீட்டுக்கு எப்போதும் போல் மகிழ்ச்சியோடு விளையாட வரலாம்.

கெட்டுப்போன மனிதனே! கேள்! உனக்கு சமாதானம் இல்லாமல் போனதற்கும் வியாதியால் வேதனைப் படுவதற்கும் குடும்பத்தில் குழப்பததால் உண்டான குழறலுக்கும் காரணம் யார்? நீயே. உன்னைத் தூண்டிய அசுத்த சக்திகளுக்கு உன்னை ஒப்புக் கொடுத்ததினாலேயே. செய்யாதே செய்யாதே என்று தடைசெய்த உன் நல்மனசாட்சியின் எச்சரிப்பை நிராகரித்த படியினாலேயே இப்படியானாய்.

இப்படி தூண்டுகிற சக்தியை (பிசாசு, சாத்தான், அசுத்த ஆவி) இறைவன் ஏன் உண்டாக்கினார். அதை ஏன் அழித்துப் போடக்கூடாது? என்ற கேள்விகள் கடவுள் இருளை எதற்கு உண்டாக்கினார் என்பது போலாகும். ஒரு விளக்கைக் கொளுத்தினால் இருள் போய் விடுமே, ஒரு சின்ன டார்ச்சை வைத்துக் கொண்டு எவ்வளவு தூரமும் நடக்கலாமே இருக்கிற விளக்கைப் உடைத்துப் போட்டு விட்டு இருட்டில் தடுமாறி கல்லில் மோதி மண்டையை உடைத்துக் கொண்டவன் கேட்கிறான், கடவுள் ஏன் இருளை உண்டாக்கினார்? அதை நீக்கி விடலாமே என்று. அதை அவர் ஏன் நீக்க வேண்டும்? நீயே விளக்கைக் கொளுத்தி நீக்கி விடலாமே. அப்படியே சாத்தானும் இருக்கிறான். அவனை இறைவன் அழிக்க வேண்டிய அவசியமில்லை. நீயே அவன் உன்னைக் கெடுக்காதபடி செய்யலாம். பாருங்கள் ஒரு யோக்கியன் ஒருவன் வழியிலே ஒரு கூட்டம் போலீஸ்காரர்களைப் பார்க்கிறான். அவர்கள் ஆயுதங்களுடன் விழிப்பாய் நிற்கிறார்கள். இவன் அவர்களை வேடிக்கை பார்த்துக் கொண்டே வழி நடக்கிறான். அந்த வழியே ஒரு வீட்டில் திருடிய பணத்துடன் ஒரு திருடன் வருகிறான். அவன் கலங்கிப் போகிறான். இந்த போலீஸ் நியமமே இல்லாதிருந்தால் நன்றாக இருக்குமே என எண்ணுகிறான். இயேசு சொன்னார். இதோ இந்த உலகதத்தின் அதிபதி (பிசாசு) வருகிறான், என்னிடத்தில் அவனுக்கு ஒன்றுமில்லை என்று

இப்படி சாத்தானுடைய தூண்டுதலுக்கு இடங்கொடுத்தவனை கண்ணியில் அகப்பட்டவனை அவன் பிடிக்கிறான். பிடித்து அவனை திரும்ப திரும்ப பாவம் செய்ய வைக்கிறான். இவன் செய்யக்கூடாது என்று எண்ணினாலும் செய்யாமல் இருக்க முடியவில்லை. பாவம் செய்கிற எவனும் பாவத்

துக்கு அடிமை என்று இயேசுவானவர் சொன்னபடி மனிதர்கள் பாவத்தின் அடிமைத் தனத்தில் கிடந்து தவிக்கிறார்கள். அடிமை எஜமான் சொல்வதை செய்தே ஆக வேண்டும். அவனுக்கு விடுதலையை அவனே பெற்றுக்கொள்ள முடியாது. இன்னொரு பலசாலியான ஆள்போய் எஜமானிடம், இவன் என் தம்பி. இவனை விடுதலையாக்கும் நான் அடிமையாகிறேன் - என்று சொல்கிறான். எஜமான் தம்பியை விடுதலையாக்குகிறான். அண்ணன் அடிமையாகி தம்பியை விடுவித்ததால் தம்பி விடுதலையானான்.

இப்படியே பாவத்தின் அடிமைத் தனத்தில் சிக்கி பாவத்தினால் ரோகத்தினால் சஞ்சலத்தால் தொல்லைகளால் தவிக்கிற மனிதர்களாகிய நம்மை விடுவிக்கும்படி இறைவன் நம்மைப்போல் மனிதனாய் இயேசு என்னும் பெயரில் அவதரித்து பாவமற்ற பரிசுத்தராய் வாழ்ந்து நீதிபரராகிய அவர் நமது அடிமைத் தனத்தை (பாவத்தை) அவர் ஏற்றுக் கொண்டு நம்மை விடுதலையாக்குகிறார். பாவ நிவாரண பலியாக சிலுவையில் ஆணி அடித்து கொலை செய்யப்பட்ட இயேசு சிந்தின இரத்தம் நம்முடைய எல்லா பாவங்களையும் நீக்கி நம்மை சுத்திகரிக்கிறது. இயேசுவண்டை வாருங்கள். உங்கள் பாவங்களை கழுவிக் கொள்ளுங்கள். விடுதலை யாகுங்கள். மகிழ்ச்சி உண்டாகும்.

ஆனந்திக்க இயேசுவண்டை அன்போடே அழைக்கிறோம்.

பள்ளிக்கூடத்தைக் கட்டி நல்ல குருக்களை நியமித்து இலவச ஆகாரம், சீருடை (Uniform) இன்னும் சகல வசதிகளையும் அரசாங்கம் செய்து மக்களிடம் உங்கள் பிள்ளைகள் கற்று தேர்ச்சி அடைய சகல நியமங்களும் இருக்கிறது. பிள்ளைகளை பள்ளிக்கு அனுப்புங்கள் என்று திரும்ப திரும்ப விளம்பரப்படுத்தியும், ஓ: எங்கள் தாத்தா பள்ளி போனாரா? நான் போனேனா? நான் பிழைக்க வில்லையா? புதிதாகச் சொல்ல வந்து விட்டார்கள். ஒழுங்காய் மாடு மேய்க்கிற பையனின் மனதைக் கெடுக்கிறார்கள் மடையர்கள் என்று சொல்லும் முட்டாளின் மகன் என்றும் முட்டாளே.

தேவன் மனிதன் சுகித்திருக்க சகல ஏற்பாடுகளையும் செய்து வைத்து அவைகளைப் பெற்றுக் கொள்ளும் வழியை போதிக்க திருச்சபையை (புதிய எருசலேமை) ஏற்படுத்தி, அழைக்கிறார். புதிய எருசலேம் அழைக்கிறது. வாருங்கள்! வந்து இறைவன் மனிதனுக்காய் ஏற்படுத்தியுள்ள சகல நன்மைகளையும் பெற்றுக் கொள்ளுங்கள்.

---

"நீ நன்மை செய்தால் மேன்மை இல்லையோ" (ஆதி. 4:7)

---



(தொடர்ச்சி)

# மோட்ச வழி

## (குரு-சிஷ்ய உரையாடல்)

குரு:- 4. தேவனைக்குறித்து சாட்சி கொடுத்து அவரை பிறரும் அறியும்படியாக சாட்சியாக ஜீவித்து சாட்சியாக பிறருக்கும் அறிவித்து தனியாகவும் சபையோடு சேர்ந்தும் அவருக்கு ஊழியம் செய்ய வேண்டும்.

கிறிஸ்தவ ஜீவியம் ஒரு சாட்சியாகும் நீங்கள் எனக்கு சாட்சிகளாயிருப்பீர்கள் பரிசுத்த ஜீவியம் செய்து சாட்சிகளாக இருக்க வேண்டும் என்று தேவன் கட்டளையிட்டிருக்கிறார். குணப்பட்டு கிறிஸ்தவர்கள் ஒவ்வொருவரும் சாட்சி கொடுக்க வேண்டும். கர்த்தராகிய

இயேசு கிறிஸ்துவைப் பற்றி பிறருக்கு அறிவிக்க வேண்டும். ஜீவன் பெற்றவர்கள் பெற்ற இரட்சிப்பை பிறருக்கு அறிவிக்கவில்லையென்றால் அவர்கள் பெற்ற ஜீவனை இழந்து விடுவார்கள். நாம் இரட்சிக்கப்பட்டது, சாட்சியாயிருக்கும் படிக்கே (1 பேது 2:9) சிலர் சாட்சி கொடுப்பதில்லை தேவன் தங்களுக்கு அருளிய வரங்களை உபயோகிப்பதில்லை, மறைத்து வைக்கிறார்கள், சபையிலே சாட்சி கொடுப்பதில்லை. வெளியேயும் வெளிப்படையாய் தங்களை கிறிஸ்தவர்களாய் காண்பிப்பதில்லை, கிறிஸ்துவை பிறருக்கு அறிவிப்பதும் இல்லை. அந்தரங்க கிறிஸ்தவர்களாக தாங்கள் இருப்பதாக எண்ணிக் கொள்கிறார்கள். வெளியரங்கமாக வர வேண்டும். திருச்சபை ஐக்கியத்தில் இருக்க வேண்டும். திருச்சபையோடு கூட சேர்ந்து ஊழியத்திலும் பாடுபடுதலிலும் பங்கு பெற வேண்டும். அந்தரங்கமாக கிறிஸ்தவர்களாயிருக்கிறவர்கள் அந்தரங்கமாகப் பாவம் செய்து பின் மாறி பழைய நிலைக்குப் போய் விடுவார்கள். ஆனபடியினால் இயேசுவை அறிக்கை பண்ணவேண்டும். அவர்களை கர்த்தரும் அறிக்கை பண்ணுவார் (மத் 10 : 32, 33).

திருச்சபையில் அங்கமான ஒவ்வொரு கிறிஸ்தவனுக்கும் ஸ்தானமும் அதற்குரிய வரமும் ஊழியமும் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதை அவர்கள் நிறைவேற்ற வேண்டும். சரீரத்தில் அவசியமில்லாத உறுப்பு எதுவுமில்லை. வேலை செய்யாத உறுப்பு அல்லது அழுகிப் போன உறுப்பு வெட்டப்பட்டு அகற்றப்படுகிறதுண்டு. ஆனபடியால் நம்மால் இயன்ற ஊழியத்தை உள்ளேயும், வெளியேயும் செய்ய வேண்டும். தேவன் அதற்காகவே நம்மை சரீரமான சபையில் வைத்தார் (I கொரி 12:13: ரோம 12 :4, 5). நாம் அவரோடுகூட பாடுபட்டால் அவரோடுகூட ஆளுகையும் செய்வோம் (II தீமோ 2:12; ரோம 8:17).

> "நீதியுண்டாக இருதயத்திலே விசுவாசிக்கப்படும், இரட்சிப்புண்டாக வாயினாலே அறிக்கைப் பண்ணப்படும்"
> ரோமர் 10:10

தொடர்ச்சி

# வேத பாடம்

யாத். 30: 1–10: மறுபடியும் ஆசரிப்புக் கூடாரம் அதின் பணிமுட்டுகள் ஆகியவைகளை செய்யும் படியான கட்டளை கொடுக்கப்பட்டது

(யாத். 20: 2-31, 11; 25: 1-27, எபி. 9: 1–28)

1) தூப பீடம் (யாத் 37: 25-28)

தூப பீடத்தை உண்டாக்க வேண்டும். தூப பீடத்தை உண்டாக்க கொடுக்கப்பட்ட கட்டளைகள் பதினொந்து.

1) தூபங்காட்ட ஒரு தூப பீடத்தை உண்டாக்குவாயாக. வச. 1.

2) சீத்தீம் மரத்தினால் தூப பீடத்தை உண்டாக்குவாயாக. வச. 1.

3) நீளம், அகலம் ஒரே அளவாய் இருப்பதாக. 25 அங்குலம் வச. 2.

4) உயரம் 4 அடி 2 அங்குலம் இருப்பதாக. வச. 2.

5) 4 கொம்புகளை சம அளவாக தூப பீடத்தின் 4 மூலைகளிலும் ஏகமாய் அமைப்பாயாக. வச. 2.

6) தூப பீடத்தின் மேற்புறத்தையும், சுற்றுப் புறத்தையும், அதன் கொம்புகளையும் சுத்த தங்கத் தகட்டால் பொதியக் கடவாய். வச. 3.

7) சுற்றிலும் பொன் திரணையை உண்டாக்குவாயாக.

8) திரணையின் கீழே தூப பீடத்தை சுமக்கும் தண்டுகளைப் பாய்ச்ச இரண்டு பொன் வளையங்களைச் செய்வாயாக. (ஒருபக்கம் இரண்டு, மறுபக்கம் இரண்டு) வச 4.

9) சீத்தீம் மரத்தினால் இரண்டு தண்டுகளை உண்டாக்குவாயாக வச 5.

10) தண்டுகளை பொன் தகட்டால் மூடுவாயாக, வச 5.

11) தூபபீடத்தைத் திரைக்கு முன்பக்கம் கிருபாசனத்திற்கு நேரே வைப்பாயாக. வச 6.

12) ஆரோன் காலையிலும் மாலையிலும் தூப பீடத்தில் பரிசுத்த தூபம் காட்ட வேண்டும் வச. 7,8.

13) பொன் குத்துவிளக்கை ஏற்றும் போதும், அதை விளக்கும் போதும் தூப பீடத்தில் தூபமிடவேண்டும். வச. 7,8

14) அந்நிய தூபத்தையாகிலும், போஜன பலியையாகிலும், தகன பலியையாகிலும் பான பலியையாகிலும், தூப பீடத்தின் மேல் படைக்கவோ, வார்க்கவோ கூடாது.

15) ஆரோன் வருஷத்தில் ஒருமுறை பாவ நிவாரண பலியின் இரத்தத்தைத் தூப பீடத்தின் கொம்புகள் மேல் பூசி தூபபீடத்திற்கு பிராயச்சித்தம் செய்யவேண்டும். அது தலை முறைதோறும் செய்யும்படி கட்டளையிடப்பட்ட நித்திய கட்டளையாகும், இந்தத் தூப பீடத்திலிருந்து எழும்பும் தூபம் பரிசுத்தவான்களின் ஜெபத்திற்கு அடையாளமாக இருக்கிறது. (வெளி. 8: 3,4 )

யாத்30:11–16 :- இஸ்ரவேல் புத்திரர்கள் கணக்கிடும் பொழுது 20 வயதுக்கு மேற்பட்டவர்களை கணக்கிடும்படி கட்டளை கொடுக்கப்பட்டிருக்கிறது. அவர்களை எண்ணும் பொழுது தலைக்கு அரைச்சேக்கல் காணிக்கையாக (Registration Tax) செலுத்த வேண்டும். இஸ்ரவேல புத்திரரை எண்ணும் பொழுது அவர்களுக்கு வாதையுண்டாகாமலிருக்க ஞாபகக் குறியாக இந்தக் காணிக்கை செலுத்தப்பட வேண்டும். இந்தப் பணம் ஆசரிப்புக் கூடாரத் திருப்பணிக்கு உபயோகிக்கப்பட்டது. ஐசுவரியவான் அதிகமாகவோ, ஏழை குறைவாகவோ இல்லாமல், ஐசுவரியவான் ஏழை என்ற வித்தியாசமில்லாமல் ஒவ்வொருவருக்காக அரைச் சேக்கல் வரி விதிக்கப்பட்டது. இது அவர்களின் ஆத்துமாக்களுக்கு பாவநிவிர்த்தி செய்யும் பொருட்டு நியாபகக் குறியாக இருந்தது. தேவனுக்கு முன்பாக ஐசுவரியவான் ஏழை என்ற வித்தியாசமில்லாமல் எல்லா ஆத்துமாக்களும் சமமே என்பது இதன் மூலம் நிரூபிக்கப்படுகிறது.

யாத். 30: 17-21: வெண்கலத் தொட்டி (யாத். 38:8)

இந்த வெண்கலத் தொட்டி ஸ்திரீகளின் தர்ப்பணத்தினால் செய்யப்படவேண்டும். தர்ப்பணம் என்றால் கண்ணாடி. முற்காலத்தில் ஸ்திரீகள் சுத்தமாகத் துலக்கப்பட்ட வெண்கலத்தை முகம் பார்க்கும் கண்ணாடியாக உபயோகித்து வந்தார்கள் (யாத். 38:8). இவ்விதமாய் துலக்கப்பட்ட வெண்கலத்தால் வெண்கலத் தொட்டியும் அதற்கு பாதங்களும் வெண்கலத்தால் செய்யும்படி கட்டளையிடப்பட்டது.

**வெண்கலத் தொட்டியைப் பற்றிய கட்டளைகள் :**

1) வெண்கலத் தொட்டியையும் அதன் பாதங்களையும் துலக்கப்பட்ட வெண்கலத்தால் செய்வாயாக.

2) வெண்கலத் தொட்டியை ஆசரிப்புக்கூடார வாசலுக்கும் திரைக்கும் நடுவே வலது புறத்தில் வைக்கவேண்டும். வச 18.

3) அதைத் தண்ணீரால் நிரப்ப வேண்டும்.

4) ஆரோனும் அவனுடைய குமாரர்களும் ஆசரிப்புக் கூடாரத்தில் பிரவேசிக்கும் போதும் பலிபீடத் தண்டையில் பலி செலுத்தச் சேரும் போதும், தங்கள் கைகளையும் கால்களையும் சுத்தமாகக் கழுவிக் கொள்ள வேண்டும்.

5) அவர்கள் அவ்விதமாக தங்கள் கைகளையும் கால்களையும் கழுவத் தவறினால் சாவார்கள். வச, 20,21.

6) இது அவர்கள் தலைமுறை தோறும் ஆரோனுக்கும் அவன் சந்ததியாருக்கும் நித்திய கட்டளையாகும். ஒவ்வொரு மனிதனும் தேவ சந்நிதானத்தில் நெருங்கும் போது தங்கள் கைகளையும் கால்களையும் சுத்தமாகக் கழுவிக் கொள்ளவேண்டும். இது எதை குறிப்பிடுகிறதென்றால், கைகள் அவனுடைய கிரியைகளையும், கால்கள் அவனுடைய நடத்தையையும் குறிப்பிடுகிறது. தங்களுடைய கிரியைகளினாலும் நடத்தையினாலும் உண்டான பாவங்களை அறிக்கை செய்து சுத்திகரித்துக் கொண்டு, சுத்த மனச் சாட்சியோடே தேவ சமுகத்தில் ஜெபம் செய்ய, ஆராதிக்க செல்லவேண்டும் என்றே பரிசுத்தாவியானவர் குறிப்பிடுகிறார். (ஏசா. 1;15,16; யோவா 13:10; எபி. 10:22 ) இப்படி கைகளையும் கால்களையும் தொட்டியின் தண்ணீரினால் கழுவும்போது ஆசாரியருடைய முகங்கள் அந்த தொட்டிக்குள் கண்ணாடியில் முகம் பார்க்கிறது போல தெளிவாகத் தெரியும். அப்பொழுது அவர்கள், தங்களைச் சரிப்படுத்திக் கொள்ள ஏதுவாக இருந்தது. அப்படியே திருவசனத்தை வாசிக்கும் போது மனிதனுடைய உள்ளான நிலை வெளிப்படையாய்க் காணப்படும். தன்னிலுள்ள குறையைக் கண்டு அவன் அகற்றிக் கொள்ள வேண்டும் (யாக். 1;22,23).

**யாத். 30: 22-33: பரிசுத்த அபிஷேக தைலம் (யாத் 27:20)**

**உண்டாக்க கொடுக்கப்பட்ட கட்டளைகள் 5. (ஐந்து).**

1) பரிசுத்த அபிஷேக தைலத்தை உண்டாக்குவாயாக. வச. 22-25.

| | | |
|---|---|---|
| வெள்ளைப் போளம் | 10 | கிலோ. |
| சுகந்த கருவாப்பட்டை | 5 | கிலோ. |
| சுகந்த வசம்பு | 5 | கிலோ. |
| இலவங்கப்பட்டை | 10 | கிலோ. |
| சுத்தமான ஒலிவ எண்ணெய் | 1 | குடம் |

இவைகளினால் பரிமள தைலக்காரன் செய்வதுபோல கூட்டப்பட்ட சுத்தமான பரிசுத்த அபிஷேக தைலம் செய்யப்பட வேண்டும்.

2) பரிசுத்த அபிஷேக தைலத்தினால் ஆசரிப்புக் கூடாரத்தையும் சாட்சி பெட்டியையும், மேஜையையும் அதன் பணிமுட்டுகள் எல்லாவற்றையும் குத்து விளக்கையும் அதன் கருவிகள் எல்லாவற்றையும், தூபபீடத்தையும், தகன பலிபீடத்தையும் அதன் பணி முட்டுகள் எல்லாவற்றையும் தொட்டியையும் அதன் பாதங்களையும் அபிஷேகித்து அவைகள் மகா பரிசுத்தமாய் இருக்கும்படி அவைகளை அபிஷேகம் பண்ணி

பரிசுத்தப்படுத்த வேண்டும். அவைகளைத் தொடுகிறதெல்லாம் பரிசுத்தமாய் இருக்கும். வச. 26-29

3) ஆரோனும் அவன் குமாரரும் ஆசாரிய ஊழியம் செய்யும்படி அவர்களை தைலத்தால் அபிஷேகம் பண்ணி பரிசுத்தப்படுத்த வேண்டும்.

4) தேவனுடைய கட்டளையில்லாமல் வேற்று மனிதர்கள் மேல் இந்தத் தைலம் வார்க்கப்படலாகாது. யார்மேல் அபிஷேக தைலம் வார்க்கப்பட்டதோ அவர்கள் பரிசுத்தமானவர்களாக, தேவனால் அங்கீகரிக்கப்பட்டவர்களாக இருக்கிறார்கள். இவ்விதமாய் தைலாபிஷேகம் பண்ணப்பட்டவர்களை கொலை செய்வது மகாபாதகமாக எண்ணப்பட்டபடியால் தேவனால் தைலாபிஷேகம் பெற்றவர்கள் மேல் கைபோட மக்கள் பயந்திருந்தார்கள் (1 சாமு. 26.9,24:1-7). தேவனுடைய ஆசாரியர்களும், தீர்க்கதரிசிகளும், ராஜாக்களும் அபிஷேக தைலத்தினால் அபிஷேகிக்கப்பட்டார்கள். வச. 30

5) இந்தத் தைலத்துக்கு ஒப்பாக வேறு எவரும் தைலம் கூட்டவோ உபயோகிக்கவோ அந்நியன் மேல் வார்க்கவோ கூடாது. அப்படிச் செய்கிறவன் சாவான். வச. 32,33.

அபிஷேக தைலம், தேவனுடைய மனிதர்களால் தேவனால் அபிஷேகிக்கப்படுவதை அதிகாரப்படுத்துவதை (Ordination) குறிப்பிடுகிறது. (சங். 133:2. 45:6,7; எபி. 1:5, 9)

(தொடரும்)

"ஆதலால், நாம் இரக்கத்தைப் பெறவும், ஏற்ற சமயத்தில் சகாயஞ்செய்யுங் கிருபையை அடையவும், தைரியமாய்க் கிருபாசனத்தண்டையிலே சேரக்கடவோம்".

(எபி. 4:16.)

(தொடர்ச்சி)

**மாதர் பகுதி**

# வேதாகம ஸ்திரீகள்

*ராகாப் (விசாலம்) [எபிரெயர் 11:31]*

இஸ்ரவேலர்கள் கானானுக்குள் பிரவேசிக்க யோர்தான் நதியைக் கடந்தவுடன் முதல் முதல் எதிர்ப்பட்ட பட்டணம் எரிகோவாகும். இந்தப் பட்டணத்தை வேவு பார்க்கும்படியாக இஸ்ரவேலர்களில் இரண்டு மனுஷரை யோசுவா அனுப்பினார். இஸ்ரவேலர்களை ராகாப் என்னும் வேசியானவள் ஏற்றுக் கொண்டு எரிகோ பட்டணத்திற்குரிய அழிவினின்று தன்னையும் தன் குடும்பத்தையும் காத்துக் கொண்டாள் (யோசு.2:1). இவள் இஸ்ரவேலின் தேவனை விசுவாசித்து அவர் இஸ்ரவேலுக்காக நடப்பித்து வருகிற கிரியைகளைக் கேள்விப் பட்டாள். தேவன் இஸ்ரவேலுக்கு கானானை வாக்குத்தத்தம் பண்ணி கானானை அவர்கள் சுதந்தரிக்கும்படி வழி நடத்தி வருகிறார் என்பதை அவள் கேள்விப்பட்டிருந்தாள். வேவுகாரர்கள் எரிகோவுக்குள் பிரவேசித்து இவள் வீட்டண்டை வந்த போது எரிகோவின் ராஜாவுக்கு அவர்களைத் தப்புவித்தாள். நிச்சயமாய் எரிகோ பட்ட

ணம் பிடிக்கப்பட்டு போகிறதை அவள் விசுவாசத்தினால் அறிந்தாள். ஆனபடியினால் கானானியரோடு தானும், தன் குடும்பமும் அழிந்து போகாதபடிக்கு வேவுகாரர்களிடம் வாக்கு வாங்கிக் கொண்டு இஸ்ரவேலின் தேவனை அறிக்கை செய்தாள் (யோசு. 2:9-14.) வேவுகாரர்கள் அடையாளமாய்க் கட்டும்படி கொடுத்த சிவப்பு கயிற்றின் மேல் இவளின் நம்பிக்கையிருந்தது. அதை தன் வீட்டின் ஜன்னலில் கட்டி வைத்தாள். எரிகோ பட்டணம் பிடிக்கப் பட்டபொழுது ராகாபும் அவளுடைய குடும்பத்தாரும் தப்புவிக்கப் பட்டார்கள். அது முதற்கொண்டு அவள் இஸ்ரவேலர்களோடு இணைந்து கொண்டாள் (யோசு. 6:22-25). இந்த ராகாபை இஸ்ரவேலின் பிரபுவாகிய சல்மோன் விவாகம் முடித்தார். இவர்களுக்கு போவாஸ் பிறந்தார். போவாசுக்கு ஓபேதும், ஓபேதுக்கு ஈசாயும், ஈசாய்க்கு தாவீது ராஜாவும் பிறந்தார்கள். இந்த ராகாப் ஒரு கானானிய ஸ்திரீயாய், ஒரு தாசியாய் இருந்த போதிலும் இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்தரை விசுவாசித்து அந்த விசுவாசத்தை கிரியையில் காண்பித்ததின் மூலமாக இரட்சிக்கப்பட்டாள் (யாக்.2:25, எபி.11.31). மத்தேயு எழுதின சுவிசேஷம் முதல் அதிகாரத்தில் இயேசு கிறிஸ்துவினுடைய குடும்ப வம்ச வரலாறு எழுதப்பட்டிருக்கிறது. இதில் குறிப்பிடப்பட்டிருக்கும் நான்கு ஸ்திரீகளில் ராகாபும் ஒருத்தியாவாள் (மத்.1:5). இயேசு கிறிஸ்துவினுடைய வம்ச வரலாற்றில் மெய்தேவனை விசுவாசித்து பற்றிக்கொண்ட புறஜாதிகளும் ஐக்கியமாகி மெய் இஸ்ரவேலர்களாய் இணைக்கப்பட்ட சம்பவத்தை மத்தேயு முதலாம் அதிகாரம் நமக்கு நிரூபிக்கிறது. இஸ்ரவேலர்களில் அநேக ஸ்திரீகள் இருந்த போதிலும் இயேசு கிறிஸ்துவினுடைய வம்ச வரலாறில் குறிப்பிடப் பட்டுள்ள நான்கு ஸ்திரீகளும் புற ஜாதிகளாயிருந்து இஸ்ரவேலின் தேவனைப் பற்றிக் கொண்ட நான்கு பரிசுத்தவாட்டிகளையே பரிசுத்தாவியானவர் குறிப்பிட்டுள்ளார்.

தாமார் – கானானிய ஸ்திரீ
ராகாப் – கானானிய ஸ்திரீ
ரூத் – மோவாபிய ஸ்திரீ
பத்சேபாள் – ஏத்தித்தி (ஏத்தியனாகிய உரியாவின் மனைவியாக இருந்தவள்

இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்தரின் மேல் உள்ள விசுவாசத்தினால் ராகாப் விசுவாசிகளின் பட்டியலில் குறிப்பிடப் பட்டுள்ளாள். ராகாப் என்ற வார்த்தை மேலும் சில இடங்களில் வேதாகமத்தில் வருகிறது.

சங். 87:4ல் பாபிலோனைக் குறித்தும்; சங். 89: 10ல் எகிப்தைக் குறித்தும்; ஏசா 51:9ல் சமுத்திரத்தில் உள்ள ஒரு பெரிய வலுசர்ப்பத்தைக் குறித்தும் எழுதப் பட்டுள்ளது. இங்கே ராகாப் என்றால் மேட்டிமை அல்லது அகங்காரம் என்று அர்த்தம். இது கடலிலுள்ள ஒரு வலுசர்ப்பத்துக்கும் எகிப்துக்கும் அடையாளமாக குறிப்பிடப்பட்டிருக்கிறது. முன் பக்கமுள்ள விசுவாசியான ராகாபைப் போல தேவனுடைய ஸ்திரீகளும் தங்கள் விசுவாசத்தை கிரியையில் காண்பித்து ராகாபைப்போல் பரிசுத்த வாட்டிகளின் பட்டியலில் பேரெடுக்கவும். அந்த ராகாப் தாசியாய் இருந்தபோதிலும் இஸ்ரவேலின் தேவனை பற்றி கொண்டபின் சல்மோனை விவாகம் முடித்து, விசுவாசத்தினால் ஒரு பெரிய பரிசுத்த வாட்டியாய் விளங்குகிறாள். அப்படியே இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்தரை விசுவாசிக்கிற ஸ்திரீகள் தங்கள் விசுவாசத்தைக் கிரியையில் காண்பித்து பரிசுத்தவாட்டிகளாக பேரெடுப்பார்களாக!

(தொடரும்)

"கிரியைகளில்லாத விசுவாசம் செத்தது" யாக். 2:20

# தீர்க்கதரிசனமும் வாக்குத்தத்தங்களும்

வரப்போகிற காரியங்களை வெளிப்படுத்தி அறிவிப்பது தீர்க்க தரிசனமாகும். தெய்வத்தினிடமிருந்து செய்தி பெற்று தெரிவிப்பது தீர்க்கதரிசனம் சொல்லுதலாகும். மனிதனுடைய ஆவியினால் பார்த்து உணர்ந்து, கேட்டு, அறிந்து கொள்ள முடியாத காரியங்களை தேவ ஆவியால் வெளிப்படுத்தப்பட்டு அறிந்து கொள்ளலாம். இப்படி வெளியாக்கப்பட்ட வார்த்தைகள் தீர்க்க தரிசன வாக்கியங்களாகும். சபையிலே தேவ தொடர்புடையவர்கள் தீர்க்கதரிசன வரமுடையவர்களாகும். தேவனால், தீர்க்கதரிசிகள் சபையிலே நியமிக்கப்படுகிறார்கள் (அப் 21:10). இவர்கள் மூலம் தேவன் சபையாருக்கு வரப்போகிற காரியங்களை வெளிப்படுத்துவார். தமது சித்தத்தை வெளிப்படுத்துகிறார். தமது ஆலோசனைகளை தெரிவிக்கிறார். தம்முடைய தீர்மானத்தை அறிவிக்கிறார்.

ஒரு கன்னிகை கர்ப்பவதியாகி ஒரு குமாரனை பெறுவாள். அவருக்கு இம்மானுவேல் என்று பேரிடுவார்கள் (ஏசா 7:14) என்று ஏசாயா வெகு காலத்திற்குப் பின் உள்ள காரியத்தை குறித்து தீர்க்க தரிசனமாய் முன்னறிவித்தார், 700 ஆண்டுகளுக்குப்பின் அது நிறைவேறிற்று இஸ்ரவேல் ஜனங்கள் 70 ஆண்டுகளுக்குப்பின் பாபிலோன் சிறையிருப்பினின்று திரும்புவார்கள் என்று எரேமியா தீர்க்கதரிசனமாய் முன்னறிவித்தார், அது அப்படியே ஆயிற்று. இயேசு சொன்னார்: இதோ சீக்கிரமாய் வருகிறேன் என்று. அதுவும் அப்படியே ஆகும்.

இப்படி தேவன், தமது முன் அறிவினால் தூரத்தில் சம்பவிக்கப் போவதை அறிந்து அறிவிக்கிறார். நாம் ஒரு சம்பவத்தைக் கண்டு வந்து சொல்வது போல் தேவன் நடக்கப்போவதைக் கண்டு சொல்கிறார். இப்படிப்பட்ட காரியங்களை எந்த மனிதனுடைய சித்தமும் மாற்றவோ, தடை செய்யவோ முடியாது.

ஆகாப் அரசன் கர்த்தருக்கு விரோதமாய் பொல்லாப்பு செய்தபடியால், கர்த்தர் எலியா தீர்க்க தரிசியை கொண்டு அவனுடைய அக்கிரமத்தினிமித்தம் அவனுக்கு வரப்போகிற அழிவை முன்னறிவித்தார். இந்த செய்தியை ஆகாப் கேட்டபோது, தேவனுக்கு முன்பாகத் தன்னை தாழ்த்தினான். கர்த்தர் அதைக்கண்டு தாம் அறிவித்த அழிவு அவனிடம் வராது, அவன் குமாரன் நாட்களில் உண்டாகும் என்று மறுபடியும் அறிவித்தார் (1 ராஜா 21:17-29). இப்படியாக ஆகாபின் அழிவை பற்றிய தீர்க்க தரிசனம் நிறைவேறாதபடி ஆகாபின் தாழ்மை மாற்றிப்போட்டது. பிடுங்குவேன் இடிப்பேன், அழிப்பேன், என்று நான் ஒரு ஜாதிக்கு விரோதமாகவும், ஒரு இராஜ்ஜியத்திற்கு விரோதமாகவும் சொன்னமாத்திரத்தில் அந்த ஜாதியார் தங்கள் தீங்கை விட்டு திரும்பினால் நானும் அவர்களுக்கு செய்ய நினைத்த தீங்கைச் செய்யாதபடி மனம் மாறுவேன் என்று கர்த்தர் சொல்லுகிறார் (எரே 18:7,8). கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசி அப்போது நீயும், உன் வீட்டாரும் இரட்சிக்கப்படுவீர்கள் (அப் 16:31). இது யேசுவை விசுவாசிக்கிறவர்களுக்கு கிடைக்கப் போகும் ஆசீர்வாதமாகும். இது வாக்குத்தத்தம். இதுவும் தீர்க்கதரிசன வாக்கியமே. இதன்படி ஒருவன் விசுவாசியானவுடன் அவனுடைய வீட்டார் யாவரும் இரட்சிக்கப்பட்டோயாவர்கள் என்று சொல்லப்படும் முன் அறிவிப்பல்ல. ஒருவன் இரட்சிக்கப்படுவதால் அவனுடைய வீட்டாருக்கு உண்டாகும் சலுகையைக் குறிப்பிடுகிறது.

ஒரு கம்பெனியில் வேலைக்கு சேர்ந்தவுடன் அந்த ஸ்தாபனத்தார் நீ ஓய்வு பெறும்போது உன்னுடைய வேலை உனது முதல் பையனுக்கு கொடுக்கப்படும், என்று வாக்கு (Promise) கொடுக்கிறார்கள். இப்படி ஒரு வாக்குத்தத்தம் உண்டானபடியால் தகப்பனுடைய வேலையை நிச்சயம் மகன் செய்வான் என்று அர்த்தமாகாமல் தகப்பனுடைய வேலை நிச்சயம் மகனுக்கு கிடைக்கும் என்கிற அர்த்தமாகிறது. ஏனெனில் மகன் தகப்பன் செய்த வேலையைச் செய்ய விரும்பாமல் வேறு வேலைக்குப்

போய்விடலாம். அல்லது தகப்பன் ஓய்வு பெறும் முன் மகன் செத்துப் போகலாம். இப்படிப் போலவே இரட்சிக்கப்பட்ட ஒரு விசுவாசியினிமித்தம் இரட்சிப்பின் வாசல் அவன் வீட்டாருக்கு திறந்து வைக்கப்படுகிறது இதிலே அவர்கள் பிரவேசிக்க வேண்டும் அவர்களுக்கு இயேசு கிறிஸ்துவை பற்றிய செய்தி அறிவிக்கப்பட வேண்டும். அதை அவர்கள் ஏற்று இயேசுவை விசுவாசித்தால் இரட்சிக்கப்படுவார்கள். மறுத்தால் பட்சிக்கப்படுவார்கள். ஆனபடியால் இப்படிப்பட்ட வாக்குத்தத்தமான தீர்க்க தரிசனம் நிறைவேற நாம் ஜெபிப்பதும் பிரயாசப்படுவதும் அவசியம். உதாரணமாக, உனக்கு ஒரு நல்ல வேலையைக் கட்டளையிடுவேன் என்று கர்த்தர் ஒரு விசுவாசியிடம் தீர்க்க தரிசனமாய் சொல்கிறார் என்றால், அந்த விசுவாசி அதை நம்பி காத்திருந்து வேலைக்கு அப்பிளிகேஷன் போடுவதும் இண்டர்விவு அட்டண்ட் (attend) பண்ணுவதும் அவசியம். அப்போது கர்த்தர் சொன்னது நிறைவேறும், அதை விட்டு கர்த்தர் நல்ல வேலை தருவேன் என்று சொல்லியிருக்கிறார் என்று நம்பி எந்தக் கிரியையும் நடப்பிக்காவிட்டால் வாக்குத் தத்தம் நிறைவேறாமல் போகும்.

கர்த்தர் 12 சீஷர்களிடம் என்னைப் பின்பற்றின நீங்கள் இஸ்ரவேலின் பன்னிரண்டு கோத்திரங்களையும் நியாயந்தீர்க்கிறவர்களாய் பன்னிரண்டு சிங்காசனங்களின் மேல் வீற்றிருப்பீர்கள் என்று வாக்கு அருளினார் (மத் 19:28). இந்த வாக்குத் தத்தம் யூதாஸ் காரியோத்துக்கும் உரியதே. ஆனால் அவன் அந்தகத்தின் கூலியை விரும்பி வழி விலகின படியால் அவனுக்குண்டான ஆசீர்வாதமான வாக்குத்தத்தம் கிட்டவில்லை. இயேசுவானவர் இவனுக்குச் சொன்ன தீர்க்க தரிசனம் நிறைவாக வில்லை. அது நிறைவேறாமல் தடை செய்தது யூதாசின் பாவம்.

ஆகவே தேவனுடைய பிள்ளைகள் தீர்க்க தரிசனங்களைக் குறித்து தெளிவாயிருக்க வேண்டும். உண்டாகிற தீர்க்க தரிசனம் முன்னறிவிப்பா? எச்சரிப்பா? ஆலோசனையா? இரகசியமா? வாக்குத்தத்தமா? என்று பகுத்து விளங்கிக் கொண்டு அதை பிரயோஜனப்படுத்திக் கொள்ள வேண்டும். அதை விட்டு தேவன் எனக்கு சொல்லியிருக்கிறார் என்று இறுமாப்படைந்து, தேவ பயமில்லாமல் நடந்து உள்ளதையும் இழந்து போகாதே அதைப் பிடித்துக் கொள்ள தொடர்ந்துசெல் (பிலி 3:12-14). தொடர்ந்து ஜெபம் செய் (எசேக் 36:37)

---

"அவர்கள் என் சத்தத்தைக் கேளாமல் என் பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்வார்களானால், நானும் அவர்களுக்கு அருள் செய்வேன் என்று சொன்ன நன்மையைச் செய்யாத படிக்கு மனம் மாறுவேன்"
எரே. 18:10

---

# தேவனுடைய அன்பு

பிரியமானவர்களே, அன்பு என்று சொல்லும் வார்த்தையானது பரிசுத்த வேதத்தில் தேவனுடைய அன்பு எப்படிப்பட்டது என்றும் மனிதர்கள் அன்பு எப்படிப்பட்டது என்பதைப்பற்றி சுருக்கமாய் எழுதி புரிந்துவது அவசியமாயிருக்கிறது.

கணவனின் அன்பு மாறிப் போகும்: மார்க்ரெட் என்ற ஒரு பெண்ணானவள் மிகுந்த ஏழைக் குடும்பத்தில் பிறந்தவளாயிருந்தாலும் அவள் சரீரத்தில் அழகும், சிவந்த மேனியும், சுபாவத்தில் தாழ்மையும், பழக்கத்தில் அன்பும் உடையவளாயிருப்பதை பார்த்த அடுத்த தெருவில் இருக்கும் ருபனுக்கு மார்க்ரெட்டின் மீது கொள்ளை ஆசை. உலகத்தில் எத்தனையோ பெண்களைப் பார்த்திருக்கிறோம். ஆனால் இவளுடைய ஒழுக்கத்தைப் பார், என்று தனக்குள்ளே சொல்லிக் கொண்டு அவள் போகிற வருகிற பக்கமெல்லாம் பின்னாடியே போவதும் வருவதுமாக இருப்பதைப் பார்த்த ருபனின் பெற்றோர் தம்ம

பையன் மார்க்ரெட்டை விரும்புகிறான் என்பதை அறிந்த தகப்பனார் ஒரு நாள் ரூபனை, அடே, ரூபன் உன் மாமா மகள் சித்ராவை உனக்குத் திருமணம் செய்யலாம் என்று யோசிக்கிறோம். பத்தாயிரம் ரூபாய் ரொக்கம் தருகிறார்களாம். முடிப்போமா' என்று கேட்டதுமே ரூபனுக்கு முகத்தில் வாட்டம் ஏற்பட்டு விட்டது. எப்படி என்னசொல்வதென்று திணறிக் கொண்டு மெல்ல தன்னுடைய விருப்பத்தை தெரிவித்தான். உடனே தகப்பனார் அதிர்ச்சியோடே எழுந்து, அட முட்டாள்! அந்தப் பெண் குடிக்கக் கஞ்சியில்லாத வீட்டு பெண் என்பதை நீ அறியாமல் முடிவு செய்தியா? இது பார், பத்தாயிரம் ரூபாய் கொண்டு வருமே என்றார். அதற்கு ரூபன் பத்தாயிரம் என்ன? பத்து லட்சமே கொடுத்தாலும் தேவையில்லை அன்புதான் தேவை. மார்க்ரெட்டிடம் நான் கண்டது அன்புதான் என்று உறுதியாகச் சாதிக்கவுமே, உடனடியாக மார்க்ரெட்டைப் பெண் பார்த்தார்கள். குருவானவர் முன்னிலையில் தேவாலயத்தில் மிகுந்த ஆரவாரத்தோடு திருமணம் நடைபெற்றது. குருவானவரும் அன்பை பற்றியே மிக அழகாக பிரசங்கம் செய்தார். கூடியிருந்த சபையாரெல்லாருக்கும் மிகுந்த சந்தோஷம்! ரூபனும் மார்க்ரெட்டும் தனிக்குடித்தனம் செய்ய ஆரம்பித்தார்கள். பாலும் சீனியும் கலந்தபின் உண்டாகிறது இனிமை போல இவர்களது அன்பின் ஐக்கியம் வளர்ந்தது. மார்க்ரெட்டு தலையில் தண்ணீர்குடம் கொண்டு வந்தால் கூட ரூபனுக்கு தன் தலை நோகுவது போல எண்ணி எதிரே ஓடிப்போய் நீர்க்குடத்தை வாங்கி வருவான். பார்க்கிற பொது மக்கள் எல்லோரும் உண்மையாகவே இவர்கள் அன்பைப் பார்க்கும் போது மார்க்ரெட் மரித்தால் ரூபனும் மரித்துப் போவான் போல தெரிகிறது என்று பேசிக் கொள்வார்கள். படிப்படியாக வருஷம் பல உண்டோடியது.

ஒரு நாள் மார்க்ரெட் சமையல் செய்யும் போது ஸ்டவ் வெடித்து விட்டது. அப்போது அபரிதமாக மார்க்ரெட்டின் முகத்தில் நெருப்பு பட்டு விட்டது. ஐயோ அம்மா என்று அலறுகிற சத்தத்தைக் கேட்ட பக்கத்து வீட்டு ஆட்கள் எல்லோரும் வந்து பார்த்ததுமே உடனே மருத்துவ மனையில் சேர்த்து விட்டார்கள். வேலைக்குப் போன ரூபன் மாலை வீட்டிற்கு வந்ததும் நடந்த விபரத்தை பக்கத்து ஆட்கள் சொல்லவுமே ரூபனுக்கு தூக்கி வாரிப்போட்ட மாதிரி ஆகி விட்டது. அலறி துடித்துக் கொண்டு மருத்துவமனைக்குப் போய் பார்த்தான் மார்க்ரெட்டின் முகம் அருவருக்கத்தக்க ரூபமாக மாறி விட்டது. வேதனை நீங்கி வீட்டிற்கு வந்தபிறகு மார்க்ரெட்டின் முக ரூபத்தை பார்க்கபார்க்க ரூபனுக்கு கொஞ்சம் கொஞ்சமாக அவள் மீது வைத்த அன்பு தணிய ஆரம்பித்தது. ரூபன் வழக்கம்போல வேலை முடிந்ததும் வீட்டிற்கு வராமல் தன்னுடைய தகப்பன் வீட்டிற்குப் போய் விட்டு நாலு நாளுக்கு ஒரு தடவை வீட்டுக்குத் தேவையான பொருட்களை வாங்கி வந்து கொடுத்து விட்டுப் போய் விடுவான். இப்படியே மார்க்ரெட்டை வெறுக்க ஆரம்பித்தான். ஒரு நாள் மார்க்ரெட் கணவனிடம், என்னங்க முன்பு என்னிடம் காட்டிய அன்பெல்லாம் குறைந்து விட்டதே என்றாள். ரூபன் சிடுசிடுப்போடு உன் முஞ்சைப் பார்த்தாலே பேய் போலிருக்கிறதே! பின்னே எப்படி அன்போடு வாழ்வது? என்று வெறுப்பாகச் சொல்ல ஆரம்பித்தான். மார்க்ரெட் மிகுந்த வருத்தத்தோடு, என் முகம் கெட்டுப் போன படியால் தானே வெறுக்க ஆரம்பித்து விட்டீர்கள். அப்படியென்றால் உங்களுக்கு என் மீது உண்மையான அன்பு இல்லைதானே! இதுவா அன்பு? இதற்குத்தான் என்னைத் திருமணம் செய்தீர்களா? உங்களுக்கும் இரண்டு தங்கைகள் இருக்கிறார்கள் என்பதை மறந்து விடாதீர்கள். அன்று தேவாலயத்தில் குருவானவர் முன்பாக மரணம் நம்மை பிரிக்கும் வரை உன்னை விட்டுப் பிரியமாட்டேன் என்று சொன்னீர்களே, அந்த வார்த்தையெல்லாம் இப்போ எங்கே? என் முகம்தான் கருகியது, ஆனால் என் உள்ளம் கருக வில்லை, உங்கள் முகம் கருகவில்லை ஆனால் உங்கள் உள்ளம் கருகிப்போய்விட்டதை அறிந்து கொண்டேன். முகம் அழகாயிருந்தால் மனைவி, இல்லாவிட்டால் பேய் இவ்வளவுதானா கணவனின் அன்பு என்று சொல்லிவிட்டு வேதனையோடு எழுந்து, தன் தாய் வீட்டுக்குப் போனாள் அங்கே வயது முதிர்ந்த தன் தகப்

பனும் மகளின் வாழ்க்கை சீரழிந்து போய் விட்டதே என்ற கவலையினால் பரிதாபகரமாக மரித்துப் போனார். தாயார் பல வருஷங்களுக்கு முன் மரித்துப் போனார்கள். பின்பு மார்க்ரெட்டும் அவள் சகோதரியும் சேர்ந்து, எங்கே போவதென்று தெரியாமல் தங்கள் பழைய துணிகளை பொட்டலமாக கட்டி தலையில் வைத்துக் கொண்டு வழியே போகும்போது எதிரே ஒரு தேவனுடைய மனிதன் அவர்களைக் கண்டு, மக்களே எங்கிருந்து வருகிறீர்கள்? எங்கே போகிறீர்கள்? என்று விசாரித்தார். இருவரும் தங்கள் வாழ்க்கையில் நடந்த எல்லாவற்றையும் சொன்னார்கள். அப்போது அந்த மனிதனுடைய கண்கள் கலங்கி உடைந்த குளம் போல கண்ணீர் வடிக்க ஆரம்பித்தார். அம்மனிதன் மக்களே, மனிதனுடைய அன்பு மாறிப்போகும் தேவனுடைய அன்பு மாறாதது என் விட்டிற்கு வாருங்கள். 'நாங்கள் தேவனுடைய அன்பைப் பெற்றவர்கள். நீங்களும் எங்களோடு சேர்ந்து தேவனுடைய அன்பைப் பெற்றுக் கொள்ளுங்கள், என்று சொல்லி தன் வீட்டுக்கு அழைத்துச் சென்றார். அந்த மனிதனுடைய மனைவி ரொம்ப பக்தியுள்ள ஸ்திரீ. இவர்களைக் கண்டதுமே அவர்களை அணைத்துக் கொண்டு கலங்காதீர்! தேவன் உங்களைக் கைவிடமாட்டார் என்று சொல்லி அவர்களுக்கு ஆகாரம் கொடுத்து அவர்கள் வீட்டிலேயே வைத்துக் கொண்டார்கள். இரு சகோதரியுமே தேவனுடைய அன்பைப் பெற்று கர்த்தருக்கு சாட்சியாயிருக்கிறார்கள். பிரியமானவர்களே! இதிலிருந்து நமக்குத் தெரிகிறது மனிதனின் அன்பு மாறிப் போகிறது என்றும் தேவனுடைய அன்பு நித்திய காலமாய் நிலை நிற்கிறது என்று அறிந்து கொள்ள முடிகிறது.

இதோ கர்த்தர் நம்மேல் வைத்திருக்கிற அன்பை பாருங்கள்

பின்பு கர்த்தர் என்னை நோக்கி அந்நிய தேவர்களை மதித்து, திராட்சை இரசமுள்ள பாத்திரங்களை விரும்புகிறவர்களான இஸ்ரவேல் புத்திரர் பேரில் கர்த்தர் வைத்திருக்கிற அன்புக்கு ஒப்பாக நீ இன்னும் போய் தன் நேசரால் நேசிக்கப்பட்டவளும், விபசாரியுமான ஒரு ஸ்திரீயை நேசித்துக் கொள் என்று சொன்னார். (ஓசியா 3 : 1) என்று வாசிக்கிறோம். இஸ்ரவேலர்களைக் கர்த்தர் எகிப்திலிருந்து அழைத்துக் கொண்டு வந்து, அவர்களை பாலும் தேனும் ஓடுகிற கானான் தேசத்திலே குடியேற்றினார். ஆனாலும் அவர்கள் அந்நிய தேவர்களை மதித்தார்கள். திராட்சை ரசத்தை விரும்பினார்கள். இப்படியே கர்த்தருக்குப் பிரியமில்லாத அநேகக் காரியங்களைச் செய்தார்கள். ஆனாலும் கர்த்தர் அவர்கள் மீது வைத்த தமது அன்பை குறைக்கவில்லை என்று மேற்சொல்லிய வேதவாக்கியத்திலிருந்து தெரிகிறது. ஆனபடியால் பிரியமானவர்களே! நாமும் அப்படித்தான் ஜீவித்தோம். ஆனாலும் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் அன்பினால் சிநேகிக்கப்பட்டோம், இரட்சிக்கப்பட்டோம். இப்படிப்பட்ட தேவனுடைய அன்பைப் பெற்ற சகோதரர்களே! சகோதரிகளே கர்த்தராகிய இயேசு கிறிஸ்து சொல்கிறதை பார். ஒருவன் தன் சிநேகிதனுக்காக தன் ஜீவனைக் கொடுக்கிற அன்பிலும் அதிகமான அன்பு ஒருவரிடத்திலும் இல்லை. யோ 15:13) தன்னைக் காட்டிக் கொடுக்க வந்த யூதாசை நோக்கி சிநேகிதனே! என்று அழைத்தார் (மத் 26 : 50). இதுதான் தேவனுடைய மாறாத அன்பு. இந்த அன்பை நீங்களும் பெற்றுக் கொள்ளும்படி உங்களுக்கு அறிவிக்கிறோம்.

"...தாம் இவ்வுலகத்திலிருக்கிற தம்முடையவர்களிடத்தில் அன்பு வைத்தபடியே முடிவு பரியந்தமும் அவர்களிடத்தில் அன்பு வைத்தார் (யோ13:1)

## ஞானஸ்நான கூட்டங்கள்

28.5.1958 அன்று தூத்துக்குடியில் 36 பேர்கள் திருமுழுக்குப் பெற்று திருச்சபையின் அங்கமாக இணைக்கப்பட்டார்கள். 1.7.1965 அன்று துரைசாமியாபுரத்தில் 11 பேர்கள் திருமுழுக்குப் பெற்று திருச்சபையின் அங்கமாக இணைக்கப்பட்டுள்ளார்கள் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

# பிதாவுக்கு ஸ்தோத்திரம் செலுத்துவோம்

நம்முடைய பிதாவாகிய தேவன் மனுக்குலத்தை சிருஷ்டித்தார். மனுக்குலமானது தம்மை சேவிக்கும்படியாக, அவரைத் தொழுது கொள்ளும்படியாக. ஆனால் ஆதாமின் மீறுதலின் நிமித்தமாக அவர் தம்மை சிருஷ்டித்த நோக்கம் நிறைவேற வில்லை. சில காலங்களுக்குப் பின் இஸ்ரவேலர் அவரை தொழுது கொண்டனர். ஆனால் கிறிஸ்து இயேசுவுக்குப் பின்னர் உலகமெங்கிலுமுள்ள மனுக்குலமானது பிதாவாகிய தெய்வத்தைத் தொழுது கொள்ள வழி பிறந்தது. பிதாவை எங்கும் தொழுது கொள்ளும் காலத்தில் நாம் இருக்கிறோம்.

பழைய ஏற்பாட்டின் நாட்களில் பிதாவுக்குப் பலியை செலுத்தினார்கள். கிறிஸ்துவுக்குப் பின்னர் நாம் பிதாவுக்கு ஸ்தோத்திர பலிகளை செலுத்தும் காலமாக இருக்கின்றது. ஓசியா பக்தர் சொல்லுகின்றார், நாம் நமது உதடுகளின் காளைகளை செலுத்துவோம் என்று (ஓசி 14:2), எபிரேயருக்கு எழுதின நிருப கர்த்தர் சொல்லுகின்றார் உதடுகளின் கனியாகிய ஸ்தோத்திர பலி என்று (எபி 13:15). இப்படியாக நாம் பிதாவாகிய தெய்வத்திற்குப் பலி செலுத்தும்படியான சிலாக்கியம் ஏழைகளும், கோழைகளும், பாவிகளுமாயிருந்த நமக்குக் கிடைத்திருக்கின்றது. அதற்காக பிதாவாகிய தேவனுக்கு ஸ்தோத்திரம் செலுத்துவோம்.

நாம் ஸ்தோத்திரம் செலுத்தும்போது என்ன நடக்கிறது என்பதைக் குறித்து பார்ப்போம்.

1. நாம் ஸ்தோத்திரம் செலுத்தும் போது முதலாவது நான் என்கிற சுபாவம் நம்மை விட்டு அகலுகின்றது. எப்படியெனில் நாம் ஏதேனும் ஒருகாரியம் நடைபெற, அல்லது ஏதாவது தேவைக்காகப் பிதாவை நோக்கி ஸ்தோத்தரிக்கின்றோம், விண்ணப்பம் செய்கின்றோம். பிதாவே இந்த காரியத்துக்காக உம்மை ஸ்தோத்தரிக்கின்றேன் என விண்ணப்பம் செய்கின்றோம். அதாவது இந்தக் காரியம் என்னால் ஆகிறதல்ல, என்னால் இதைச் செய்ய முடியாது, நீரே செய்யவேண்டும் நீரே இதில் தலையிட வேண்டும் எனச் சொல்லும் போது, நான் என்கின்றது நமது உள்ளத்திலிருந்து மறைந்து அவ்விடத்தில் தேவனுக்கு இடம் உண்டாக்குகின்றோம் எனவே காரியம் வாய்க்கின்றது. இப்படி நாம் பிதாவை ஸ்தோத்தரிக்கும் பொழுது நான் என்கிற சுபாவம் நம்மிலிருந்து மறைகின்றது இஸ்ரவேலர்கள், பக்தராகிய யோசுவாவின் நாட்களில் எரிகோ மதிலை வீழ்த்த அவர்கள் உபயோகித்த ஆயுதம் ஸ்தோத்திரமாகும். மனிதர்களால் அந்த மதிலை வீழ்த்தமுடியாது எனவே அவர்கள் கர்த்தரின் ஆலோசனைப் படி ஸ்தோத்திரப் பலிகளை செலுத்தினர். ஒருவராலும் அசைக்கக்கூடாதிருந்த மதில் எந்தவித வேலையும், பிரயாசமுமின்றி வீழ்ந்தது. அப்படியே ஒரு மனிதனாலும் அடக்க முடியாத எரிகோ மதிலுக்கு ஒப்பான 'நான்' என்கிற சுபாவத்தை வீழ்த்த கர்த்தரை ஸ்தோத்தரிப்போம்

2. ஸ்தோத்திரம் செலுத்துவதின் மூலம் அசுத்தமான எண்ணங்களும், அசுத்த ஆவிகளும் ஓடுகின்றன. எப்படியெனில் நமது உள்ளத்திலிருந்து புறப்படுகின்றதே மனிதனைத் தீட்டுப்படுத்தும் என பார்க்கின்றோம் (மத் 15:19). நமது உள்ளத்தில் தீய சிந்தனைகள் உண்டாகும் போது நமது பிதாவுக்கு ஸ்தோத்திர பலிகளை செலுத்த வேண்டும், அலைபாய்கின்ற நமது மனத்தை பிதாவுக்கு நேராய் திருப்பும் பொழுது அந்த தீய எண்ணங்கள் முற்றிலுமாக மாற்றப்படுகின்றது. அதுபோலவே அசுத்த ஆவிகள் உள்ளே குடிகொண்டிருந்தால் பிதா நம் உள்ளத்தில் மகிமைப்படும்போது அசுத்த ஆவிகள் ஓடிவிடுகின்றன. மாம்சத்தின் [பிசாசின்] கிரியைகள் வெளியரங்கமாயிருக்கின்றன. அவையாவன விபசாரம், வேசித்தனம், அசுத்தம், காமவிகாரம், விக்கிரகாராதனை, பில்லிசூனியம், பகைகள், விரோதங்கள், வைராக்கியங்கள், கோபங்கள், சண்டைகள், பிரிவினைகள், மார்க்க பேதங்கள், பொறாமைகள், கொலைகள், வெறிகள்,

களியாட்டுகள் முதலானவைகளே (கலா 5:19-21). மாம்சத்தின் (பிசாசின்) கிரியைகள் சம்பந்தப்பட்ட எண்ணங்கள் நமக்கு உண்டாகும் பொழுது நாம் மனதை திருப்பி ஸ்தோத்திரம் செய்ய வேண்டும். அப்பொழுது தீய எண்ணங்கள் நம்மை விட்டு அகன்று போகும்.

பிசாசு பிடித்த ஒருவர் பக்கத்திலோ, அல்லது பிசாசின் கிரியைகள் நடக்கின்ற ஒரு இடத்திலோ மெய்யான கிறிஸ்துவின் பக்தர் ஒருவர் நின்று ஸ்தோத்திரம் செலுத்தினால் அந்த கிரியைகள் முறியடிக்கப்படும். ஒருமுறை பிசாசின் உதவியோடு வேடிக்கைக் காட்டிக் கொண்டிருந்த மனிதனின் கூட்டத்தில் ஒரு பரிசுத்த ஆவியின் அபிஷேகம் பெற்ற விசுவாசி நின்று கொண்டு மௌனமாக தனது மனதிற்குள் ஸ்தோத்திரம் சொல்லிக் கொண்டு இருந்தார். மக்களை அசுத்த ஆவியினால் ஏமாற்றிக் கொண்டிருந்த மனிதனால் மேற்கொண்டு கிரியைகளை நடப்பிக்க முடியாமல் தனது மூட்டை முடிச்சுகளை கட்ட ஆரம்பித்து விட்டான். இவ்வண்ணமாக நாம் ஸ்தோத்தரிப்பதின் மூலம் அசுத்த ஆவிகளையும், அதின் கிரியைகளையும், ஏன் மாம்ச கிரியைகளையும் கூட முறியடிக்கலாம்.

3. நாம் பிதாவை மௌனமாக ஸ்தோத்தரிப்பதின் மூலம் தேவனது மகிமையைக் காணலாம்.

தேவனுடைய பிள்ளை ஒருவர் ஸ்தோத்தரித்துக் கொண்டிருக்கும் பொழுது தான் என்பதை மறந்து அவரது உள்ளம் தேவனிடத்தில் ஒன்றிக்கொண்டிருக்கும்பொழுது அவர் தேவனின் மகிமையைக் காண முடியும். சாலமோன் ராஜாவின் நாட்களிலும்கூட தேவனுடைய வார்த்தையின்படி எல்லாம் செய்து பலி செலுத்தின பொழுது தேவனுடைய ஆலயத்தைக் கர்த்தருடைய மகிமை நிரப்பியது என்று நாம் வாசிக்கின்றோம் (I இரா 8:5-10). அப்படியே கிறிஸ்து இயேசு ராஜாவின் இந்நாட்களில் தேவனுடைய ஆலயமாக இருக்கிற நாம் (1 கொரி 3:16) தேவனின் வார்த்தையின்படி நாம் எல்லாவற்றிற்காகவும், எப்பொழுதும ஸ்தோத்திரம் செய்யும் பொழுது (பிலி 4:6). தேவனுடைய மகிமையைக் காணலாம். தேவனுடைய மகிமையையும் அதே வேளையில் நம்மால் விவரிக்க முடியாத ஆனந்தத்தையும் கண்டு கொள்ளலாம் (பிலி 4:7).

4. தேவனை ஸ்தோத்தரிப்பதின் மூலம் வல்லமையைப் பெற்றுக் கொள்ளலாம்.

தேவனை ஸ்தோத்தரித்து தேவ மகிமையை காண்கின்ற அதே வேளையில் நாம் கர்த்தரிடத்தில் இருந்து கர்த்தருடைய வல்லமையையும் பெற்றுக் கொள்ளலாம். ஏனென்றால் வல்லமை தேவனுடையது அவர் சர்வ வல்லவர். சத்துவத்தைக் கொடுக்கின்றவர், வல்லமையையும் கொடுக்கின்றவர், இப்படி தனது பிள்ளைகளின் தேவைகளை பூர்த்தி செய்கிற நமது பரம பிதாவினிடத்தில் நாம் கேட்பதின் மூலம் அல்லது நாம் அவரை மகிமைப்படுத்துவதின் மூலம் பெற்றுக் கொள்ளலாம்.

ஒரு முறை கர்த்தர் ஒரு வெளிப்பாடு ஒன்றைக் கொடுத்தார். ஒரு மனிதர் சிறு குழந்தைகள் எல்லோரையும் ஒழுங்காக வரிசையில் நிற்கச் சொல்லுகிறார். அப்பொழுது அக்குழந்தைகள் அவரது வார்த்தையின்படி (அவர் சொன்னபடியால்) ஒழுங்காக நின்ற காரணத்தால் அவர் குழந்தைகளுக்கு இனிப்புகளை வழங்குகின்றார். அதில் அவருக்கு பரிட்சையமான நன்கு பழகிக் கொண்டிருக்கின்ற குழந்தையானது அந்த மனிதரிடத்தில் அதிகாரமாக நெருங்கி பழகினபடியால் அவரிடத்தில், எனக்கு இப்பொழுது இரண்டு மிட்டாய்கள் வேண்டும் என பிடிவாதத்துடன் கேட்டுப் பெற்றுக் கொண்டு திரும்புகின்றது. அப்பொழுது கர்த்தர் பேசினார் இந்தப் பிரகாரமாக நாம் தேவனை ஸ்தோத்தரித்து அவருக்கு மகிமையைச் செலுத்தி அவரிடத்தில் நமது தேவைகளைப் பெற்றுக் கொள்ளலாம். தேவனிடமிருந்து நாம் எப்படி வல்லமையை பெற்றுக் கொள்ள முடியும் என்பதை ஒரு நடந்த சம்பவத்தின் மூலம் விளக்குகின்றேன்.

(தொடரும்)

## அல்லேலூயா! கர்த்தருடைய பரிசுத்த நாமத்திற்கு ஸ்தோத்திரம்

16 மே முதல் 25 மே, 1958 முடிய தூத்துக்குடியில் ஊழியர் மாநாடு மிக வெற்றிகரமாக நடந்து முடிந்தது. அதைத் தொடர்ந்து 27, 28, 29 மே 1958 ஆகிய நாட்களில் தூத்துக்குடி தருவை மைதானத்தில் புதிய எருசலேம் சபை கன்வென்ஷன் மிக சிறப்பாகவும் வெற்றிகரமாகவும் நடந்து முடிந்தது! ஆயிரக்கணக்கான மக்கள் கன்வென்ஷனில் பங்கு பெற்று இரட்சிப்பையும் தெய்வீக விடுதலையையும், ஆசீர்வாதத்தையும் பெற்றுக் கொண்டார்கள்! திருச்சபை எழுப்புதலடைந்தது! புதிய எருசலேம் சபை கன்வென்ஷனுக்கு மக்களை வரவிடாமல் தடுக்கும்படி சாத்தான் பலவித முயற்சிகளைக் கையாண்டான். தூத்துக்குடியில் 12 இடங்களில் எதிர்க் கன்வென்ஷன்கள் நடந்தன. ஆனாலும், திருச்சபை வெற்றியடைந்து சத்தியம் நிலை நாட்டப்பட்டது. வேதப்புரட்டர்களுடைய முகங்களில் கரிபூசப்பட்டது மக்கள் திரளாய் கூடி வந்து தேவனுடைய மகிமையைக் கண்டார்கள். சத்தியமும் திருச்சபையும் எங்கும் பிரசித்தமாயிற்று. தூத்துக்குடி பட்டணத்திற்கு பெரிய ஆசீர்வாதம் உண்டாயிற்று. அநேக மக்கள் திருச்சபையின் அங்கமாக மாற்றப்பட்டார்கள். சனிக்கிழமை (28.5.1958) கடற்கரையில் நடந்த ஞானஸ்நானக்கூட்டத்தில் 36 பேர் ஞானஸ்நானம் பெற்றுக் கொண்டார்கள். இவ்விதமாய்க் கர்த்தர் கூட இருந்து கிரியை நடப்பித்தார். நடந்த அற்புத அடையாளங்களிலும் தேவனுடைய வசனம் உறுதிப்பட்டது. இதற்காக ஜெபித்த, தியாகம் செய்த உழைத்த உங்கள் எல்லோருக்கும் இயேசுவின் நாமத்தில் எங்கள் வாழ்த்துதல் உரித்தாகுக!

## திருமணங்கள்

| மணமகன் | மணமகள் | காலம் | இடம். |
|---|---|---|---|
| Bro. ஏசுவடியான் | Sis. எஸ்தர் ஞானமணி | 2.6.1958 | வள்ளியூர் |
| Bro. பாக்யராஜ் | Sis. கிறிஸ்டி பாய் | 8.6.1958 | நெய்வேலி |
| Bro. ஞானசேன் | Sis. எஸ்தர் | 10.6.1958 | கோயம்புத்தூர் |

## கர்த்தருக்குள் நித்திரையானார்.

பெங்களூர் சபையின் அங்கமான Bro. காலேப் அவர்கள், 67 வயது, 1.7.1958 அன்று கர்த்தருக்குள் நித்திரையானார். அவர் தம்முடைய விசுவாச வாழ்க்கையில் உறுதியாயிருந்து, நல்ல போராட்டத்தைப் போராடி விசுவாசத்தோடு கர்த்தருக்குள் நித்திரையானார் என்பதை தெரிவித்துக் கொள்கிறோம். அவர் விட்டுச் சென்ற அவருடைய பிள்ளைகள் எட்வின், பிரபுலா ஆகியோர்களை கர்த்தர் ஆறுதல் படுத்தும் படியாகவும் கிறிஸ்துவுக்குள் நிலைநிறுத்தும் படிக்கும் யாவரும் ஜெபிக்கும்படி கேட்டுக் கொள்கிறோம்.

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் -56-57 ★ AUG - SEP 1988

"புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ரோ)ரென்று நீங்கள் அறியீர்கள். விழித்திருங்கள் உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்."

மாற்கு 13 : 35-37

EDITOR : CHIEF PASTOR N. LAZAR

BOMBAY. INDIA.

# ஆசிரியர் உரை

பிரியமான தேவனுடைய ஜனமே, கர்த்தருடைய பரிசுத்த நாமத்திற்கு ஸ்தோத்திரமுண்டாவதாக! உலகத் தோற்றம் முதற்கொண்டு அந்தம் மட்டும் தேவனுக்கு தம்முடைய கிரியைகளெல்லாம் தெரிந்திருக்கிறது (அப். 15:18). தேவன் உலகத் தோற்றத்துக்கு முன்பே கிறிஸ்துவுக்குள் நம்மைத் தெரிந்து கொண்டார் (எபே. 1:4). ஆதாம் உருவாக்கப்படுமுன்பே தேவ குமாரனாகிய இயேசுகிறிஸ்து பூவுலகத்துக்கு வரப் போகிறதையும் தேவன் முன்னறிந்ததுமல்லாமல் அவர் வந்து பாடுபட்டு மரித்து அடக்கம் பண்ணப்பட்டு உயிர்த்தெழுந்ததின் மூலமாக தம்முடைய குமாரனுக்கு மணவாட்டியை உருவாக்கவும், குமாரனோடு சேர்ந்து உலகை ஆளுகை செய்யவும் தேவன் கிறிஸ்துவுக்குள் நம்மை முன்னறிந்து தெரிந்து கொண்டார். இப்படி அவருடைய மணவாட்டியை உருவாக்குகிற செயலை தேவன் தீவிரமாக நடப்பித்துக் கொண்டிருக்கிறார். தேவனுடைய திட்டங்களும் தீர்மானங்களும் மாறாதவைகளே. உலகத்தில் நடைபெறுகிற எந்த செயல்களும் தேவனுடைய திட்டத்தை நிறைவேற்றுவதற்காக நடைபெறுகிற செயல்களே. அரசியல் மாற்றங்கள், தீய மக்களின் எழுச்சிகள், யுத்தங்கள், கலவரங்கள், பாவப் பெருக்கம் ஆகிய இவைகளெல்லாம் இறைவனது திட்டத்துக்கு மாறானவைகளல்ல. இறைத் திட்டத்தை நிறைவேற்றவே உதவி புரிகின்றன என்று நம்பலாம். தேவனுடைய ஆளுகையானது, உலகத்தில் நடைபெறுகிற தீமையை நன்மையாக மாற்றி, தம்முடைய திட்டத்தை நிறைவேற்றும் கருவிகளாக அவைகளை உபயோகித்துக்கொள்ள தேவன் வல்லவராக இருக்கிறார். ஆனபடியால், தேவ ஜனங்கள் தங்கள் வாழ்க்கையிலும், உலகத்திலும் நடைபெறுகிற சம்பவங்களைக் கண்டு இளைத்துப் போகாமல், "என்னாலே இந்தக் காரியம் நடந்தது" என்று கர்த்தர் சொல்கிறார் (I ராஜா. 12:24) என்று நம்பி, தைரியமாயிருந்து தேவனோடு கூட இசைந்து, தேவனுடைய திட்டம், சித்தம் உங்களில் நிறைவேற, உலகில் நிறைவேற ஒத்துழையுங்கள். ஜெபியுங்கள். தேவனோடு இசைந்து நடவுங்கள். மனிதனைக் குறித்த அவருடைய அநாதி தீர்மானங்களை எண்ணி, தேவனை ஸ்தோத்தரித்து, தைரியமாயிருங்கள். அவருக்கு ஊழியஞ் செய்யுங்கள், வாழ்க்கையில் நடைபெறுகிற எந்தச் செயலும் தற்செயலாக அல்ல, தேவச் செயலாக, அதாவது தேவன் திட்டமிட்டு நடப்பிக்கிற காரியமாக எண்ணி கர்த்தரை ஸ்தோத்தரியுங்கள். சந்தோஷமாயிருங்கள். கர்த்தர், கிறிஸ்துவுக்குள் உன்னதங்களிலே ஆவிக்குரிய சகல ஆசீர்வாதத்தினாலும் உங்களை ஆசீர்வதிப்பாராக!

கிறிஸ்துவுக்குள்,

Chief Pastor N. LAZAR

# பாவமன்னிப்பு

(தொடர்ச்சி)

முடிவாக தேவ ஜனங்கள் அறிய வேண்டியது, நாம் இப்பொழுது புதிய ஏற்பாட்டின் காலத்தில் இருக்கிறோம். புதிய ஏற்பாட்டின் நிலையை சிலர் அறிந்து கொள்ளாதபடியால் எல்லாவற்றையும் போட்டு குழப்புகின்றனர். புதிய ஏற்பாட்டின் சபை, புதிய ஏற்பாட்டின் ஊழியம் என்பது நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் உயிர்த்தெழுதலுக்குப்பின், பெந்தெகொஸ்தே நாட்களுக்குப் பின் ஆரம்பமாகிறது (அப்.1:1; 10:40-42 லூக் 24:47-49; அப்1: 5,8). நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து நம்முடைய பாவங்களுக்காக கல்வாரி சிலுவையில் இரத்தம் சிந்தி மரித்து உயிர்த்தெழுமுன்பும் சீஷர்கள் ஊழியம் செய்தார்கள். இயேசு கிறிஸ்து சீஷர்களுக்கு கட்டளை கொடுத்து ஊழியத்திற்கு அனுப்பி பயிற்சி கொடுத்தார் (மத். 10: 15; லூக். 6:13-16; மாற். 3:14-19; யோ. 3:22; 4:3; லூக். 10:1-11) சீஷர்கள் எல்லாவற்றையும் விட்டு கிறிஸ்துவைப் பின்பற்றினார்கள். மனந்திரும்புதலின் பிரசங்கம் செய்தார்கள். வியாதியஸ்தர்களை சொஸ்தமாக்கினார்கள். பிசாசுகளை துரத்தினார்கள். அற்புதங்களை, அடையாளங்களைச் செய்தார்கள். ஆனால் பரிசுத்த ஆவியின் அபிஷேகம் பெறவில்லை அது புதிய ஏற்பாட்டின் ஊழியமுமில்லை, திருச்சபையின் ஊழியமும் இல்லை. அந்த ஊழியத்தில் யூதாசும் பங்கு பெற்றிருந்தான் 70 சீஷர்களும் பங்கு பெற்றிருந்தார்கள். ஆனால் அவர்களில் அநேகர் பின்மாறி விட்டனர் (யோ. 6:60,66). யூதாஸ் இயேசுவைக் காட்டிக் கொடுத்து நான்று கொண்டு செத்தான் (மத். 27:3-5). அந்த ஊழியத்தைத்தான் சிலர் இன்று செய்கிறார்கள். அந்த உபதேசத்தைத்தான் உபதேசித்து ஞானஸ்நானம் கொடுத்துக் கொண்டு திரிகிறார்கள்.

புதிய ஏற்பாட்டின் ஊழியமோ இயேசு கிறிஸ்து தாம் உயிர்த்தெழுந்த பின்பு அப்போஸ்தலருக்கு கட்டளையிட்டு, வாக்குத்தத்தம் பண்ணப்பட்ட பரிசுத்தாவியைக் காத்திருந்து பெற்றுக் கொண்டு ஊழியம் செய்யுங்கள் என்று கட்டளையிட்டார். பின்பு இயேசு பரமேறிச் சென்றார் (மாற் 16: 15-18; மத் 28: 18-20; லூக். 24: 47-49, யோ. 20:19-23; 21:15-17; I கொரி. 11:23-26; அப். 1:1-3,5,8, 10; 40-42). அப்போஸ்தலர்களும் அவருடன் சேர்ந்திருந்த விசுவாசிகளும் காத்திருந்து ஜெபம் பண்ணி (அப் 1: 12-14) பரிசுத்த ஆவியைப் பெற்றுக்கொண்டார்கள் (அப். 2:1-4) திருச்சபை பூமியில் எழும்பிற்று. சீஷர்கள் தங்கள் ஊழியத்தை ஆரம்பித்தார்கள் (அப். 2: 14-47). அப்பொழுது பேதுரு, மக்கள் பாவமன்னிப்பு பெற்று தேவனுடைய சபையாக மாற, பரிசுத்தாவி பெற பாவமன்னிப்புக்கென்று தண்ணீர் ஞானஸ்நானம் பெற்றுக்கொள்ள வேண்டும் என்று போதித்தார் (அப் 2:38). வெகுகாலத்துக்குப்பின் கிறிஸ்து இயேசுவை ஏற்றுக்கொண்ட சவுலுக்கும் (அப். பவுல்) தண்ணீர் ஞானஸ்நானம் பெற்று பாவ மன்னிப்பை பெற்றுக் கொள்ளும்படிக்கே கட்டளையிடப்பட்டது (அப். 22:16). கிறிஸ்து இயேசுவும், ஒருவன் விசுவாசிப்பது மாத்திரமல்ல, விசுவாசமுள்ளவனாகி ஞானஸ்நானம் பெற்றவனே இரட்சிக்கப்படுவான் (பாவ மன்னிப்பு பெறுவான்) என்று திருவுளம் பற்றினார் (மாற். 16:16) ஆகவே, இது திருச்சபையின் பகுதியாகும். புதிய ஏற்பாட்டில் பாவ மன்னிப்பு தண்ணீர் ஞானஸ்நானத்துடன் தொடர்புடையதாகும் (அப். 2:38; 22:16; 1 பேது. 3:21). இப்பொழுது பாவ மன்னிப்பு கிறிஸ்துவுக்குள் அவருடைய இரத்தத்தினால் உண்டாகிறது கிறிஸ்துவுக்கு வெளியேயல்ல (எபே. 1:7; கொலோ 1:14). கிறிஸ்து இயேசுவை விசுவாசிக்கவோ ஏற்றுக்கொள்ளவோ ஒரு மனிதனுடைய உதவியும் தேவையில்லை. ஆனால், அவன் இரட்சிக்கப்பட, பாவ மன்னிப்பு பெற அவன் அறிக்கை செய்ய வேண்டும் (ரோம 10:9; மத 10:32; அப். 8:37). ஞானஸ்நானம் பெற வேண்டும் (மத். 3:5,6). ஒப்புரவாக வேண்டியவர்களிடத்தில் ஒப்புரவாக வேண்டும். திருடினதை, வஞ்சித்து எடுத்துக் கொண்டதை திருப்பிச் செலுத்த வேண்டும் (லேவி. 6: 1-7 ; 5:4-6). ஞானஸ்நானத்தினால் சுத்தி

கரணம் உண்டாகிறது (எபே. 5:26; யோ. 3:22-27; I பேது. 3:21). இப்படி முழுகினவன் சுத்தமாயிருக்கிறான் (யோ. 13: 10). ஏனெனில் இரட்சிப்பு கிறிஸ்து இயேசுவுக்குள் இயேசுவின் இரத்தத்தினால் உண்டாகிறது வெளியே அல்ல (எபே.1:7; கொலோ 1:14). அவனை கிறிஸ்துவுக்குள்ளாக்குகிறது ஞானஸ்நானமேயாகும். தண்ணீர் ஞானஸ்நானத்தினாலும் பரிசுத்த ஆவியின் ஞானஸ்நானத்தினாலுமே மனிதன் கிறிஸ்துவுக்குள்ளாக்கப்படுகிறான் (கலா 3:27; ரோம. 6:3,4; கொலோ. 2:12; I கொரி. 12:13; 1:30). கிறிஸ்துவுக்குள்தான் சகல ஆசீர்வாதங்களும் (எபே. 1:3; பிலி 3:9) கிடைக்கிறது.

ஆனால், நவீன பிரசங்கிகள் கிறிஸ்துவுக்கு வெளியே இரட்சிப்பு என்று பிரசங்கிக்கிறார்கள். எப்படியெனில், நீங்கள் இரட்சிக்கப்படும்படி எந்த சபைக்கும் போகவேண்டாம், நீ எங்கேயும் இருந்து இயேசுவை நோக்கி பாவ அறிக்கை செய்து ஜெபம் பண்ணு நீ இரட்சிக்கப்படுவாய், எந்த மனிதனிடமும் போக வேண்டாம் என்று கள்ள பிரசங்கம் செய்கிறார்கள். நீங்கள் இருக்கிற இடத்திலேயே இருந்து உங்கள் பாவங்களை அறிக்கை செய்யுங்கள் அல்லது வீட்டில் தூங்கப்போகும் போது இயேசுவை நோக்கி பாவ அறிக்கை செய்யுங்கள் (வேதத்தில் இல்லாதது) என்று பிரசங்கிக்கிறார்கள். ஒரு இந்து பிராமணர் இருக்கிறார் என்று வைத்துக் கொள்ளுங்கள். அவர் இந்த பிரசங்கத்தைக் கேட்கிறார் இயேசுவை விசுவாசித்து அப்படியே தன் வீட்டில் இருந்து ஜெபம் பண்ணுகிறார். அவர் இரட்சிக்கப்படுவாரா? அவர் ஞானஸ்நானம் எடுக்க, கிறிஸ்துவை அறிக்கை பண்ண, தேவனைத் தொழுது கொள்ள, சாட்சி கொடுக்க, திருவிருந்தில் பங்குபெற அவசியமில்லையல்லவா? அந்த பிராமணர் கிறிஸ்தவரா?

நேசருங்கள், ஒருவன் இரட்சிக்கப்படும்படி மனந்திரும்பி இயேசுகிறிஸ்துவை விசுவாசித்து திருச்சபை முன் அல்லது தேவ ஊழியர் முன் அவரை அறிக்கை செய்து (அப். 8:37, 38; ரோ. 10:9) திருச்சபையின் அங்கமாகும் ஞானஸ்நானத்தைப் (தண்ணீர் பரிசுத்த ஆவி) பெற்றுக்கொள்ள வேண்டும் (மத் 16:16; அப். 2: 35-42). அப்பொழுதே அவர் இரட்சிக்கப் படுவார், கிறிஸ்தவராவார் உதாரணம்: யூதர்கள் (அப் 2: 37-42). சமாரியர்கள் (அப். 8:12,13), கந்தாகே என்பவளின் மந்திரி (அப் 8: 35-39), கொர்நெலியு வீட்டார் (அப் 10:34-48), லீதியாளும் அவள் குடும்பத்தாரும் (அப் 17:14,15). அப்போஸ்தலனாகிய பவுல் (அப் 22:16;9:18), சிறைச்சாலைத் தலைவனும் அவன் குடும்பத்தாரும் (அப் 15:31-33) இன்னும் பலர். இவர்களெல்லாரும் விசுவாசித்தது மாத்திரமல்ல உடனே ஞானஸ்நானமும் பெற்றுக் கொண்டார்கள்.

இப்படி கிறிஸ்தவனை பின்பு வாழ்க்கையில் அறியாமல் செய்த தவறுகள் குற்றங்களை சபையின் மந்திரிகளை அல்லது அதிகாரம் பெற்ற ஊழியர்களிடமோ பாவத்தை அறிக்கை செய்து விட்டுவிட்டு கால்களைக் கழுவிக் கொண்டு (யோ.13:10) கர்த்தருடைய பந்தியில் பங்கு பெறுவதின் மூலம் (I கொரி 11:23-26) பாவமன்னிப்பையும், பரிசுத்த பெலத்தையும் பெற்றுக்கொண்டு பரிசுத்த வாழ்க்கையில் முன்னேறி செல்லுங்கள். மனித அபிப்பிராயங்களுக்குச் செவி கொடாதிருங்கள். வேதத்திற்கே செவி கொடுங்கள். அவருடைய வசனமே சத்தியம் (யோவா 17:17). சத்தியவான் எவனும் எங்கள் சத்தம் கேட்கிறான் (யோ. 18:37).

---

"தன் பாவங்களை மறைக்கிறவன் வாழ்வடைய மாட்டான்; அவைகளை அறிக்கை செய்து விட்டு விடுகிறவனோ இரக்கம் பெறுவான்".

நீதி. 28: 13.

---

# ஆதியாகமத்தைப் பற்றி ஓர் ஆராய்ச்சி

(தொடர்ச்சி)

ஆதி 6:1—4 மனுஷர்கள் பூமியிலே பெருகத் தொடங்கி அவர்களுக்கு குமாரத்திகள் பிறந்த போது தேவகுமாரர் மனுஷ குமாரத்திகளை அதிக சௌந்தர்யமுள்ளவர்களென்று கண்டு அவர்களுக்குள்ளே தங்களுக்கு பெண்களைத் தெரிந்து கொண்டு அவர்களோடு கூடிக் கலந்தார்கள். அதினால் அவர்களுக்கு பிள்ளைகள் பிறந்தன. அவர்களுக்கு (தேவகுமாரர்களுக்கு) பிறந்த பிள்ளைகள் எல்லோரும் இராட்சதர்களாக இருந்தார்கள்.

ஜலப்பிரளயத்திற்கு முன்பு மட்டுமல்ல, ஜலப்பிரளயத்திற்கு பின்பும் தேவ குமாரர்கள் மனுஷ குமாரத்திகளோடு சம்பந்தம் கலந்து இராட்சதர்களைப் பெற்றார்கள். (எண்ணா. 13:33; உபா. 2:10,11; II சாமு. 21:15,22; I நாளா. 20:4-8). இந்த தேவகுமாரர் விழுந்துபோன தேவ தூதர்களே. இவர்கள் சாத்தானுடைய கூட்டத்தை சேர்ந்தவர்கள். இதை ஏற்கனவே பத்திரிகையில் (DEC. 83 ஆதி. 6:1-4 வேதபாடம், JUL-AUG 87, முத்தின உலகம்) எழுதியிருக்கிறோம். சில பரியாசக்காரர்கள் இதைக் குறித்து பரியாசம் பண்ணி பிரசங்கித்து வருவதாக அறிந்தேன். விசேஷமாக பாஸ்டர் ஹென்றி என்பவர் (படம் போட்டு கதை சொல்லி திரிகிறவர்) தேவதூதர்களுக்கு இறக்கைகள் உண்டு என்றும், தேவதூதர்கள் ஆவிகளாக இருக்கிறார்கள் அவர்களுக்கு சரீரம் இல்லை, அவர்களில் கொள்வனை, கொடுப்பனை இல்லையென்றும் பிதற்றி திரிகிறதாகக் கேள்விப்பட்டோம். பொதுவாக கிறிஸ்தவ உலகத்தில் பாரம்பரியமாக சில தவறுகள் பிரசங்கிக்கப்பட்டு வருகின்றன. கிறிஸ்தவர்களில் பெரும்பாலோனோர் ஆதி 6:1-4ல் காணப்படும் தேவபுத்திரர்கள் சேத்தின் சந்ததிகள் என்றே பிரசங்கித்தும், நம்பியும் வருகிறார்கள். மனித அபிப்பிராயங்கள் எவ்வளவு பெரிய மனிதராக இருந்தாலும் சரி, சத்திய வசனத்தின்படி தவறு என்றால் தவறுதான். உண்மையை நாங்கள் சொல்வதினால் தூஷிக்கப்பட்டால் அதற்காக நாங்கள் சந்தோஷப்படுகிறோம். தூஷிக்கப்படுகிறோம், எதிர்க்கப்படுகிறோம் என்பதற்காக நாங்கள் சத்தியத்தை விட்டுக் கொடுத்துவிட்டு பின் வாங்க மாட்டோம். சத்தியம், சத்தியமே! சத்தியமே ஜெயிக்கும்! நிலைக்கும். ஒரு சபையின் பத்திரிகையில் அந்த சபையில் அப்போஸ்தலர் என்று சொல்லிக் கொள்ளப்பட்டவர், தன்னுடைய கட்டுரை ஒன்றில் மிரியாம், மோசேயின் தங்கையென்று எழுதியிருந்ததை சுட்டி காட்டி ஒருவர், ஐயா, மிரியாம் மோசேயின் அக்காள் அல்லவா? மோசேயை விட 6 வயது மூத்தவள் என்று சொன்னதற்கு (யாத் 7:7; யாத் 2:1-10) அந்தச் சபையின் விசுவாசி, எங்கள் அப்போஸ்தலர் தங்கை என்று எழுதியிருந்தால் தங்கைதான்; எங்கள் அப்போஸ்தலர் எழுதினது எழுதினதே என்றாராம். அப்பொழுது இந்த விசுவாசி சொல்லியிருக்கிறார்; வேதத்தில் அப்படியில்லையென்று சொன்ன பொழுது, வேதாகமத்தில் எழுதியிருக்கிறது பொய், எங்க அப்போஸ்தலர் சொல்லுகிறதுதான் சரி என்றாராம். தேவ ஜனங்கள் இப்படியிராதபடி சத்தியத்திற்கு திரும்பும்படி கேட்டுக் கொள்கிறோம். ஒருவர் ஒரு பொய்யையோ, ஒரு அபிப்பிராயத்தையோ பரப்பினால் அதையேதான் ஒப்புக்கொள்ள வேண்டும், எல்லாரும் அதையேதான் பிரசங்கிக்க வேண்டும் என்று எதிர்பார்ப்பது மகா பெரிய மதியீனமாகும். சத்தியத்தை அறியாமல் பரியாசம் பண்ணுவது கடைசி கால அந்திக் கிறிஸ்துவின் கனிகளில் ஒன்று, என்பதை தேவ ஜனங்கள் அறிந்து கொள்ளவும் (II பேது. 3:3).

(1) தேவ தூதர்களில் இறக்கையில்லாத தூதர்களும் உண்டு. ஆபிரகாமுக்கு பகலில் தரிசனமான மூன்று விருந்தினர்களில் ஒருவர் கர்த்தர் என்றும், மற்றிருவர் தேவ தூதர்கள் என்றும் நாம் அறிவோம் அந்த தேவ தூதர்களுக்கு இறக்கைகள் இருந்ததா? ஆதி. 18,19 அதிகாரங்கள்.

(2) பரலோகத்திலுள்ள தேவ தூதர்களில் கொள்வினையும், கொடுப்பினையும் இல்லையென்றே வேதத்தில் எழுதியிருக்கிறது (மத். 22 : 30) விழுந்து போனதேவதூதர்கள் உருவம் கொள்வதும் பாவம் செய்வதும் உண்டு. (உ. ம்) சாத்தான் சர்ப்ப ரூபத்தில் வந்து ஆதி மனுஷியிடம் பேசியது (ஆதி 3 –ம் அதி).

(3) தேவகுமாரர், தேவபுத்திரர் (SONS OF GOD) என்ற வார்த்தை பழைய ஏற்பாட்டில் 5 தடவை வருகின்றது. இந்த ஐந்து இடங்களிலேயும் அது தேவ தூதர்களையே குறிப்பிடுகின்றது (ஆதி. 6 : 2; யோபு. 1 : 6; 2 : 1, 38 : 7; தானி. 3 : 25, 28).

(4)சேத்தின் குமாரர் தேவபுத்திரர் என்று அழைக்கப்படுவதற்கு சேத் தேவனல்ல. சேத் ஆதாமின் சாயலும் ரூபமுமுடைய ஆதாமின் குமாரர் (ஆதி 5:3)

(5) சேத்தின் குமாரர் தேவபக்தியுள்ள சந்ததியென்றும் காயீன்குமாரர் தேவ பக்தியில்லாத சந்ததியென்றும், எண்ணுவதால், சேத்தின் குமாரர் தேவபுத்திரர் என்று சிலர் நினைக்கிறார்கள். அப்படியானால் ஏனோக்கு, நோவா, ஆபிரகாம், மோசே, தாவீது போன்ற எல்லாப் பரிசுத்தவான்களுடைய சந்ததிகளும் தேவபுத்திரர் என்றாகும். வேதாகமம் அப்படிச் சொல்லவில்லை. எந்த பரிசுத்தவானுடைய சந்ததிகளும் தேவகுமாரர் (தேவபுத்திரர்) அல்ல. புதிய ஏற்பாட்டிலும் கூட எந்தப் பரிசுத்தவானின் பிள்ளையும் தேவபுத்திரர் அல்ல கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசித்து ஏற்றுக்கொண்டு மறுபடியும் பிறந்தால் மாத்திரம் அவர்கள் தேவனுடைய பிள்ளைகளாகும் (யோவான் 1 : 12)

(6) மனுஷர் சிருஷ்டிப்பிற்குப் பின் (ஆதாமின் சிருஷ்டிப்புக்குப் பின்) 235 வருடம் வரை சேத்திற்கு குமாரர் கிடையாது (ஆதி 5 : 3, 6)

(7) மனித சிருஷ்டிக்குப் பின் 325 வருஷம் வரை விவாகம் செய்யத்தக்க வாலிப குமாரன் சேத்திற்கு கிடையாது ( ஆதி 5 : 9).

(8) மனுஷ குமாரத்திகள் என்றால் ஆதாமின் குமாரத்திகள், காயீன் குமாரத்திகள், சேத்தின் குமாரத்திகள் எல்லாரையும் குறிக்கும்.

(9) சேத்தின் குமாரர்கள் தேவகுமாரர்கள் என்றால் சேத்தின் குமாரத்திகள் தேவகுமாரத்திகள் என்றாகும். அப்படியானால், அவர்களுக்கும் பிறந்த பிள்ளைகள் யார்? அவர்கள் எங்கே? வேதம் சொல்லுகிறது அக்காலத்தில் இருந்தவர்களுக்குள்ளே ஆபேல் ஏனோக்கு, நோவா, ஆகியோர் மாத்திரமே நீதிமான்கள். மற்றவர்கள் எல்லோரும் பாவிகள் (ஆதி. 6 : 3, 5, 6-9).

(10) காயீனின் குமாரத்திகள் மாத்திரம் மனுஷ குமாரத்திகள் என்றால் இவர்களும், இவர்களுக்குப் பிறந்த சந்ததிகளும் ஜலப்பிரளயத்தினால் அழிந்துவிட்டனரே! பின்பு இருந்தது நோவாவின் சந்ததி மாத்திரம் அல்லவா! பின் எப்படி ஜலப்பிரளயத்திற்குப் பின் இராட்சதர்கள் தோன்றினார்கள்?

(11) சேத்தின் குமாரர் தேவ பக்தி உள்ளவர்களென்றும் (Godly men) காயீன் குமாரத்திகள் தேவ பக்தியில்லாதவர்களென்றும் (Ungodly women) சிலர் சொல்லிக் கொள்கிறார்கள். அப்படி இரு சந்ததிகளும் கலந்ததால்தான் இராட்சதர்கள் தோன்றினார்கள் என்றால் இரட்சிக்கப்பட்டவர்கள் இரட்சிக்கப்படாதவர்களை விவாகம் முடிக்கிறார்கள். ஏன் இராட்சதர் இப்பொழுது தோன்றுவது இல்லை?

(12) இராட்சதர் வித்தியாசமான உருவமும், வினோதமான, அதிகமான உறுப்புகளும், குணமும் உடையவர்களாயிருந்தார்கள். விசேஷமாக, பொய்தேவ வணக்கத்தையும் தேவ ஜனங்களையும் வெறுத்தார்கள் (எண். 21 : 33, 34 உபா. 3 11: 1 நாளா. 20 : 4-8).

(13) வேதாகமம் என்ன சொல்லுகிறது அந்நாட்களில் (ஜலப்பிரளயத்திற்கு முன்னும் பின்னும்) இராட்சதர்கள் பூமியில் இருந்தார்கள் (ஆதி 6:7). அந்நாட்களில் இராட்சதர்,

பூமியிலே இருந்தார்கள்; பின்பு தேவகுமாரர் மனுஷ குமாரத்திகளோடே கூடுகிறதினால், இவர்கள் அவர்களுக்குப் பிள்ளைகளைப் பெற்றபோது, இவர்களும் பூர்வத்தில் பேர் பெற்ற மனுஷராகிய பலவான்களானார்கள் (ஆதி. 10:8,9ஐயும் கவனிக்கவும்) மாம்சமான வர்கள் யாவரும் பூமியின் மேல் தங்கள் வழியைக் கெடுத்துக் கொண்டிருந்தார்கள் என்று கூறியுள்ளது (ஆதி. 6 : 12). இதினிமித்தம் தேவன் தாம் பூமியில் சிருஷ்டித்த மனிதனின் நிமித்தம் மனஸ்தாபப்பட்டார். அப்போது இருந்த சந்ததிகளில் நோவா மாத்திரம் தேவனுக்கு முன்பாக நீதியுள்ளவராக காணப்பட்டார். தேவபக்தியுள்ளவராக காணப் பட்டார். நோவா, நோவாவின் குடும்பத்தார் 8 பேரை தவிர மற்ற எல்லாரையும் தேவன் ஜலப்பிரளயத்தினால் அழிக்கும்படி நேரிட்டது.

(14) ஆனபடியினால் சேத்தின் புத்திரர், தேவபுத்திரர் என்றோ, சேத்தின் சந்ததி தேவபுத்திரர் சந்ததி என்றோ அல்லது சேத்தின் புத்திரரை தேவகுமாரர் என்றோ வேதம் சொல்லவில்லை. தேவன் ஆபிரகாமையும் ஆபிரகாமின் சந்ததியையும் தெரிந்து கொண்டு அவர்களோடே உடன்படிக்கை செய்து கொள்ளுமட்டும் தேவனுடைய ஜனங்கள் என்று யாருடைய சந்ததியையும் சொல்லவில்லை

(15) ஆதாமின் சந்ததியில் மேசியா தோன்ற வேண்டியது இருந்தபடியால் ஸ்திரீயின் வித்து (ஆதி. 3:15) தோன்ற வேண்டியது இருந்தபடியால் தேவன் சேத்தின் சந்ததியில் பரிசுத்தவான்களை எழுப்பி ஆதாமின் வித்தை சுத்தமாக காத்து வந்தார். இந்த மட்டில் சேத்தின் சந்ததியில் பரிசுத்தவான்கள் எழும்பினார்கள் என்பது உண்மையே. ஆதாமின் வித்தை காக்கும்படி தேவன் இப்படிச் செய்தார்.

(16) சேத்தின் புத்திரர்கள் எல்லாரும் தேவபுத்திரர்கள் அல்ல. ஆனால் சேத்தின் சந்ததியில் அவ்வப்பொழுது தேவ பக்தியுள்ளவர்கள் எழும்பி தேவனுடைய வாக்குத் தத்தத்தை விசுவாசித்து (ஆதி. 3 : 15) மெய்தேவ வணக்கத்தைப் பாதுகாத்து வந்தனர். சேத்தின் புத்தரரில் மீதியுள்ளவர்கள் எல்லாரும் விக்கிரக ஆராதனைக்காரராய், பாவி களாகவேயிருந்தார்கள் ஆனபடியால் சேத்தின் புத்திரர்களும் பாவிகளான மனிதர்களே. ஆதாமின் குமாரனான சேத்தின் பிறப்புக்கு முன்பே ஆதி. 6:1-ன் சம்பவம் நிகழ ஆரம்பித்து விட்டது

## இராட்சதர்கள்

(1) ஆதி. 6:2ல் வரும் தேவகுமாரர் என்பது விழுந்து போன தூதர்களாகும் (1 பேது. 3:19;II பேது. 2 : 4; யூதா : 6, 7).

(2) இவர்கள் ஆதிமேன்மையை விட்டுவிட்டு அந்நிய மாம்சத்தை சிநேகித்து மனுஷகுமாரத்திகளில் அதிக சௌந்தர்யமுள்ள இவர்களோடு விபச்சாரம் செய்தார்கள். (யூதா :6,7)

(3) இவர்களுக்குப் பிறந்த குழந்தைகள் கலப்பினமானார்கள். இராட்சதர்கள் பூர்வத்தில் பேர்பெற்ற பலவான்களானார்கள். பிறமத தலைவர்கள், தெய்வங்கள், இவ்வித மானவர்களே, இவர்களுடைய பிறப்பை கவனிக்கவும் (இப்பொழுதும் பிறமத பெண் களில் அநேகர் தங்கள் தெய்வங்கள் தங்களோடு உடலுறவு கொள்ள வேண்டுமென்று விரும்புகின்றார்கள்.)

(4) இதன் நோக்கம்: ஆதாமின் சுத்தமான சந்ததி அல்லது ஸ்திரீயின் வித்து உலகத்தில் தோன்றுதபடி ஆதாமின் சந்ததியைத் தீட்டுப்படுத்த சாத்தான் செய்த சதி திட்டமாகும் இது.

(5) தேவனே, நோவாவையும், நோவாவின் குடும்பத்தையும் காத்து வந்தார் (சுத்தமாக)

(6) இவ்விதம் மனிதஜாதி கலப்பினமானதினால் பாவம் பெருகிற்று. ஆகையால் அந்த சந்ததிகளை தேவன் ஜலப்பிரளயத்தினால் அழித்தார்.

(7) இவ்வித இனக்கலப்பு ஜலப்பிரளயத்திற்கு முன்னும், பின்பு ஒரு முறையும் உண்டாயிற்று.

(8) இந்த இராட்சதர்கள் ஆபிரகாமுக்கு முன்னும் கானான் தேசத்தை நிரப்பி ஆண்டு கொண்டிருந்தார்கள். தேவன் இஸ்ரவேலரைக் கொண்டு யுத்தம் செய்து அவர்களை தாக்கினார் அழித்தார்.

(9) தேவன் நோவாவோடே செய்த உடன்படிக்கையில் இனி ஜலப்பிரளயத்தினால் மனுமக்களை அழிக்கமாட்டேன் என்று சொன்னதினால் இனி அழிவில்லை என்று விழுந்துபோன தூதர்கள் (பிசாசுகள் எனனி) ஜலப்பிரளயத்திற்குப் பின்பும் மனுஷ குமாரத்திகளோடு கூடி பிள்ளைகளைப் பெற்றனர். இவர்களுக்குப் பிறந்தவர்கள் எல்லாரும் இராட்சதர்களாயிருந்தனர். தேவனே வேறுவழியில் அவர்களை அழித்தார். இஸ்ரவேலரைக் கொண்டு யுத்தத்தினால் இராட்சதர்களை அழித்தார்.

(10) விழுந்து போன தேவ தூதர்களையும் அவர்களுக்குப் பிறந்த குழந்தைகளாகிய இராட்சதர்களையும் (இராட்சதர், இராட்சசிகள்) தேவன் ஜலப்பிரளயத்தினாலும், ஜலப்பிரளத்திற்குப் பின், யுத்தத்தினாலும் திரும்ப சரீரம் எடுக்காதபடி அழித்துவிட்டபடியால் அவர்களுடைய ஆவிகள் விபச்சார வேசித்தனம் செய்யும்படி இப்பொழுதும் மனிதர்களை ஆட்கொள்கிறது. இடங்கொடுக்கிறவர்கள் விபச்சாரம், வேசித்தனம் செய்கிறார்கள். இந்த ஆவிகளுக்கு வேசித்தன ஆவி என்று வேதாகமம் காட்டிக்காட்டுகிறது. உலகம் இந்த ஆவிகளால் நிறைந்திருக்கிறது.

(11) இந்த இராட்சத சந்ததிகளினாலேயே விக்கிரக ஆராதனை பூமியில் கொண்டு வரப்பட்டது

(12) இந்த கலப்பின மக்களே கானானில் வசித்திருந்தார்கள். இவர்களே தகாதமான பாவங்களுக்கு காரணம். அவர்களின் செய்கையின்படி பூமியின் மக்களெல்லாம் செய்து கொண்டிருந்தார்கள். அவர்களைப் போல் பாவம் செய்யாதிருக்க இஸ்ரவேலருக்கு தேவன் எச்சரிப்பு கொடுத்தார் (லேவி. 18,19 அதிகாரங்கள்).

(13) இப்பொழுதும் அந்த அசுத்த ஆவிகள் மனிதருக்குள் புகுந்து விபச்சாரம், வேசித்தனம் செய்ய வைத்து மனித இனத்தை அசுத்தப்படுத்தி இராட்சத குணமுடையவர்களைப் பிறப்பிக்கின்றன. கொடிய துஷ்ட விபச்சார சந்ததிகளை

(14) விபச்சாரம் செய்கிறவன் நரகத்திற்கென்று ஒரு ஜீவனைப் பிறப்பிக்கிறான். விபச்சாரத்தில் பிறந்தவர் இரட்சிக்கப்படுவது அரிது. அவர்கள் மனந்திரும்பினாலும் மறுபடியும் விழுந்து விடுவர்.

(15) வேசித்தனம் விபச்சாரம் செய்கிறவள் (செய்கிறவன்) தன் மாம்சத்தை அசுசிப்படுத்துகிறாள் (படுத்துகிறான்). இதனால் இவர்களுடைய ஆத்துமா நரகத்திற்குப் போகும் (நீதி. 2:12-19; 5:3-23; 6:21-32; 7:1-27; 9:13-18).

(16) விபச்சாரம், வேசித்தனம், ஆண்புணர்ச்சி, சுயபுணர்ச்சி, தகாதபுணர்ச்சி செய்கிறவர்கள் தேவனுடைய இராஜ்ஜியத்தை சுதந்தரிப்பது இல்லை பங்கடைவது இல்லை, பிரவேசிப்பது இல்லை (எபே. 5:3-6; 1 கொரி. 6:8-10,18; கொலோ. 3:5,6; வெளி. 21:8).

(17) விபச்சாரம், வேசித்தனம், ஆண்புணர்ச்சி, தகாதபுணர்ச்சி செய்கிறவர்களின் சிரும் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் இரண்டாம் வருகையின் போது மறுரூபப்படுவதில்லை, எடுத்துக் கொள்ளப்படமாட்டார்கள் (I கொரி. 3:17).

(18) விக்கிரக ஆராதனை: விபச்சாரம், வேசித்தனம் காமவிகாரத்தோடு சம்பந்தமுடையது (எபே.4:17-19)

(19) களைகள் சாத்தானுடைய புத்திரர் சத்துரு அதைச் செய்தான் என்று இயேசு சொன்னார் (மத். 13:24-30, 37-42).

(20) ஆனாலும் எப்பாவியானாலும் மனந்திரும்பி தேவனை நோக்கிக் கூப்பிட்டால் மீட்கப்பட வாய்ப்புண்டு. தேவனைப்பற்றிக் கொண்டால் தேவன் இரங்குவார்.

## ஆதாமின் சந்ததிகள்

ஆதாமின் சந்ததியெல்லாரும் மனிதர்களாயிருக்கிறபடியினால் அவர்கள் எல்லார்மேலும் தேவன் இரக்கமுள்ளவராயிருக்கிறார். அவர்கள் பாவத்தை விட்டு, விக்கிரக ஆராதனையை விட்டு மனந்திரும்பும்படியாய் அவர்களுக்குக் காலத்தையும், நேரத்தையும் கட்டளையிடுகிறார். அவர்களுக்கும் மனசாட்சியை கட்டளையிடுகிறார். சுவிசேஷம் கிடைக்கும்படி கிருபை செய்கிறார். எல்லாரும் பாவம் செய்து தேவமகிமையற்றவர்களானார்கள் என்று (ரோ. 3:23) வேதம் சொல்லுகிறபிரகாரம், கிறிஸ்து இயேசுவைத் தவிர ஆதாமின் சந்ததிகள் எல்லாரும் பாவிகளாய் இருக்கிறார்கள். மெய் தேவனை விசுவாசித்து மனந்திரும்பினால் அவர்கள் இரட்சிக்கப்பட கிறிஸ்து இயேசுவை கிருபாதாரபலியாக ஏற்படுத்தினார் (ரோம. 3:22-26). ஆனபடியால் ஆதாமின் சந்ததியார் யாரும் தேவபுத்திரர் அல்ல. தேவதூதர்களே தேவபுத்திரர் ஆகும். தேவபுத்திரர் தேவதூதர்கள் என்று எழுதியிருப்பதினுடைய நோக்கம் அவர்கள் தேவனால் சிருஷ்டிக்கப் பட்டவர்கள் என்பதை குறிப்பிடுவதற்காக.

ஆதியாகமத்தைப்பற்றி ஓர் ஆராய்ச்சி இதனுடன் முடிவுபெற்று நிறுத்தப் படுகிறது.

> "மறைவானவைகள் நம்முடைய தேவனாகிய கர்த்தருக்கே உரியவைகள்; வெளிப்படுத்தப்பட்டவைகளோ......நமக்கும் நம்முடைய பிள்ளைகளுக்கும் என்றென்றைக்கும் உரியவைகள்" உபா.29:29.

(தொடர்ச்சி)

## மோட்ச வழி

### (குரு-சிஷ்ய உரையாடல்)

5. கர்த்தரை ஸ்தோத்திரித்து ஜெபதியானம் செய்து இறைமகனோடும் திருச்சபையோடும் ஐக்கியமாயிருந்து இயேசுகிறிஸ்து செய்ய வேண்டும்.

தேவனுடைய ஜனங்கள் எல்லாக் காரியத்துக்காகவும் தேவனை ஸ்தோத்திரிக்க வேண்டும். தேவனுடைய பராமரிப்பு என்ற கொள்கையின்படி தேவன் சகல சிருஷ்டிகளையும் சிருஷ்டித்து அவைகளைப் போஷித்துக் காப்பாற்றுகிறார். கர்த்தர் ராஜரீகம் பண்ணுகிறார் அவருடைய ராஜரீகம் சர்வத்தையும் ஆளுகிறது (சங். 103:19). அவருடைய பார்வைக்கு மறைவான சிருஷ்டி ஒன்றுமில்லை. (எபி. 4:13). அவருடைய சித்தமில்லாமல் வானத்திலோ பூமியிலோ எச்சம்பவமும் நிகழ்வதில்லை. (தமது சித்தத்தின் ஆலோசனைக்குத் தக்கதாக எல்லாவற்றையும் நடப்பிக்கிற அவருடைய தீர்மானம். எபே. 1:12). ஆகையால் விசுவாசிகளுடைய ஜீவியத்தில் தேவன் நடப்பிப்பதெல்லாம், தேவன் அனுமதிப்பதெல்லாம் நன்மைக்கேதுவாக நடக்கிறது (ரோம. 8:28). இவ்வுலக ஆசீர்வாதங்கள் மேலல்ல தேவனுடைய நோக்கம் நமக்கு நித்திய நன்மை வருவிக்கும்படி நோக்கம் உள்ளவராக இருக்கிறார். ஆகையால், இவ்வுலக வாழ்க்கையில் நமக்கு ஏற்படுகிற நன்மை தீமை, சந்தோஷம், துக்கம், கவலை மகிழ்ச்சி ஆசீர்வாதம் குறைவு எல்லாம் நன்மைக்கே. ஆசீர்வாதங்கள் நமக்கு கற்றுக் கொடுக்காத பாடத்தை துன்பம், துக்கம், நெருக்கடிகள் நமக்கு கற்றுக் கொடுக்கின்றன. நம்முடைய குணத்தை பக்குவப் படுத்துகின்றன. ஆகையால, தேவனுடைய பிள்ளைகள் தேவன் அருளிய நன்மைக்காக ஸ்தோத்திரிப்பது மாத்திரமல்ல அவர் நமக்கு நேரிட விடுகிற துன்பம் துக்கம் எல்லாவற்றிற்காகவும் கர்த்தரை ஸ்தோத்திரிக்க வேண்டும். தாவீது அரசனும் அப்படியே நான் உபத்திரவப்பட்டது எனக்கு நல்லது; அதினால் உமது பிரமாணங்களைக் கற்றுக்கொள்ளுகிறேன் (சங். 119:71) என்கிறார். ஆனபடியினால், கர்த்தரை நான் எக்காலத்திலும் ஸ்தோத்திரிப்பேன; அவர் துதி எப்போதும் என் வாயிலிருக்கும் என்று சொல்கிறார் (சங். 34:1). ஆனபடியினால் தேவ ஜனங்கள் எல்லாக் காரியங்களுக்காகவும் எப்பொழுதும் தேவனை ஸ்தோத்திரியுங்கள். விடுதலையும், மென்மேலும் ஆசீர்வாதம் பெற்றுக் கொள்வதற்கும் அதுவே வழி (1 தெச. 5:18; எபே. 5:20).

ஜெபதியானம்: தேவஜனங்கள் அதிகமாக ஜெபிக்க வேண்டும். ஜெபிக்கிறது மாத்திரமல்ல, தியானம் செய்ய வேண்டும். தியானம் என்பது ஒரு வசனத்தை இன்னொரு வசனத்தோடு ஒத்துப்பார்த்து, ஒரு சம்பவத்தை இன்னொரு சம்பவத்தோடு ஒப்பிட்டுப் பார்த்து அதில் இறை சித்தத்தை அறிய தியானித்து அவரை மகிமைப்படுத்த வேண்டும். ஜெபம் பண்ண வேண்டும் (சங் 39:3; லூக் 2:17-20, 51). ஒரு கிறிஸ்தவனுக்கு ஜெபதியான வேலை மிகவும் முக்கியமான வேலையாகும். அதைத் தவறாமல் தினமும் கடைப் பிடித்து ஒவ்வொருவரும் தெய்வீக பெலத்தை பெற்றுக் கொள்ள வேண்டும். ஜெபதியானம் பண்ணுகிற கிறிஸ்தவர்கள் வீழ்ச்சியடைவதில்லை. இவ்விதமாய் ஜெபதியானம் பண்ணுகிறவர்கள் தேவனோடுள்ள ஐக்கியத்தில் பலப்பட்டு வருகிறார்கள். ஜெபமானது மனிதனை முக்காலத்துக்குள்ளும் இணைக்கிறது. கடந்த காலம், நான் எவ்விதமாய் ஜீவித்தேன், தவறு இன்னதென்பது உணர்த்தப்படுகிறது. நிகழ்காலம், இப்பொழுது நான் எப்படி இருக்கின்றேன் என்பது தெளிவாக தெரிகிறது. வருங்காலம், நான் இனிமேல் எப்படி இருக்கவேண்டும், எப்படி நடக்க வேண்டும் என்று ஜெபத்தில் தீர்மானிக்கப்படுகிறது. ஆனபடியால், ஜெபிக்கிறவன் முக்காலத்தோடும் தொடர்பு எடுக்கிறான்.

6. *திருச்சபையோடுள்ள ஐக்கியம் : திருச்சபை என்பது காணப்படுகிற தெய்வீகக்* குடும்பமாகும். இயேசு கிறிஸ்துவின் மறைஉடல் ஆகும். சபையின் ஊழியர், பிள்ளைகளோடு ஐக்கியமாயிருக்கிறவன் தேவனோடு ஐக்கியமாயிருக்கிறான். சபை ஐக்கியத்திலில்லாதவன் தேவனுடைய ஐக்கியத்திலும் இல்லை. தான் கண்ட சகோதரனிடத்தில் அன்பு கூருதவன் காணாத தேவனிடத்தில் எப்படி அன்பு கூருவான்? தான் காண்கின்ற மனைவியினிடம் அன்பு கூராதவன் (புருஷனிடத்தில் அன்பு கூராதவள்) காணாத தேவனிடத்தில் எப்படி அன்பு கூருவான் (ள்). தான் கண்ட உடன் ஊழியனிடத்தில் அன்பு கூராதவன் காணாத தேவனிடத்தில் எப்படி அன்பு கூருவான்? தான் கண்ட சகோதர சகோதரனிடத்தில் சமத்துவமாக இராதவன் காணாத தேவனிடத்தில் எப்படி ஐக்கியமாயிருப்பான் (I யோ. 4:20,21). தேவனோடுள்ள ஐக்கியம் திருச்சபையோடுள்ள ஐக்கியமாகும். (1யோ. 1:1-7). சிலர், தாங்கள் தேவனோடு ஐக்கியமாய் இருக்கிறோமென்றும், சரியாய் இருக்கிறோமென்றும்,

கிறிஸ்தவர்களைத்தான் பிடிக்கவில்லை என்றும் சொல்லிக் கொள்வார்கள். விஷயம் என்னவென்றால், இவர்கள் தேவனோடு ஐக்கியமுள்ளவர்களல்ல என்பதை இவர்கள் தங்கள் வார்த்தைகளால் நிரூபிக்கிறார்கள். சிலர் சபை அவசியமில்லையென்று பிதற்றித் திரிகின்றனர். இவர்கள் சீர்திருந்த விருப்பமில்லாத சீர் கெட்ட குணமுடையவர்கள். பரிசுத்தவான்கள் சீர் பொருந்த சபை தேவை. பாவிகளை அல்ல, பரிசுத்தவான்களிடத்தில் அநேக சீர் கேடுகள் இருக்குமென்றும் இந்தப் பரிசுத்தவான்களை சீர்ப்படுத்த அப்போஸ்தலர், தீர்க்கதரிசி, சுவிசேஷகர், மேய்ப்பர் போதகர்களைத் தேவன் சபையில் ஏற்படுத்துகிறாரென்றும், மெய்யான சபையில் இவ்வித ஞான அதிகாரிகள் உண்டென்றும் அங்கே தான் சீர்திருத்தம் உண்டாகுமென்றும், பூரணத்துவம் உண்டாகுமென்றும், பக்திவிருத்தி உண்டாகுமென்றும் வேதாகமம் கூறுகிறது (எபே. 4:11-13). ஆனபடியினால் தேவ ஜனங்கள் தேவனை ஸ்தோத்திரித்து தேவனோடும் திருச்சபையோடும் ஐக்கியமாயிருக்க ஆவலாய் இருங்கள்.

(தொடரும்)

"அன்றியும், அவருடைய தீர்மானத்தின்படி அழைக்கப்பட்டவர்களாய் தேவனிடத்தில் அன்பு கூருகிறவர்களுக்குச் சகலமும் நன்மைக்கு ஏதுவாக நடக்கிறதென்று அறிந்திருக்கிறோம்." ரோமர். 8:28.

(தொடர்ச்சி)

## வேத பாடம்

யாத் 31:1-6: அபிஷேகிக்கப்பட்ட ஊழியர்கள்: யூதா கோத்திரத்து ஊருடைய குமாரனான ஊரியின் குமாரன் பெசலெயேல், தாண் கோத்திரத்து அகிசாமாகின் குமாரன் அகோலியாப் இருவரும் தேவனுடைய ஆசரிப்பு கூடார வேலைகளைச் செய்யும்படி தேவன் அவர்களை பேர் சொல்லி அழைத்து ஞானம், அறிவு, புத்தி, விவேகம், யூகம் உண்டாக தேவ ஆவியால் நிரப்பினார். ஊர்: உலோகங்கள், கற்கள், மரம், எண்ணெய் ஆகியவைகளின் வேலைகளின் மேல் கண்காணியாகவும் (36:30-33; 31:1-15; 37:1,29). அகோலியாப்: நெய்தல் (துணி) வேலைகளின் மேல் பொறுப்பாளராகவும் நியமிக்கப்பட்டார்கள். (31:6; 35:34 35; 38:23) மற்றும் பலர் அவனுக்கு துணையாக நியமிக்கப்பட்டார்கள்.

பரிசுத்த ஆவியினால் நிரப்பப்பட்ட ஞானமும், விவேகமும், புத்தியும், அறிவும் உள்ளவர்களே தேவனுடைய வேலையில் ஈடுபடுத்தப்பட்டார்கள். பழைய ஏற்பாட்டில் வெவ்வேறு அளவுகளில் வெவ்வேறு வேலைக்காக தேவ மனிதர்களை தேவ ஆவியினால் நிரப்பினார். ஆனால் அது பரிசுத்தாவியின் ஸ்நானமல்ல. பரிசுத்தாவியின் ஞானஸ்நானம் புதிய ஏற்பாட்டிற்குரியது அது பெந்தெகொஸ்தே நாளில் நிகழ்ந்தது. அது தொடர்ந்து நிகழ்ந்து கொண்டிருக்கிறது.

பழைய ஏற்பாட்டின் பரிசுத்தவான்கள் பரிசுத்த ஆவியானவரால் அநேக நன்மைகளும், ஆசீர்வாதங்களும் அநுபவங்களையும் பெற்றார்கள். உ-ம் ஆவியினால் நிரப்பப்பட்டார்கள் (யாத். 28:3;31:3 35:31; உபா. 34:9; மீகா. 3:8). தேவ ஆவியை உடையவராயிருந்தார்கள் (ஆதி. 41:38; எண். 27:18; தானி. 4:8,9,18;5:11-14;6:3). தேவனுடைய ஆவி உடனிருந்தார் (சங். 51:10,11; ஏசா. 63:10-14; எசே. 11:19) தேவனுடைய ஆவி உட்புகுந்தார் (எசே. 2:2;3:24). தேவ ஆவி மேலே இறங்கி தங்கினார் (எண். 11:17-29; நியா. 3:10;6:34;11:29:14:6,19;15:14) கர்த்தருடைய ஆவியானவர் இயக்கினார் (நியா. 13:25; அப். 3:21;

II பேது. 1:21) ஆனால் அவர்கள் பரிசுத்தாவியின் ஞானஸ்நானத்தைப் பெறவில்லை (Baptism of Holyspirit) யோவான்ஸ்நானனும் மற்றவர்களும் பரிசுத்த ஆவியினால் நிரப்பப் பட்டிருந்தார்கள். ஆனால் பரிசுத்த ஆவியின் ஸ்நானத்தைப் பெறாதவர்களாயிருந்தார்கள். (லூக்.1:15-17,41,67;2.25-35). 34 வருஷங்களுக்கு முன்னால் கன்னிமரியாள் பரிசுத்த ஆவியினால் நிரப்பப்பட்டிருந்தார்கள். பெந்தெகொஸ்தே நாளில் பரிசுத்த ஆவியினால் ஸ்நானப் படுத்தப்பட்டார்கள் (லூக் 1:46-56; அப். 1:13-15,2:1-4). இயேசு கிறிஸ்து 30 வருஷங் களுக்கு முன்பே பரிசுத்த ஆவியினால் நிரப்பப்பட்டிருந்தார். ஞானஸ்நானம் பெற்ற போது ஆவியினால் ஸ்நானப்படுத்தப் பட்டார் (ஏசா. 50:4,5;லூக் 2:40-52; மத் 3:16,17). சீஷர்கள் 3வருஷங்களுக்கு முன்பே பரிசுத்த ஆவியால் நிரப்பப் பட்டிருந்தார்கள். பெரிய வல்லமையைப் பெற்றிருந்தார்கள். பெந்தெகொஸ்தே நாளில் ஆவியின் ஸ்நானம் பெற்றார்கள் (மத் 10:1-8,20; அப் 1:4-8;2:1-4,33)

பழைய ஏற்பாட்டு பரிசுத்தவான்கள பரிசுத்த ஆவியின வரங்களையும் கனிகளையும் பெற்றிருந்தார்கள் (I இராஜா. 3:12; 17:1,2; அப் 3:21; எபி 11 அதி) வெவ்வேறு அளவுகளில் பரிசுத்தாவியைப் பெற்றிருந்தார்கள் (எண் 11:16-25; II இராஜா 2:9; லூக் 1:17). ஆனால் பரிசுத்த ஆவியினால் ஞானஸ் நானம் பெற்றிருக்கவில்லை. பரிசுத்தாவியை அளவில்லாமல் பெறவில்லை (யோவா.3:34;7:37-39) சீஷர்கள் வரங்களையும், பெரிய வல்லமையையும், பரிசுத்த ஆவியின ஸ்நானத்திற்கு முன பெற்றிருந்தார்கள் (மத் 10:1-8, 16-20; மாற். 6:7-11; லூக். 10 அதி). ஆனால் இயேசுவானவர் பரிசுத்த ஆவியின் ஸ்நானத்தை நீங்கள் பெற்றுக் கொள்ளுமுன ஊழியத்தை ஆரம்பிக்கக் கூடாதென்று சீஷர்களுக்கு கட்டளையிட்டார் (லூக்.24:49; யோவா.7:37-39;14:12; அப்.1:4-8).

பழைய ஏற்பாட்டின் பரிசுத்தவான்களும் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின சீஷர்களும் இரட்சிக்கப்பட்டிருந்தனர் (சங்.51:12) விடுதலையாகியிருந்தனர் (சங். 31:5). கிருபை பெற்றிருந்தனர் (சங்.84:11), சீர் கேடுகளைப் பெற்றனர் (யாத்.15:26). பரலோகத் தில் அவர்கள் பெயர்கள் எழுதப்பட்டிருந்தன. (யாத்.32:32, 33; லூக்.10:20) வாக்கு தத்தத்தின் பிள்ளைகளாயிருந்தார்கள் (கலா. 4:28-30), உயிர் மீட்சி பெற்றார்கள் (சங் 19:7) நீதிமானாக்கப்பட்டார்கள். (ரோம 4 அதி) நற்செய்தி பெற்றார்கள் (கலா. 3;6-14; எபி 4:2) நீதிதரிக்கப்பட்டார்கள். (ரோம. 4 அதி) பரிசுத்தர்களானார்கள் ( அப் 3:21; IIபேது. 1:21) சுத்த இருதயம் பெற்றனர் (சங்.24:4;51:10). பரிசுத்தப்படுத்தப்பட்டார்கள் (யாத 29:42-44; 31:13; எசே. 20:12; யோவா. 15:3) இன்னும் அநேக ஆவிக்குரிய ஆசீர்வாதங்களை பெந்தெகொஸ்தே நாளுக்கு முன் பெற்றிருந்தார்கள் (யோவா. 7:37-39; அப். 2:33). ஆனால் இவைகள் ஒன்றும் பரிசுத்த ஆவியின் ஞானஸ் நானத்திற்கு, பரிசுத்த ஆவியை அளவில்லாமல் பெறும் அனுபவத்திற்கு நிகரல்ல. பரிசுத்த ஆவியின்ஞானஸ்நானத்தின் மூலம் கடவுள் விசுவாசிகளில் வாசம் பண்ணுகிறார் (யோவா. 3:34; 7:37-39; லூக் 24:49; அப். 10:38; ஏசா. 61:1; ரோம. 15:29; யோவா. 14:16-23, எபே. 3:17-19) நீங்கள் புதிய ஏற்பாட்டின் அனுபவமாகிய பரிசுத்த ஆவியின் ஞானஸ் நானத்தைப் பெற்றுவிட்டீர்களா? இல்லையென்றால் பெற்றுக் கொள்ளுங்கள் ( அப். 2:1-4).

இந் நாட்களில் புதிய ஏற்பாட்டின்படி பரிசுத்த ஆவியின் ஸ்நானத்தின் அனு பவத்தைப் பெறாமல் பரிசுத்த ஆவியின் சில வரங்களையும், வல்லமைகளையும், சில அனு பவங்களையும் பெற்றிருக்கிறதினால் தாங்களும் பரிசுத்த ஆவியின் ஸ்நானம் பெற்றிருக் கிறோம் என்று அநேகர் தவறாக எண்ணிக்கொண்டு திருப்தியாயிருக்கிறார்கள். பழைய ஏற்பாட்டின் அனுபவத்திலேயேயிருக்கிறார்கள். புதிய ஏற்பாட்டின் சபை ஊழியம் செய்ய பரிசுத்த ஆவியின் ஸ்நானம் பெறாதவர்களுக்கு அதிகாரமில்லை. இவர்கள் வெற்றியடையார்கள் இவர்களுடைய வேலை, ஊழியம் நிலைக்காது, பாழாய்ப் போகும்.

(தொடரும்)

(தொடர்ச்சி)

மாதர் பகுதி

# ஆகார் (அந்நியன்) (ஆதியாகமம் 16:1)

தேசத்திலே பஞ்சம் உண்டாயிற்று. எல்லாரும் பஞ்சம் பிழைக்க மறு தேசத்துக்குப் போகலாம். ஆனால் தேவனுடைய மனிதனாகிய ஆபிரகாம், தேவனுடைய ஆலோசனையில்லாமல் எகிப்துக்குப் போனது தவறாகும். எகிப்திலே ஆபிரகாம் தங்கின நாட்களில் அவருடைய குடும்பத்துக்குண்டான பிரச்சினை மிக மோசமானதாக இருந்தது. அந்த சோதனையிலிருந்து கர்த்தரால் தப்புவிக்கப்பட்டு மறுபடியும் கானானுக்குத் திரும்பி வந்தார். அதாவது புறப்பட்ட இடத்திற்கே திரும்பிவந்தார் (ஆதி.12:10-13:4). ஆபிரகாம் எகிப்தில் தங்கியிருந்த நாட்களில் தேவனுடைய தரிசனமோ, எந்த விதமான வெளிப்படுத்தலோ உண்டாயிருந்ததில்லை. அவர் கர்த்தரைத் தொழுது கொண்டதாகவும் தெரியவில்லை. இதன் மூலமாய் அவர் எகிப்துக்குப் போனது அவருடைய சுய சித்தமாய் இருந்தது என்று அறிந்து கொள்கிறோம். அவர் திரும்பி வந்த பின்பே மறுபடியும் பலிபீடம் கட்டி தேவனைத் தொழுது கொண்டார். இப்படி ஆபிரகாம் எகிப்திலிருந்து வந்த பொழுது எகிப்து தேசத்தாளாகிய ஆகார் என்னப்பட்ட ஒரு பெண்ணையும் வேலைக்காரியாக கூடவே அழைத்து வந்திருந்தார். ஆபிரகாமுக்குத் தேவன், அவருடைய கர்ப்பப் பிறப்பாக இருப்பவனே சுதந்தரவாளி என்றும் உன் சந்ததியார் இவ்விதமாக இருப்பார்களென்றும் கர்த்தர் வாக்களித்திருந்தார். அந்த வாக்குத்தத்தத்தின் மேல் சாராள் பூரண நம்பிக்கையாய் இல்லாதபடியினால் அத்தேசத்தாரின் வழக்கத்தின்படி அடிமைப்பெண்ணாகிய ஆகாரை ஆபிரகாமுக்கு மறுமனையாட்டியாக கொடுத்தாள் (ஆதி. 16:1-3). இந்த ஆகார், தான் கர்ப்பவதியான போது தன் நாச்சியாரை அற்பமாக எண்ணி அசட்டையாய் நடக்க ஆரம்பித்தாள் (நீதி. 30: 21-23). இதினிமித்தம் சாராள் அவளைக் கடினமாய் நடத்தினபடியால் ஆகார் ஓடவேண்டியதாகிவிட்டது. தங்களுக்கு வலிய, தானாகவே கிடைத்த சுதந்திரத்தை (ஆசீர்வாதத்தை) சிலர் பாதுகாத்துக் கொள்ளாமல் இறுமாப்படைந்து தங்களுக்கு அந்த நன்மை செய்தவர்களை மறந்துவிடுகிறார்கள். தான் அடிமையாய் இருந்தோமென்பதையும், சாராள் தனக்கு நன்மை செய்தாள் என்பதையும் எண்ணி பயபக்தியாய் இருக்க வேண்டிய ஆகார் பெருமையடைந்து உபத்திரவத்திற்கு ஆளானாள். இவ்விதமாய் ஆகார் ஓடிப்போகும் பொழுது தேவதூதன் ஒருவரால் எச்சரிக்கப்பட்டு திரும்பி வந்து சாராளின் கையின் கீழ் அடங்கியிருந்தாள். ஆகாருக்கு இஸ்மவேல் பிறந்தான். 14 வருஷங்களுக்குப் பின்பு வாக்குத்தத்தத்தின் பிரகாரம் சாராள் கர்ப்பந்தரித்து ஈசாக்கைப் பெற்றெடுத்தாள். பிள்ளை பால் மறந்த போது ஆபிரகாம் தன் குமாரனாகிய ஈசாக்கின் நிமித்தம் பெரிய விருந்து கொண்டாடினார். ஈசாக்கு என்றால் நகைப்பு என்றர்த்தம். அப்பொழுது ஆகாரின் குமாரனாகிய இஸ்மவேல், ஈசாக்கை கிழவியின் மகன், கிழவியின் மகன் என்று பரியாசம் பண்ணுகிறதை சாராள் கண்டு, சாராள் ஆபிரகாமை நோக்கி இந்த அடிமைப் பெண்ணையும் அவள் மகனையும் புறம்பே தள்ளும். இந்த அடிமைப் பெண்ணின் மகன் என் குமாரனாகிய ஈசாக்கோடே சுதந்தரவாளியாயிருப்பதில்லை என்றாள் (ஆதி. 21:8-10). தன் மகன் இஸ்மவேல், பரியாசம் பண்ணுகிறதை ஆகார் தடுத்திருக்கலாம். அப்படி தடுக்காத படியினால் ஆகாரும், பையனாகிய இஸ்மவேலும் வெளியே தள்ளப்பட வேண்டியதாயிற்று. இந்த ஆகார் அடிமைத்தனத்திற்குள்ளாக பிள்ளை பெறுகிறவள் என்று ஞானார்த்தமாக எழுதப்பட்டிருக்கிறது (கலா. 4:22-30) தேவ சித்தமில்லாமல் விசுவாசிகள் வேறு இடங்களில் போய் தங்கும் போது அங்கிருந்து தீய பழக்க வழக்கங்கள் உடையவர்களாகத் திரும்புவார்கள். அந்தப் பாவங்கள் அவர்களுக்கு உதவியாகக்காணப்படும். பின்பு அவைகளே அவர்களை ஆளுகை

செய்ய ஆரம்பிக்கும். அவைகளைத் தொடர்ந்து மாம்சத்தின் படியான குழந்தைகள் (அநேக பாவங்கள்) தோன்றும். அடிமைப் பெண்ணையும் அவள் குமாரனையும் புறம்பே தள்ளு என்று வேதம் சொல்லுகிறது. விசுவாசிகள் தேவ சித்தமில்லாமல் பிரயாணம் செய்து சம்பாதித்த பாவத்தையும், துர்ப்பழக்கத்தையும் தள்ளிவிடவும். அது அந்நியபெண்ணும் அடிமைப் பெண்ணுமாகிய ஆகாராக இருக்கிறது. ஆபிரகாம் தன் மனைவியின் சொல்லுக்குக் கீழ்ப்படிந்து ஆகாரை மனைவியாக எடுத்துக் கொண்டது மாம்சத்தின்படி, அவசரப்பட்டு எடுத்த முடிவாக இருக்கிறது. அதினிமித்தம் தன்னுடைய மகனாகிய ஈசாக்குக்கு (ஆபிரகாமின் சந்ததியாகிய இஸ்ரவேலருக்கு) நிரந்தரமான எதிரியை [இஸ்மவேலர்] ஏற்படுத்தி விட்டுவிட்டார். ஆகாருடைய கர்வமும், அசட்டையும் அவளைத் தேவனுடைய சுதந்தரத்தை விட்டு விரட்டிப்போட்டது தேவனுடைய ஜனங்கள் ஆகாரைப் போலில்லாமல் கிடைத்த சிலாக்கியத்தைப் பற்றிக் கொண்டு நிலைத்திருக்கிறவர்களாக காணப்படுவீர்களாக.

(தொ. ருல்)

---

"மாம்சத்தின் படி பிறந்தவன் ஆவியின்படி பிறந்தவனை அப்பொழுது துன்பப் படுத்தினது போல, இப்பொழுதும் நடந்து வருகிறது".

கலா 4: 29.

---

# நீங்கள் பெந்தெகொஸ்தேகாரர்களைப் பார்த்து இடறிப் போனீர்கள்?

தேவ பக்தியுள்ள கிறிஸ்தவ (CSI) வாலிபன் என்னிடம் வந்து, ஞானஸ்நானத்தைக் குறித்தும், பரிசுத்தாவியைக் குறித்தும் விளக்கம் கேட்டார். நான் பிரதியுத்தரமாக ஞானஸ்நானம், கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசித்து பெற வேண்டும் (மாற். 16:16; அப். 8: 36, 37). விசுவாசம் கேள்வியினால் வரும் (ரோ. 10:17). ஆகவே தேவ வசனத்தைக் கேட்டு இயேசுவை விசுவாசித்து ஞானஸ்நானம் பெற்றுக் கொள்ள வேண்டும். பாவ மன்னிப்புக்கென்று ஞானஸ்நானம் பெறவேண்டும் (அப். 2:38) பாவங்கள் போகக் கழுவப்பட ஞானஸ்நானம் பெற வேண்டும் (அப். 22:16). தண்ணீரில் முழ்கி ஞானஸ்நானம் பெற வேண்டும் (எபே.5:26; தீத்து 3:5; யோ. 13:10) ஞானஸ்நானம் தேவனோடு பண்ணும் நல் மனச் சாட்சியின் உடன்படிக்கையாக இருந்து நம்மை இரட்சிக்கிறது (I பேது. 3: 21) ஞானஸ்நானம் நாம் புதிதான ஜீவனுள்ளவர்களாய் நடந்து கொள்ளும்படி இயேசு கிறிஸ்துவினுடைய மரணத்துக்குள்ளாக்கி நாமும் அவருடைய உயிர்த்தெழுதலின் சாயலில் இணைக்கப் படுவதற்கேதுவாக, அவருடைய மரணத்தின் சாயலில் இணைக்கிறது (ரோ. 6:3-5). இந்த வாக்கியங்களை எடுத்துக் காண்பித்து விளக்கம் கொடுத்தபோது அதை ஒப்புக் கொண்டார்.

அப்படியே பரிசுத்தாவியைக் குறித்துப் பேசும்போது, பரிசுத்த ஆவியை ஒருவர் பெற்றுக் கொள்ளும்போது மற்றவர்கள் காணவும், கேட்கவும் முடியும் (அப்.2:33). சமாரியர் தேவ வசனத்தை ஏற்று, விசுவாசித்து, ஞானஸ்நானம் பெற்றிருந்தும், பரிசுத்த ஆவி பெறுமலிருப்பதை அப் பேதுருவும், யோவானும் கண்டு அவர்களுக்கு ஜெபம் பண்ணி கைகளை வைத்த போது, பரிசுத்தாவி விசுவாசிகள் மேல் வருவதை மந்திரவாதியாக இருந்து மனந்திரும்பின சீமோன் கண்டான் (அப்.8:18). கொர்நெலியு வீட்டில் பேதுருவின் வாயிலாக வசனத்தைக் கேட்ட யாவர் மேலும்பரிசுத்தாவி வரவே அவர்கள் அந்நிய பாஷைகளைப் பேசி தேவனைப் புகழ்ந்தார்கள். அதை விருத்தசேதனமுள்ள விசுவாசிகள் கேட்டார்கள் (அப்.10:46) இன்னும் எபேசியர்கள் மேல் பவுல் கைகளை வைத்தபோது, அவர்கள் அந்நிய பாஷைகளைப் பேசி

தீர்க்கதரிசனம் சொன்னார்கள் (அப். 19:6) இன்னும் பரிபாச உதடுகளினாலும், அந்நிய பாஷையினாலும் இந்த ஜனத்தோடே பேசுவார். இதுவே நீங்கள் இளைப்பாறப் பண்ணத்தக்க இளைப்பாறுதல்; இதுவே ஆறுதல் என்று அவர்களோடே அவர் சொன்னாலும் கேட்க மாட்டோம் என்கிறார்கள் (ஏசா. 28:11; 1 கொரி. 14:21) இந்த வாக்கியங்களை காண்பித்த போது அவர் மறுத்துப் பேசவில்லை என்ன சகோதரனே! நான் சொல்லுவது சரிதானா? என்று கேட்டேன். ஞானஸ்நானத்தைக் குறித்து விளங்கிக் கொண்டேன் பரிசுத்தாவியைக் குறித்து (தயங்கிய வண்ணம்) இன்னொரு நாள் பேசலாம் என்றார். என்ன விஷயம் என்று நான் வருந்திக் கேட்கவே அவர் சில சம்பவங்களை சொல்ல ஆரம்பித்தார். அவர் கேள்விபட்டது: பரிசுத்தாவியைப் பெற்றுக் கொள்ள வேண்டும் என்ற தாகத்துடன் இருவர் ஒரு பெந்தெகொஸ்தே சபைக்கு போனார்களாம். முழங்கால் போட்டு ஜெபம் பண்ணுகையில் அங்குள்ள போதகர் வந்து இவர்களுடைய காதில் சுக்கர, புக்கர என்ற வார்த்தைகளைச் சொல்லி திரும்பச் சொல்லுங்கள் என்றாராம். அவர்கள் இடறி இதுவா பரிசுத்தாவி பெற்றுக் கொள்ளும் அநுபவம்? என்று வெளியே போய் விட்டார்களாம். மேலும் அவருக்கு அறிமுகமான ஒரு வாலிபன் ஒரு பட்டணத்தில் நடந்த ஆவிக்குரிய கூட்டத்தில் மேடையில் நின்று இசைக்கருவி வாசிப்பதை, அவருடைய ஊரைச் சேர்ந்த ஒருவர் கண்டு விசாரித்துப் பேசினாராம் இருவரும் (இசைக் கருவி வாசித்தவரும், இவருடைய ஊர்க் காரரும்) சிகரெட் பிடித்த வண்ணம் உரையாடினார்கள். என்ன தம்பி, இந்த கூட்டத்தில் நீ நிற்கிறாய்? அதுவா அண்ணே இவர்களோடே போனால் ஊர் சுற்றலாம், உல்லாசமாக இருக்கலாம், செலவுக்கு பணம் கிடைக்கும் என்று சொல்லி இருக்கிறார். தம்பி, இவர்கள் அந்நிய பாஷை எல்லாம் பேசுவார்களே? அதுவா அண்ணே, சும்மா இவர்களோடே இருந்தா தானாக வரும் என்றிருக்கிறார்.

இந்த சம்பவங்களைக் கேள்விப்பட்ட இந்த பக்தி உள்ள வாலிபனும் பரிசுத்தாவி பெற்றுள்ளோம் என்று சொல்லி அந்நிய பாஷை பேசுகிற மனிதர்களைக் கண்டு இடறி இருக்கிறார் என அறிந்து கொண்டேன். நான் கேள்விப்பட்ட சில காரியங்களை அவரிடம் சொன்னேன். கேரளாவைச் சேர்ந்த ஒரு சகோதரன் தேவனை ஆராதிக்க ஒரு ஆவிக்குரிய கூட்டம் போயிருக்கிறார். அங்கே அவரை பலவந்தப்படுத்தவே ஞானஸ்நானம் பெற்றார். பரிசுத்தாவி பெற்றுக் கொள்ளும்படி அந்த போதகர் இவர் காதில் பரபர என்று சொல்லி சொல்லச் சொல்லியிருக்கிறார். இவரும் வேறு வழியில்லாமல் பர பர என்று பறைந்து விட்டார். உடனே அந்த பாஸ்டர் பெருமிதத்துடன் அவர் பரிசுத்தாவி பெற்று விட்டார் என்று பறை சாற்றினாராம். இதனால் அந்தச் சகோதரர் இடறி சோர்ந்து சபைக்குப் போவதை நிறுத்தி விட்டார். இப்படிப் பல ஏமாற்றுகள் ஆவிக்குரிய கூட்டத்தாரிடத்தில் நடக்கிறது. இப்படிப் பட்ட இடறல்களுக்கெல்லாம் காரணம் என்ன? என்று அவருக்கு விளக்கம் கொடுத்தேன்.

மக்களை இடறச் செய்யும் வகையில் மூன்று வகையான கூட்டத்தார்கள் இருக்கிறார்கள். 1. கிறிஸ்தவர்கள் பொதுவாக அன்பும், பண்பும், இரக்கமும் உடையவர்கள் என்பதை மக்கள் அறிவர். ஏழையான ஒரு மனிதன் கிறிஸ்தவர்களிடம் போகும் போது அவர்கள் பாராட்டும் அன்பையும் பரிவையும் கண்டு கிறிஸ்தவனாகிறான் பிழைப்புக்கு வழி தேடுகிறான். கிறிஸ்தவர்களின் பண்பை தனக்கு சாதகமாக பயன்படுத்த முற்பட்டு பைபிளை கையில் எடுத்துக் கொண்டு ஜிப்பாவையும் போட்டுக் கொண்டு ஒரு சில வசனங்களையும் தெரிந்து கொண்டு கர்த்தர் என்னை ஊழியத்திற்கு அழைத்தார் என்று சொல்லிக் கொண்டும், வீடு, வீடாக தனியாக புகுந்து ஜெபித்து விட்டு போகலாம் என்று வந்தேன் என்று சொல்வார்கள். இவர்கள் சாப்பாட்டு வேளையில் வருவார்கள். 5, 10 ரூபாய் பெற்றுக் கொண்டு வாழ்த்தி விட்டு போவார்கள். மறுபடியும் தவறாமல் வருவார்கள். கொடுப்பதை நிறுத்தி விட்டால் வரவே மாட்டார்கள். இப்படிப்பட்ட ஒரு கூட்ட மனிதர்கள்

ஊழியர்கள் என்ற பெயரில் சுற்றித் திரிவார்கள். இவர்களுக்கு சபை இருக்காது. எங்கும் ஸ்தாபித்திருக்க மாட்டார்கள். இன்றைக்கு ஒரு சபையில் இருப்பார்கள். நாளைக்கு ஒரு சபையில் சேர்வார்கள். பசை உள்ள இடத்தில் ஒட்டி கொள்வர். நால் துதி செய்வார்கள். தேவைப்பட்டால் அந்நிய பாஷையும் பேசுவார்கள். இப்படிப்பட்ட கூட்டத்தார் ஏமாற்றுக்காரர்கள். இவர்களுக்கு ஒரே குறிக்கோள் வயிற்றுப் பிழைப்பு. மானம், மரியாதை கிடையாது. பிச்சைக்காரர்கள் போன்றவர்கள். இப்படிப்பட்டவர்களைக் கண்டு பெந்தெகொஸ்தே காரர்கள் என்றும் ஜனங்கள் பயப்படுகிறார்கள். இந்தப் பொய்யர்கள் கிறிஸ்துவின் சிலுவைக்குப் பகைஞர். அவர்களுடைய முடிவு அழிவு. அவர்களுடைய தேவன் வயிறு. அவர்களுடைய மகிமை அவர்களுடைய இலச்சையே. அவர்கள் பூமிக்குரியவைகளை சிந்திக்கிறார்கள் (பிலி.3:18, 19). 2. இன்னும் சிலர் சுவிசேஷத்தைக் கேட்டு இயேசு கிறிஸ்துவை விசுவாசித்து ஞானஸ்நானம் பெற்று பரிசுத்தாவி பெற்று உண்மையுள்ள பக்தர்களாய் வாழ்வார்கள். இவர்கள் இரட்சிக்கபடுமுன் செய்த பாவங்களை சபை நடுவே மற்ற மனிதர்களிடம் ஊழியர்களிடம் சொல்லி தன்னை தாழ்த்தி, இப்படிப்பட்ட பாவியாக இருந்த என்னை கர்த்தர் மாற்றினார்; நான் கிருபையினால் இரட்சிக்கப்பட்டேன் என்று பலமாய் சாட்சியும் கொடுப்பார்கள். கர்த்தரும் இவர்களுடைய ஜெபத்தைக் கேட்டு இவர்கள் மூலம் கிரியை செய்கிறார். ஆகவே, இவர்கள் ஜனங்களால் மதிக்கப்படவும், அநேகர் தேடி வரும்படியான நிலையிலிருக்கிறார்கள். இப்படிப்பட்டவர்கள் பரிசுத்தவான்களாய் காட்சியளிக்கிறார்கள். இப்போது இவர்கள் வாழ்க்கையில் ஒரு சின்ன பாவமோ, மீறுதலோ உண்டாகும் போது பரிசுத்தாவியானவரும் துக்கப் படுகிறார். இவர்களும் மனஸ்தாபப்பட்டு மறைமுகமாக ஜெபத்தில் அறிக்கை செய்கிறார்கள். இரட்சிக்கப் படுமுன் தன் பாவத்தை பலர் முன்னும் சொன்ன இவர்கள், இப்போது இதை மறைத்து, மற்றவர்கள் முன் பரிசுத்தவான்களாகவே காண்பிக்க முற்படுகிறார்கள். தன் பாவத்தை மறைக்கிறவன் வாழ்வடைய மாட்டான். அவைகளை அறிக்கை செய்து விட்டு விடுகிறவனோ இரக்கம் பெறுவான். (நீதி 28:13) என்றபடி பரிசுத்தாவியானவருடைய கிரியைகளை, கிருபைகளை படிப் படியாக இழக்கிறார்கள். தேவ ஒத்தாசை இருக்காது. நடத்துதல் அற்றுப் போகிறது. வெளிப்பாடு நின்று போய் விடுகிறது. தேவ தொடர்பு இல்லாதே போய் விடுகிறது. அந்நிய பாஷை பேசுதலும் ஒழிந்து போகிறது. இப்படி இருந்தும் இவர்கள் தங்களைப் பரிசுத்தவான்களாக காண்பிக்க முற்பட்டு, பழைய அனுபவங்களைக் கொண்டு ஊழியம் செய்ய முற்படுகிறார்கள். மனதின் ஆவியால் தோன்றுகிறபடி தீர்க்கதரிசனம் சொல்வர். அது நிறைவேறாமல் போகும். மாம்சத்தில் அந்நிய பாஷை போல் பேசுவர் (பழைய அனுபவத்தில்). அது சாரமில்லாத உப்பாயிருக்கும். துப்பாக்கி இருக்கும். தோட்டா இருக்காது. விஷயம் தெரியாதவன் பயப்படுவான் தெரிந்தவன் மிரட்டுவான். திறமையாக, அலங்காரமாய் பிரசங்கம் செய்வர். கேட்போர் வெறுமையாகச் செல்வர். பணக்காரன் ஒருவன் பலர் மெச்ச வாழ்ந்தான். திடீரென நஷ்டப் பட்டான். ஆனால் வெளியே காட்டாமல் பழையபடி பணக்காரன் போல் நடிக்க ஆரம்பிக்கிறான். கடன் படுகிறான்; பெரும் கடனாளியாகிறான். தானாகவே வீண் பெருமையால் தீவிர கேட்டுக்குள் போய்க் கொண்டிருக்கிறான். வேஷம் கலையும் போது வெட்கம் உண்டாகும். அப்படிப் போலவே வல்லமை இழந்து போனவர்கள் நடிக்க ஆரம்பிப்பதால் அநேகர் இடற நேரிடுகிறது. இவர்கள் பிரசங்கிக்கும் பிரசங்கம்: மனிதனைப் பாராதே, மனிதனைப் பின்பற்றாதே. ஊழியக்காரன் உங்களை இரட்சிக்க மாட்டான். சபை உங்களை இரட்சிக்காது. இயேசு ஒருவரே இரட்சிப்பார், என்று எங்கும் கூவித் திரிவார்கள். பலசாலியாக இருந்த சிம்சோன் பாவத்தில் வீழ்ந்து தன்பலம் தன்னைவிட்டு போனதை அறியாமல், எப்போதும் போல் தன்னை கட்டியிருந்த கயிறுகளை அறுக்க முற்பட்டு முடியாமல் அவமானத்திற்குள்ளானான். கண்கள் பிடுங்கப் பட்டது மாவரைத்தான். பெலிஸ்தருக்கு வேடிக்கைப் பொருளானான். அப்படியே பரிசுத்தவான்களாய் இருந்து தவறிப் போனவர்கள் தேவ பல

மின்றி, பலம் இருப்பது போல் பாசாங்கு செய்வதை மக்கள் கண்டு இடறுகிறார்கள். 3. பலர் எப்படியோ கிறிஸ்தவர்களாகிறார்கள். தெய்வத்தை நோக்கி தீவிர ஜெபம் பண்ணுகிறார்கள். பரிசுத்தம் வேண்டும் பரலோகம் வேண்டும் என்று ஜெபிக்க மாட்டார்கள். தங்களை பலரும் மதிக்கத்தக்கதாக பலர் தங்களை தேடிவரும் படியாக வரங்கள் வல்லமைகள் வேண்டும் அதிசய அற்புதம் நடக்க வேண்டும். ஜனங்கள் தங்களை ஆகா, ஓகோ என்று புகழ வேண்டும் என்ற நோக்கத்தோடே ஜெபம் பண்ணவும், உபவாசிக்கவும் ஊழியம் செய்யவும் முற்படுகிறார்கள். இவர்கள் நோக்கம் சரியானதல்ல. மந்திரவாதியாக இருந்து கிறிஸ்தவனான சீமோனின் இருதயம் தேவனுக்கு முன் செம்மையாக இல்லை. துர்குணமுடையவனாக இருந்தான். கசப்பான பித்திலும், பாவக் கட்டிலும், அகப்பட்டிருந்தான் இப்பேர் பட்டவனும் தேவ வரத்தைப் பெற ஆசைப்பட்டு சாபத்தைக் கட்டிக் கொண்டான் (அப்.8:19-23). இப்படிப்பட்ட துர்நோக்கமுடையவர்களை சாத்தான் கையிலெடுக்கிறான். தன்னுடைய வல்லமையைக் கொடுக்கிறான். இவர்கள் செயல்பட ஆரம்பிக்கிறார்கள். இவர்களுடைய பிரசங்கம் சிலுவையைப் பற்றி இருக்காது (1கொரி 1:23). பாவத்தைக் குறித்தோ, நீதியைக் குறித்தோ, நியாயத் தீர்ப்பைக் குறித்தோ இருக்காது (யோவா.16:8). தங்களுக்கு மகிமையைக் கொண்டு வரும்படி 'மேரி கர்த்தர் உன்னை குணமாக்குகிறார், சாரன் உன் மகனுக்கு வேலை கிடைக்கும், எஸ்தர் இயேசு உன்னை சந்திக்கிறார்' என்று குறி சொல்லுவார்கள். தங்களை அநேகர் சூழ்ந்து கொள்ளும்படி உலகத்துக்குரியவைகளைப் பற்றி பேசுவார்கள் (1யோவா. 4:5). பொய்யான அற்புத அடையாளங்களைச் செய்வார்கள் (மத்.24:24). பிசாசுகளை துரத்துவார்கள், தீர்க்க தரிசனம் சொல்லுவார்கள், பிரசித்தி பெற்றவர்களாயிருப்பார்கள் (மத்.7:22). அந்நிய பாஷை பேசுவார்கள். அவர்களுடைய செய்கைகளை உற்றுப் பார்த்தால் முற்றிலும் அருவருப்பாக இருக்கும். கொடிய பாவிகளாக இருப்பார்கள். விபச்சாரம், வேசித்தனத்தில் கைதேர்ந்திருப்பார்கள் செய்வதெல்லாம் செய்து கொண்டே, கர்த்தர் எவ்வளவு அன்பானவர், எல்லாவற்றையும் மன்னிக்கிறவர் என்பர். வசனத்திற்கு முற்றிலும் மாறுபட்டு ஜீவிப்பர். இவர்கள் சாத்தானுடைய கையாட்கள். கர்த்தர் அவர்களோடே இருந்து கிரியை நடப்பித்திருந்தால், உங்களை எனக்கு தெரியாது என்று சொல்லமாட்டாரே (மத்.7:23). இயேசு சொன்னபடி அவர்களின் கனிகளினால் அவர்களை அறியலாம். பரிசுத்தாவி இருந்தால் பரிசுத்த செய்கைகள் இருக்கும். இவர்களோடே சேர்ந்தவர்கள் பரிசுத்தமாவார்கள். மரம் நல்லதானால் கனியும் நல்லதே. மரம் கெட்டதென்றால் கனியும் கெட்டதே. இப்படிப்பட்ட சாத்தானின் கையாட்கள் திரளான பேர் உலகமெங்கும் சுற்றித் திரிகிறார்கள். இவர்களைக் குறித்து IIபேது.2,3 அதிகாரங்களில் எழுதியிருக்கிறது. இப்படிப்பட்டவர்கள் அந்நாட்களிலும் இருந்தார்கள். (IIபேது.2:1).

ஒரு சரியான, கர்த்தருடைய ஊழியன் எப்படியிருப்பான்; இருக்க வேண்டும் என்று 1பேது.5:2, 3, 4ல் காண்கிறோம். ஒரு நல்ல ஊழியன் இழிவான ஆதாயத்தை இச்சிக்க மாட்டான். தான் கர்த்தரின் வேலையாள் என்பதை அவன் அறிகிறபடியால் அவரிடமே கூலியை கேட்பான். தனது சொந்த தேவைகளை அவரிடமே கேட்பான். மனிதனால் கொடுக்கப்படும் கூலியை என்று அவமதிப்பான். தனது வறுமையை வெளியே சொல்ல மாட்டான். சொன்னால் அவனை போஷித்து காப்பாற்ற கடமைப் பட்ட கர்த்தருக்கு அவமானம் என எண்ணுவான்.

தனக்குப் புகழுண்டாக விரும்பான். தான் சிறுகவும், அவர் பெருகவும் வேண்டும் என விரும்புவான். கர்த்தர் முன் மிகுந்த மனத் தாழ்மையுடன் இருப்பான். தன்னுடைய திறமையை சார்ந்திராமல் கர்த்தரையே சார்ந்திருப்பான். அவனுடைய மேன்மை கிறிஸ்துவாக இருக்கும்.

வாழ்க்கையைப் பார்த்தால் தூய்மையாக இருக்கும், எதிராளி நிந்திக்க இடங் கொடான். செய்கைகள் எல்லாம் நீதி

யாக இருக்கும். மனுஷரை நாடிப் போதியாமல், மனுஷரைப் பிரியப்படுத்துகிறவனுமிராமல் தேவப் பிரியனாய் இருப்பான். மந்தைக்கு மாதிரியாய் இருப்பான். இதை வாசிக்கும் அருமையான அன்பர்களே, கெட்ட மனிதர்களை மாதிரியாக நோக்காமல் அவர்களைக் கண்டு இடறிப் போகாமல் தெளிவடைந்து ஞானஸ்நானம் பெற்று, பரிசுத்தாவி பெற்றுநல்ல ஊழியர்களோடே திருச்சபையில் ஐக்கியப்பட்டு உங்கள் சந்தோஷத்தை நிறைவாக்குங்கள்.

“இதோ, நெருப்பைக் கொளுத்தி, அக்கினிப் பொறிகளால் சூழப்பட்டிருக்கிற நீங்களெல்லாரும் உங்கள் அக்கினி தீபத்திலும், நீங்கள் மூட்டின அக்கினி ஜுவாலையிலும் நடவுங்கள்; வேதனையில் கிடப்பீர்கள்; என் கரத்தினால் இது உங்களுக்கு உண்டாகும்.”
ஏசா.50:11

# சுவிசேஷம்

நாம் பாவிகளாயிருக்கையில் கிறிஸ்து நமக்காக மரித்ததினால் தேவன் தம் மேல் வைத்த தமது அன்பை விளங்கப் பண்ணுகிறார். (ரோ. 5:8) என்று வாசிக்கிறோம். ஏனெனில், நாமெல்லாரும் பாவஞ் செய்து ஏகமாய்க் கெட்டுப் போனோம் என்று வேதம் சொல்லுகிறது. இந்தப்படி நாம் யாவரும் பாவம்செய்து குடித்து, சூதாடி, வேசித்தனம் பண்ணி சரீரத்தையும் கெடுத்து வியாதிக்காரர்களாகி விட்டோம். பாவம் செய்கிற ஆத்துமா சாகும் என்றும் வேதம் சொல்கிறது. இந்தப்படியே நாம் உயிருள்ளவர்கள் என்று பெயர் பெற்றிருந்தாலும் ஆத்துமாவிலே செத்தவர்களாய் இருக்கிறோம். (வெளி. 3:1; எசே. 18:20). இந்தப் பிரகாரம் நம்முடைய ஆத்துமா செத்ததாயும் அடுத்து மறுமையில் நித்திய நரகத்தில் தள்ளப்பட வேண்டியவர்களாயுமிருக்கிறோம். பயப்படுகிறவர்களும், அவிசுவாசிகளும், அருவருப்பானவர்களும், கொலைபாதகரும், விபசாரக்காரரும், சூனியக்காரரும், விக்கிரகாராதனைக்காரரும், பொய்யர் அனைவரும் இரண்டாம் மரணமாகிய அக்கினியும், கந்தகமும் எரிகிற கடலிலே பங்கடைவார்கள் (வெளி. 21:8) என்று வாசிக்கிறோம்.

இப்படிப்பட்ட நரக ஆக்கினைக்கேதுவாக பாவத்தில் சிக்கிக்கொண்டு இருக்கிற ஆத்துமா மீட்கப்பட வேண்டும். பிழைக்க வேண்டும் என்பதற்காய் கிறிஸ்து நமக்காக மரித்தார். இப்படி தன் ஜீவனைக் கொடுத்து தமது அன்பை வெளிப்படுத்திக் காண்பித்தார். நீங்கள் ஒருவேளை கேட்கலாம், ஏன் ஆண்டவர் பரலோகத்தில் இருந்து கொண்டே இரட்சிக்கலாமே, அவருக்குத் தான் எல்லாம் செய்ய வல்லமை உண்டே, அப்படியிருக்க இந்தப் பூமிக்கு ஏன் வர வேண்டும் என்று கேட்கலாம். அப்படியல்ல, தேவன் நீதியுள்ளவர், நீதியின்படி நியாயந் தீர்க்கிறவர். தேவன் நீதியில் பிசகாதவர்.

ஆதி மனிதனாகிய ஆதாமும் ஏவாளும் பாவம் செய்த போது அவர்களை, ஏதேன் தோட்டத்தை விட்டு வெளியேற்றினார். அவர்கள் திரும்ப ஏதேனுக்குள் பிரவேசித்து ஏதேனின் ஜீவக் கனியை புசித்து விடக் கூடாது, ஏதேனின் இன்பத்தை அநுபவிக்கக் கூடாது என்று அவர் மனிதர்களைத் துரத்திவிட்டு, ஜீவ விருட்சத்துக்குப் போகும் வழியைக் காவல் செய்ய ஏதேன் தோட்டத்துக்குக் கிழக்கே கேருபீன்களையும் வீசிக் கொண்டிருக்கிற சுடரொளி பட்டயத்தையும் வைத்தார் (ஆதி. 3:24) ஆம் ஏதேனுக்குள் பிரவேசிக்கிறவர்கள் யாராயிருந்தாலும் அந்த சுடரொளிப் பட்டயம் வெட்டிபோடும். இது தேவன் வைத்த நீதி. மனுமக்கள் யாவரையும் மறுபடியும் ஏதேனில் சேர்த்து ஜீவ விருட்சத்தின் கனியை புசிக்கக் கொடுக்கும்படி தேவனே மனித அவதாரத்தில் (மனிதர் சாயலாக) இரண்டாம் ஆதாமாக பூமிக்கு வந்து ஈட்டியால் குத்தப்பட்டார். சிலுவையில் அறையப்பட்டார். மரித்தார். அடக்கம் செய்யப்பட்டார். மூன்றும் நாள் உயிரோடு எழுந்தார். அருமை சகோதரனே, சகோதரியே, இது தேவன் உன் மேல் வைத்த அன்பு இனி இயேசுவை விசுவாசித்து அவரை ஏற்றுக் கொள்கிற மக்கள் தாராளமாய் ஏதேனுக்குள்

(பரலோகத்துக்குள்) பிரவேசிக்கலாம். கடவுளின் பட்டயம் கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவை ஏற்றுக் கொள்கிற மக்களை வெட்ட முடியாது. உனக்காக ஏற்கெனவே இயேசு அடிக்கப்பட்டு விட்டார்.

பிரியமானவர்களே, நீதிபதி மாணிக்கம் என்பவருக்கு மாதவன் என்ற மகன் இருந்தான். நீதிபதி மாணிக்கம் மகன் மாதவன் மீது அதிக அன்பும் பாசமும் வைத்திருந்தார். செல்வமாய் வளர்த்து வந்தார். தன்னைப் போல் மகனையும் ஒரு நீதிபதியாக உருவாக்க வேண்டும் என்ற நோக்கத்தோடு மாதவனை வளர்த்து வந்தார். மாதவன் என்ன தவறு செய்தாலும் நேரடியாக கண்டிப்பதே இல்லை. ஏனெனில் கண்டித்தால், எங்கேயும் ஓடிவிட்டால் என்ன செய்வது என்று எண்ணி அப்படி வளர்த்தார். மாதவனும் படிப்படியாக படித்து மேல்நிலைப் பள்ளி படிக்க வேண்டிய காலம் வந்து படித்துக் கொண்டு இருக்கிற நாட்களில் கெட்ட மாணவர்களோடு சேர்ந்து வார் கற்ற ஆரம்பித்து பல தீய வழியில் நடந்து கொண்டான். இப்படியிருக்க மாதவனுக்கும் மற்றொருவனுக்கும் அடிதடி கலாட்டா ஏற்பட்டதில் மற்றவன் மாதவனை போலீஸில் புகார் செய்து விட்டான்.

மாதவன் கோர்ட்டுக்கு விசாரணைக்காக கொண்டு வரப்பட்டான். மாதவனின் தகப்பன் மாணிக்கம்தான் விசாரிக்கிறார். விசாரித்த போது மாதவன் மீது குற்றம் கண்டு பிடிக்கப்பட்டது. குற்றத்துக்கு தண்டனையாக ஆறு மாதம் ஜெயில் தண்டனை என்று தீர்ப்புக் கூறிவிட்டு, பின்பு அரசியல் சட்டப்படி ரொக்கப் பணம் செலுத்தி, மீட்டுக் கொண்டு வந்து விட்டார். இப்படி மறுபடியும் மறுபடியுமாக அநேக குற்றங்களைச் செய்து கோர்ட்டுக்கு போகும் போதெல்லாம் மகன் மீது வைத்த அன்பினால் தானே அபராதம் (Fine) செலுத்தி மீட்டுக்கொண்டு வருவார். இப்படி பல தடவை தகப்பனே ஜாமீன் எடுப்பதை அறிந்த மாதவன் எத்தவித பயமின்றி இன்னும் அதிக துன்மார்க்கமாய் நடக்க ஆரம்பித்தான். ஒரு நாள் மாதவனுக்கும் வேறு ஒருவனுக்கும் சண்டை ஏற்பட்டதில் மாதவன் ஒருவனை குத்திக் கொலை செய்து விட்டான். ஊரார் அனைவரும் சேர்ந்து மாதவனை காவல் நிலையத்துக்குக் கொண்டு போய் ஒப்படைத்து விட்டார்கள். விசாரணைக்கு கோர்ட்டுக்குக் கொண்டு வரப்பட்டு விசாரித்த போது மாதவன் கொலைக் குற்றவாளி என்பதற்கான தகுந்த சாட்சிகள் ஆதாரங்கள் எல்லாம் சரியாக இருந்தது. இப்பொழுது நீதிபதியின் உள்ளம் துடிக்க ஆரம்பித்தது. துக்க முகத்தோடு நீதிபதி மாதவனை பார்க்கிறார். மாதவனும் தகப்பனை பார்க்கிறான். இந்த நேரத்தில் சில நிமிடம் கோர்ட்டே அமைதியாகி விட்டது. எதிர்வாதிகள் மாதவனை தூக்கில் போடுங்கள் என்று உள்ளத்துக்குள் சொல்லி முணங்கிக் கொண்டிருக்கிறார்கள். நீதிபதி மாணிக்கம் விசாரணை செய்ததில் மாதவன் கொலை செய்தது ஊர்ஜிதம் பண்ணி கொலை செய்த மாதவனுக்கு நாளை வெள்ளிக்கிழமை காலை பத்து மணிக்கு தூக்கிலிடும்படி தீர்ப்பளிக்கிறேன் என்று கூறி விட்டதும் மாணிக்கம் வீட்டுக்கு வந்து கட்டிலில் விழுந்து துடிக்கிறார். மகனே உன்னை எத்தனையோ குற்றத்திலிருந்து மீட்டேனே அதோடு தவறு செய்யாமல் இருந்திருக்கக் கூடாதா, ஐயோ மகனே என்று துடித்துக் கொண்டு இருந்த மாணிக்கம் அன்று இரவு பத்து மணிக்கு மேல் நீதிபதியின் உடுப்போடு ஜெயிலுக்குச் சென்றார். மகன் மாதவன் இருக்கும் அறைக்குப் போய் கட்டிப் பிடித்து அழுதார். அருகாமையில் இருப்பவர்களை எல்லாம் தூரத்தில் போகும்படி உத்தரவிட்டார். எல்லோரும் போய்விட்டார்கள். பின்பு அறைக்குள் போய் மகனே உன் உடுப்பைக் கழற்று என்று சொல்லி மகனுடைய உடையை தான் அணிந்து கொண்டு தன்னுடைய (நீதிபதிக்குரிய) உடுப்புகளை மகனுக்கு அணிவித்து நீ எங்கேயும் நிற்காமல் யாரிடமும் பேசாமல் வேகமாக காரில் ஏறி வீட்டுக்குப் போய் விடு இனிமேல் எந்த தவறும் செய்யாதே என்று சொல்லி அனுப்பிவிட்டார். ஏறத்தாழ தகப்பனும் மகனும் ஒரே சாயலாகயிருக்கிற படியால் அவன் வரும்போது நீதிபதிதான் வருகிறார் என்று எண்ணி எல்லோரும் வணக்கம் செலுத்தி வழியனுப்பி வைத்தார்கள். ஜெயில் அறையில் இருக்கும் நீதிபதி மாணிக்கம் மாதவனுடைய துணிகளை உடுத்தி கருப்புத் துணியால் முகத்தை மூடி

துக்கம் நிறைந்தவராய் தலை கவிழ்ந்து இரவு முழுவதும் உட்கார்ந்திருந்தார். பொழுது விடிந்து பத்தாம் மணி வேளை வந்ததும் அதிகாரிகள் மாதவனை தூக்கு மேடைக்கு அழைத்து வாருங்கள் என்று சொன்னதும் இரு போலீஸ் அதிகாரிகள் மாதவன்தான் என்று எண்ணி நீதிபதி மாணிக்கத்தை தூக்கு மேடைக்கு கொண்டு போனார்கள். முகத்தை மூடிய நிலையில் உள்ளவரிடம் அடே, மாதவா உன்னைத் தூக்கில் போடப் போகிறோம் கடைசியாக உன் விருப்பம் என்ன கேள் என்று விசாரித்தார்கள். எனக்கு ஒன்றும் வேண்டாம் சீக்கிரத்தில் என்னைத் தூக்கில் போட்டு விடுங்கள் என்று வாய் திறவாமல் கை ஜாடையாக காட்டினார். அதிகாரிகள் அதைப் பார்த்து விட்டு அபாய சங்கு ஊதும்படி உத்தரவிட்டார்கள். அபாய சங்கு ஊதப்பட்டது. உடனே நீதிபதி மாணிக்கத்தை தூக்கிலிட்டார்கள். அபாய சங்கு சத்தத்தைக் கேட்ட மாதவன் தமக்குப் பதிலாக அப்பா யாரையோ தூக்கில் போட்டு விட்டார் போல் தெரிகிறது போய் பார்ப்போம் என்று வேகமாக வந்து தூக்கு மேடைக்கு அருகில் நின்று பார்க்கும் போது தன் தகப்பனார் நீதிபதியின் கண் விழிகள் இரண்டும் வெளியே தள்ளியும் பார்ப்பதற்கு பயமாக நாக்கு நீண்டும் வாய் வழியாக இரத்தம் கொப்பளித்துக் கொண்டும் வருவதை மாதவன் பார்த்ததுமே அவனுக்கு குருதி கொதித்தது. சுவரையில் தீப்பற்றி எரிவது போல முட்டி மோதுகிறான். சிரம் தெறிக்க விழுந்து புரளுகிறான். புழுதி கிளம்ப ஐயோ கொலை செய்த கொடும்பாவி நான் சாகவேண்டியதிருக்க நீதிபரராகிய என் தகப்பன் செத்துப்போனாரே; என்று சொல்லி கதறுகிறான். கத்துகிறான் காகத்தைப் போல; அலறித் துடிக்கிறான் ஆந்தையைப் போல. இந்தக் கண் கொள்ளாக் காட்சியைப் பார்த்தவர்கள் வாயில் கை வைத்தார்கள். நான் பிழைத்திருக்க வேண்டும் என்பதற்காக என் தகப்பன் மரித்தபடியால் இனி ஒரு போதும் தவறு செய்ய மாட்டேன் என்று தீர்மானம் செய்தான். தவறு செய்யக்கூடிய எண்ணம் வரும் போதெல்லாம் தகப்பனுடைய நினைவு வரும். அடுத்து தவறு செய்யக் கூடிய மனம் வராமல் இருந்து தன்னை காத்துக் கொண்டான்.

பிரியமான சகோதரனே, சகோதரியே, மாம்சத்தின் படியான ஒரு தகப்பன் தன் பிள்ளைக்குச் செய்த தியாகத்தைப் பார்த்தாயா? அந்த மனிதன் மரித்தவர்; மரித்தே போய்விட்டார். ஆனால் முழு உலகத்தின் மீட்புக்காக நமக்காக மரித்த கர்த்தராகிய இயேசுகிறிஸ்து மரித்தும், பின்பு நமக்கு எல்லாவற்றையும் கொடுத்து போஷித்துக் காப்பாற்றி, இந்த உலகத்தில் நீதிமானாக வாழவைத்து பின்பு பரலோகத்தில் கொண்டு போய் சேர்ப்பதற்காக மறுபடியும் உயிரோடு எழுந்திருக்கிறார். இந்த அருமை இரட்சகர் உனக்கு வேண்டாமா? இன்றே கல்வாரியை நோக்கிப் பார். உன் கண் முன்னில் இருக்கும் புதிய எருசலேம் சபையின் மேய்ப்பர்களைப் பார். அவர்களில் சிலுவையின் அனுபவத்தைப் பார்ப்பாய். பாவமன்னிப்பின் நிச்சயத்தைக் காண்பாய். பரலோகம் செல்லக் கூடிய ஆலோசனையைக் கேட்பாய். உனக்கு முன் இயேசுவைப் போல் இருப்பார்கள். அவர்களுடைய மாதிரியின் படி நீயும் நடப்பாய். இன்றே புதிய எருசலேம் சபைக்கு நேராக உன் உள்ளம் திரும்பட்டும். இங்கே சிலுவையில் உண்டான பாவமன்னிப்பின் இலட்சியம் உண்டு.

"அவர் நம்முடைய பாவங்களுக்காக ஒப்புக் கொடுக்கப்பட்டும் நாம் நீதிமான்களாக்கப் படுவதற்காக எழுப்பப்பட்டும் இருக்கிறார்." ரோம. 4:25

(தொடர்ச்சி)

# புதிய எருசலேம் சபையின் நடபடிகளில் சில

கிறிஸ்துவுக்குள் பிரியமானவர்களே, கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் வாழ்த்துக்கள் பல. 1.8.87-ல் கர்த்தருடைய சமூகத்தில் ஜெபம் செய்து கொண்டிருந்த பொழுது கர்த்தருடைய ஆவியானவர் அநேக காரியங்களைக் குறித்துப் பேசிக் கொண்டிருந்தார். அந்த வேளையில், "நீங்கள் சீக்கிரமாய் அந்தமான் தீவுக்கு செல்ல வேண்டும். அங்கேயும் என்னைத் தேடுகிற ஏராளமான மக்கள் இருக்கிறார்கள். அவர்களைச் சந்தித்து என் மந்தையில் சேர்க்க வேண்டும். இப்படியே எல்லாத் தீவுகளுக்கும் என்னுடைய வேலை கொண்டு செல்லப் பட வேண்டும்" என்று கர்த்தர் பேசினார்

தமிழ்நாட்டின் வேலைகள் விரிவடைந்து கொண்டிருக்கிறது அதற்காக கர்த்தரை ஸ்துதிக்கிறேன். இதன் மத்தியில் அந்தமானுக்கு தேவன் எப்பொழுது அனுப்புவார் என்று ஆவியில் எதிர்பார்த்துக் கொண்டேயிருந்தோம். அதே சமயம் நமது சகோதரர் P.T.S. குமார் என்பவர் அந்தமானில் கடற்படை (NAVY)யில் வேலை பார்த்துக் கொண்டிருந்தார். அவருக்கு கடிதம் எழுதினேன். சகோதரரே, கர்த்தர் அனுப்பும் பொழுது நாங்கள் கர்த்தருடைய வேலைக்காக அந்தமான் (ANDAMAN) வருவோம் என்பதாக. அவர் மிகவும் சந்தோஷமடைந்து அடிக்கடி ஐயா, நீங்கள் எப்பொழுது அந்தமான் வருவீர்கள் நீங்கள் வருவது கப்பலிலா? அல்லது விமானத்திலா? என்றெல்லாம் எழுதிக் கொண்டேயிருந்தார். 1987-ல் போவதற்கு ஆண்டவர் உத்தரவு தரவில்லை. 1988 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் ஓர் நாள் ஜெபித்துக் கொண்டிருந்த பொழுது, "இம்மாத இறுதிக்குள் அந்தமான் செல்ல வேண்டும். அங்கிருக்கும் P.T.S. குமாரை, சாத்தான், வேறு இடத்திற்கு மாற்றுவதற்கு திட்டமிட்டுள்ளான். எனவே சீக்கிரமாய்ப் போய் சந்திக்க வேண்டிய மக்களைச் சந்தித்து என் நாமத்தை மகிமைப்படுத்த வேண்டும்" என்று கர்த்தருடைய ஆவியானவர் பேசினார்.

உடனே நாங்கள் சென்னை சபையாருக்கு விபரங்களை எழுதினோம். அங்குள்ள ஊழியர்களும் சபைமக்களும் 22-4-88-ல் நாங்கள் அந்தமான் செல்வதற்கான இரண்டு விமான டிக்கெட்டுகளை வாங்கி வைத்திருந்தார்கள். நாங்கள் இங்கிருந்து (Valliοor) சென்னை சென்று 22-4-88 அன்று வெள்ளிக்கிழமை காலை 7 மணி அளவில் விமானம் ஏறி காலை சுமார் 9 மணியளவில் அந்தமான் போய் இறங்கினோம். தீவிற்கு சிறிது தூரத்திலிருந்தே விமானத்திலிருந்து அந்த தீவைப் பார்த்த பொழுது 'கடலின் மேல் படுத்துக் கிடக்கும் ஒரு நீளமான முதலையைப் போல்' காட்சியளித்தது. விமானத்தை விட்டு இறங்கினதும் கர்த்தரை ஸ்துதித்தோம். "கால்மிதித்த இடத்தை யெல்லாம் சொந்தமாக்கித் தருவேன் என்று சொன்ன வாக்கு மாறாத தேவனே, இந்த தீவுக்குள்ளே நாங்கள் கடந்து போகப் போகிறோம். நீர் அனுப்பின காரியங்களை செய்து முடிக்கப் பெலன் தாரும், பாதுகாப்பு தாரும், தேவரீர் கூடவே வாரும்" என்று ஜெபம் பண்ணிக் கொண்டு ஒரு மினி பஸ்ஸில் ஏறி வெளி வாசலை வந்தடைந்தோம். சகோ. P.T.S குமார் அவருடைய Navy உடையை அணிந்தவாறே எங்களை வரவேற்க வந்திருந்தார். எனவே கூட்டத்தில் எளிதில் அவரைக் கண்டு கொள்ள முடிந்தது. நாங்கள் வெளியே வந்ததும் வேறு இரு சகோதரர்கள் ஓடிவந்து 'PRAISE THE LORD' என்று கூறி எங்கள் கரங்களைப் பற்றிக் கொண்டார்கள். ஒருவர் பெயர் எலிசா மற்றவர் பெயர் சம்பத்குமார். இருவரும் தமிழ் நாட்டைச் சேர்ந்தவர்கள். மூவருமாக எங்களை அழைத்துக் கொண்டு போய் விருந்தினர்கள் விடுதியில் தங்க வைத்தார்கள்.

நாங்கள் அங்கே சென்றதும் காலைக் கடமைகளை முடித்துவிட்டு அன்று உபவாச நாளாய் இருந்ததால் மீண்டும் ஜெபிக்க ஆரம்பித்தோம். அந்தத் தீவின் நிலவரங்கள் பற்றியும், அங்குள்ள மக்களின்

வாழ்க்கை நிலைமைப்பற்றியும், அவர்கள் எவ்விதமான தீய பழக்கமுடையவர்கள் என்றும், இங்குள்ள மக்களை எவ்விதமாக அணுக வேண்டும் என்றும் கர்த்தருடைய ஆவியானவர் அநேக ஆலோசனைகளைத் தந்தார். அவருக்கே மகிமையுண்டாவதாக!

23-4-88 சனிக்கிழமை வெளியே சென்று சில ஆத்துமாக்களைச் சந்தித்தோம். அன்றிரவும் உபவாச வேளையானபடியால் நீண்ட நேரம் ஜெபித்தோம். 24-4-88 ஞாயிறு காலை பரிசுத்த ஆராதனையை நாங்கள் தங்கியிருந்த அறையிலேயே நடத்தினோம். சம்பத்குமார் என்ற புதிய சகோதரர் மட்டுமே எங்களுடன் ஆராதிக்க வந்திருந்தார். அந்த ஆராதனையில் சம்பத்குமாரைக் கர்த்தர் தம்முடைய தூய ஆவியினால் அபிஷேகம் பண்ணினார். அந்தமானிலும் தம்முடையவர்களைத் தெரிந்தெடுக்கிறார் என்பதைக் கண்டு கர்த்தரை மகிமைப்படுத்தினோம். அன்று மாலை, வேலையிலிருந்து வந்த சகோதரர். P.T.S. குமார், தான் இன்று பரிசுத்த ஆராதனையில் பங்கு பெறமுடியாமல் போனதற்காகவும், தனக்கு பரிசுத்த ஆவி கிடைக்கவில்லையே என்றும் எண்ணி மிகவும் வருத்தப்பட்டார். மறுநாள் விடுப்பு (LEAVE) எடுத்துக் கொண்டு வந்துவிட்டார். "நீர் என்னை ஆசீர்வதித்தாலொழிய நான் உம்மைப் போக விடமாட்டேன் (ஆதி.32:26) என்று கூறின யாக்கோபைப் போல அன்று அவர் தேவனிடம் முறையிட்டார். நாங்களும் கர்த்தர் அவரை அபிஷேகிக்கும்படி அவருடைய தலையின்மேல் கைகளை வைத்து ஜெபித்தோம். "தம்மைப்பற்றி உத்தம இருதயத்தோடிருக்கிறவர்களுக்குத் தம்முடைய வல்லமையை விளங்கப்பண்ணும்படி கர்த்தருடைய கண்கள் பூமியெங்கும் உலாவிக் கொண்டிருக்கிறது (I நாளா. 16:9) என்று எழுதியிருக்கிறபடியே அந்தமான் தீவிலே நாங்கள் தங்கியிருந்த அறை வீட்டையும் கர்த்தருடைய கண்கள் நோக்கிப் பார்த்தது. ஆ! எத்தனை அதிசயம்! அவருடைய வல்லமை சகோதரனில் இறங்கினது. கர்த்தர் தாம் சொன்னபடியே சகோதரனை அபிஷேகித்தார். அவரோடு நாங்களும் கர்த்தருக்குள் மகிழ்ந்து களிகூர்ந்தோம்!

இன்னும் பல குடும்பங்களுக்கு சகோதரர்கள் எங்களை அழைத்துச் சென்றார்கள். போன இடங்களிலெல்லாம் மக்கள் எங்களை மிகவும் வாஞ்சையாய் ஏற்றுக் கொண்டார்கள். சகோதரர் சேகரன் என்பவருடைய வீட்டிற்கும் நாங்கள் சென்றிருந்தோம். மிகவும் அன்புடன் எங்களை ஏற்றுக் கொண்டு உபசரித்தார்கள். இப்படி சத்தியத்தின் மேல் வாஞ்சையுள்ள மக்களை நாங்கள் கண்டபோது கர்த்தர் அந்தமானைக் குறித்துப் பேசிய வார்த்தைகளை நினைவுகூர்ந்து கர்த்தரை மகிமைப் படுத்தினோம்.

வெளியே கடந்து போய் அந்தமானின் சில பகுதிகளைப் பார்க்கத் தேவன் கிருபை செய்தார். 300க்கும் அதிகமான தீவு கூட்டங்கள் உள்ளன. சுமார் 30 தீவுகளில் மட்டுமே மனிதர்கள் வசிக்கிறார்கள். காற்று அதிகமில்லையாதலால் கடல் அமைதலாய் அலையின்றி காணப்படுகிறது. மிகவும் அழகு வாய்ந்த இடம், கடல் நீர் பச்சை நிறத்தில் காட்சியளிக்கிறது. ஆண்டவரின் படைப்பில் இதுவும் ஓர் அற்புதமே.

இந்த தீவிலுள்ள மக்களைத் தீய பழக்கத்துக்கு வழி நடத்தும் சில தீய ஆவிகளைக் கர்த்தருடைய கட்டளையின்படி அதட்டி வெளியேற்றினோம். இதனால் பாதிக்கப்பட்ட ஆவிகள் எங்களுடைய பிரயாணத்தைத் தடை செய்யவும், வழிப்பிரயாணத்தில் விபத்துகளை உண்டு பண்ணவும், விசேஷமாக விமான விபத்தை உண்டு பண்ணி எங்களையே அழித்துவிட சாத்தான் திட்டமிட்டுள்ளான் என்று கர்த்தருடைய ஆவியானவர் எங்களுக்கு வெளிப்படுத்தித் தந்தார்.

எங்கள் மூலம் சந்திக்கப்பட்ட ஆத்துமாக்களைக் கூட்டி, சகோதரர் எலிசாவின் வீட்டில் ஓர் நாள் ஜெபக்கூட்டமாய் நடத்தினோம். நீங்கள் தொடர்ந்து ஜெபித்துக் கொண்டிருங்கள், நாங்கள் தமிழகத்திற்குப் போய் சீக்கிரமாய் ஒரு ஊழியக்காரரை உங்களுக்கு அனுப்பித்தருகிறோம். என்று கூறி நாங்கள் சென்னைக்கு மீண்டும் 29-4-88ல் புறப்பட விமான டிக்கெட் வாங்கிவிட்டோம்.

(தொடரும்)

Pastor S. Sundarraj
New Jerusalem Church,
Vallioor.

---

"...அவருடைய வேதத்துக்குத் தீவுகள் காத்திருக்கும்". ஏசா 42:4.

---

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் - 58 ★ OCTOBER 1988

"புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ,
நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ,
எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள்...
விழித்திருங்கள் உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லா
ருக்கும் சொல்லுகிறேன் விழித்திருங்கள். "

மாற்கு 13 : 35-37

**EDITOR : CHIEF PASTOR N. LAZAR**

BOMBAY. INDIA.

# ஆசிரியர் உரை

தேவனுடைய ஜனங்களே! காலங்கள் நிறைவேறும் பொழுது குறித்த காலத்தில் தேவன் தம்முடைய காரியத்தைச் செய்கிறார். ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு காலமுண்டு. அதனை தேவன் அந்தந்த காலத்தில் செய்கிறார். அதில் ஒரு நிமிஷம் முந்தியாகிலும் ஒரு நிமிஷம் பிந்தியாகிலும் அவர் செய்யமாட்டார். குறித்த காலத்தில் கிறிஸ்து பாவிகளாகிய நமக்காக மரித்தார். இக்காலம் தானியேலின் தீர்க்கதரிசனம் 12-ம் அதிகாரம் 6 முதல் 10-ம் வசனம் வரை சொல்லியுள்ள முத்திரிக்கப்பட்ட சத்தியங்கள் வெளிப்படும் காலமாகும். முடிவுகாலத்திற்குரியது (தானி. 12:4). அறிவு பெருகிப் போயிருக்கிற இந்த நாளில் புதைபொருளாக வைக்கப்பட்டிருந்த சத்தியங்களை தேவன் தம்முடைய பரிசுத்தவான்கள் மூலமாய் வெளிப்படுத்துகிறார். இந்த சத்தியங்கள் மூலம் அநேகர் சுத்தமும், வெண்மையுமாக்கப்பட்டு புடமிடப்பட்டவர்களாய் விளங்குகிறார்கள். துன்மார்க்கரோ துன்மார்க்கமாய் நடப்பார்கள். சிலர் விழுவார்கள். துன்மார்க்கரில் ஒருவனும் உணரான் (தானி 12:10). இந்த தெய்வீக உபதேசத்தினால் மக்கள் புடமிடப்பட்டு உண்மையாய் கர்த்தரைத் தொழுது கொண்டு தேவ ஜனங்களாயிருப்பார்கள். அவர்களைக் கர்த்தரும் தமது ஜனமென்பார். அவர்களுடைய ஜெபங்களெல்லாம் கேட்கப்படும் (சக 13:9). இந்த தெய்வீக உபதேசத்தினால் தேவ ஜனங்கள் ஆத்மீக பெலன் கொண்டு கர்த்தருடைய வார்த்தையின்படி ஜீவிக்க, செய்ய வல்லமையுடையவர்களாய் விளங்குவார்கள் (யோவே 2:11). கிறிஸ்தவமானது ஜீவனும், வல்லமையும், அறிவையும் உடைய மார்க்கம். தேவ ஜனங்கள் தேவ சேனையாய், கர்த்தருடைய பாளயமாய் ஒழுங்கும் கட்டுப்பாடும் உடையவர்களாய் அணிவகுத்து செல்லுவார்கள் (யோவே 2:2-11). பின்மாரி காலத்தில் மழை பொழிகிறது. புது திராட்சை ரசத்தை புது துருத்திகளில் வார்த்து வையுங்கள். ரசமும் பத்திரப்படும், துருத்தியும் (பை) கிழியாதிருக்கும். புது துருத்திகளில் பழைய ரசத்தை வார்த்து வைக்காதேயுங்கள். துருத்தியும் கிழியும், இரசமும் சிந்திப்போகும். எல்லாருக்கும் நியாயத்தீர்ப்பு கொடுக்கிறதற்கு "இதோ வருகிறேன்" என்று கர்த்தர் சொல்லுகிறார்.

கர்த்தர் உங்களை ஆசீர்வதிப்பாராக!

கிறிஸ்துவுக்குள்

(Chief Pastor N. LAZAR)

---

## ஞானஸ்நானம்

15-9-88 அன்று 'புதிய எருசலேம் சபை' சென்னை கிளையில் நடைபெற்ற ஞானஸ்நான ஆராதனையில் 6 பேர்கள் ஞானஸ்நானம் பெற்று சபையோடே ஐக்கியப்பட்டார்கள்.

# “ஸ்திரீகள் அவர்களை ஆளுகிறார்கள்”

## (ஏசாயா 3:12)

இந்நாட்கள் கடைசிக் காலமாயிருக்கிறது. கிறிஸ்துவை அறிந்த உலகத்திலும், வெளி உலகத்திலும், பெண்களுக்கு சம உரிமை வழங்க வேண்டும் என்று அலவட்சணமான போராட்டம் ஆரம்பமாகியுள்ளது. பெண்கள் ஆண்களுடன் சரி சமமாக எல்லா விஷயங்களிலும் போட்டியிடும் காலம் இது. திருச்சபை வாழ்விலும் இந்த நிலை தோன்றியுள்ளது. வேதாகமத்தை தங்கள் சட்டநூலாக கொண்டிராத சில கிறிஸ்தவ கூட்டாளைகளிலே ஸ்திரீகள் குருக்களாகின்றனர் என்றும் கேள்விப்படுகிறோம். ஸ்திரீகள் பாடலாமா? ஜெபிக்கலாமா? ஞாயிறு பாடசாலை நடத்தலாமா? பெண்கள் கூட்டங்களில் பேசலாமா? என்பதல்ல கேள்வி. பொருத்தமான இடங்களிலும், நேரங்களிலும், தங்கள் திறமைக்குத் தக்கபடி ஸ்திரீகள் நாம் மேலே குறிப்பிட்ட ஊழியங்களில் எதையாகிலும் அவர்கள் செய்யலாம். கர்த்தருக்குள் சந்தோஷப்படலாம். நமது கேள்வி அவர்கள் குருக்களாய், சுவிசேஷகியாய், சபை ஊழியக்காரியாய், தலைமை வகிக்கிறவளாய் இருக்கலாமா? என்பதே.

வேதாகமம் இதைக் குறித்து என்ன சொல்லுகிறது? வேதாகமம் 1600 வருஷங்களாய் 40க்கும் மேற்பட்ட பக்தர்களால் எழுதப்பட்டதாயினும் இரண்டு அட்டைகளுக்கு நடுவில் ஒரே நூலாக அமைந்துள்ளது. முதல் பக்கம் முதல் முடிவு பக்கம் வரை தேவன் மனித இனத்துக்கு அருளும் முரண்பாடில்லாத ஒத்திசைவுடைய அருட்செய்தியை உடையதாயிருக்கிறது. தேவ ஆவியால் இது அருளப்படவில்லை என்றால் எவரும் மனித மனதால் நினைத்துப்பார்க்கவும் முடியாதவையாகும். வேதாகமம் தன்னுள் தானே முரண்படவில்லை. ஆனால் மனிதர்கள் கடவுளுடைய திருவுளத்தை விளங்கிக் கொள்ளும் முயற்சியில் ஒருவருக்கொருவர் முரண்படலாம். வேதாகமம் தானே முரண்படுவதில்லை. பெண்களின் ஊழியத்தைப் பற்றி வேதாகமம் என்ன சொல்கிறது என்பதே கேள்வி.

ஆண், பெண் இருவரின் உண்மையான பால் உறவு முறையாவது என்ன? புதிய ஏற்பாடு இதைப்பற்றி என்ன சொல்கிறது? வேத வசனத்தின் எந்த பகுதிக்கும் விளக்கம் சொல்லி அதனை வேண்டாம் என்று நீக்கி விடுதல் நமது வேலை அன்று. வேத வாக்கியங்கள் எந்த பொருளைப்பற்றியேனும் அது கொடுக்கும் உபதேசத்தின் முடிவே எல்லா விதமான கருத்து வேறுபாடுகளுக்கும் முடிவு கட்டுவதாகும்.

வேத வாக்கியங்கள் பேசும் இடத்தில் நாம் பேசுகிறோம். வேத வாக்கியங்கள் பேசாத இடத்தில் நாமும் பேசாமல் இருக்கிறோம். தேவனாகிய கர்த்தர் நம்முடைய சாயலின் படியும் ரூபத்தின் படியும் மனிதனை உண்டாக்குவோமாக என்றார். அவர்களை ஆணும் பெண்ணுமாக உண்டாக்கினார் (ஆதி. 1:27). மனிதன் தனிமையாயிருப்பது நல்லதல்ல என்று கண்ட கர்த்தர் அவனுக்கு ஏற்ற துணையை சரிசமான துணையை உண்டாக்குவோம் என்று ஆதாமை நித்திரைக்குள்ளாக்கி அவன் விலா எலும்புகளில் ஒன்றை எடுத்து மனுஷியை உருவாக்கினார். ஆதாமிடம் கொண்டு வந்து விட்டார்; அவள் அவனுக்கு மனைவியானாள் (ஆதி. 2:21-24). மேலே சொல்லப்பட்ட வேத வாக்கியங்களின்படி ஆணும் பெண்ணும் ஒரே இயற்கையும் ஒரே இன அமைப்பும் ஆனால் வெவ்வேறான பால் பண்பும், அப்பால் பண்புக்கு ஏற்றாற்போல் வெவ்வேறான சிறப்பியல்புகளும் உள்ளவர்களாய் விளங்குகின்றனர். அவர்கள் இருவரும் தோழமை உள்ளவர்கள். ஒருவர் குறையை மற்றவர் நிரப்பி இப்படி ஒருவரையொருவர் முழுமையாக்கும் பண்பினர். ஒரே சுபாவமுடையவர்களானபடியால் ஆடவரும் பெண்டிரும் பல பண்புகளில் பொதுவாக ஒத்துள்ளனர். ஆனால் பால் வேறுபாட்டிற்கு ஏற்றபடி உடலிலும், உள்ளத்திலும், ஒழுக்க நலத்திலும் ஒருவருக்கொருவர் ஒத்திசைவான வேறுபாட்டு அமைப்புள்ளவர்களாக விளங்கு

கின்றனர். பெண்கள் பொதுவாக ஆண்களை விட சிறியவர்களும், பலவீனமுள்ளவர்களுமாக விளங்குகின்றனர். பெண்டிர் உறுப்பமைதி ஆடவர் உறுப்பமைதியைவிட மென்மையும் உணர்வு நுட்பமும் உடையது. இதனாலேதான் பொதுவாக பெண்கள் ஆண்களை விட சமுதாய வாழ்விலே கவலையையும், பெருங்கூட்டங்களிலே ஏற்படும் மனக்கிளர்ச்சியைத் தாங்கக் கூடாதவர்களுமாயிருக்கிறார்கள். விதிவிலக்கு இருக்கலாம். சரித்திரத்தைப் பொறுத்தவரையில் ஆண்தான் பெண்ணுக்கு காவலன். அவன் உடல் வல்லமையும், கடின உழைப்பும் உடையவன். பலவீன பாண்டமாகிய பெண்ணுக்கு பாதுகாப்பு தேவை.

அறிவுத்திறனில் ஆண், பெண் இருபாலரும் சமமாக இருக்கலாம். இருப்பினும் முற்றிலும் அவ்வாறு சமமாக இல்லை. ஆண்களுக்கிடையில் அறிவுத்திறன் சிறந்து விளங்குவதையும் பெண்களுக்கிடையில் உணர்ச்சி இயல்பு மிகுந்து விளங்குவதையும் காண்கிறோம். எனவே அமைதியாக நிதானித்து நடுநிலை தவறாது தீர்ப்பு வழங்குவதற்கு ஆண்கள் தகுதி வாய்ந்தவர்களாக விளங்குகிறார்கள். மனித சமுதாயத்திற்கு இரக்கம் காட்டவேண்டிய இடங்களில் பெண்கள் தகுதி வாய்ந்தவர்களாகக் காணப்படுகின்றனர். நீதி வழங்குவதில் பெண்களை விட ஆண்கள் தகுதி வாய்ந்தவர்கள். நோயாளிகளுக்கும், துன்பப்படுகிறவர்களுக்கும் ஊழியம் செய்வதற்கு, இயற்கையாகவே ஆண்களைவிட பெண்கள் பண்புப் பொருத்தம் பெற்றவர்களாகக் காணப்படுகின்றனர்.

சமுதாய நீதியில் ஆண்களும் பெண்களும் சமமானவர்களே. பிற மதத்தினர் பெண்களை அடிமை நிலையில் நடத்தினர். இப்பொழுது அந்த நிலை மாறிவருகிறது. கிறிஸ்தவம் பெண்களை அவர்களுடைய இடத்தில் ஆணுடன் சரிசமமாக வைக்கிறது. சமுதாய அமைப்பையும் உரிமைகளையும் பற்றிப் பேசும்போது தான் யூதனென்றும், கிரேக்கனென்றும் இல்லை; அடிமையென்றும் சுயாதீனனென்றுமில்லை; ஆணென்றும் பெண்ணென்றும் இல்லை. நீங்கள் எல்லாரும் கிறிஸ்து இயேசுவுக்குள் ஒன்றாய் இருக்கிறீர்கள் (கலா. 3:28) என்கிறது வேதம். சமுதாயத்தின் மையமாகவும், அழகாகவும் பெண் காணப்படுகிறாள். இது பெண்களுக்குரிய இடமாக ஒப்புக் கொள்ளப்பட்டுள்ளது. இது அவர்களுடைய செல்வாக்கு எல்லை. இங்கே அவர்களின் ஆற்றல் சுடர் விட்டு பிரகாசிக்கின்றன.

ஒழுக்கப் பண்பில் ஆண்களைவிட பெண்கள் எளிதாக பாதிக்கப்படக் கூடியவர்களாக உள்ளனர். அவர்களால் சிறந்த ஒழுக்க நிலைக்கும் தூய்மைக்கும் உயரமுடியும். அல்லது மிகக் கீழான நிலையில் ஒழுக்கச் சீர்கேட்டிற்கும், கொடுமைக்கும் அமிழ்ந்து விட முடியும். இதை வரலாறு நமக்கு நிரூபித்துக் காட்டுகிறது. பெண்கள் தங்கள் இயல்பு குணங்களை வளர்த்துக் கொள்வார்களானால் அவர்கள் இன்னொரு சாராளாகவும், அன்னாளாகவும், எலிசபெத்தாகவும் மரியாளாகவும் விளங்கலாம். அல்லது அவர்கள் ஒரு தெலீலாளாகவும், யேசபேலாகவும், அத்தாலியாளாகவும், ஏரோதியாளாகவும் விளங்கலாம். ஆண்களைவிட பெண்கள் பக்திமிக்கவர்கள். அவர்களுடைய இயற்கையில் உள்ள உணர்ச்சிக்கூறு இதற்கு காரணமாக அமைகிறது. பொதுவாக, பெண்களுக்கு கூறப்படும் நாணம், அச்சம், மடம், பயிர்ப்பு முதலிய குணங்கள் தேவ பக்தியாயிருப்பதற்கு இவர்களுக்கு உதவுகின்றன. ஆகையால் ஆண்களைவிட பெண்கள் பயபக்தி, மரியாதை, தொழுது கொள்ளுதல் இவைகளை வெளிப்படுத்தும் இயல்பில் சிறந்தவர்களாய் காணப்படுகின்றனர்.

அதிகாரத்திலும், ஆளுகையிலும் பெண், ஆணுக்கு கீழ்ப்பட்டிருக்க வேண்டும். இது தாழ்வு மனப்பான்மையல்ல. ஆனால், ஒழுங்கிற்கும் நல்ல ஆளுகைக்கும் இது அவசியமானதாகும். இறைவன் ஏவாளிடம், "உன் ஆசை உன் புருஷனைப்பற்றியிருக்கும், அவன் உன்னை ஆண்டு கொள்ளுவான் என்றார்" (ஆதி 3:16). இதன் அர்த்தம் ஆண், தன் விருப்பப்படி பெண்ணை அநியாயமாகவும், கொடுமையாகவும் நடத்த வேண்டுமென்பது பொருளாகாது ஆனால் கணவனுடைய கடமையின் எல்லை ஆளுதலாகும். துணைவி தன் கணவனுக்கு அடங்கி இருக்க வேண்டும். ஆபிரகாம் தன் துணைவி

யையும், தன் வீட்டாரையும் நீதியாக ஆண்டார். சாராளும், தன் கணவனை ஆண்டவன் என்று சொல்லி கீழ்ப்படிந்திருந்ததாக பார்க்கிறோம். அப்படி அடங்கி, கனம் பண்ணி நடக்கிற பெண்களை வேதம், சாராளின் பிள்ளைகள் என அழைக்கிறது (1பேது. 3:6).

அப்போஸ்தலர்களாகிய பேதுருவும், பவுலும் எழுதியுள்ளதின்படி கணவன் மேலான அதிகாரம் உள்ளவன் என்றும் மனைவி கணவனுக்கு கீழடங்கி வாழவேண்டும் என்பதும் வெளிப்படை (எபே. 5:22-33; கொலோ. 3:18,19; 1தீமோ. 3:9-15; 1பேது. 3:1-7). சிலர் நினைப்பது போல் இந்த உபதேசம் காலம் கடந்ததல்ல. இது ரத்து செய்யப்படவும் இல்லை. இது உலகத்தின் முடிவு மட்டும் நிலைத்திருக்கும். இது இக்காலத்துக்கும் மிகவும் பிரயோஜனமானது. இந்தச் சட்டம் எழுத்தின்படியும் ஆவியின் படியும் எவ்வளவாக இருதரத்தினராலும் பின்பற்றப்படுகிறதோ, அவ்வளவாக கணவன்மாரும், மனைவிமாரும் உலகத்துக்கு நல்ல மாதிரிகளாக இருப்பார்கள். அவர்களுடைய குடும்ப வாழ்க்கை மிக மகிழ்ச்சியானதாக இருக்கும். பெண் ஆணுக்கு அடங்கி வாழ வேண்டும் என்னும் போதனையை மதித்து நடைமுறைப்படுத்தி வாழ்வது சமாதானத்திற்கும், நல்லொழுக்கத்திற்கும், திருச்சபையின் நல்வாழ்விற்கும் சமுதாயத்தின் நல்வாழ்வுக்கும் அவசியம் தேவையாகும்.

ஆண், பெண் இருபாலரும் ஒன்றோடொன்று ஏற்ற பண்புகளிலும் ஒப்பிடலாம். ஒரு பால் மற்றொன்றை விட மேலானது என்று சொல்லக்கூடாது. ஒவ்வொரு பாலுக்கும் மற்ற பாலிடம் இல்லாதது உண்டு. ஒன்று மற்றொன்றை நிறைவு செய்கிறது. ஒன்று மற்றொன்றால் நிறைவு செய்யப்படுகிறது. இரண்டும் எதிலும் ஒன்று போல் இல்லை. இரண்டின் மகிழ்ச்சியும் முழுமையடைதலும், ஒன்று மற்றொன்றை கேட்பதையும், அதனிடத்தினின்று பெற்றுக் கொள்வதையும் சார்ந்திருக்கிறது. இவ்விதம் கேட்டுப் பெற்றுக்கொள்பவை ஒன்றினின்று தான் மற்றொன்றுக்கு கிடைக்கும்.

இவ்விரண்டின் தனிப் பண்புகளாவன:

மனிதனுடைய சக்தி செயல்படக்கூடியது. முன்னேறும் இயல்பினது. காத்துக் கொள்ளும் இயல்பினது. அவன் செயல்படுத்தல், படைத்தல், கண்டுபிடித்தல், காத்தல இவற்றில் மேற்பட்டவன். அவனது அறிவு துருவித்துருவி நோக்கும். புதியன கண்டுபிடிக்கும். அவனுடைய சக்தி வீரச் செயல்களில் ஈடுபடும். போரிடுதல் நியாயமானது என்றால் போரிடும். போர் செய்து வெற்றி வாகை சூட வேண்டுமென்றால் அப்படிச் செய்யும். ஆனால், பெண்களின் சக்தி போர் செய்வதற்காக அன்று; ஆளப்படுவதற்காகும். அவர்களுடைய அறிவு கண்டுபிடிப்பதற்கு அல்லது படைப்பதற்கு அன்று; ஆனால் இன்பமான ஆணையிடுவதற்கு, ஒழுங்கு படுத்துவதற்கு, தீர்மானங்கள் செய்வதற்காகும். ஆனபடியால், பெண்ணின் உயர்ந்த ஸ்தானம் (தாய்மையே) குடும்பப் பொறுப்பே.

பெண்களை உயர்த்த எண்ணி அவர்கள் வேலை செய்வதற்கான வாய்ப்புகளை உருவாக்க அநேகர் எண்ணுகின்றனர். இவர்கள் செய்யவேண்டிய நற்காரியம் ஒன்றுண்டென்றால் கடவுளும் இயற்கையும் அவர்களுக்கு வரையறுத்து கொடுத்துள்ள குடும்ப வாழ்க்கையின் வேலையின் அருமையை நோக்கி அவர்கள் கருத்துக்களை உயர்த்த வேண்டும் என்பதே.

இப்பரந்த உலகில் பெண்கள் இலாப மிக்க வேலைகளைச் செய்து முன்னேறத் தக்கதாக புது வழிகளைத் திறந்து விடுதல் நல்லதே என்றாலும் குடும்பத்தை உண்டாக்குவதும் குடும்பத்தைக் காப்பதும் தான் பெண்ணுக்கு முதலும் முடிவுமான மகிமையுள்ள மிக உயர்ந்த நோக்கமுள்ள மிக நல்ல வேலையாகும். மாசற்ற முழுநிறைவான ஒரு குடும்பத்துடன் ஒப்பிடத்தக்க கலைப்படைப்பு இவ்வுலகத்தில் வேறெதுவுமில்லை.

ஒரு குடும்பத்தை பயிற்றுவித்து வழி நடத்துதல், ஒரு பெண் தனது வாழ்க்கையில் செய்யத்தக்க மிக உயர்ந்த பணி என்னும் கருத்தை ஒப்புக் கொள்ள வேண்டும். இதற்குத் தக்கவாறு அவர்கள் கல்வி அமைய வேண்டும். இதற்கு அவர்கள்

உடலமைப்பாலும், உளவமைப்பாலும், தங்கள் சொந்த உணர்ச்சி அமைப்பாலும் தக்க பொருத்தமானவர்களாகும். கடவுளுடைய திருவார்த்தையை அவர்கள் அவசியம் கடமையாற்ற கட்டிக் காட்டுவது குடும்ப வாழ்க்கையாகும்.

அப்படியில்லாமல் இக்காலத்தில் வியாபார தந்திரமாக வியாபார அங்காடிகளில் மக்களை கவர்ச்சிக்க பெண்களை விற்பனையாளர்களாக நியமிக்க ஆரம்பித்து விட்டனர். எங்கும் பெண், காவல் துறையிலும் பெண்; ஆனால் அவர்களுக்கும் பாதுகாவலுக்கு ஆண் தேவைப்படுகிறது. இது தேவையா? பெண்கள், வேலை செய்யும் ஆசையால், பொருளாசையால், விற்பனைப் பொருட்களைப்போல் விற்கப்படும் அவல நிலையும் உருவாகிவிட்டது. கர்த்தர் இஸ்ரவேல் வீட்டைக் கட்டுவித்த ராகேல், லேயாள் போல ஸ்திரீகள் தங்கள் வீட்டைக் கட்டுகிறவர்களாக இருக்க கர்த்தர் ஆசீர்வதிப்பாராக!

"மேலும் நாம் அனைவரும் தேவனுடைய குமாரனைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும், ஒருமனப் பட்டவர்களாகி, கிறிஸ்துவின் நிறைவான வளர்ச்சிக்குத்தக்க பூரண புருஷராகும் வரைக்கும், பரிசுத்தவான்கள் சீர்பொருந்தும் பொருட்டு, சுவிசேஷ ஊழியத்தின் வேலைக்காகவும், கிறிஸ்துவின் சரீரமான சபையானது பக்தி விருத்தி அடைவதற்காகவும், அவர் சிலரைத் தீர்க்கதரிசிகளாகவும், சிலரைச் சுவிசேஷகராகவும் சிலரை மேய்ப்பராகவும், போதகராகவும் ஏற்படுத்தினார் (எபேசி. 4:11-13).

தேவனானவர் சபையிலே முதலாவது அப்போஸ்தலரையும், இரண்டாவது தீர்க்கதரிசிகளையும், மூன்றாவது போதகர்களையும், பின்பு குணமாக்கும் வரங்களையும், ஊழியர்களையும், ஆளுகைகளையும், பலவித பாஷைகளையும் ஏற்படுத்தினார் (1கொரி 12:28).

கண்காணிப்பை விரும்புகிறவன் நல்ல வேலையை விரும்புகிறான் கண்காணியானவன் குற்றஞ்சாட்டப்படாதவனும் ஒரே மனைவியையுடைய புருஷனுமாயிருக்க வேண்டும் (1தீமோ. 3:1-4; தீத்து 1:5-9). உதவிக்காரரும், உதவிக்காரருடைய மனைவிகளும் நல்லவர்களாயிருக்க வேண்டும் (1தீமோ. 3:8-13).

கிறிஸ்துவின் ஆவிக்குரிய ராஜ்யமாகிய திருச்சபையின் அதிகார அலுவல்களில், அப்போஸ்தலர்களில் ஒருவரும் பெண்கள் இருந்ததாகக் காணோம். அந்தியோகியா பட்டணத்து சபையிலே பர்னபாவும், நீகர் என்னப்பட்ட சிமியோனும், சிரேனே ஊரானாகிய லூகியும் காற்பங்கு தேசாதிபதியாகிய ஏரோதுடனே கூட வளர்க்கப்பட்ட மனாயீனும், சவுலும் தீர்க்கதரிசிகளாயும், போதகர்களாயும், இருந்தார்கள் (அப் 13:1). யாதொரு பெண்ணும் போதகியாக, தீர்க்கதரிசியாக இருக்கவில்லை.

பணிவிடை ஊழியராக ஏழுபேரை நியமித்ததாகப் பார்க்கிறோம். அதில் ஸ்தேவானும் ஒருவர் (அப். 6:1-7)

அப்படியே ஆதிச்சபை, சபைகளைத் திடப்படுத்த அப்போஸ்தலர்களோடே யூதா, சீலா போன்ற தீர்க்கதரிசிகளையே அனுப்பியது. ஸ்திரீகளில் யாரையும் அனுப்பினதாக நாம் பார்க்கிறதில்லை (அப். 15: 22-35). தீமோத்தேயு, தீத்து போன்ற கண்காணிகளும் புருஷர்களாகவே இருந்ததாகக் காண்கிறோம்.

சரி, சபைகளிலாவது மேய்க்கும் பணியில் மூப்பர்களோடே ஸ்திரீகளும் இருந்தனரா என்று பார்த்தால் அப்படியும் இல்லை. மூப்பர்களே இருந்தனர். மூப்பத்திகள் கிடையாது (அப் 20:17-35) அப். பேதுருவும் உங்களிலுள்ள மூப்பருக்கு உடன் மூப்பனும் என்றே எழுதுகிறார் (1பேது.5:1-5) காரணமென்ன? பின்னால் கவனிப்போம். மூப்பர்களாக மாத்திரமல்ல, ஒரு ஸ்திரீ சுவிசேஷகராக திருச்சபையில் ஊழியம் செய்யலாமா? சுவிசேஷகனுடைய வேலை, பிலிப்பு, தீமோத்தேயு, தீத்து ஆகிய சுவிசேஷகருடைய ஊழியத்தின் மூலம் சுவிசேஷகருடைய வேலைகளைப் பற்றி நாம் அறிகிறோம். அவர்களுடைய கடமை சுவிசேஷத்தை (அறிவித்து) பிரசங்கித்து கிறிஸ்தவர்களாக்குவது சுவிசேஷகரின் முக்கிய வேலையாகும். அதோடு ஒரு குறிப்பிட்ட

இடத்திலுள்ள சீஷர்களைக் கூட்டி அவர்களை திருச்சபையாக அமைப்பதும் அவர்களின் கடமையாகும். அவ்வாறு அமைப்பதென்றால் திருச்சபையின் அங்கத்தினர்களுக்கு அவர்களுடைய கடமைகளையும், திருச்சபையின் அமைப்புமுறை பண்பினையும், திருச்சபைக்கு அலுவலர்களை, மேய்ப்பர்களை நியமித்து அவர்கள் பணியை உணர்த்துவதும், போதிப்பதும், சீர்கேடுகளைக் களைவதும், ஊழியர்களை ஏச்சரிப்பதும், பொதுவாக தங்கள் எல்லைகளுக்குள்ள திருச்சபையில் குறைவாய் இருக்கிறவைகளை ஒழுங்குபடுத்தி செம்மையாகவும், ஒழுங்காகவும் ஆவியின் அனலுடன் ஊழியம் செய்யத் தக்கவர்களாக்க வேண்டியதும் சுவிசேஷகரின் வேலைகளாகும்

இது மாத்திரமல்ல, மேய்ப்பராக ஒரு பெண் ஊழியம் செய்ய முடியுமா? என்று பார்த்தால், மூப்பர்களுக்கும் மேய்ப்பர் என்ற பெயருண்டு (அப். 20:17, 29). கண்காணியானவன் ஒரே மனைவியையுடைய புருஷனாக இருக்கவேண்டும் என்று வேதம் சொல்லுகிறது (1தீமோ. 3:15; தீத்து 1:5,6).

ஒரு ஸ்திரீ ஒரே மனைவியையுடைய புருஷனாக இருக்க முடியுமா? முடியாதே இப்பொழுது நாம் முடிவுக்கு வருவோம். பெண்கள் திருச்சபையில் அதிகாரமுள்ள, தேர்ந்தெடுக்கப்பட்ட அதிகாரப் பூர்வமான போதகர்களாக, கண்காணிகளாக, சுவிசேஷகராக இருக்கமுடியுமா? அவர்களை உலகத்தில் அனுப்பி நற்செய்தியை பிரசங்கித்து மனந்திரும்புகிறவர்களுக்கு உபதேசம் கொடுத்து பாவ அறிக்கை கேட்டு, திருமுழுக்கு கொடுத்து, திருச்சபைகளை அமைத்து, கற்பித்து, ஊழியர்களுடன் சபையினையிலிருந்து கூட்டங்களுக்கு தலைமை வகிக்க முடியுமா? அது ஆண்களுடன் சேர்ந்து பெண்கள் வாலிபால் (Volley Ball) ஆடுவது போலிருக்கிறதென்று கர்த்தர் காண்பித்துள்ளார் தேவனுடைய திருவசனம் புறக்கணிக்கப்பட்டாலொழிய பெண் ஒருகிறிஸ்தவ திருச்சபையின் போதகராக, மேய்ப்பராக, சுவிசேஷகராக, ஆட்சியாளராக, தலைமை வகிப்பவராக, பிரசங்கிப்பவராக, தீர்க்கதரிசியாக இருக்க முடியாது.

அவர்கள் கிறிஸ்துவின் திருச்சபையில் இருக்க வேண்டிய இடமும் பணியும் பின் வருமாறு :-

திருச்சபையில் ஸ்திரீகள் ஜெபிக்கலாம், பாடலாம், தீர்க்கதரிசனமுரைக்கலாம், சாட்சி கொடுக்கலாம். உபதேசிக்க ஆளுகை செய்ய அதிகாரமில்லை. வேதம் அப்படிச் சொல்லுகிறது (1கொரி. 14:34;1 தீமோ 2:11,12) ஆனால் பற்பல விதத்தில் உதவிக்காரியாக ஊழியம் செய்யலாம். அந்தப்படி அநேக ஸ்திரீகள் புதிய ஏற்பாட்டின் சபையில் கிறிஸ்து இயேசுவுக்குள் உதவிக்காரிகளாக ஊழியஞ் செய்தார்கள். பிரிஸ்கில்லாள், அப்பியாள், பெபேயாள், பெர்சியாள், திரிபேனாள் திரிபோசாள், சிந்திகேயாள், எயோதியாள் போன்றவர்கள். ஆனால் கட்டுப்பாட்டுக்குள் தங்களுக்கு கொடுக்கப்பட்ட ஊழியங்களைச் செய்தனர். அதில் அநேகர் தங்கள் கணவன்மாருடன் உடன் உதவிக்காரிகளாயிருந்தனர். அந்தப்படியே ஸ்திரீகளும் என்றிருப்பது உதவிக்காரர்களின் மனைவிகளும் என்றர்த்தம் (1தீமோ. 3:11) ஞாயிறு பள்ளி நடத்துதல், பெண்களின் மத்தியில்-குழந்தைகளின் மத்தியில் ஊழியம் செய்தல் நோயாளிகளுக்கு உதவி செய்தல், சமையல் வேலைகளைக் கவனித்தல் போன்ற ஊழியங்களைத் திருச்சபையில் திருச்சபையைச் சார்ந்த ஸ்தாபனங்களில் ஊழியம் செய்யலாம்

பெண்களின் பிரதான ஸ்தானம் குடும்பத்தைக் கட்டுதலாகும். தேவ பக்தியுள்ள பிள்ளைகளைப் பிறப்பித்து கர்த்தருக்கேற்ற வளர்ப்பில் அவர்களை வளர்த்து, திருச்சபைக்கும், உலகத்துக்கும் தலைசிறந்த பணியாளர்களாக்கி விடும் பெரும் பொறுப்பு பெண்களுடையதாகும். அவர்கள் விரும்பினால் ஈசாக்கின் தாய் சாராளாகவும், மோசேயின் தாய் யோகெபேத்தாகவும், சாமுவேலின் தாய் அன்னாளாகவும், இயேசுவின் தாய் மரியாளாகவும் விளங்கலாம். உண்மையுள்ள மனைவியாயிருந்து வீட்டைக் கட்டுவதே இவர்களுக்கு மிகவும் பொருத்தமும், தலைசிறந்ததுமான பணியாகும். இப்படிச் செய்தால் தாங்கள் சிருஷ்டிக்கப் பட்ட நோக்கத்தை நிறைவேற்றினவர்களாவார்கள் (ரூத். 4:11) ஆமென்! அப்படியில்லை

வென்றும் தங்களுக்கு அடாத விஷயத்தில் தலையிட்டு சாத்தானால் வஞ்சிக்கப்படாமலிருப்பது நல்லது. புருஷரையில்லாத சில ஊழியர்கள் பெண்களை உற்சாகப்படுத்தி (Encourage) அவர்களுக்கு ஊழியப் பயிற்சி கொடுப்பதும், பிரசங்கிக்க கற்றுக் கொடுப்பதும் தாங்குவதுமான காரியங்களைச் செய்கின்றனர்.

ஆண்களுக்கு பஞ்சம் வந்து விட்டது போல் பெண்களை முன்னே தள்ளுவதும் அவர்களுக்கு ஊழியஞ் செய்யவும் ஆரம்பித்து விட்டனர். சில பிரபலமான ஊழியர்கள் பெண்களைக் கொண்டு வந்து மேடையில் விட்டு பாட்டுப் பாடுவதும், பஜனை வைப்பதும் பிரசங்கிக்க விடுவதும், அவர்களோடு சேர்ந்து இவர்களும் மேடையில் அமர்வதும் (ஊழியர்கள் வரிசையில் ஆண்களோடு பெண்கள் அமர்வது) கிறிஸ்தவ மதத்திற்கே அவமானமான காரியமாகும். இவ்வித செய்கை பெண்களும் ஆண்களும் சேர்ந்து வாலிபால் (Volley Ball) விளையாடுவதற்கு ஒப்பாகும் என்று தேவன் எங்களுக்கு வெளிப்படுத்தியுள்ளார். இவ்விதமாய் சிலர் செய்து சில பெண்களை முன்னுக்கு இழுத்து விட்டபடியினால் அவர்கள் துணிகரம் கொண்டு எமைந்த பெண்களை விரட்டி அடிக்கும் ஏமாளிகளே, கோமாளிகளே என்று ஆண்களுக்கு விரோதமாக நோட்டீஸ் வெளியிடுகிறார்கள். இதற்கு காரணம் தங்களை ஆவிக்குரிய தலைவர்கள் என்று சொல்லிக் கொள்கிற சில தெளிவில்லாத ஆண் ஊழியர்களாகும். பெண்களை மேடையில் கொண்டுபோய் ஷோ (Show) காட்டுகிறார்கள். ஆண் ஊழியக்காரன் தேவசித்தம் செய்யாததினால் கழுதையைக் கொண்டு தேவன் பேசினார். அந்தப்படி பெண்களைத் தேவன் கருவியாக உபயோகிக்கிறார், அற்புத அடையாளங்கள் நடக்கிறது. அநேகமாயிரம் மக்கள் இரட்சிக்கப்படுகிறார்கள் என்றெல்லாம் காரணம் காட்டுகிறார்கள். தேவனுடைய வசனத்துக்கும் தேவ சித்தத்துக்கும் மாறாக (நடந்து) ஊழியம் செய்து அதினால் அற்புத அடையாளங்கள் நடப்பிக்கப்பட்டு ஆவிக்கனைக் காண மக்கள் ஆசீர்வாதம் பெற்றாலும் நாம் அதைத் தேவனுடைய நன்மையும் பிரியமான பரிபூரணமான சித்தம் என்று ஒத்துக் கொள்ளமாட்டோம். இஸ்ரவேலின் வனாந்திர பிரயாணத்தில் அவர்கள் குடிப்பதற்கு தண்ணீர் இல்லாமல் போயிற்று. ஜனங்கள் தண்ணீர் கேட்டு மோசேயிடம் வாக்குவாதம் பண்ணினார்கள். கர்த்தர் மோசேயை நோக்கி நீ உன் கோலை உன் கையில் எடுத்துக் கொண்டு ஜனங்களுக்கு முன்னே போ அங்கே ஓரேபில் நான் உனக்கு முன்பாக கன்மலையின் மேல் நிற்பேன். நீ அந்தக் கன்மலையை அடி, அப்பொழுது ஜனங்கள் குடிக்க அதிலிருந்து தண்ணீர் புறப்படும் என்றார். அப்படியே மோசே செய்தார். ஜனங்கள் குடிப்பதற்கு தண்ணீர் மலையிலிருந்து புறப்பட்டு வந்தது. ஜனங்கள் தாகந்தீர்த்தார்கள். இது ரெவிதீமிலே நடந்தது. அந்த இடத்திற்கு மேரிபா, மாசா என்று பேர் (யாத். 17:1-7) அவர்கள் பிரயாணப்பட்டு காதேசிலே தங்கியிருக்கையில் மறுபடியும் அவர்களுக்கு தண்ணீர் பஞ்சம் உண்டாயிற்று. அப்பொழுதும் ஜனங்கள் மோசே, ஆரோனுடன் வாக்குவாதம் பண்ணி கலகம் பண்ணினார்கள். கர்த்தர் மோசேயை நோக்கி நீ கோலை எடுத்துக்கொண்டு நீயும் ஆரோனும் சபையைக் கூடிவரச் செய்து அவர்கள் கண்களுக்கு முன்னே கன்மலையைப் பார்த்து பேசுங்கள், அது தன்னிடத்திலுள்ள தண்ணீரைக் கொடுக்கும் என்றார். மோசே பதறி கன்மலையைத் தன் கோலினால் இரண்டு தரம் அடித்தார். உடனே தண்ணீர் ஏராளமாய்ப் புறப்பட்டது. சபையார் குடித்தார்கள். அவர்கள் மிருகங்களும் குடித்தது. ஆனால் மோசேயும் ஆரோனும் குற்றவாளிகளானார்கள். இதினிமித்தம் அவர்கள் இருவரும் கர்த்தரை பரிசுத்தம் பண்ணவில்லையென்றும்; விசுவாசிக்கவில்லையென்றும் தேவன் அவர்களை கடிந்து கொண்டு சபையைக் கானானுக்குள் நடத்திச் செல்ல, கானானுக்குள் பிரவேசிக்கக் கூடாது என்று தேவன் கட்டளையிட்டார் (எண். 20:1-12). இயேசு கிறிஸ்துவாகிய கன்மலை ஒருமுறை தான் அடிக்கப்படலாம். இரண்டாம் தடவை அவர் பலியாக வேண்டிய அவசியமில்லை தேவனுடைய வார்த்தையை கொஞ்சம் மாற்றி அமைத்தால் மோசே கானானுக்குள் பிரவேசிக்கும் சிலாக்கியத்தை இழந்தார்.

ஸ்திரீகளின் ஊழியத்தினால் ஆசீர்வாதம் பெருகுகிறது என்பதற்காக அது தேவ சித்தம் என்று ஒப்புக்கொள்ள வேண்டிய அவசியமில்லை. தேவனுடைய வார்த்தையே, சித்தமே முக்கியம். "உமது பரிசுத்த ஆலயத்திற்கு நேராகப் பணிந்து உமது கிருபையினிமித்தமும் உமது உண்மையினிமித்தமும் உமது நாமத்தைத் துதிப்பேன்; உமது சகல பிரஸ்தாபத்தைப் பார்க்கிலும் உமது வார்த்தையை நீர் மகிமைப்படுத்தியிருக்கிறீர்" (சங். 138:2).

பெண்கள் குருக்களாக, அத்தியட்சகர்களாக, போப்புகளாக ஆகக்கூடாது என்பதற்கான காரணங்கள் பல எழுதியுள்ளோம். மேலும் ஆதாரம்.

1. ஆதியிலே தேவன் சிருஷ்டிகளை சிருஷ்டிக்கும் போதே சகல விதமான பிராணிகளையும், பறவைகளையும், ஆணும் பெண்ணுமாக, ஜோடு ஜோடாக சிருஷ்டித்தார். மனுஷியோ அவ்வாறு சிருஷ்டிக்கப்படவில்லை.

2. ஆதாமை மண்ணினால் தேவன் நேரடியாக உருவாக்கினார். ஏவாளோ ஆதாமின் விலா எலும்பைக் கொண்டே உருவாக்கப்பட்டிருக்கிறாள் (ஆதி. 2:21,22).

3. பெண்ணின் மேல் கூறப்பட்ட சாபம் இன்னும் நீங்கவில்லை. நீ வருத்தத்தோடு பிள்ளை பெறுவாய், உன் ஆசை உன் புருஷனைப் பற்றியிருக்கும். அவன் உன்னை ஆண்டு கொள்வான் (ஆதி. 3:16).

4. முதன்முதலாக தேவனுடைய கட்டளையை மீறி, பாவம் செய்து பிசாசுக்கு அடிமையானவளும் மனித குலத்தில் முதல் சாபத்தைக் கொண்டு வந்தவளும் பெண்ணே (ஆதி. 3:1-16).

5. தன் புருஷனுக்கும் கொடுத்து அவனையும் பாவியாக்கினவள் ஸ்திரீயே (ஆதி. 3:6).

6. பெண்ணுக்கு தனி உரிமை கிடையாது: பெண்ணின் வார்த்தையை ஆண் உறுதியாக்கவும், செல்லாமலாக்கவும் கூடும் (எண். 30:3-16)

7 தேவ நடத்துதலுக்கு விரோதமாய், மோசேயுடன் எதிர்த்து நின்ற இருவரில் பெண்ணே கொடிய தண்டனைக்குள்ளாகி, குஷ்டரோகியாகி ஆணுடன் போட்டியிடும் பாவத்திற்கு பலனையடைந்தாள் (எண். 12:1-10).

8. ஸ்திரீகளுக்கு விலக்காயிருக்க வேண்டிய காலம் முறையாய் ஏற்படுகிறது. அது தொடர்ந்து அநேகநாள் நீடித்திருக்கிறதுமுண்டு (லேவி. 15:25; லூக். 8:43).

9. தேவ ஜன எண்ணிக்கையில் பெண்ணின் தொகை வேதத்தில் குறிப்பிடப்படவில்லை (எண். 1:20-41; யாத். 35:25,26. யோ. 6:10, மத். 15:38).

10. சரீரத்தோடு பரலோகம் போன பரிசுத்தவான்களில் ஒரு பெண்ணையாகிலும் காணோம் எல்லாம் ஆண்களே (ஏனோக்கு, எலியா, நமது கர்த்தர்)

11. தேவ ஊழியத்தில் ஒரு பெண்ணும் ஆசாரிய ஊழியம் செய்ய இடமில்லை

12. புதிய ஏற்பாட்டிலும் நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்து கூட தம்முடைய 12 அப்போஸ்தலர்களில் ஒரு பெண்ணையாகிலும் தம்முடனிருக்க தெரிந்து கொள்ளவில்லை (மத். 10:1-4; மாற 3:13-19. லூக் 6:12-16)

13. கர்த்தர் எழுபது பேரை இரண்டிரண்டு பேராக ஊழியத்திற்கு அனுப்பினார். அதில் ஒரு ஸ்திரீயும் அனுப்பப்படவில்லை. (லூக். 10:1-20).

14. நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்து புதிய உடன்படிக்கை ஸ்தாபித்த பொழுது அதில் அங்கம்வகிக்க ஒரு ஸ்திரீயைக் கூட அழைக்கவில்லை (லூக்; 22:14-20).

15 ஆதிச்சபையில் ஏழு டீக்கன்மாரை (deacon) நியமித்ததில் ஒரு ஸ்திரீயைக் கூட தேவன் அனுமதிக்கவில்லை (அப். 6:1-7)

16 நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்து தாம் உயிர்த்தெழுந்த பின்பு தம்மைப் பற்றி பிரசங்கிக்கவும், சபை கட்டவும் ஊழியம் செய்யவும், ஒப்புக் கொடுக்கவும் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்டார். (ஆண்களுக்கே) ஒரு பெண்ணுக்காகிலும்

அதிகாரம் வழங்கப்படவில்லை (அப். 1:1-3; 10.40-42)

17. அப்போஸ்தலனாகிய பவுல் உயிர்த்தெழுதலை நிரூபிக்கும்படி உபதேசம்பண்ணும் பொழுது நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் உயிர்த்தெழுதலைப் பற்றிக் குறிப்பிடுகிறார். அதில், "...நான் அடைந்ததும், உங்களுக்குப் பிரதானமாக ஒப்புவித்ததும் என்னவென்றால், கிறிஸ்துவானவர் வேதவாக்கியங்களின்படி நமது பாவங்களுக்காக மரித்து, அடக்கம் பண்ணப்பட்டு, வேத வாக்கியங்களின்படி மூன்றாம் நாளில் உயிர்த்தெழுந்து, கேபாவுக்கும், பின்பு பன்னிருவருக்கும் தரிசனமானார் என்றே எழுதியுள்ளார் (I கொரி. 15:1-5). ஸ்திரீகளுக்குத் தரிசனமானதை குறிப்பிடவில்லை. ஏனென்றால், இது உபதேசம். நம்மெல்லாருக்கும் தெரியும் நமது கர்த்தராகிய இயேசுகிறிஸ்து உயிர்த்தெழுந்து முதலாவது ஸ்திரீகளுக்குத் தரிசனமானார் என்பது

18. ஆயிரம் பேருக்குள் ஒரு புருஷனைக் கண்ட வேதம் ஒரு ஸ்திரீயையாகிலும் காணவில்லை எனகிறது (பிரசங்கி 7:28).

19 பெண் முக்காடிட வேண்டும். (I கொரி. 11:5).

20. ஸ்திரீயானவள் பெலவீன பாண்டமாயிருக்கிறாள் (I பேது. 3:7).

21. ஸ்திரீயானவள் புருஷனுக்கு கீழ்ப்பட்டிருக்க வேண்டும் (I பேது. 3:5,6)

23. ஸ்திரீயானவள் புருஷன்மேல் அதிகாரம் செய்யக்கூடாது (ஆதி 3:16; I தீமோ 2:12).

23. ஸ்திரீயானவள் புருஷனுக்கு உபதேசம் பண்ணலாகாது (I தீமோ. 2:12).

24. ஸ்திரீகள் சபையிலே பேசக்கூடாது (I கொரி. 14:34).

25. எப்போதும் கற்றும் புத்தியில்லாத ஸ்திரீகள் என்று ஸ்திரீகளைப பற்றியே குறிப்பிடப்பட்டுள்ளது (II தீமோ. 3:7).

26. புருஷன் ஸ்திரீக்காக சிருஷ்டிக்கப்படவனல்ல, ஸ்திரீயே புருஷனுக்காக,புருஷனிலிருந்து தோன்றினவள் (I கொரி. 11:9,8).

27. வேதாகமத்திலுள்ள 66 புஸ்தகங்களிலும் ஒரு புஸ்தகத்தையாகிலும் ஒரு ஸ்திரீ எழுத தேவன் அனுமதிக்கவில்லை காரணம்:-

"வேதத்திலுள்ள எந்தத் தீர்க்கதரிசனமும் சுயதோற்றமான பொருளையுடையதாயிராதென்று நீங்கள் முந்தி அறிய வேண்டியது. தீர்க்கதரிசனமானது ஒரு காலத்திலும் மனுஷருடைய சித்தத்தினாலே உண்டாகவில்லை தேவனுடைய பரிசுத்த மனுஷர்கள் (மனுஷிகளல்ல) பரிசுத்த ஆவியினால் ஏவப்பட்டு பேசினார்கள் (II பேது 1:20,21)

28. முதல் மிஷனரிகளை (Missionary) ஆயத்தப்படுத்தி அனுப்பிய அந்தியோகியா பட்டணத்திலுள்ள சபையிலே, பர்னபாவும், நீகர் என்னப்பட்ட சிமியோனும், சிரேனே ஊரானாகிய லூகியும், காற்பங்கு தேசாதிபதியாகிய ஏரோதுடனே கூட வளர்க்கப்பட்ட மனாயீனும் சவுலும்தீர்க்கதரிசிகளாக இருந்தார்கள். போதகர்களாயும் (அப். 13:1). புதிய ஏற்பாட்டு சபையிலே ஒருஸ்திரீயும் போதகிகளாகவோ,தீர்க்கதரிசிகளாகவோ இருக்கவில்லை (அப். 13:1; 11:27 25; 15:32; 21:10-11).

29. எந்த புருஷனும் தன் வீட்டுக்குத் தானே அதிகாரியாக இருக்க வேண்டும் (எஸ்தர் 1:22).

30. ஸ்திரீகள் தீர்க்கதரிசனம் சொன்னபோதிலும் அவர்கள் என்ன தீர்க்கதரிசனம் சொன்னார்கள் என்றும் அவைகள் நிறைவேறினவா என்றும் புதிய ஏற்பாட்டில் குறிப்பிடவில்லை. அப்போஸ்தலனாகிய பவுல் சுவிசேஷகனாகிய பிலிப்புவின் வீட்டில் தங்கியிருந்த பொழுது அப்போஸ்தலனுக்கு ஆலோசனை கொடுக்க ஸ்திரீகளை பரிசுத்தாவியானவர் உபயோகிக்கவில்லை. தீர்க்கதரிசியாகிய அகபு வந்து அப்போஸ்தலனுக்கு நேரிடப் போகிறவைகளை அறிவித்தார். அது அப்படியேநிகழ்ந்தது(அப் 21:7-40). பிலிப்பு சுவிசேஷகனுடைய வீட்டில் தீர்க்கதரிசனம் சொல்லுகிற குமாரத்திகளாகிய நான்கு கன்னிகைகள் இருந்தார்களென்பதையும்ஆனால் பரிசுத்தாவியானவர் அப்போஸ்தலனுக்கு ஆலோசனை கொடுக்க அந்த ஸ்திரீகளை உபயோகிக்கவில்லையென்றும் அந்த இடத்தில்

தானே சொல்லப்பட்டுள்ளது. ஆவியில் நிரம்பும் பொழுது யாரும் தீர்க்கதரிசனம் சொல்லலாம். ஆனால் தீர்க்கதரிசனம் சொல்லுகிற எல்லாரும் தீர்க்கதரிசிகள் அல்ல. புதிய ஏற்பாட்டு சபையில் தீர்க்கதரிசிகள் இருந்ததாகவே வேதத்தில் எழுதியிருக்கிறது. தீர்க்கதரிசினிகள் இருந்ததாக வேதத்தில் எழுதப்படவில்லை. திருச்சபை கட்டுமானத்தில் அப்போஸ்தலர் தீர்க்கதரிசிகள் என்பவர்களது அஸ்திபாரத்தின் மேல் கட்டப்பட்டவர்களாயிருக்கிறீர்கள். அதற்கு இயேசு கிறிஸ்து தாமே மூலைக்கல்லாக இருக்கிறார் என்றே வேதத்தில் எழுதியிருக்கிறது (எபே. 2:20). 'அப்போஸ்தலர், தீர்க்கதரிசினிகள் அஸ்திபாரத்தின் மேல்' என்று வேதத்தில் எழுதவில்லை.

நீங்கள் மெய்யான சபையானால் மணவாளனாகிய கிறிஸ்துவுக்கு கீழ்ப்படிவீர்கள். ஆனால் கள்ள சபைகள் கீழ்ப்படியாது. வேதத்தில் ஸ்திரீகள் செய்யும் ஊழியமும் எழுதப்பட்டுள்ளது. மிரியாமும் மற்ற ஸ்திரீகளும் தேவனைப் புகழ்ந்து பாட்டுப் பாடினார்கள், (யாத் 15:20,21) தேவாலயத்துக்கடுத்த பணிவிடைகள் செய்தார்கள்(யாத் 35:25,26) நமது கர்த்தருக்கும் அவருடைய சீஷர்களுக்கும் பின்சென்று ஆஸ்திகளால் ஊழியஞ்செய்தார்கள் (லூக். 8:2,3). தேவனுடையவசனம் ஜீவனுள்ளதும், இருபுறமும் கருக்குள்ள எந்த பட்டயத்திலும் கருக்கானதாகவும் இருக்கிறது. மாம்ச சிந்தையுள்ளவர்கள் அதைப் புரட்டுகின்றனர். ஒட்டுப் போட்டு ஸ்திரீகளை குருக்களாக்குகின்றனர். இவர்களும் தங்களை தாமே திருச்சபை என்று சொல்லிக் கொள்கின்றனர் அப்போஸ்தலனில்லாத சபைகளுக்கு அப்போஸ்தல உபதேசம் கிடைக்கவில்லை. (கலா. 3.28; கொலோ. 3:10, 11; I கொரி 7:3; 11:8) ஆகிய வசனங்களில் விசுவாசிகள் தேவனுடைய பார்வையில் சமம் என்றும் கிறிஸ்துவை தரித்துக் கொள்வதில் வித்தியாசம் இல்லையென்றும், புருஷன்-மனைவியின் பரஸ்பர உரிமையையும் குறிப்பிடுகிறதேயொழிய ஆணும் பெண்ணும் சமமானவர்கள் என்றோ சமஉரிமையுடையவர்கள் என்றோ அப்போஸ்தலன் சொல்லவில்லை. "ஒவ்வொரு புருஷனுக்கும் கிறிஸ்து தலையாயிருக்கிறாரென்றும், ஸ்திரீக்குப் புருஷன் தலையாயிருக்கிறானென்றும், கிறிஸ்துவுக்கு தேவன் தலையாயிருக்கிறாரென்றும், நீங்கள் அறிய வேண்டுமென்று விரும்புகிறேன் (I கொரி 11:3) ஒருவன் தன்னை தீர்க்கதரிசி என்றாவது ஆவியைப் பெற்றவனென்றாவது எண்ணினால் நான் உங்களுக்கு எழுதுகிறவைகள் கர்த்தருடைய கற்பனைகளென்று அவன் எண்ணிக் கொள்ளக்கடவன்" (I கொரி 14:37). ஆகையால் தேவ ஜனங்களே ஸ்திரீகளால் ஆளப்படுகிற அவலக்கேடு. சபைகளிலிருந்து வெளியே வாருங்கள். அந்நாளில் ஏழு ஸ்திரீகள் ஒரே புருஷனைப்பிடித்து நாங்கள் எங்கள் சொந்த ஆகாரத்தைப் புசித்து எங்கள் சொந்த வஸ்திரத்தை உடுப்போம், எங்கள் நிந்தை நீங்கும் படிக்கு உன் பேர் மாத்திரம் எங்கள் மேல் விளங்கட்டும் என்பார்கள் என்று தீர்க்கதரிசி நன்றாய் சொல்லியிருக்கிறார் (ஏசா. 4:1). இந்தக் கள்ள சபைகளுக்கு இயேசு கிறிஸ்துவாகிய மணவாளன் அருளுகிற ஆகாரமோ வஸ்திரமோ தேவையில்லை தங்களுடைய சொந்த ஆலோசனையின்படி நடந்து தங்கள் சுயநீதியினால் தங்களை அலங்கரித்துக் கொள்கிறார்கள். நிந்தை நீங்க இயேசுகிறிஸ்து என்கிற பெயரை மாத்திரம் வைத்துக் கொள்வார்கள். இப்படியே கள்ள சபைகள் கிறிஸ்துவின் பேரை வைத்துக் கொண்டு அவருடைய வசனத்தைத்தள்ளிப் போடும் என்று தீர்க்கதரிசனத்தில் அறிவிக்கப்பட்டுள்ளது. இப்பொழுது போலி சபைகளில் நிறைவேறி வருகிறது.

நாமோ சத்திய வசனத்தைப் பிடித்துக் கொண்டு சுடர்களைப் போல பிரகாசிப்போம் நாம் எதைச் செய்தாலும் தேவனுடைய வசனத்தின்படி, தேவனுடைய சித்தத்தின்படி செய்வோம் ஸ்திரீகளால் ஆளப்படாமல் கிறிஸ்துவின் வசனத்தினால், கிறிஸ்துவால் ஆளப்படுவோமாக! இப்பொழுது கிறிஸ்தவ சமுதாயங்களில் உண்டாயிருக்கிற குழப்பங்களுக்கு காரணம் அப்போஸ்தலன் இல்லாததே. மெய்யான திருச்சபைக்கே தேவன் அப்போஸ்தலனைக் கொடுக்கிறார் (எபேசி. 4:11-13; I கொரி. 12:28). மெய்யான அப்போஸ்தலனைக் கொண்டே மெய்யான திருச்சபையை எழுப்புகிறார். மெய்யான திருச்சபையிலே எல்லாம் சரியாக இருக்கும். ஆணின் இடத்தில் பெண்ணை தூக்கி வைக்காதே. பெண்ணின் இடத்தில் ஆணை வைக்காதே இதோ கர்த்தர் வருகிறார்!

---

அந்த வேசி உட்கார்ந்திருக்கிற தண்ணீர்களைக் கண்டாயே அவைகள் ஜனங்களும் கூட்டங்களும், ஜாதிகளும் பாஷைக்காரருமாம் (வெளி 17:15)

---

# வேத பாடம்

யாத். 31 : 12-18 மோசேயின் உடன்படிக்கையின் அடையாளமாக ஓய்வு நாள் கட்டளையிடப்பட்டது. வாரத்தில் ஆறு நாள் வேலை செய்து ஏழாம் நாள் ஓய்ந்திருக்கும்படியாய் கட்டளையிடப்பட்டது அந்த நாளில் வேலை செய்கிறவன் கொலை செய்யப்படவேண்டும். தேவனுக்கும், இஸ்ரவேல் ஜனங்களுக்கும் உடன்படிக்கை (ஒப்பந்தம்) உண்டு என்பதற்கு ஓய்வு நாள் அடையாளமாகக் கொடுக்கப்பட்டது (எசேக். 20 : 12, 20) இந்த ஓய்வு நாள் மோசேயின் உடன்படிக்கையில் தேவனால் கட்டளையிடப்பட்டது. இதற்கு முந்தி இப்பொழுதிருக்கிற மனித சந்ததி உற்பத்தியாகி 1600 ஆண்டுகள் ஆகியும் ஓய்வு நாள் ஆசரிக்கும்படியாக கட்டளையிடப்பட்டதாக நாம் அறிய முடியவில்லை ஆபிரகாம், ஈசாக்கு, யாக்கோபு போன்ற முற்பிதாக்களும் ஓய்வு நாளை ஆசரித்ததில்லை

சில கட்டளைகள், சில பழக்க வழக்கங்கள் மோசேயின் உடன்படிக்கைக்கு முன்னாலேயே உண்டாயிருந்து மோசேயின் உடன்படிக்கையில் கட்டளையாக கட்டளையிடப்பட்டது. (உம்) விருத்தசேதனம் (ஆதி. 17 : 7-14), தசமபாகம் செலுத்துதல் (ஆதி 14 : 18-20; ஆதி. 28 : 18-22;) பலியிடுதல். (ஆதி. 4 : 4; ஆதி. 8 : 20; 12 : 8; 13 : 18 ) ஆனால் ஓய்வுநாளோ மோசேயின் காலத்திற்கு முன்பு பழக்கத்திலிருந்ததாகவோ, கட்டளையிடப்பட்டதாகவோ நாம் வேதத்தில் காணவில்லை மோசேயின் உடன்படிக்கையில் நான்காம் கட்டளையாக கட்டளையிடப்பட்டது (யாத் 20:8-11; யாத் 16:14-30).

கர்த்தர் ஆறு நாட்களுக்குள்ளே வானத்தையும் பூமியையும் சமுத்திரத்தையும் அவைகளிலுள்ள எல்லாவற்றையும் உண்டாக்கி ஏழாம் நாளிலே ஓய்ந்திருந்து புசித்தார். ஆகவே கர்த்தர் ஏழாம் நாளை ஆசீர்வதித்து அதை பரிசுத்தமாக்கினார். ஆகையால் ஓய்வு நாளை பரிசுத்தமாய் ஆசரிக்க நினைப்பாயாக என்றும் (யாத் 31:17;20:8-11) நீ எகிப்தில் அடிமையாயிருந்தாய் என்றும் உன் தேவனாகிய கர்த்தர் உன்னை அவ்விடத்திலிருந்து வல்லமையுள்ள கரத்தினாலும் ஓங்கிய புயத்தினாலும் புறப்படப்பண்ணினார் என்றும் நினைப்பாயாக. ஆகையால் ஓய்வு நாளை ஆசரிக்க உன் தேவனாகிய கர்த்தர் உனக்குக் கட்டளையிட்டார் (உபா. 5:15) என்றும் எழுதப்பட்டிருக்கிறது. எகிப்திலிருந்து மீட்கப்பட்ட இஸ்ரவேல் ஜனங்கள் தாங்கள் மீட்கப்பட்டதை நினைவு கூரும்படியாக ஓய்வுநாள் கட்டளையிடப்பட்டதாக இந்த இடத்தில் அறிகிறோம். ஆகையால் புதிய ஏற்பாட்டின் (புதிய ஒப்பந்தம்) ஜனங்கள் வாரத்தில் ஒரு நாள் தங்கள் வேலைகளிலிருந்து ஓய்ந்திருக்கவும், தாங்கள் உலகமாகிய எகிப்திலிருந்து இரட்சிக்கப்பட்டதை நினைவு கூர்ந்து தேவனுக்கு நன்றி ஏறெடுத்து ஆராதனை செய்யவும் கடமைப்பட்டிருக்கிறார்கள்.

நியாயப்பிரமாணம் மாற்றப்பட்டது அல்லது இயேசுகிறிஸ்துவினால் நிறைவேற்றப்பட்டு முடிந்தது. கர்த்தராகிய இயேசு கிறிஸ்து புதிய உடன்படிக்கையை ஏற்படுத்தினார். அவர் நமக்காக மரித்து அடக்கம்பண்ணப்பட்டு, உயிர்த்தெழுந்ததினால் புதிய ஒப்பந்தம் உறுதியாயிற்று. ஒருவர் எழுதிய உயில (மரணசாசனம்) செல்லுபடியாக வேண்டுமென்றால் உயிலை எழுதினவர் மரிக்க வேண்டும் (எபி 9:15-17). பழைய உடன்படிக்கை நீக்கப்பட்டு புதிய உடன்படிக்கை ஸ்தாபிக்கப்பட்டது. அதனால் பழைய ஓய்வு நாள் நீக்கப்பட்டு (இடையில் உண்டான பிரமாணம்) புதிய நாள் கொடுக்கப்பட்டுள்ளது. நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து உயிர்த்தெழுந்த வாரத்தின் முதலாம் நாளையே (ஞாயிற்றுகிழமை) ஆதிசபை, ஆதி அப்போஸ்தலர்கள் அல்லது புதிய ஏற்பாட்டின் ஜனங்கள் கர்த்தரை ஆராதிக்கும்படியாகவும் நன்றி ஏறெடுக்கும்படியாகவும் ஆசரித்து வந்தார்கள் (I கொரி 16:2; அப் 20:7). கர்த்தருடைய நாளென்று இது அழைக்கப்படுகிறது. நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து வாரத்தின் முதல் நாள் அதிகாலையிலே உயிர்த்தெழுந்தார். அன்றையதினம் மாலையிலே சீஷர்கள் கூடியிருக்கும்பொழுது கர்த்தர் அவர்கள் மத்தியிலே பிரத்தியட்சிய தரிசனமருளினார். மறுபடியும் எட்டாம்நாளில்

அல்லது வாரத்தின் முதல் நாளிலே தரிசனமானார் (யோவா. 20:19-29). இதன் மூலம் கர்த்தர் கூடிவந்து தமக்கு ஆராதனை செய்யும்படியாக வாரத்தின் முதல் நாளை தெரிந்து கொண்டார் என்பதை அப்போஸ்தலர்களுக்கு வெளிப்படுத்தினார். பரிசுத்த ஆவியானவர் பெந்தெகொஸ்தே நாளிலே பூமியில் இறங்கி கூடியிருந்த சீஷர்களை ஆட்கொண்டார், நிரப்பினார், பெந்தெகொஸ்தே என்றால் 50-வது நாள் என்று அர்த்தம் (லேவி 23:15,16) ஏழுவாரங்கள் நிறைவேறின பின்பு ஏழாம் ஓய்வுநாளுக்கு மறுநாளாகிய 50-வது நாள் பெந்தெகொஸ்தே நாள் அன்று திருச்சபை பூமியில் எழும்பிற்று. ஆனபடியினாலும் வாரத்தின் முதல் நாளை பழைய ஏற்பாட்டின் ஓய்வுநாளுக்குப் பதிலாக புதிய ஏற்பாட்டில் மீட்கப்பட்ட மக்களுக்கு ஓய்வு நாளாகவும், கூடிவந்து கர்த்தருக்கு ஆராதனை செய்யவும், பரிசுத்த நாளாகவும் கர்த்தர் நியமித்துள்ளார். இது தீர்க்கதரிசனத்தின் நிறைவேறுதலாயிருக்கிறது (சங் 118:22-24).

பிரமாணம் மாற்றப்பட்டதென்றால் ஓய்வு நாளும் மாற்றப்பட்டது என்பது நிச்சயம். வாரத்தின் முதல் நாள் கர்த்தருடைய நாளென்று அழைக்கப்படுகிறது (வெளி 1:10). ஆனபடியால் தேவஜனங்களுக்கு வாரத்தின் முதல் நாளாகிய ஞாயிற்றுக்கிழமை கர்த்தருடைய நாளாகவும் வேலையிலிருந்து ஓய்ந்து கர்த்தரை ஆராதிக்கும் நாளாகவும், தேவனுக்கென்று கிரியை செய்யும் நாளாகவும் இருக்கிறது. இந்த நாளில் தேவனுக்கு சபை கூடி வந்து ஆராதனை செய்யாதவன் அல்லது கர்த்தருக்கென்று அந்த நாளை பரிசுத்தப்படுத்தாத விசுவாசி குற்றமுள்ளவனாவான்.

ஞாயிற்றுக்கிழமை ஓய்வுநாளுமல்ல, ஏழாம் நாளுமல்ல அது கர்த்தருடைய நாளாகவும், பரிசுத்த நாளாகவும் வாரத்தின் முதலாம் நாளாகவும் இருக்கிறது. விசுவாசிகள் தங்கள் சாட்சிகளிலே கர்த்தருடைய நாளை ஓய்வு நாள் என்று சொல்லக்கூடாது. ஓய்வுநாள் இஸ்ரவேலர்களுக்குரியது, புதிய ஏற்பாட்டின் கிறிஸ்தவர்களுக்குரியதல்ல. ஒருவர் ஏழாம் நாளைதான் ஆசரிப்பேன் அதுதான் தேவனுடைய கட்டளை, ஓய்வுநாள் என்று சொன்னால் ஆசரிக்கட்டும் அது நல்லதே. நாமோ முதலாம் நாளையும் ஆசரிப்போம், ஏழாம் நாளையும் ஆசரிப்போம் ஒருவனும் ஓய்வுநாளைக் குறித்து ஒருவனையும் குற்றப்படுத்தாதிருப்பானாக (கொலோ 2:16) ஒருவன் ஒருநாளையும் இன்னொருவன் இன்னொரு நாளையும் விசேஷித்துக் கொள்ளலாம். இன்னொருவன் எல்லா நாளையும் விசேஷித்துக்கொள்ளுகிறான். விசேஷித்துக் கொள்ளுகிறவன் கர்த்தருக்கென்று விசேஷித்துக் கொள்ளுகிறான், விசேஷித்துக் கொள்ளாதவனும் கர்த்தருக்கென்று விசேஷித்துக் கொள்ளாதிருக்கிறான். ஆகையால் ஒருவன் இன்னொருவனை குற்றவாளியாக தீர்க்க வேண்டிய அவசியமில்லை (ரோம 14:5, 6,13, 10).

ஆனாலும் தேவஜனங்கள் சபை கூடி வருதலை சிலர் விட்டுவிடுகிறதுபோல நீங்கள் விட்டுவிடாமல் கர்த்தருடைய நாளில் சபை கூடி வரும் பொழுது நீங்களும் கூடிவந்து அவருக்கு ஆராதனை செய்து கர்த்தரைத் தொழுது கொள்ளுங்கள்.

(தொடரும்)

# மோட்ச வழி

(தொடர்ச்சி) (குரு-சிஷ்ய உரையாடல்)

கு :- (7) நம்முடைய வாழ்க்கையானது எல்லோருக்கும் நல்ல முன்மாதிரியாயிருந்து இறைவனுக்கு சாட்சியாக விளங்குவதினால் நாம் கர்த்தருக்கு (தேவனுக்கு) பிரியமான மாணவர்களாக விளங்க முடியும்.

கிறிஸ்தவர்கள் உலகத்திற்கு தேவனுடைய சாட்சிகள். கிறிஸ்தவர்களைக் கொண்டு உலகத்திற்கு வழிகாட்ட இறைவன் திட்டமிட்டுள்ளார். உலகம் அழுகி நாறிக் கொண்டிருக்கிறது. உலகத்தின் மக்கள் வாழ்க்கையில் பிடிப்பற்று இருக்கிறார்கள்.

வாழ்க்கையில் அவர்களுக்கு நம்பிக்கையில்லை. இருளிலே நடந்து கொண்டிருக்கிறார்கள். கிறிஸ்தவர்கள் உலகத்திற்கு உப்பாக இருக்கிறார்கள் என்றும், வெளிச்சமாக இருக்கிறார்கள் என்றும் இயேசு சொன்னார் (மத். 5 : 13-16). உப்பு பொருள்கள் அழுகிப் போகாமல் தடுக்க உப்பிட்டு பாடம் பண்ணுவார்கள். எந்த உணவுக்கும் உப்பு ருசியை உண்டாக்குகிறது. நாம் உண்ணுகிற ஆகாரங்களில் அநேகவற்றை உப்பிட்டே சாப்பிடுகிறோம். அப்படியே ஒரு கிறிஸ்தவனுடைய, கிறிஸ்தவளுடைய வாழ்க்கை உலகக் கவலைகளினால் சோர்ந்து மனமுறிவடைந்திருக்கிற உலக மக்களுக்கு சாரமுள்ள உப்பைப் போல் காணப்பட வேண்டும். இவர்களுடைய வாழ்க்கையை பார்க்கிறவர்கள் இவர்கள் எவ்வளவு சந்தோசமாயிருக்கிறார்கள், எவ்வளவு அமைதியாயிருக்கிறார்கள், எவ்வளவு நம்பிக்கையாயிருக்கிறார்கள், மகிழ்ச்சியாயிருக்கிறார்கள் என்று கண்டு அவர்களுடைய வாழ்க்கையை இவர்களும் தெரிந்துகொண்டு தங்களுடைய வாழ்க்கையில் பிடிப்புள்ளவர்களாக மாறுவார்கள். உலக மக்கள் இருளிலே நடக்கிறார்கள். மனசாட்சியின்படியும், நீதி நூல்களின் படியும் அவர்கள் சிலவற்றை அறிகிறார்கள். ஆனால், அவர்கள் அதின்படி நடப்பதில்லை. இருளிலே ஜீவிக்கிறார்கள். எப்படி பேச வேண்டும், எப்படி உண்ண வேண்டும், எப்படி உடுக்க வேண்டும், எப்படி வாழ வேண்டும் என்று அவர்களுக்குத் தெரியாது. கிறிஸ்தவர்கள் வெளிச்சமாக இருக்கிறார்கள். இவர்கள் அவர்களுக்கு வழி காட்ட வேண்டும். இவர்களுடைய உடை, நடை, பாவனை, பேச்சு தோரணைகளைப் பார்த்து அவர்கள் மனதிலே கண்டிக்கப்பட்டு ஓ! இப்படியா வாழ வேண்டும் என்பதைத் தெரிந்து கொள்வார்கள்.

கிறிஸ்தவனே, கிறிஸ்தவளே, இருளிலே நடந்தால் நீங்கள் உலகத்தார்களே. இவர்கள் ஆக்கினைக்குத் தப்பார்கள். உலகம் கெட்டுப் போகிறதற்கு காரணம் போலி கிறிஸ்தவர்களே. இவர்கள் உலகத்துக்கு ஒத்த வேஷம் தரிக்கிறார்கள். உலகத்தை மாதிரியாய்ப் பார்த்து இருளைப் பின்பற்றுகிறார்கள். இது கர்த்தருக்கு அருவருப்பான காரியம். உலக சிநேகம் தேவனுக்கு விரோதமான பகையாகும். இயேசு கிறிஸ்துவானவர் நீங்கள் எனக்கு சாட்சிகள் என்று சொன்னார். கிறிஸ்தவ(ன்)ள் என்றால் கிறிஸ்து + அவ(ன்)ள் கிறிஸ்துவைப் பின்பற்றுகிறவ(ன்)ள் (Follower of Chirst) என்று அர்த்தம். இவனே, ஒரு கிறிஸ்துவாக கிறிஸ்துவுக்குச் சாட்சியாக விளங்க வேண்டும். இப்படி ஜீவிப்பதினால் நாம் தேவனுக்கு பிரியமானவர்களாக விளங்குவோம்.

(தொடரும்)

"நீங்கள் இந்த உலகத்திற்கு ஒத்த வேஷந்தரியாமல் தேவனுடைய நன்மையும் பிரியமுமான பரிபூரண சித்தம் இன்னதென்று பகுத்தறியத் தக்கதாக உங்கள் மனம் புதிதாகிறதினாலே மறுரூபமாகுங்கள்" (ரோம 12 : 2)

# விண்ணரசு வேண்டுவோர்களே, விக்கிரகத்தை விட்டு விலகி ஓடுங்கள்

"நற்செய்தியைப் பற்றி நான் நாணமடைய மாட்டேன், ஏனெனில் அது மீட்பளிப்பதற்கு கடவுளின் வல்லமையாய் உள்ளது (ரோமையர் 1:16).

*கிறிஸ்துவுக்குள் அன்பான கிறிஸ்தவ சகோதர சகோதரிகளே!*

*விக்கிரக ஆராதனை, சிலைவணக்கம், சிலை வழிபாடு இவைகளைப்பற்றி நமது சத்திய வேதமாகிய நமது கத்தோலிக்க திருமறை கூறுவதென்ன?*

மேலே வானத்திலும் கீழே பூமியிலும் பூமியின் கீழுள்ள தண்ணீரிலும் உள்ளவைகளுக்கு ஒப்பான ஒரு உருவத்தையேனும் யாதொரு விக்கிரகத்தையேனும் உனக்கு நீ உண்டாக்கிக் கொள்ள வேண்டாம். அவைகளை வணங்கித் தொழவும் வேண்டாம். உன் கடவுளாகிய ஆண்டவராய் இருக்கிற நாம் வல்லவரும் எரிச்சலுள்ளவருமாய் இருக்கிறோம் (யாத்திராகமம் 20:5). (யாத்திராகமம் 20-ம் அதிகாரத்தை முழுவதுமாக வாசிக்கவும். நமக்கு கடவுளால் அருளப்பட்ட பத்துக் கற்பனைகளையும் அதில் வாசிக்கலாம்). "உனக்கு வார்ப்பினால் விக்கிரகங்களைச் செய்யாதே" (யாத்திராகமம் 34:17) "உங்கள் கடவுளாகிய ஆண்டவர் நாமே உங்களுக்கு விக்கிரகங்களையும் கொத்துவேலை உருவங்களையும் செய்து கொள்ளாமலும்...... இருப்பீர்களாக (லேவியராகமம் 26:1). "எவ்வித சாயலான உருவகத்தையும் நீ செய்து கொள்ளாதபடிக்கு எச்சரிக்கையாயிரு. உள்ளபடி உன் கடவுளாகிய ஆண்டவர் எரித்துவிடுகிற நெருப்பாய், அவர் எரிச்சல் உள்ள கடவுள்" (உப ஆகமம் 4:23, 24). உப ஆகமம் 4-ம் அதிகாரத்தை வாசிக்கவும். "சிலைகளை வழிபடுவோர் அவற்றில் பெருமை கொள்வோர் யாவரும் அவற்றில் நாணம் அடைகின்றனர். (சங்கீதம் 96:7) அவர்களுடைய சிலைகள் வெறும் வெள்ளியும் பொன்னுமே. வெறும் மனிதகை வேலையே. அவைகளுக்கு வாய் உண்டு, பேசுவதில்லை! கண்கள் உண்டு பார்ப்பதில்லை! செவிகள் உண்டு கேட்பதில்லை! மூக்கு உண்டு முகர்வதில்லை! அவற்றைச் செய்கிறவர்களும் அவைகளுக்கு ஒப்பானவர்களே; அவற்றை நம்புகிறவர்களும் அவற்றைப் போன்றவர்களே (சங்கீதங்கள் 113:12-15, சங்கீதம் 134:15-18லும் இது போன்ற வேத வசனங்களைக் காணலாம்). "சிலைகள் மனிதர்களின் ஆன்மாக்களுக்கு கண்ணிகளாகவும், அறிவிலிகளின் கால்களுக்கு வலையாகவும் ஆயின ஞான விபச்சாரத்தின் தொடக்கமாயிற்று அவற்றைக் கண்டு பிடித்ததே வாழ்வின் அழிவாயிற்று மனிதனின் வீண் பெருமையால் அவை உலகில் இடம் பெற்றன (ஞான ஆகமம் 14:12-14)

எங்கும் புரட்சி, இரத்தம், கொலை, களவு வஞ்சகம், ஊழல் பிரமாணிக்கமின்மை, குழப்பம், பொய்யாணை, மயக்கம், பிறர் செய்த நன்மைகளை மறத்தல், ஆன்மாக்களை தீட்டுப்படுத்தல், இயல்புக்கு மாறான காம வேட்கை, மணவாழ்வில் தாறுமாறு, விபச்சாரம், ஒழுக்கக்கேடு முதலியன மலிந்து போயின. ஏனெனில் பெயரைக் கூட சொல்லக்கூடாத சிலை வழிபாடுதான் தீமைக்கெல்லாம் துவக்கமும், காரணமும் முடிவுமாகும். ஏனெனில் அவற்றை வணங்குகிறவர்கள் மகிழ்ச்சியால் வெறி பிடித்தவர்களாகிறார்கள். நேர்மையாய் வாழ்வதில்லை தாராளமாய் பொய்யாணையிடுகிறார்கள். உயிரற்ற சிலைகளில் தங்கள் நம்பிக்கையை வைப்பதால் பொய்யாணையிட்டாலும், தங்களுக்குத் தீமை வருமென்று எண்ணுவதில்லை (ஞான ஆகமம் 14:25-29) வீணாய் உழைத்து மண்ணிலிருந்து ஓர் அற்ப தெய்வத்தை உருவாக்குகிறான். சிலைகளை செய்பவர்கள் மடையர்கள் என்று நமது பைபிள் கூறுகிறது (ஞான ஆகமம் 15:7-8 தொடர்ந்து 13 வரை வாசிக்க பக்கம் 715). ஆண்டவர் ஒருவரே அந்நாளில் உயர்த்தப்படுவார். சிலைகள் தவிடு பொடியாக்கப்படும் (இசையாஸ் 2:17-18). ஆண்டவர் நாமே! இதுவே நமது பெயர். நமது மகிமையை பிறருக்கோ, நமது

புகழைச் சிலைகளுக்கோ விடவோமாட்டேன் (இசையாஸ் 42:8). சிலைசெய்யும் அனைவரும் வீணரானவர். அவைகளுக்கு விலையுயர்ந்த வேலைப்பாடுகள் பயனற்றவை (இசையாஸ் 44:9, 44-ம் அதிகாரத்தை ஜெபத்தோடு வாசியுங்கள். பரி. ஆவியானவர் இன்னும் தெளிவுபடுத்துவார்) 'மரச்சிலையை தூக்கிக் கொண்டு வலம் வருவோரும்,மீட்க முடியாத தெய்வத்திடம் வேண்டிக் கொள்வோரும் மதியீனர்கள் ஆவார் (இசையாஸ் 45:20). அதை தோளில் சுமந்து கொண்டு போகிறார்கள். அதற்குரிய இடத்தில் கொண்டு போய் வைக்கிறார்கள்; அது அங்கேயே இருக்கும், தனி இடம் விட்டு பெயராது அதனிடம் கூக்குரலிட்டாலும் அது கேட்காது, துன்பத்தினின்று அவர்களை காப்பாற்றாது (இசையாஸ் 46:7) 'மரக்கட்டையிடம்' விழித்துப் பாரும். 'ஊமைக்கல்லிடம் எழுந்திரும் என்றும் சொல்லுகிறவனுக்கும் ஐயோ கேடு (ஆபாக்கூக் ஆகமம் 2:18-19 வாசிக்க இசையாஸ் அதிகாரங்கள் 2,42,44, 45,46,எரேமியாஸ் 10,51,எசேக்கியேல் 8;20)

கடவுளின் மாட்சிமையை விடுத்து அதற்குப்பதிலாக அழிந்து போகும் மனிதர்கள்,பறவைகள், விலங்குகள் ஊர்வன ஆகியவற்றின் சாயலான உருவங்களை ஏற்று வழிபட்டனர். கடவுளின் உண்மையைப் பொய்யாக மாற்றினர். படைப்பு பொருட்களுக்கு வழிபாடும்,ஊழியமும் செய்தனர் (உரோமையர் 1:23-25). காமுகர், சிலைவழிபாட்டினர், விபசாரர், இயற்கைக்கு மாறான பாவம் செய்வோர், அதற்கு உடன்படுவோர், திருடர், பொருளாசை பிடித்தவர், குடிகாரர், பழிபேசுவோர், கொள்ளைக்காரர் இவர்களுக்கு கடவுளின் அரசு உரிமையாகாது (1 கொரிந்தியர் 6:9-10). சிலை வழிபாட்டை விட்டு விலகுங்கள் உங்களை விவேகிகள் என்று மதித்துப் பேசுகிறேன் (1 கொரி. 10:25). கடவுளின் கோவிலுக்கும் தெய்வங்களின் சிலைகளுக்கும் பொருத்தமுண்டோ? (2 கொரிந்தியர் 6:16). கெட்ட நடத்தை, அசுத்தம், காமவெறி, சிலைவழிபாடு, பில்லி சூனியம், பகைமை, சண்டை சச்சரவு, பெருமை, சினம், கட்சி மனப்பான்மை பிரிவினை,பிளவு அழுக்காறு குடிவெறி, களியாட்டம் முதலியவை. இத்தகையவற்றில் ஈடுபடுவோர்க்கு கடவுளின் அரசு உடமையாகாது. (கலாத்தியர் 5:20-21). கோழைகள், விசுவாசமற்றவர்கள், அருவருப்புக்குரியவர்கள், கொலைகாரர்கள், காமுகர், சூனியம் வைப்பவர்கள், சிலை வழிபாட்டினர் முதலிய பொய்யர்கள் அனைவருக்கும் கந்தக நெருப்பு எரியும் கடலே உரிய பங்காகும் (திருவெளிப்பாடு 21:8). கேடுகெட்ட நாய்கள், சூனியம் வைப்பவர்கள், காமுகர், கொலைகாரர், சிலை வழிபாட்டினர், பொய்மையை விரும்பி அதன்படி நடப்போர் அனைவரும் வெளியே நிற்பர் (திருவெளிப்பாடு 22:15). திருவெளிப்பாடு நூல் முழுவதையும் வாசிக்கவும். (அப்போஸ்தலர் பணி 17:29; I இராயப்பர் 4:3;எபேசியர் 5:5; I அருளப்பர் 5:21)

நாங்கள் தான் ஆதிச்சபையாரின் வாரிசுகள் என்று மார்மாலம் பண்ணும் சிலர், தங்களை அப்போஸ்தலருடைய வாரிசுகள் என்று கூறுகிறார்கள். அப்போஸ்தலருகிய புனித அருளப்பர் கூற்றுப்படி தங்களை காத்துக் கொள்ளட்டும். I அருளப்பர் 5:21ன் படியும், புனித சின்னப்பர் கூற்றின்படி I கொரிந்தியர் 10:11ன் படியும் விக்கிரகங்களுக்கு விலகி ஓடட்டும். ஆதி இஸ்ரவேல் ஜனத்தைப் போல் விக்கிரகத்தால் அழிந்து போகுமுன் ஓடுங்கள் (I கொரி, 10:7). திருச்சபை கட்டும் அதிகாரம் பெற்ற பிரதான அப்போஸ்தலருகிய புனித இராயப்பர் சொல்லையாவது கேட்டு புறஜாதியின் முறையையான விக்கிர ஆராதனை செய்யாதே.(I இராயப்பர் 4:3)

அழுகையின் தீர்க்கதரிசி எரேமியாஸ் உனக்காக கதறுகிறார். நீ திருடன் அகப்படும் போது வெட்கப்படுவதுபோல் வெட்கப்படாதே. உன்முகத்தை இறைவனிடம் காட்டப் பார்த்து,வெட்கங்கெட்ட விக்கிரக ஆராதனை செய்து இறைவனுக்கு முதுகை காட்டாதே தேவனுக்கு விரோதமாய் துரோகம் பண்ணின ஜனங்களையும் உன்னையும் அழித்துக் கொள்ளாதே (எரேமியாஸ்2:26-29) ஆனபடியால் ஓடுங்கள்,விக்கிரக ஆராதனைக்கு விலகி ஓடுங்கள். உங்களை காப்பாற்றிக் கொள்ள உலக ரட்சகராம் இயேசுவிடம் ஓடுங்கள்.

இன்னும் வேதத்தில் ஏராளமான ஆதாரங்கள் உண்டு. திருமறை நூலான பரிசுத்த வேதாகமம் ஒன்று வாங்கி ஜெபத்துடன் முழுமையாக வாசியுங்கள் பரிசுத்த ஆவியானவர் பல சத்தியங்களை விளங்கப் பண்ணுவார். விண்ணரசு உங்களுடையதாகுக.

---

"பிள்ளைகளே, நீங்கள் விக்கிரகங்களுக்கு விலகி உங்களைக் காத்துக் கொள்வீர்களாக"

I யோவான் 5:21

---

# பிதாவுக்கு ஸ்தோத்திரம்

(ஜான்-ஜூலை இதழின் தொடர்ச்சி)

ஒரு முறை தேவனுடைய பிள்ளை ஒருவர் பலவீனமாக இருந்த வேளையில் பஸ்ஸில் பயணம் செய்து கொண்டிருந்தார். அப்பொழுது Pick Pocketers (ஜேப்படி திருடர்கள்) அவரிடத்தில் திருடினர். அவர் தடுத்தார். பின்பு சமாதானத்துடன் பஸ்ஸிற்குள் இருந்துவிட்டு பஸ்ஸை விட்டு இறங்கினார் நமது சகோதரர். இவர் தனிமையாக, ஒரே ஒருவர்தான். சிறு பலவீனமும் உண்டு. அவர்கள் இரண்டு பேர். இவர் தாவீதைப் போன்ற சிறுவன். மற்ற இரண்டு பேரும் கோலியாத்தைப் போன்றவர்கள். பஸ்ஸை விட்டு கீழே இறங்கினவுடன் சகோதரனை அடித்து விட்டனர். இவர் அடியைத் தடுத்துக்கொண்டு சபையில் கொடுத்த ஆலோசனையின்படி ஆபத்து வேளையில் தேவனை ஸ்தோத்தரிக்க வேண்டும், கர்த்தர் வல்லமையைத் தருவார் என்ற வார்த்தை ஞாபகம் வந்த மாத்திரத்தில் தேவனை ஸ்தோத்தரித்தார். கர்த்தருடைய வல்லமையை முதலாவது பெற்றார். அடுத்து கர்த்தர் பேசினார் இவர்கள் இன்ன பிரகாரமாகத் தாக்குவார்கள் என்று. தேவன் அவர்கள் இன்ன பிரகாரம் தாக்குவார்களென்று சொன்னபடியால் சகோதரரும் கர்த்தரின் வார்த்தையின்படி சுதாகரித்துக் கொண்டு தேவனுடைய வல்லமையால் அவர்களை எதிர்த்தார். அவர்கள் அடியையும் வாங்கிக்கொண்டு பின்வாங்கிப் போய்விட்டார்கள். இப்படியாக நாம் தேவனை ஸ்தோத்தரிக்கும் பொழுது கர்த்தரின் வல்லமையைப் பெற்றுக் கொள்கிறோம். எதிரிகள் (பிசாசானவன்) முறிந்து ஓடுகிறார்கள். நாம் பாவம் செய்து கொண்டே தேவனை மகிமைப்படுத்தினால் நமக்கு ஐயோ!

5. பிதாவை ஸ்தோத்தரிப்பதின் மூலம் தேவ தூதர்களுக்கு ஒப்பாக மாறுகிறோம்.

அனேக மக்கள் கோடானு கோடி ஸ்தோத்திரம் ஏறெடுப்போம் என்று பாடுவார்கள். ஆனால் இரண்டு மூன்று ஸ்தோத்திரத்திற்கு மேல் சொல்லிவிட்டால் இவர்கள் பெந்தேகொஸ்தேகாரர்கள் என்று புறக்கணிக்க ஆரம்பித்து விடுவார்கள். பரலோகத்தில் நம்முடைய பிதாவாகிய தேவனை கேருபீன்களும், சேராபீன்களும் நான்கு ஜீவன்களும், இருபத்து நான்கு மூப்பர்களும், எண்ணிலடங்கா தேவ தூதர்களும் கோடா கோடியான பரிசுத்தவான்களும் கர்த்தரை சதாகாலங்களிலும் ஸ்தோத்தரித்துக் கொண்டிருக்கின்றனர்.

பரலோகத்தில் எல்லாம் பிதாவின் சித்தத்தையே செய்கின்றது. அது மாத்திரமின்றி இந்த பூலோகத்தில் மனிதர்களைத் தவிர மற்றெல்லா சிருஷ்டிகளும் தேவனை ஸ்தோத்தரிக்கின்றது. அவை தேவனுடைய வார்த்தைகளை கேட்பதற்கும் ஆவலுடன் காணப்படுகின்றன. அசிசி பட்டணத்து பிரான்ஸிஸ் என்ற தேவனுடைய பக்தர் எல்லா மிருகங்களுடனும் பறவைகளுடனும் அவர்களது பாஷையில் பேசி அவைகளுக்கு தேவனுடைய வார்த்தைகளைப் பற்றி கூறினார் என்று அவரது சரித்திரம் விளக்குகின்றது. இப்படி மனிதனைத்தவிர தேவனுடைய சிருஷ்டிகள் எல்லாம் கர்த்தரை தொழுது கொள்ளுகின்றது. ஸ்தோத்தரிக்கின்றது. அதே வேளையில் பரலோகத்தில் செய்யப்படுகின்றது போல நாமும் கர்த்தரை துதிப்பதின் மூலமும், அவரது சித்தத்தைச் செய்வதின் மூலமும் நாம் அந்த தேவ தூதர்களுக்கு ஒப்பாக மாறுகின்றோம்.

6. பூலோகத்தில் மக்கள் தேவனுக்கு ஸ்தோத்திரப்பலியிடவும், முழங்கால்படியிடவும், வெண்வஸ்திரம் தரித்துக் கொள்ளவும் வெட்கப்படுகின்றனர். பக்தராகிய யோவான் பரலோகத்தில் நடக்கப் போகின்ற காரியத்தை தரிசனத்தில் கண்டார். சகல ஜாதிகளிலும், கோத்திரங்களிலும், ஜனங்களிலும், பாஷைக்காரரிலுமிருந்து வந்ததும், ஒருவனும் எண்ணக்கூடாததுமான திரளான கூட்டத்தார் வெள்ளங்கிகளைத் தரித்துக் கொண்டவர்களாய் கர்த்தருக்கு முன்பாக ஸ்தோத்திரப்பாடல்களைப் பாடுகிறார்கள் என்று நாம் பரலோகத்தில் போய் கர்த்தருக்கு முன்பாக ஸ்தோத்திரப் பலிகள்

ஏறெடுப்பதற்காகவே தான் தேவன் நம்மை இந்தப் பூலோகத்தில் சிருஷ்டித்து, நம்மை இரட்சித்து அவரை ஸ்தோத்தரிப்பதற்கான ஒரு காலத்தை இந்தப் பூலோகத்தில் கொடுத்துள்ளார். ஆகவே நாம் இந்தப் பயிற்சிக் காலத்தில் நன்றாகப் பயிற்சி செய்வோம். இந்த பூலோகத்திலுள்ள பயிற்சியின் நாட்களில் நாம் வெற்றி பெற்றால் பரலோகத்தில் நமக்கு இடமுண்டு. எனவே நாம் கர்த்தருக்கு ஸ்தோத்திரப் பலிகளை ஏறெடுத்து நன்மைகளையும், கிருபைகளையும், வரங்களையும், வல்லமைகளையும் பெற்று தேவதூதர்களைப்போல் வாழுவோம்.

7. கர்த்தரை எல்லோரும் ஸ்தோத்தரிப்பது இல்லை கிறிஸ்து இயேசுவின் மூலம் இரட்சிப்பையும், பாவமன்னிப்பையும், சமாதானத்தையும், சந்தோசத்தையும் பெற்ற மக்கள் தான் கர்த்தரை ஸ்தோத்தரிப்பர். அதிலும் விசேஷமாக தேவனால் தெரிந்து கொள்ளப்பட்ட மக்கள், அவரது வருகைக்காக ஆயத்தப்படுகின்ற மக்கள் கர்த்தருக்கு காலை, மாலை, மத்தியான வேளைகளிலும் சமயம் கிடைக்கின்ற பொழுதெல்லாம் தனியாகவும், சபையாகவும்கூடி தேவனைத் தொழுது கொள்வர். பிறர் கர்த்தருக்கு காலை, மாலை, மத்தியானபலி செலுத்துவது அபூர்வம். பலி செலுத்தவும் மாட்டார்கள், ஏனென்றால் பிசாசானவனுக்கு நன்றாகத் தெரியும் இவர்கள் கர்த்தரைத் ஸ்தோத்தரிப்பதின் மூலம் நம்மை (சாத்தானை) விட பன்மடங்கு மேலானவர்களாக மாறிவிடுகின்றனர். அதாவது தேவனுடைய தூதர்களுக்கு ஒப்பாக மாறுகின்றனர் என்பதை அறிந்து, சாத்தான் மனுமக்களை, கர்த்தரை ஸ்தோத்தரிக்கவிடாமல் தடுத்து விடுகின்றான். ஆகவே தேவ ஜனங்கள் கர்த்தரை ஸ்தோத்தரிக்க தவறக்கூடாது.

தாவீது ராஜா இடைவிடாமல் கர்த்தரை ஸ்தோத்தரிக்க ஆட்களை நியமித்தார். பக்தராகிய நெகேமியா ஸ்தோத்திரப்பாட்டை துவக்குவதற்கென்று பிரத்தியேகமாக ஆட்களை நியமித்திருந்தார் (நெகே 11:17). அது மாத்திரமன்றி நம்முடைய கர்த்தராகிய கிறிஸ்து இயேசுவும் தனது பூலோக கால ஜீவியத்தில் எல்லாக் காரியங்களுக்காகவும் பிதாவைத் ஸ்தோத்தரித்தார் என்று புதிய ஏற்பாடு நமக்கு போதிக்கிறது. (மத் 26:27 மாற் 14:23, லூக் 22:19; 10:21) அப்போஸ்தலர்களும் எல்லா காரியங்களுக்காகவும் தேவனை ஸ்தோத்தரித்தனர் என்றும் பார்க்கின்றோம்.

நம்முடைய கர்த்தரும். நமது முற்பிதாக்களும் பிதாவாகிய தேவனை ஸ்தோத்தரித்தது போல நாமும் தேவனை ஸ்தோத்தரிப்போம். எல்லாவற்றிற்கும் மேலாக நாம் தேவதூதர்களுக்கு ஒப்பாக இந்த பூமியில் கர்த்தருக்கு ஸ்தோத்திரம் செலுத்தி ஜீவனம் பண்ணுவோம்.

## புதிய எருசலேம் சபை நடபடிகளில் சில

(தொடர்ச்சி)

குறித்த நாளில் நாங்கள் விமான நிலையத்துக்கு சகோதரர்களோடு சென்றோம். விமானத்தில் மே மாதம் முழுவதற்குமே இருக்கைகள் முன் பதிவு செய்யப்பட்டு முடிந்துவிட்டது. ஆகையால், நீங்கள் அவசரமாய் செல்வதானால் 30-4-83 கல்கத்தாவிற்கு விமானம் வழியாய்ச் சென்று அங்கிருந்து சென்னை வரலாம் என்று விமான நிலைய அதிகாரி ஒருவர் கூறினார். அந்தப்படியே கல்கத்தா செல்லும் விமானத்திற்கு டிக்கெட் வாங்கினோம் மறுநாள் 30-4-83 சனிக்கிழமை மீண்டும் சகோதரர்கள் எங்களை கல்கத்தா விமானத்திற்கு வழி அனுப்பி வைத்து விட்டுச் சென்று விட்டார்கள் எங்களுக்குரிய டிக்கெட் சோதனைகள் முடிந்து விமானத்தில் ஏறப்போகும் சமயத்தில், விமானத்தில் சிறிது பழுது (repair) இருக்கிறது. அதை சரி செய்தபிறகு விமானத்தில் பயணிகள் ஏறலாம் என்று எங்களை ஓய்வு அறையில் தங்க வைத்துவிட்டார்கள். மத்தியானம் வரையிலும் விமானத்தின் பழுது பார்க்கப்படவில்லை. அன்று எங்கள் எல்லோரையும் பே ஐலண்டு (Bay Island) விடுதியான பெரிய ஹோட்டல் ஒன்றில் தங்க வைத்து விட்டார்கள். எப்படியும் சாத்தானின் சதி கண்டு பிடிக்கப்பட்டு முறியடிக்கப்பட்டதற்காக கர்த்தரை அன்றிரவு அதிகமாய் துதித்தோம்.

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் - 59 ★ NOVEMBER 1988

"புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவுகிற நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)னென்று நீங்கள் அறியீர்கள். விழித்திருங்கள். உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

மாற்கு 13 : 35-37

**EDITOR : CHIEF PASTOR N. LAZAR**

BOMBAY. INDIA.

# ஆசிரியர் உரை

தேவ ஜனங்கள் ஆயத்தப்பட வேண்டும். இஸ்ரவேல் ஜனங்களுக்கு கர்த்தருடைய சேனையென்று ஒரு பெயர் உண்டு. நம்முடைய தேவனாகிய கர்த்தருக்கு சேனைகளின் தேவனாகிய கர்த்தர் என்ற ஒரு பெயர் சூட்டப்பட்டிருக்கிறது. கர்த்தருடைய சேனைகளெல்லாம் எகிப்து தேசத்திலிருந்து புறப்பட்டது என்றும், அணியணியாய் எகிப்து தேசத்திலிருந்து புறப்படப் பண்ணினார் என்றும் நாம் வேதத்தில் வாசிக்கிறோம் (யாத். 12:41, 51). அவர்களுடைய வனாந்திர பிரயாணத்தை நாம் பார்த்தோமென்றால் அவர்கள் தங்குகிற இடத்தைக் குறித்துச் சொல்கிற பொழுது கர்த்தருடைய பாளயம் இறங்கிற்று, தங்கியிருந்தது என்ற வார்த்தைகளை நாம் வாசிக்கிறோம். அப்படிப் போல தேவ ஜனங்கள், தேவனுடைய சேனையாக இருக்கிறார்கள். சேனை என்று சொல்லும் போது அங்கே ஒழுங்கும், கட்டுப்பாடும், பயிற்சியும், ஆளுகையும் ஒரு நோக்கமும் உண்டு. நாம் சாத்தானுக்கு விரோதமாய் அவனுடைய சைனியங்களுக்கு விரோதமாய் போர் செய்கிறவர்களாயிருக்கிறோம். ஒழுங்கும், கட்டுப்பாடும் உள்ள ஒரு சேனையாய், சபையாய் ஆளுகையின் கீழ் நாம் ஆயத்தப்பட வேண்டும், முன்னேறிச் செல்ல வேண்டும். சாத்தானும், அவனுடைய சேனைகளும், "நாங்கள் யுத்தத்திற்கு தயார் (Ready) என்று சத்தமிடுகின்றார்கள். தேவ ஜனத்தின் ஆயத்தமில்லாமை தோல்விக்கும், அழிவுக்கும் வழி நடத்தும். "ஏனெனில் மாம்சத்தோடும் இரத்தத்தோடுமல்ல, துரைத்தனங்களோடும், அதிகாரங்களோடும் இப்பிரபஞ்சத்தின் அந்தகாரலோகாதிபதிகளோடும், வான மண்டலங்களிலுள்ள பொல்லாத ஆவிகளின் சேனைகளோடும் நமக்குப் போராட்டம் உண்டு (எபே. 6:12). கிறிஸ்தவர்களில் பெரும்பகுதி மக்கள் இன்றும் மாம்சத்தோடும் இரத்தத்தோடும் தான் போராடிக் கொண்டிருக்கிறார்கள். மாம்சப் போராட்டங்களிலிருந்து இன்றும் விடுதலையாகவில்லை. இவர்கள் எங்கே வானமண்டலங்களிலுள்ள பொல்லாத ஆவிகளின் சேனைகளோடு எதிர்த்து நிற்க, ஜெயிக்கப் போகிறார்கள். முதலாவது பாவ போராட்டங்களிலிருந்து (கண்களின் இச்சை, மாம்சத்தின் இச்சை, ஜீவனத்தின் பெருமையிலிருந்து) விடுதலையானவர்களே இப் பிரபஞ்சத்தின் அந்தகார லோகாதிபதிகளோடும் வான மண்டலங்களிலுள்ள பொல்லாத ஆவிகளின் சேனைகளோடும் எதிர்த்து நிற்க முடியும். தீங்கு நாள் தீவிரித்து வருகிறது. அவைகளை நாம் எதிர்க்கவும் சகலத்தையும் செய்து முடித்தவர்களாய் நிற்கவும் திராணியுள்ளவர்களாயிருக்க, அவருடைய வசனத்தின்படி செய்ய வல்லமையுடையவர்களாக, ஒரு பாளயமாக நாம் அணிவகுத்து நிற்போம். கர்த்தர் தமது சேனைக்கு முன் சத்தமிடுவார். ஆயத்தப்படுங்கள்!

கிறிஸ்துவுக்குள்,

Chief Pastor N. LAZAR

# நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் இரத்தம்

நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்து மனிதனுடைய பாவங்களுக்காக கல்வாரி சிலுவையிலே இரத்தம் சிந்தி மரித்து, அடக்கம் பண்ணப்பட்டு மூன்றும் நாள் உயிரோடெழுந்தார். இயேசுகிறிஸ்துவினுடைய மரணம், அடக்கம் பண்ணப்படுதல், உயிர்த்தெழுதலிலே அளவிடக்கூடாத தெய்வீக இரகசியங்கள் அடங்கியிருக்கின்றன நமக்கு வேண்டிய சகல ஆசீர்வாதங்களும் இதற்குள்ளேதான் இருக்கிறது. இயேசுகிறிஸ்து சிலுவையிலே இரத்தம் சிந்தி மரித்தார். அவர் சிலுவையில் சிந்தின இரத்தத்தினாலே சமாதானத்தை உண்டாக்கினார் (கொலோ. 1:20). இயேசுகிறிஸ்து பிறந்ததிலிருந்தே பலமுறை அவருடைய இரத்தம் சிந்தப்பட்டிருக்கிறது. பிறந்த எட்டாம் நாளிலே விருத்தசேதனம் செய்யப்பட்டார். கெத்செமனேயிலும் பிலாத்துவின் அரண்மனையிலும், அன்னா காய்பா எரோதுவின் முன்னும் சிலுவை பாதையிலும் அவருடைய சரீரத்திலிருந்து இரத்தம் சிந்தப்பட்டது. ஆனால் தேவனுடைய திட்டமும் தீர்மானமுமோ வென்றால் அவர் சிலுவையில் இரத்தம் சிந்தி மரிக்க வேண்டுமென்பதே. சிலுவையின் மூலமாகவே மனுமக்களுக்கு மீட்புண்டு. ஆனபடியினால், இயேசுகிறிஸ்து சிலுவையை தம் வாழ்க்கையின் முன்னேக்கமாய் வைத்து முன்னேறினார். அதற்கு முன்னால் அவரை கொலை செய்துவிட சாத்தானும் அவனுடைய கையாட்களும் பலமுறை முயன்ற போதிலும் அவர் மரணத்துக்கு தன்னை ஒப்புக் கொடுக்கவில்லை, அவ்விடத்தை விட்டு கடந்து சென்றார். பிசாசு, தேவாலயத்தின் உப்பரிகையின் மேல் அவரைக் கொண்டுபோய் நிறுத்தி தற்கொலை செய்துகொள்ள தூண்டிய போதும் அவர் அதற்கு இடம் கொடுக்கவில்லை. கெத்செமனேயில் அவர் மிகவும் வியாகுலப்பட்டு அதிக ஊக்கத்தோடே ஜெபம் பண்ணினதினால் அவருடைய வேர்வை இரத்தத்தின் பெருந்துளிகளாய் தரையிலே விழுந்தது. இரத்த வேர்வை யாருக்காவது உண்டானால் அவர்கள் மரித்து விடுவார்கள். அவ்விதமான ஒரு மரணம் கெத்செமனேயில் தனக்கு ஏற்பட்டுவிடக் கூடாதென்று அப்படி கெத்செமனேயில் மரித்தால் மனுமக்களாகிய நமக்கு மீட்பில்லை என்பதை அவர் அறிந்து அப்பா பிதாவே இந்தப் பாத்திரம் என்னை விட்டு நீங்கக் கூடுமானால் நீங்கும்படிச் செய்யும் என்று மரணத்திலிருந்து இரட்சிக்க வல்லவரை நோக்கி பலத்த சத்தத்தோடும் கண்ணீரோடும் அழுது ஜெபித்தார். அவருடைய ஜெபம் கேட்கப்பட்டது (எபி. 5:7). வேத வாக்கியத்தின்படியும், தேவனுடைய முன் தீர்மானத்தின்படியும் இறைவனாகிய இயேசு நமக்காக சிலுவையில் இரத்தம் சிந்தி மரித்தார். அவருடைய இரத்தத்தினாலுண்டாகும் மகிமை, பலன்கள் :-

1) இயேசுவின் இரத்தத்தினாலே நமக்கு மீட்பு உண்டாகிறது (I பேது. 1:19).
2) இயேசுவின் இரத்தத்தினாலே பாவமன்னிப்பாகிய மீட்பு அவருக்குள் நமக்கு உண்டாயிருக்கிறது (எபே. 1:7; கொலோ. 1:14).
3) இயேசு தம்முடைய இரத்தத்தினால் நம்மை சம்பாதித்திருக்கிறார். மீட்டெடுத்திருக்கிறார் (அப். 20:28; I கொரி. 7:23; 6:20).
4) இயேசுவின் இரத்தத்தினாலே நீதிமான்களாக்கப் படுகிறோம் (ரோமர் 5:9; 3:26).
5) இயேசுவின் இரத்தத்தைப் பற்றும் விசுவாசத்தினாலே தேவனிடத்தில் பிரவேசிக்கும் சிலாக்கியம், தைரியம் நமக்கு உண்டாயிருக்கிறது (எபி. 10:20; எபே. 3:12).
6) இயேசுவின் இரத்தம் ஆவியிலும், ஆத்துமாவிலும், சரீரத்திலும் சுத்திகரணத்தை உண்டாக்குகிறது (எபி. 9:12-14, 22).
7) இயேசுவின் இரத்தம், நாம் பாவ அறிக்கை செய்தால் எல்லாப் பாவங்களையும் நமக்கு மன்னித்து, நம்மை சுத்திகரிக்கும் (I யோ. 1:9, 7)
8. இயேசுவின் இரத்தத்தினால் இறைவனோடு ஒப்புரவாகுதல் உண்டாகிறது (கொலோ. 1:20 21; எபே. 2:13).

9) இயேசுவின் இரத்தத்தினால் மனிதர்களுக்கு மனிதர் ஒப்புரவாகுதல் உண்டாகிறது (எபே. 2 : 11-16).

10) இயேசுவின் இரத்தத்தினால் பாவங்கள் கழுவப்படுகிறது (1 கொரி. 6 : 11).

11) இயேசுவின் இரத்தம் இருதயத்தில் தெளிக்கப்படுவதினால் மனிதனுடைய மனச்சாட்சி சுத்திகரிக்கப்படுகிறது (எபி. 9 : 14.)

12) இயேசுகிறிஸ்துவினுடைய இரத்தத்தினால் சாத்தானை ஜெயிக்க முடியும் (வெளி. 12 : 11)

13) இயேசுவின் இரத்தத்தினால் புதிய உடன்படிக்கை ஸ்தாபிக்கப்பட்டுள்ளது (லூக். 22 : 20; மத். 26 : 28).

14) இயேசுகிறிஸ்து தம்முடைய இரத்தத்தினாலே நம்முடைய பாவங்களற நம்மை கழுவி சுத்திகரிக்கிறார் (வெளி 1 : 6).

15) இயேசுவின் இரத்தத்தினாலே நாம் மீட்கப்பட்டு பரலோகத்தில் நின்று பாட்டு பாடுவோம் (வெளி. 5 : 8-10).

16) இயேசுவின் இரத்தம் நமக்காக பரிந்து பேசுகிறது (எபி. 12 : 4)

17) சத்தியத்தை அறிந்தபின்பு மனப்பூர்வமாய் பாவஞ்செய்து பின்மாறுகிறவன் இயேசுகிறிஸ்துவின் இரத்தத்தை மிதிக்கிறான். கொடிதான ஆக்கினையை அவன் அடைவான் (எபி. 12:26–29). "கிறிஸ்துவானவர் வேதவாக்கியங்களின்படி நமது பாவங்களுக்காக மரித்து, அடக்கம் பண்ணப்பட்டு, வேதவாக்கியங்களின்படி மூன்றும் நாளில் உயிர்த்தெழுந்தார்." (1 கொரி. 15 : 3, 4).

---

"இது பாவ மன்னிப்புண்டாகும்படி அநேகருக்காக சிந்தப்படுகிற புதிய உடன்படிக்கைக்குரிய என்னுடைய இரத்தமாயிருக்கிறது." (மத் 26 : 28)

---

# அடைக்கலப் பட்டணம்

முற்காலத்தில் ஒருவன் கைபிசகாயாவது, பகை நிமித்தமாவது ஒருவனைக் கொன்று போட்டால் கொல்லப்பட்டவனுடைய இனத்தார் கொலைபாதகனை கொல்வது நியாயம் என்று சொல்லி அப்படியே செய்து வந்தார்கள். இஸ்ரவேலர் கானான் தேசத்தை ஜெயித்த பிறகு கைபிசகாய் கொன்றுபோட்டவன் ஓடிப்போய் அடைக்கலமாயிருக்கத்தக்கதாக ஆறு அடைக்கலப் பட்டணங்களை ஏற்படுத்தும்படி தேவன் இஸ்ரவேலர்களுக்குக் கட்டளையிட்டார். அந்தபடியே இஸ்ரவேலர் கானானில் பிரவேசித்து அதை பிடித்த பொழுது யோர்தான் நதிக்குக் கிழக்கே மூன்றும், மேற்கே மூன்றுமாக ஆறு அடைக்கலப்பட்டணங்களை ஸ்தாபித்தார்கள் (எண் 35; உபா 4:41; 19:11, 2; யோசு 20). கானான் தேசப்படத்தை நாம் கவனித்துப் பார்ப்போமானால் ஒரு இஸ்ரவேலன் தான் இருக்கும் இடத்திலிருந்து அடுத்த அடைக்கலப் பட்டணத்திற்கு போகும் தூரம் 30 மைல்கள் தூரமே இருக்கும். கைபிசகாய் கொலை செய்தவன் ஓடிப்போகத் தக்கதாக இடையிலே யாதொரு தடையும் இல்லாமல் இப்பட்டணங்களுக்குப் போகும் பாதைகள் செம்மையாக அமைக்கப்பட்டிருக்கும் (உபா 19:3). பழிவாங்குகிறவன் வந்து அவனைக் கண்டுபிடித்து கொன்று போடாதபடி அவன் அடைக்கலப்பட்டணத்திற்குள் ஓடி தப்பித்துக் கொள்ள வேண்டும். இந்த அடைக்கலப் பட்டணம் நம்முடைய இரட்சகராகிய இயேசு கிறிஸ்துவையும், அவருடைய திருச்சபையையும் குறிக்கிறது. "பாவம் செய்கிற ஆத்துமா சாகும்" (எசேக் 18:4). மனிதன் நியாயப்பிரமாணத்தின்படியும், மனசாட்சியின் படியும், பாவம்செய்து குற்றவாளியாயிருக்கிறான். பழிவாங்குகிறவனாகிய சாத்தான் அவனுடைய ஆத்மாவை கொலை செய்யும்படி, அவனை கொலை செய்யும்படி பின் தொடருகிறான். தன்னை பாவி என்று உணருகிற மனிதன் உடனே அடைக்கலப்பட்டணத்தை நோக்கி ஓடக்கடவன். அடைக்

கலப்பட்டணத்திற்கு ஓடிப்போகிறவன் அந்த பட்டணத்தின் வாசலில் நின்று கொண்டு அந்த பட்டணத்தின் மூப்பரின் செவி கேட்க தன் காரியத்தைச் சொல்வானாக (யோசு 20:4). தன்னைப் பாவி என்று உணருகிற மனிதன் சபையின் மூப்பர்கள் செவி கேட்க தன் பாவத்தை அறிக்கையிட வேண்டுமென்பது கர்த்தருடைய கட்டளையாகும். அப்படி அவன் அறிக்கையிடும்போதே அவனை அவர்கள் சேர்த்துக் கொண்டு தங்களோடே அவன் குடியிருக்க இடங்கொடுப்பார்கள். பழிவாங்குகிறவன் கைக்கு அந்த மனிதனை தப்புவிக்க வேண்டியது பட்டணத்து மூப்பர்களின் கடமையாகும் (யோசு 20:5).

நியாயம் விசாரிக்கும் சபைக்கு முன்பாக அவன் நிற்கும் வரைக்கும் அந்நாட்களில் இருக்கிற பிரதான ஆசாரியன் மரணமடையும் வரைக்கும் அவன் அந்த பட்டணத்திலே குடியிருக்கவேண்டும். திருச்சபைக்குள் பிரவேசிக்கிற மக்கள் சபைக்குள்ளே இருக்கவேண்டும். அவர்கள் திருச்சபையை விட்டு வெளியேறினால் பழி வாங்குகிறவன் அவர்களைக் கண்டுபிடித்து அவர்களுடைய ஆத்துமாவைக் கொன்றுபோடுவான். அப்படிக் கொலை செய்யப்பட்டால் அவர்களுடைய இரத்தப்பழி அவர்களுடைய தலையின் மேலிருக்கும் (எண். 35:12, 25-27) ஒரு மனிதன் தன்னுடைய காரியங்களையெல்லாம் ஊழியரிடத்திலே சொல்லாதவரை அவனை (அவனை) பின் தொடருகிற சாத்தானிடமிருந்து அவனை (அவனை) தேவ ஊழியர்கள் பாதுகாக்க முடியாது ஒவ்வொரு மேய்ப்பனுக்கும் தன் ஆடுகளைப் பற்றிய காரியங்கள் நன்றாய் தெரிந்திருக்க வேண்டும் உன் ஆடுகளின் நிலைமையை நன்றாய் அறிந்துகொள். உன் மந்தைகளின் மேல் கவனமாயிரு (நீதி. 27:23). ஆடுகளின் நிலைமையை நன்றாய் அறிந்துகொள்ள உதவுகிறது பாவ அறிக்கை உபதேசமாகும். இவ்விதமாய் நியமிக்கப்பட்ட அடைக்கலப்பட்டணங்கள் ஆறு.

1) கேதேஸ் – கோவில், கேதேஸ் என்றால் கோவில், ஆலயம் என்று அர்த்தம். இந்நாட்களில் அநேகருக்கு ஆலயம் வேண்டாம் சபை வேண்டாம் என்ற எண்ணம். ஏதோ ஒரு சில சபைகள் கெட்டுப் போய் விட்டதென்றால் அதற்காக சபை வேண்டாம், ஊழியக்காரன் வேண்டாம் என்பது சுய இஷ்டமான சாத்தானுடைய போதனையாகும்.

ஒவ்வொரு மனிதனும் பைபிளை படித்து தானே அறிவடைந்து ஏதோ ஒரு உபதேசத்தைக் கைக்கொண்டு முக்தியடையலாம், கர்த்தருடைய வருகையில் எடுத்துக் கொள்ளப்படலாம் என்று சாத்தான் சில தீய மனிதர்களால் புது போதனைகளை உண்டாக்கிக் கொண்டு இருக்கிறான். இவ்விதமான எண்ணம் கீழ்ப்படியாத சிலருக்குள் சாத்தானால் தூண்டப்படுகிறது. சிலர் தங்களை அப்போஸ்தலர்களென்றும், தீர்க்கதரிசிகளென்றும் எண்ணிக் கொண்டு கொந்தளிக்கும் கடலைப்போல் இருக்கிறார்கள். அது அமர்ந்திருக்கக் கூடாமல் அழுக்கையும், சேற்றையும் ஒதுக்குகிறது போல இவர்களுடைய சுபாவ தன்மையை வெளியிட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

இப்படி ஒரு பத்திரிக்கையில் எழுதிக் கொண்டிருந்தார்கள். எந்த சபையும் இரட்சிக்காது என்று தங்கள் பத்திரிக்கையில் வெளிப்புற அட்டையிலே காணப்படுகிற சபையின் பெயர்களையெல்லாம் எழுதி இரட்சிக்கிறவர் கிறிஸ்து ஒருவரே என்று எழுதிக்கொண்டு இருந்தார்கள். ஆட்டைக் கடித்துக் மாட்டைக்கடித்து மனுஷனைக் கடிப்பது போல் "புதிய எருசலேம் சபை" (New Jerusalem Church) பெயரையும் இணைத்து வெளியிட்டார்கள். உடனே நாங்கள்போய் பத்திரிக்கை ஆசிரியர், எழுத்தாளர்களை சந்தித்தோம். ஐயா நீங்கள் கூடி வந்து கடவுளை ஆராதிக்கிறீர்களா? ஆமாம். ஞானஸ்நானம் கொடுக்கிறீர்களா? ஆமாம், நீங்கள் ஊழியர்களா? இல்லை சகோதரர்கள், விசுவாசிகள் தான். உங்களுக்கு ஞானஸ்நானம் கொடுக்க யார் அதிகாரம் கொடுத்தது? என்—பைபிளில் யாரும் ஞானஸ் நானம் கொடுக்கலாம் என்று எழுதியிருக்கிறது. எங்கே ஒரு வேத ஆதாரம் காட்டுங்கள், சிறிது நேரம் மவுனம் அவர்கள் கேள்வி: ஊழியர்கள் தான் கொடுக்கவேண்டும் என்று எங்கே பைபிளில் இருக்கிறது? பதில்: மாற். 16:20; அப்

8 : 12, 38, 9: 10-18; 10 : 47, 48; 16 : 13-15, 30-34, 19 : 1-6 ஆகிய வசனங்களைக் கவனித்து அப்போஸ்தலர்கள், ஊழியர்கள், அப்போஸ்தலர்களால் கட்டளை பெற்றவர்கள் இவர்களாலே ஞானஸ்நானம் கொடுக்கப்பட்டது என்று விளக்கினேன். நீங்கள் கூடிவருகிறது சபைதானே என்று கேட்டேன் ஆம் என்றார்கள். சபையாய் கூடிவருகிற நீங்களும் உங்கள் அபிப்பிராய பிரகாரம் இரட்சிக்கப்பட மாட்டீர்கள் என்றேன். உங்களோடு கூடியிருக்கிறவர்களும் இரட்சிக்கப்பட மாட்டார்கள் என்றேன். சபை இரட்சிக்காது என்று பைபிளில் இருக்கிறதா? இயேசுதான் இரட்சிக்கிறவர். அவர் எப்படி இரட்சிக்கிறார் என்று கேட்டோம். ஒரே மவுனம், இப்படியும் சில வேதபுரட்டர்கள் இருக்கிறார்கள். நீயோ அடைக்கலப் பட்டணத்திற்கு, கேதேஸ்க்கு ஓடு. வேதப் புரட்டர்கள், கள்ள ஊழியக்காரர்களுக்கு செவி கொடாதே. அவர்கள் சாத்தானோடு உடன்பாடுள்ளவர்கள்.

(தொடரும்)

---

"பகலிலே வெயிலுக்கு நிழலாகவும், பெருங்காற்றுக்கும், மழைக்கும் அடைக்கலமாகவும், மறைவிடமாகவும் ஒரு கூடாரம் உண்டாயிருக்கும்" (ஏசா 4 : 6).

---

# சுவிசேஷம்

## அது தேவனுடைய வல்லமையாயிருக்கிறது

"கிறிஸ்துவின் சுவிசேஷத்தைக் குறித்து நான் வெட்கப்படேன்; முன்பு யூதரிலும் பின்பு கிரேக்கரிலும் விசுவாசிக்கிறவனெவனோ அவனுக்கு அது இரட்சிப்புண்டாவதற்கு அது தேவ பெலனாயிருக்கிறது" (ரோம 1:16).

உலகத்தில் இந்த நாட்களிலே அநேக புது புது செய்திகள் பரவுகின்றன. கூட்டங் கூட்டமாய் மக்கள் திரளுகிறார்கள். எங்கும் மத எழுச்சிகள் காணப்படுகின்றன மக்கள் பக்தி முயற்சிகள் என்று சொல்லி பல சம்பிரதாயங்களை கைக்கொள்ளுகிறார்கள். புதிய சம்பிரதாயங்களை ஏற்படுத்துகிறார்கள். தங்கள் மதம்தான் தாய் மதம் என்றும், பூர்வீக மதம் என்றும், தங்கள் கொள்கையே சரி என்றும் அதற்கு மாறானவைகளையெல்லாம் அழிக்க வேண்டும், ஒழிக்க வேண்டும் என்றும் கூப்பாடு போடுகிறார்கள். இவைகளெல்லாம் அரசியல் கூப்பாடேயொழிய தெய்வீகமானவைகளல்ல. உலகத்தில் காணப்படும் அநேக மதங்களும் அவைகளின் எழுச்சிகளும் தெய்வீகமானவைகளல்ல. இவைகளெல்லாம் அரசியல் (Polltical) கட்சிகளே, இவைகளினால் மனிதனுக்கு ஆத்மீக மறுமலர்ச்சியோ, சாத்வீகமோ, உலகளாவிய அன்பு என்ற அடிப்படை கொள்கையோ உருவாகிறதில்லை; உருவாக்குகிறதற்குமன்று. மனிதனை மறுபடியும் கற்காலத்துக்கு கொண்டு போய் அகங்காரமுடையவனாக்கி, சுயநலவாதியாய் மாற்றி கற்பழிப்புக்கும், திருட்டுக்கும், வன்முறைக்கும், கொடூரத்திற்கும், கொலைக்கும், அதை மறைக்க பொய் புரட்டுகள் திறமையாய் செய்வதற்கும், அவனை வழி நடத்துவதன் மூலம் இந்த மதங்கள் தீமையின் எழுச்சி என்பதையும், மாம்சீகமான ஆதாயத்திற்கு அரசியல் நோக்கங்கள் கொண்டவைகள் என்றும் அறிந்து கொள்ளலாம்.

இஸ்லாம்: ஒரு மதம் மாத்திரமல்ல அது ஒரு அரசியல் கட்சியுமாகும்.

இந்து: இது ஒரு மதம் அல்ல, அரசியல் நோக்கம் கொண்டதே.

புத்தமதம்: இது ஒரு மதம் அல்ல, வெறும் கொள்கையே.

எட்டுச் சுரைக்காய் கறிக்குதவாது.

நிரீச்சுரவாதம் தேவன் இல்லையென்பதே. வெறும் அபிப்பிராயமே. அது இப்பொழுது மறைந்து மத நம்பிக்கைகள் பெருகி வருகின்றன. உலோகாயுதவாதம் எல்லாம் பொருள் என்ற தத்துவம். இதனால் மனிதன் நிறை

வடைவதில்லை என்பதை உணரவாரம்பித்து விட்டனர்.

கிறிஸ்தவம் மனிதன் உய்வடையும்படி தேவனுல் மனிதனுக்கு வகுக்கப்பட்ட வழியாகும். மெய்கிறிஸ்தவமானது, உலகமெங்கும் அறிவிக்கப்பட வேண்டியதும், அறிய வேண்டியதுமான ஒரு செய்தியாகும். சிலர் பம்பாய்க்குப் போகிறதற்கு பல மார்க்கங்கள் உண்டு. ஆகாய மார்க்கமாய் போகலாம், ரயில் மார்க்கமாய்ப் போகலாம், ரோடு மார்க்கமாய் வாகனங்களில் ஏறிப் போகலாம், கால் நடையாகவும்போகலாம், என்று கீழான சிந்தனையுடையவர்களாக பூமிக்குரியவைகளை மாம்சத்திற்கேற்ற பிரகாரம் சிந்திக்கின்றனர். இறைவனை அடைவது அல்லது முக்தி அடைவது என்பது மேலேயுள்ள காரியமாகும். மேலேயுள்ள ஒரு ஸ்தானத்திற்குச் செல்ல, பூமிக்கு மேலே செல்ல ஒரே மார்க்கம்தான் உண்டு. அது ஆகாயமார்க்கமே. இதையறியாமல் ஒரு ஊருக்கு பல வழிகள் இருக்கிறது போல எந்த வழியாயும் போய் சேரலாம் என்று சிலர் பிதற்றுகிறார்கள்.

ஒரு மதம் தெய்வீகமானதென்றும், அங்கே தேவன் உண்டென்றும், அங்கே இறைவன் இருப்பாரானுல் தெய்வீகம் தன்னைத்தானே காத்துக் கொள்ளும் அதைக் காப்பாற்ற மனிதன் தடிக்கம்பும், அரிவாளும், வேலும், வாளும், குண்டும் எடுக்கவேண்டிய தேவையில்லை அதன் மூலமாகவே அது தெய்வீகமானதல்ல, மனிதனை மறுபடியும் காட்டுமிராண்டியாக்குகிற, பதவிக்காகவும், சுயநலத்திற்காகவும் போட்டியிடுகிற அரசியல் கட்சிகள் என்பதை நாம் அறிந்து கொள்ளுகிறோம்.

அப். பவுலும் கிறிஸ்துவின் சுவிசேஷத்தைபறித்து, விசுவாசியான போது, கிறிஸ்தவனுன போது தான் பெற்ற இன்பத்தை இந்த வையகமும் பெறும்படியாக பேராவல் கொண்டார். பல இடர்பாடுகள், இகழ்ச்சி பரிகாசங்கள், துன்பங்கள் மத்தியிலேயும் சத்தியத்திற்கு சாட்சியாக நின்றுர். அவர் இறைவனைக் கண்டு விடுதலை, பெற்ற ஒரு மனிதன். பாவத்திலிருந்தும், சுயத்திலிருந்தும் மாம்சீக பெலவீனத்திலிருந்தும் கர்த்தராகிய இயேசு கிறிஸ்து தன்னை விடுதலையாக்கினதை உணர்ந்தார். "கிறிஸ்து இயேசுவினுலே ஜீவனுடைய ஆவியின் பிரமாணம் என்னைப் பாவம், மரணம் என்பவைகளின் பிரமாணத்தினின்று விடுதலையாக்கிற்றே (ரோ.8:2) என்று முழக்கமிட்டார். தெய்வீக வல்லமையைப் பெற்று எல்லாவற்றின் மேலும் ஜெயமுடையவராக விளங்கினுர், "நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினுலே நமக்கு ஜெயங்கொடுக்கிற தேவனுக்கு ஸ்தோத்திரம்", (I கொரி. 15:57) என்கிறுர். எல்லாவற்றையும் செய்ய எனக்கு வல்லமையுண்டு என்ற தன்னம்பிக்கையுடையவராக காணப்பட்டார். "என்னைப் பெலப்படுத்துகிற கிறிஸ்துவினுலே எல்லாவற்றையுஞ் செய்ய எனக்கு பெலனுண்டு (பிலி 4:13) தேவனுக்கும் மனுஷனுக்கும் முன்பாக குற்றமற்ற மனசாட்சியுடையவராக பரிசுத்த ஜீவியம் செய்தார். "நான் தேவனுக்கும் மனுஷருக்கும் முன்பாக எப்பொழுதும் குற்றமற்ற மனசாட்சியை உடையவனுயிருக்கப் பிரயாசப்படுகிறேன்" (அப்.24:16). "விசுவாசிகளாகிய உங்களுக்குள்ளே நாங்கள் எவ்வளவு பரிசுத்தமும் நீதியும் பிழையின்மையுமாய் நடந்தோமென்பதற்கு நீங்களும் சாட்சி, தேவனும் சாட்சி" (I தெச.2:10). "கர்த்தருக்கு முன்பாக மாத்திரமல்ல, மனுஷருக்கு முன்பாகவும் யோக்கியமானவைகளைச் செய்ய நாடுகிறோம்" (II கொரி.8:21) என்கிறுர். அந்த நாட்களிலே சிலுவை என்றுல் மிகவும் கேவலமாக எண்ணப்பட்ட காலமாகும். ரோமர்கள் குற்றவாளிகளை சிலுவையில் அறைந்து கொலை செய்வார்கள். சிலுவை மரணம் ஒரு இழிவான மரணமாக எண்ணப்பட்டது. கர்த்தராகிய இயேசு கிறிஸ்து யூதர்களால் அநியாயமாய் ரோமர் கையில் ஒப்படைக்கப்பட்டார். அவர்கள் அவரை சிலுவையிலறைந்து கொன்றுர்கள் அதுவோ தேவனுடைய தீர்மானமாக இருந்தது (யோவான் 3:14,15; அப்.3:15-18). இயேசு கிறிஸ்துவைப் பற்றிய பிரசங்கம், சிலுவையைப் பற்றிய பிரசங்கத்தை சிலர் இகழ்ந்தார்கள். மனிதன் இரட்சிக்கப்படுகிறதற்கு, பாவத்திலிருந்து விடுதலையாகிறதற்கு, சுயத்திலிருந்து விடுதலையாகிறதற்கு, பெலவீனத்திலிருந்து விடுதலையாகிறதற்கு, அறிவீனத்திலிருந்து விடுதலையாகிறதற்கு, பிசாசின் பிடி

பிலிருந்து விடுதலையாகிறதற்கு, நோயின் பிடியிலிருந்து விடுதலையாகிறதற்கு, மனிதன் உயர்ந்து தெய்வீக நிலையடைவதற்கு. இது தேவனுடைய ஞானமும், திட்டமுமாக இருக்கிறது. மனிதனை உருவாக்குகிற இந்த வல்லமையே தெய்வீக வல்லமையாகும். ஆனபடியினால், கிறிஸ்துவின் சுவிசேஷத்தைக் குறித்து நான் வெட்கப்படேன் என்றும், சிலுவையைக் குறித்து கிறிஸ்துவைக் குறித்து பிரசங்கிப்பேன் என்றும், மனிதனை உருவாக்குகிற இதுவே தேவனுடைய ஞானமும் வல்லமையுமாயிருக்கிறதென்று அப் பவுல் அறை கூவுகின்றார். சிலருக்கு இது பைத்தியமாகத் தோன்றும், ஆம்! கெட்டுப் போகிறவர்களுக்கே இது பைத்தியமாகத் தோன்றும். "சிலுவையைப் பற்றிய உபதேசம் கெட்டுப் போகிறவர்களுக்கு பைத்தியமாய் இருக்கிறது. இரட்சிக்கப்படுகிற நமக்கோ இது தேவ பெலனாயிருக்கிறது." (I கொரி 1:18) கிறிஸ்துவின் சுவிசேஷத்தை விசுவாசிக்கிறவனெவனோ (யாராயிருந்தாலும்) அவனுக்கு இரட்சிப்பு உண்டாகிறதற்கு கிறிஸ்துவின் சுவிசேஷம் தேவனுடைய பெலனாயிருக்கிறது (ரோம 1;18; I கொரி. 1:18,24) பைத்தியமாய்த் தோன்றுகிற பிரசங்கத்தினாலே விசுவாசிகளை இரட்சிக்க தேவனுக்குப் பிரியமாயிற்று (I கொரி.1:21). "சிலர் அடையாளத்தைத் தேடுகிறார்கள், நாங்களோ சிலுவையிலறையப்பட்ட கிறிஸ்துவைப் பிரசங்கிக்கிறோம் (1 கொரி.1:23) இந்த தேசத்தாரில் அநேகர், யோகம் ஞானம், பக்தி,முயற்சி இவைகளினால் முக்தியடையப் பிரயாசப்படுகிறார்கள். அவர்களுக்கு இயேசு கிறிஸ்துவைப் பற்றிய உபதேசம் பைத்தியமாகத் தோன்றுகிறது. பூஜை பலிகள் செய்து ஷேத்திர யாத்திரை செய்து, புண்ணிய தான தர்மங்கள் செய்து இயம நியமங்களைக் கைக்கொண்டு யோகாப்பியாசம் செய்து,நிஷ்டையிலிருந்து முக்தியடைய பிரயாசப்படுகிறவர்களுக்கு என்னடா! யாரோ செய்த பாவத்துக்கு யாரோ ஒருவர் சிலுவையில் மரித்தாராம், அவரை விசுவாசிக்கிறதினால் இரட்சிப்பாம், விடுதலையாம் என்று அற்பமாய் எண்ணுகிறார்கள். இயம நியமங்களைக் கைக்கொள்கிறது, யோகாப்பியாசம் செய்து நிஷ்டையிலிருப்பதும் ஷேத்திர யாத்திரை செய்வதும்,மாம்சத்தை வளர்க்கிறதற்கு பிரயோஜனப்படுமேயொழிய தெய்வீக சம்பந்தப்பட்டதல்ல. அதினால் மனிதனுடைய மாம்சத்தை பேணுகிற தற்கேயொழிய ஆத்மீகத்துக்கு எந்த ஒரு பிரயோஜனமும் கிடையாது. அது உலக ஞானமும் மாயமான தந்திரமும் மனுஷர்களின் பாரம்பரிய நியாயமும் உலக வழிபாடுமேயல்லாமல் வேறல்ல. அவைகளையுடையவர்கள் மாயமான தாழ்மையையும் சரீர ஒடுக்கத்தையும் சுய இஷ்டமான ஆராதனையையும் செய்கிறார்கள். (கொலோ. 2:5,23,20,21,22,19). கிறிஸ்துவின் சுவிசேஷமோ எல்லாருக்கும் பொதுவானது. ரயில் (Train)லே முதல் வகுப்பு இரண்டாம்வகுப்பு என்று காணப்படுகிறது. வசதியுள்ளவர்கள் முதல் வகுப்பிலே செல்வார்கள். முதல் வகுப்பு டிக்கெட் உள்ளவர்கள் இரண்டாவது வகுப்பிலேயும் பிரயாணம் செய்யலாம். ஆனால், இரண்டாவது வகுப்பு டிக்கெட்டை உடையவர்கள் முதல் வகுப்பிலே பிரயாணம் செய்ய முடியாது. அப்படியென்றால் பணக்காரர்களும், ஒரு சில மனிதர்கள் மாத்திரமேயோகம் செய்து ஞானமடைய முடியும். அதாவது முக்தியடைய முடியும். இவ்வாறு பிறமதங்கள் சொல்லுகின்றன. சரியை, கிரியையோகம், ஞானம் என்பவைகளைக் கவனிக்க தேவனோ உலகம் முழுவதுமுள்ள எல்லா மக்களுக்கும் ஒரே வகுப்பையே, ஒரே வழியையே நியமித்திருக்கிறார்.

பணக்காரனும் போகலாம், ஏழையும் போகலாம், படிப்பாளியும் போகலாம், படிப்பறிவில்லாதவர்களும் போகலாம். விசுவாசிக்கிறவனெவனோ (எவனாகிலும்) அவன் இரட்சிக்கப்பட கிறிஸ்துவின் சுவிசேஷம் தேவனுடைய வல்லமையாயிருக்கிறது. தேவனுடைய வல்லமை நன்மை செய்வதில், உருவாக்குகிறதில் விளங்குகிறது. தீய வல்லமைகள் அழிக்கிறதில் முட்டாளாக்குகிறதில், நொறுக்குகிறதில், கடைசியில் ஏமாற்றுவதிலும் வஞ்சிக்கப்படுவதிலேயும் கொண்டு போய்விடுகிறது.

**கிறிஸ்துவின் சுவிசேஷம் :**

**இது தேவனுடைய வல்லமை.**

1. மறுபிறப்பை உண்டாக்குகிறது. (I பேதுரு 1:23).

2. இரட்சிப்பை வழங்குகிறது (ரோமர் 1:16; எபே.1:13).

3. கிருபையை பகிர்ந்து கொடுக்கிறது (அப்.20:24).

4. விசுவாசத்தை ஸ்தாபிக்கிறது (ரோ. 16:25).

5. விசுவாசத்தை உண்டு பண்ணுகிறது (ரோமர் 10:17).

6. விடுதலை செய்கிறது (யோவான் 8:31-36; ரோமர் 8:2).

7. ஜெயம் அருளுகிறது (ரோமர் 8:36; I கொரி.15:57).

8. ஆவிக்குரிய வாழ்க்கையைப் போஷிக்கிறது (1 பேது.2:3).

9. சபையைச் சுத்திகரிக்கிறது (எபே. 5:26).

10. வாழ்க்கையை ஆராய்கிறது (எபி: 4:12).

11. கிறிஸ்துவுடன் உடன் பங்காளியாக்குகிறது (எபே.3:3:2:7).

12. அழியாமையை பகிர்ந்து கொடுக்கிறது (1 தீமோ.1.10)

13. சமாதானத்தைக் கொண்டு வருகிறது (ரோமர் 10.15).

14. பாதுகாவல் கொடுக்கிறது (எபே. 6 : 17).

15. சம்பூரண ஆசீர்வாதங்களைக் கொடுக்கிறது (ரோமர் 15:29).

ஆகவே, இயேசுகிறிஸ்துவைப் பற்றிய செய்தியே நற்செய்தி. கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவைப் பற்றிய அறிவே மெய்யறிவு. இயேசு கிறிஸ்துவைப்பற்றிய செய்தியே உலக முழுவதற்கும் மிகுந்த சந்தோஷத்தை உண்டாக்கும் நற்செய்தி. நீயும் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசி. தேவனுடைய வல்லமை உன்னையும் இரட்சிக்கும்

---

"நீங்கள் போய் இந்த ஜீவ வார்த்தைகளை எல்லாம் ஜனங்களுக்குச் சொல்லுங்கள் என்றான். (அப் 5 : 20).

---

## வேத பாடம் (தொடர்ச்சி)

யாத். 32:1-6 மோசே தேவனுடைய கட்டளைகளையும், எழுதப்பட்ட கற் பலகைகளையும், வாங்கிக்கொண்டு கீழே வருகிறதற்கு இன்னும் ஒரு நாட்களேயிருக்கும் பொழுது இஸ்ரவேல் ஜனங்கள் கூட்டங்கூடி எங்களை எகிப்து தேசத்திலிருந்து அழைத்துக் கொண்டு வந்த அந்த மோசேக்கு என்ன சம்பவித்ததோ நாங்கள் அறியோம். ஆதலால், நீர் எங்களுக்கு முன் செல்லும் தெய்வங்களை எங்களுக்கு உண்டு பண்ணும் என்றார்கள். அப்பொழுது ஆரோன் உங்கள் குமாரர் குமாரத்திகளுடைய காதணிகளை கழற்றி என்னிடம் கொண்டு வாருங்கள் என்று கேட்டு வாங்கி அந்த பொன்னை உருக்கி சிற்பக்கருவியினால் கருப்பிடித்து ஒரு கன்றுக்குட்டியை உருவாக்கினான். ஆரோனோடு கூட சேர்ந்து அதை உண்டு பண்ணினவர்கள் இஸ்ரவேலர்களைப் பார்த்து உங்களை எகிப்து தேசத்திலிருந்து அழைத்துக் கொண்டு வந்த தெய்வங்கள் இவைகளே என்றார்கள். ஆரோன் அந்த பொன் கன்றுக்குட்டிக்கு முன்பாக ஒரு பலிபீடத்தைக்கட்டி பொற் கன்றுக்குட்டிக்கு யெகோவா என்று பேசிட்டான். பெயரிட்டு நாளைக்கு கர்த்தருக்குப் பண்டிகை என்று கூறி அறிவித்தான். ஜனங்கள் அதை ஏலோகிம் என்றார்கள். இது பன்மை பெயராகும் (வ 4,8) இஸ்ரவேலர்கள் மிகவும் தெளிவாக (யாத் 20: 1-17) தேவன் கொடுத்த 10 கற்பனைகளை நேரடியாகக் கேட்டிருந்தும், முதல் இரண்டு கட்டளைகளையும் வெளிப்படையாக இவ்வளவு சீக்கிரமாக மீறிவிட்டார்கள்.

1-வது கற்பனை உன்னை அடிமைத்தன வீடாகிய எகிப்து தேசத்திலிருந்து புறப்படப் பண்ணின கர்த்தர் நானே, என்னையன்றி உனக்கு வேறே தேவர்கள் உண்டாயிருக்க வேண்டாம் என்பது (யாத். 20:23).

2-வது கற்பனை மேலே வானத்திலும், கீழே பூமியிலும், பூமியின் கீழ்த்தண்ணீரிலும் உண்டாயிருக்கிறவைகளுக்கு ஒப்பான ஒரு சொரூபத்தையாகிலும் யாதொரு விக்கிரகத்தையாகிலும் நீ உனக்கு உண்டாக்க வேண்டாம். நீ அவைகளை நமஸ்கரிக்கவும் சேவிக்கவும் வேண்டாம்; உன் தேவனாகிய கர்த்தராயிருக்கிற நான் எரிச்சலுள்ள தேவனாயிருந்து என்னைப் பகைக்கிறவர்களைக் குறித்து பிதாக்களுடைய அக்கிரமத்தைப் பிள்ளைகளிடத்தில் மூன்றாம் நான்காம் தலைமுறை மட்டும் விசாரிக்கிறவராயிருக்கிறேன். என்னிடத்தில் அன்பு கூர்ந்து என் கற்பனைகளைக் கைக்கொள்ளுகிறவர்களுக்கோ ஆயிரம் தலைமுறை மட்டும் இரக்கஞ் செய்கிறவராயிருக்கிறேன் (யாத். 20:4-6) என்கிற கற்பனைகள் இரண்டையும் மிக மோசமான முறையில் இவர்கள் மீறி விட்டார்கள். கர்த்தர் சொல்லுகிற எல்லா வார்த்தைகளுக்கும் கீழ்ப்படிந்து நடப்போம் என்று இவர்கள் தான் வாக்குக் கொடுத்தார்கள் (யாத். 24:3,7) இப்பொழுது இவ்வளவு சீக்கிரமாக அதை மீறுகிறார்கள், உண்மையில் இவர்களுடைய நோக்கம் எகிப்துக்குத் திரும்பச் செல்ல வேண்டும் (யாத். 32:1,23; அப். 7:39,40) என்பதே. அது மாத்திரமல்ல, அவர்கள் அந்தக் கன்றுக்குட்டிக்கு முன்பாக பலி செலுத்தி அதை ஆராதித்தார்கள் (யாத். 32:6,8).

யாத். 32:7-10. கர்த்தர் மோசேயை நோக்கி நீ இறங்கிப்போ, எகிப்து தேசத்திலிருந்து நீ நடத்திக் கொண்டு வந்த உன் ஜனங்கள் தங்களைக் கெடுத்துக் கொண்டார்கள் என்று சொன்னார். அவர்களை அழிக்க வேண்டுமென்று தேவன் சொன்னார். கர்த்தர் எகிப்திலிருந்து விடுதலையாக்கிக் கொண்டு வந்த ஜனங்களை, அவர்கள் மறுபடியும் பாவம் செய்ததினிமித்தம் அவர்களை அழிக்க வேண்டுமென்று 4 முறை கூறினதாகத் தெரிகிறது (யாத் 32:10; எண் 14:12; 16:21,45). எந்த ஒரு மனிதனும் இரட்சிக்கப்பட்ட பின்பு பாவம் செய்வானென்றால், பின்மாறுவானென்றால் அவன் அழிக்கப்படுவது நிச்சயம். அவர்களுக்கு நான் விதித்த வழியை அவர்கள் சீக்கிரமாய் விட்டு விலகினார்கள். (யாத். 32:8-10; யூதா 5.).

இந்நாட்களில் கிறிஸ்தவர்கள் என்று சொல்லிக் கொள்ளுகிற அநேகரிலும் விக்கிரக ஆராதனை பெருகிவருகிறது. இயேசு என்றும், மாதா என்றும், அர்ச்சிஸ்டர்கள் (பரிசுத்தவான்கள்) என்றும் சிலைகளையும் படங்களையும் உண்டு பண்ணி அவைகளுக்கு வணக்கம் செலுத்தி, அவைகளைத் தொட்டு, கும்பிட்டு, முத்தமிட்டு, நாங்கள் அவைகளைக் கும்பிடவில்லை; அவைகள் குறிப்பிடும் ஆட்களைத்தான் கும்பிடுகிறோம். வணக்கம் செலுத்துகிறோம்; மரியாதை செலுத்துகிறோம், சங்கை செய்கிறோம் என்று சொல்லுகிறார்கள். இந்துக்களும் அதையே செய்கிறார்கள், சொல்லுகிறார்கள். மனிதனின் வஞ்சிக்கப்பட்ட மனம் சாம்பலை மேய்கிறது. தேவனுடைய நேரடியான கட்டளையை பகிரங்கமாக மீறிவிட்டு அதற்கு விளக்கமும் வியாக்கியானமும் கொடுக்கிறார்கள். விக்கிரக ஆராதனையோடு சம்பந்தப்பட்ட நடபடிக்கைகள்.

1. வணங்குகிறதற்காக ஆயத்தம் செய்தல் (யாத். 32:1-4).

2. தொழுகைக்கான பொது அறிவிப்பு செய்தல் (யாத். 32:5).

3. தொழுகைக்காக கூடி வருதல் (யாத் 32,6).

4. தகனபலி, சமாதான பலிகள் செலுத்துதல் (யாத். 32:6).

5. பலிகளை புசித்து, குடிக்க, பான பலிகளைச் செலுத்துதலும், புசித்துக் குடிப்பதும் (யாத். 32:6).

6. பாட்டுப்பாடுதல், நடனம் பண்ணுதல், பெரிதான இரைச்சல், சத்தம் போடுதல் (யாத். 32:17-19).

7. உட்கார்ந்து விளையாடுதல் (யாத். 32:7)

(தொடரும்)

---

"அப்படியே அந்த ஜாதிகள் கர்த்தருக்குப் பயந்தும் தங்கள் விக்கிரகங்களைச் சேவித்தும் வந்தார்கள். அவர்கள் பிள்ளைகளும், அவர்கள் பிள்ளைகளின் பிள்ளைகளும் தங்கள் பிதாக்கள் செய்தபடியே இந்நாட்கள் வரைக்கும் செய்து வருகிறார்கள்"

(II இரா. 17:41).

---

# மோட்ச வழி

## (குரு-சிஷ்ய உரையாடல்)

(தொடர்ச்சி)

**சிஷ்ய :** *கிறிஸ்தவர்களுக்கு துன்பம், துக்கங்கள் கஷ்டங்கள் வருகிறதே ஏன்?*

**குரு :** *கிறிஸ்தவனுக்கு துன்பம், துக்கங்கள், கஷ்டங்கள் வராது என்று தேவன் சொல்லவில்லை. அவைகளுக்கு மேலாய் தேவசமாதானமும் நம்பிக்கையும் கிறிஸ்தவர்களுக்கு உண்டாயிருக்கும். மலைபோல் துன்பம், துக்கம் இடர்பாடு உண்டானாலும் அது பனிபோல் மாறிப் போய்விடும் என்றே கர்த்தர் சொல்லியிருக்கிறார்.*

**சிஷ்ய :** *துன்பம் துக்கங்கள் வியாதிகள் உண்டாகும்போது மனம் சோர்ந்து அவநம்பிக்கை உண்டாகுகிறதே அதை மேற்கொள்ள வழி என்ன?*

**குரு :** *அநேக துன்பம் துக்கங்கள் நம்முடைய பாவத்தினாலும், கவலையீனத்தினாலும் அசட்டையினாலும் உண்டாகின்றன. சில துன்பம் துக்கங்கள் நாம் பாவ உலகத்தில் இருக்கிறபடியால் இயற்கையாகவும், பிற மனிதர்களினாலும், பிசாசுகளினாலும் உண்டாகின்றன. நாம் நம்மை தற்பரிசோதனை செய்து நம்முடைய பாவங்களைக் கண்டு பிடித்து அறிக்கை செய்து தேவனிடத்தில் மன்னிப்பு பெற்று; சரி செய்ய வேண்டியவைகளை சரி செய்து ஊக்கமாய் ஜெபித்தால் அவைகள் அகன்று போகும். சிலவற்றை பொறுமையாய் சகித்துக் கொள்ளும் பொழுது அவைகள் தானாய் அகன்று போய்விடும். சிலவற்றை நாம் எதிர்த்து இலகுவான சோதனைகள் மத்தியிலே நாம் சந்தோஷப்பட்டு இறைவனை ஸ்துதிப்போமென்றால் அவைகள் அகன்று போய்விடும். ஒவ்வொரு சோதனையும், துன்பமும் நமக்கு ஏதாவது ஒரு நன்மையைக் கொண்டு வருகிறது அனுபவத்தைக் கொண்டு வருகிறது. சோதனையை சகித்து ஜெயிப்பதே மனிதனுக்கு நியமிக்கப்பட்டிருக்கிறது. சோதனையில் சோர்ந்து போகவோ, விழுந்து போகவோ மனம் மடிந்து போகவோ கூடாது. நம்முடைய அன்பான பரமபிதாவினிடத்திலிருந்தே எல்லாம் வருகிறதாக எண்ணி அவைகளை நாம் ஜெயிக்கும்போது நமக்கு மிகுந்த சமாதானமும், நம்பிக்கையும் உண்டாகும்.*

**சிஷ்ய :** *கிறிஸ்தவனான பின்பு பாவ சோதனைகள் உண்டாகுகின்றன. அதற்கு காரணம் என்ன? அவைகளை எவ்விதம் ஜெயிக்க வேண்டும்?*

**குரு :** (1) *பாவ சோதனைகளுக்கு முதல் காரணம் நம்முடைய இருதயத்தில் இச்சையிருப்பதே. அந்தப் பாவத்தைப் பற்றிய இச்சை.*

(2) *சோதனைக்காரனாகிய சாத்தான் நம்முடைய ஆத்துமாவுக்கு கண்ணிகளை வைக்கிறான். ஆனபடியால் எந்த ஒரு காரியத்தில் நமக்கு அடிக்கடி சோதனை உண்டாகிறதோ அந்தப் பாவம் நம்முடைய இருதயத்தில் இருக்கிறதென்று அர்த்தம். நம்முடைய இருதயத்தின் இச்சைகளுக்கு இடம் கொடுக்காமல தேவனுக்கு, தேவனுடைய கட்டளைகளுக்குப் பயந்து தேவனுடைய கற்பனைகளுக்குக் கீழ்ப்படியும்போது பாவத்தின் மேல் ஜெயமுண்டாகும். மேலும் எந்தஒரு சோதனையும் நம்முடைய ஆத்துமாவை அமிழ்த்துப் போடும்படியாகவும் நாம் அவைகளில் சிக்குண்டு சாத்தானுக்கு அடிமைகளாகும்படி அவன் விரிக்கிற வலையாகும். அவைகளுக்கு விலகி நாம் நம்முடைய ஆத்துமாவைக் காத்துக் கொள்ள வேண்டும் சோதனையினின்று தப்புவிக்கும்படி இறைவனை நோக்கி வேண்டுதல் செய்ய வேண்டும். பரிசுத்தவான்களிடத்தில் ஆலோசனைகளைக் கேட்டு அவர்களுடைய ஜெப உதவியை நாடிபெற்றுக் கொள்ள வேண்டும். இப்படிச் செய்யும் பொழுது பாவசோதனைகள் மேல் ஜெயம் உண்டாவது நிச்சயம். கர்த்தர் இரட்சிப்பார்.*

**சிஷ்ய :** *சில துன்பங்கள் துக்கங்களுக்கு காரணமே தெரிவதில்லை அதற்கு என்ன செய்யலாம்?*

ஆகை கவலைப்படவேண்டாம். நம்முடைய தேவன் எல்லாவற்றையும் நன்மையாய் செய்து முடிப்பார். இதிலேயும் ஒரு நன்மையிருக்கிறதென்று எண்ணி சந்தோஷத்தோடு தேவனுக்குக் காத்திருக்க வேண்டும். அந்தரங்க உலகத்தில் நடக்கும் சம்பவங்கள் எல்லாவற்றையும் நாம் அறிய முடிகிறதில்லை ஆனால் தேவன் எல்லாவற்றையும் தம்முடைய ஆளுகையின் கீழ் வைத்திருக்கிறார் என்பதை நாம் அறிவோம். ஆனபடியினால் நமக்கு நன்மையாகவே முடியும் என்று வேதம் தீர்க்கமாய் அறிவிக்கிறது. "அன்றியும், அவருடைய தீர்மானத்தின்படி அழைக்கப்பட்டவர்களாய் தேவனிடத்தில் அன்பு கூருகிறவர்களுக்கு சகலமும் நன்மைக்கு ஏதுவாக நடக்கிறதென்று அறிந்திருக்கிறோம்" (ரோம 8:25)

(தொடரும்)

"சோதனையை சகிக்கிற மனுஷன் பாக்கியவான்; அவன் உத்தமனென்று விளங்கின பின்பு கர்த்தர் தம்மிடத்தில் அன்பு கூருகிறவர்களுக்கு வாக்குத்தத்தம் பண்ணின ஜீவ கிரீடத்தைப் பெறுவான்" (யாக். 1:12)

(தொடர்ச்சி)

# ஏவாள் (ஜீவனி)

## மாதர் பகுதி

நம்முடைய ஆதிப் பெற்றோர்களைப் பற்றி நாம் அடிக்கடி நினைக்கவேண்டியதாய் இருக்கிறது. தேவன் சகல பிராணிகள், மிருகங்களை, ஆணும் பெண்ணுமாக, ஜோடி ஜோடியாக சிருஷ்டித்தார். ஆதாம் உருவாக்கப்பட்ட பின்பே மிருகங்கள், பிராணிகள், பறவைகள், சிருஷ்டிக்கப்பட்டதாகத் தெரிகிறது. தேவன் அவைகளை மண்ணினால் உருவாக்கி ஆதாம் அவைகளுக்கு என்ன பெயரிடுவான் என்று அவனிடத்தில் கொண்டு வந்ததாகப் பார்க்கிறோம். (ஆதி. 2: 19, 20). ஆதாமுக்கோ இன்னும் ஏற்றதுணை காணப்படவில்லை. ஆனபடியினால், கர்த்தர் ஆதாமுக்கு ஏற்ற துணையை ஆதாமுடைய சரீரத்திலிருந்தே உருவாக்கத் தீர்மானித்தார். அவனுடைய துன்ப துக்கங்களில் பங்கு பெறவும், அவனை சந்தோஷப்படுத்தவும், உதவியாய் இருக்கவும், ஆலோசனை சொல்லவும், நல்ல பிள்ளைகளைப் பெற்று வளர்க்கவும், ஆதாமை நித்திரைக்குள்ளாக்கி அவனுடைய விலா எலும்பு ஒன்றை எடுத்து மனுஷியை சிருஷ்டித்தார். அவளை ஆதாமினிடத்தில் கொண்டு வந்த போது அவன் இவள் என் எலும்பில் எலும்பும், என் மாம்சத்தில் மாம்சமுமாய் இருக்கிறாள் என்று ஆதாம் சொன்னதாக அறிகிறோம். ஏவாள் ஆதாமின் மனைவியானாள். ஆதாம் தேவனுடைய கட்டளையை ஏவாளுக்குச் சொல்லியிருந்தான். ஏவாள் ஒரு நாள் ஆதாமை விட்டுத் தனியாக தூரமாக சுற்றப் போனபோது சர்ப்பத்தினால் வஞ்சிக்கப்பட்டாள். சாத்தான் சர்ப்பத்துக்குள் புகுந்து அவளை வஞ்சித்தான். ஆதாம் தன் மனைவிக்கு ஏவாள் என்று பெயரிட்டான். ஏவாள் என்பதற்கு ஜீவனுள்ளோருக்கெல்லாம் தாயார் என்று அர்த்தம். காயீன், ஆபேல், சேத் ஆகிய குமாரர்களை மாத்திரமல்ல, அநேக குமாரரையும், குமாரத்திகளையும் ஏவாள் பெற்றாள் (ஆதி 5:4) ஆதிமனிதர்களில், முதலாவது பாவத்துக்குட்பட்டவர்களில், ஏவாள் முதலிடம் பெறுகிறாள் என்று வேதத்தில் நாம் வாசிக்கிறோம்.

1) ஏவாள் சர்ப்பத்தோடு (சாத்தானோடு) சம்பாஷித்தாள் (ஆதி: 3 : 1 - 5).

2) தேவனுடைய வார்த்தைகளில சில வார்த்தைகளைக் கூட்டிச் சொன்னாள் (ஆதி.3:3).

3) தேவனால் விலக்கப்பட்ட விருட்சத்தை அதின் கனியை நோக்கிப்பார்த்து கண்களின் இச்சைக்கு இடங்கொடுத்தாள்.

4) மாம்ச இச்சைக்கு இடங் கொடுத்தாள் (ஆதி 3:6)

5) ஜீவனத்தின் பெருமைக்கு இடங் கொடுத்தாள். நன்மை தீமை அறிந்து தேவர்களைப் போல ஆகிவிடலாம் என்ற பெருமைக்கு இடங்கொடுத்தாள்.

6) தேவனுடைய கட்டளையை மீறி விருட்சத்தின் கனியை பறித்து புசித்தாள் (ஆதி 3:6)

7) தான புசித்தது மாத்திரமல்ல, தன புருஷனுக்கும் கொடுத்து அவனையும் கெடுத்தாள்.

ஏவாளைப் போலவே இந்த நாட்களிலும் அநேக ஸ்திரீகள் கண்ணுக்கு பகட்டான ஆடை ஆபரணங்களையும், பொட்டு பூவையும் அணிய வேண்டுமென்று விரும்புகிறார்கள். தாங்கள் இச்சித்தவைகளை அடைய வேண்டுமென்று துடிக்கிறார்கள். இவ்விதமாய் முதலாவது ஏவாள் வஞ்சிக்கப்பட்டபடியினால், அவள் புருஷனுக்கு அடங்கியிருக்க வேண்டுமென்றும், புருஷன்மேல் அதிகாரம் செலுத்தக்கூடாதென்றும், உபதேசம் பண்ணக்கூடாதென்றும், அவள் அமைதலாயிருக்கவேண்டுமென்றும், பரிசுத்தாவியானவர் கட்டளையிட்டிருக்கிறார் (I தீமோ.2 : 14, 11, 12; 1 கொரி, 14:34) ஆதாமுக்கு ஏற்ற துணையாய் இருக்கும்படி சிருஷ்டிக்கப்பட்ட ஏவாள், எலும்பில் எலும்பும் மாம்சத்தில் மாம்சமுமாய் உருவாக்கப்பட்ட ஏவாள், ஆதாமுக்கு எலும்புருக்கியாய் மாறினாள். தேவசாபம் மனுமக்கள் மேல் இறங்குகிறதற்கு ஏவாள் காரணமானாள், ஒரு கனியை அவள் இச்சித்து, ஏதேனிலுள்ள ஆயிரக்கணக்கான கனிவர்க்கங்களை இழந்தாள். ஆதாமும் ஏவாளும் ஏதேனை விட்டு வெளியே துரத்தப்பட்டார்கள். ஆதாம், ஏவாள் என்பவர்களின் சந்ததிகள் ஏதேனுக்கு வெளியே தான் பிறந்தன. ஏவாள் உயிரோடிருக்கும் போதே தன்னுடைய சந்ததியிலுண்டான அடிதடியையும் கொலையையும் கண்டபோது எவ்வளவோ வருத்தப்பட்டிருப்பாள். தேவனோடு சம்பாஷிக்கும், உறவாடும் சிலாக்கியத்தை ஏவாள் இழந்தாள். கிறிஸ்துவை விட்டுப்பின் மாறு கிறவர்களை அப்போஸ்தலனாகிய பவுல் குறிப்பிடும் பொழுது சர்ப்பமானது தனனுடைய தந்திரத்தினாலே ஏவாளை வஞ்சித்தது போல, உங்கள் மனதும் கிறிஸ்துவைப் பற்றிய உண்மையினின்று விலகும்படி கெடுக்கப்படுவோமென்று பயந்திருக்கிறேன் என்றார் (II கொரி.11:3) இந்த அளவுக்கு ஏவாள் தேவனைவிட்டுப் பின் மாறினாள். தேவன் கூப்பிட்டு விசாரிக்கும் பொழுதும், உண்மையை ஒப்புக் கொள்ளாமல், பாவத்தை ஒப்புக்கொள்ளாமல் சாக்குப்போக்குச் சொன்னாள். சர்ப்பம் என்னை வஞ்சித்தது என்று சாத்தானின் மேல் பழிபோடுகிறாள். குற்றத்தை ஒப்புக்கொள்ளவோ, மன்னிப்புக் கேட்கவோ அவள் பிரயாசப்படாமல், சாக்குப்போக்குச் சொல்லவும், தப்பித்துக் கொள்ளவும், பாவத்தை மறைத்து பிறர்மேல் பழிபோடவும் முயற்சிக்கிறாள். ஏவாள் வஞ்சிக்கப்பட்டாள். முதலாவது வஞ்சிக்கப்பட்டது ஸ்திரியே என்று நாம் பார்க்கிறோம். கள்ள ஊழியர்களின் தவறான உபதேசங்களை முதலாவது ஏற்றுக் கொள்வது ஸ்திரீகளே (II தீமோ. 3:6,7). தேவன்மேல் பக்தியுள்ள ஸ்திரீகள் அப்படியிராமல் நீதிமொழிகளின் புஸ்தகம் 31-ம் அதிகாரத்தில் லேமுவேலின் தாய் சொல்கிற குணசாலியான ஸ்திரீகளைப் போல இருந்து (நீதி. 31:10-31) தேவபக்தியுள்ளவர்கள் என்று சொல்லப் படுகிற பரிசுத்த ஸ்திரீகளைப்போல தங்களை அலங்கரித்து குணசாலியான ஸ்திரீகளாக, ஸ்திரீகளில் பாக்கியவதிகளாக விளங்குவீர்களாக (I தீமோ. 2: 9, 10; I பேது 3:1-6)

(தொடரும்)

---

"சுகபோகமாய் வாழ்கிறவள் உயிரோடே செத்தவள்"

(1 தீமோ.5:6)

---

# சாட்சி

என்னுடைய பெயர் திரவியம், தமிழ் நாட்டில் திருநெல்வேலி ஜில்லாவில் வள்ளியூர் அருகிலுள்ள தெற்கு கள்ளிகுளம் என் சொந்த ஊர். என் தந்தை ஏசுவடியான், தாய் அன்னம்மாள். என் பெற்றோர்கள் ரோமன் கத்தோலிக் மதத்தைச் சேர்ந்தவர்கள். என் தந்தை, நான் என் தாயின் வயிற்றில் கர்ப்பமாக இருக்கும் பொழுதே என் தாயை விட்டு விட்டு வேறொரு பெண்ணை விவாகம் பண்ணிக் கொண்டு என் தாயின் வயிற்றில் இருந்த என்னையும், என் தாயையும் விட்டு விட்டு எங்களுக்கு இல்லாத வராகப்போய்விட்டார். என்னைப் பெற்ற தாய்தான் என்னை வளர்த்து, படிக்க வைத்து எனக்கு வீடுகட்டி, விவாகமும் முடித்து வைத்தார்கள். எனக்கு ஒரு ஆண்குழந்தை பிறந்தது. என் குழந்தை பென்னிசனுக்கு ஐந்து வயதாகும் வரை என் தாய் தான் எனக்கும், என் மனைவிக்கும் என் குழந்தைக்கும் எல்லா கவனிப்பும் செய்துவந்தார்கள். என் குழந்தை பென்னிசனுக்கு ஐந்து வயதாகும் பொழுது என் தாய் மரணமடைந்து விட்டார்கள். இப்படிப்பட்ட ஒரு நல்ல தாயின் வயிற்றில் பிறந்த நான் என் தாய்க்கோ, என் மனைவி, பிள்ளைகளுக்கோ பணம் அனுப்பாதவனாக நன்றியில்லாதவனாக ஜீவித்தேன். லட்டரும் போடுவது கிடையாது. இந்த நிலையில் என்தாய் இறந்து போனார்கள். அந்த சம்பவத்தை நான் பார்க்கவில்லை. மிகவும் துன்மார்க்கமாக என் வாழ்க்கை ஓடிக் கொண்டிருந்தது. என்னையறிந்த ஊர், உற்றார், உறவினர் துணைவியின் குடும்பத்தில் உள்ள எல்லாரும் தகப்பனைப்போல் பிள்ளையும், மனைவி, குழந்தை என்று கவனிக்கமாட்டான் என்று என்னைத்திட்டினார்கள். என் மனைவியும் குழந்தையும், நான் அவர்களைக் காப்பாற்றுவேன் என்ற நம்பிக்கையை இழந்துவிட்டார்கள். நானும் எல்லாவற்றையும் இழந்து அலைக்கழிக்கப்பட்டேன். இதற்கு காரணம் விக்கிரக ஆராதனை, வேசித்தனம், சாராயக் குடி, சூது விளையாட்டு, திருட்டு, பிறரை ஏமாற்றுதல், பிற பெண்களை கட்டாயப் படுத்தி அவர்களையும் சாராயம் குடிக்க வைத்து துரோகம் செய்கிறது, கொள்ளைக் கூட்டம் சேர்த்துக் கொண்டு கொள்ளையடிப்பது, சாராய வியாபாரம், வணக்கம் சொல்கிறவனையும் கூப்பிட்டு அடிப்பது, மற்ற நண்பர்களுடைய சொல்வார்த்தையைக் கேட்டு பிறரை அடிப்பது, துன்புறுத்துவதும், பயமுறுத்துவதும், அவர்களிடம் இருக்கும் பணத்தைப் பறித்துக் கொள்வதும் இப்படியாக பெரிய துன்மார்க்கனாக ஜீவித்தேன். என்னைத் தெரிந்தவர்கள் என் முன்னால் வணக்கம் சொல்வார்கள், என் பின்னால் கடவுளே இவன் சீக்கிரம் சாக வேண்டும் என்பார்கள். இதுவும் எனக்கு இன்பமாகத்தானிருந்தது. தொடர்ந்து கொஞ்சம்கூட இரக்கமில்லாமல் பாவம் புண்ணியம் எதுவும் கிடையாது, கடவுளும் கிடையாது, நாம் செய்வது சரிதான் இப்படி நடந்தால் தான் இந்த உலகில் பிழைக்க முடியும் என்று திட்டமிட்டு துணிந்து பாவங்களை செய்து வந்தேன். காற்று திசைமாறி அடிக்க ஆரம்பித்தது. அடிக்கடி போலீசில் என்னைப்பற்றி பிராதுகள் மனுக்கள் கொடுக்கப்பட்டன. போலீஸ் இலாகா, குண்டர் பட்டியலில் என் பேரை பதிவு செய்து கொண்டு என்னைப் பலமுறை அடித்துவிட்டு விட்டார்கள், பலமுறை ஜெயிலில் அடைத்தார்கள். நான் அதற்கும் அடங்கவில்லை. இவ்வளவு பாவ அக்கிரமம் செய்து கொண்டிருந்த என்னை விட்டு நான் நடத்திக் கொண்டிருந்த சாராய வியாபாரம் கை மாறியது. என் நண்பர்கள் என்னை விட்டு விலகினார்கள். பணம் என் கைக்கு வர பயப்பட்டு என்னைவிட்டு விலகிக் கொண்டது. நான் சிந்திக்க ஆரம்பித்தேன். எனக்கென்று இந்த பெரிய உலகத்தில் ஒன்றுமே இல்லை. இனி மனைவி குழந்தைகள் என்று போகவும் முடியாது. யாரும் ஏற்றுக் கொள்ளவும் மாட்டார்கள். இனி இந்த உலகத்தில் எனக்கு ஒன்றுமில்லையென்று நினைக்க எனக்கு பைத்தியம் பிடித்துவிட்டது போல தோன்றிற்று. அதை மறக்க சாப்பிடாமல் குடித்துக் கொண்டே சாகவேண்டும். இனி

தம்மை இந்த உலகில் நினைக்க ஒரு உயிர் கூட இல்லை என்ற சிந்தனையால் அலைக்கழிக்கப்பட்டேன். இனி பம்பாயில் இருக்கக் கூடாது செத்தக்காரர் கண்களிலும் படக் கூடாது நாம் செத்தாலும் யாருக்கும் தெரியக்கூடாது என்று எண்ணி பம்பாயைவிட்டு வெளியே சுற்ற ஆரம்பித்தேன். குஜராத், ஹரியானா, டில்லி, உத்திரபிரதேசம், தமிழ்நாடு, ஆந்திரா இப்படியாக அலைந்து திரிந்தேன். நான் அடைந்த கஷ்டங்கள் கணக்கிலடங்காது. இப்படி அலைந்து கொண்டிருக்கையில் என் எண்ணங்கள் மாறின. இந்து மதத்திலுள்ளவர்கள் நல்ல செல்வாக்காகத் தானே இருக்கிறார்கள். நாம் இந்து தெய்வத்தை வழிபட்டால் நல்லவராகி விடலாம் என்று எண்ணி சாமி கும்பிட்டு சத்திரங்களில் சாப்பிட்டு அங்கேயே தூங்கி விழித்துப் பார்த்தேன். அந்தச் சிலைகளும் அப்படியே தான் இருந்தது. எனக்கு அதிக குழப்பமும் தொல்லைகளுமே பெருக ஆரம்பித்தது. ஒருவித பயம் ஆட்கொண்டது. என்னையறியாமல் உடல் நடுக்கம் உண்டாயிற்று பிசாசுகளினால் அலைக்கழிக்கப்பட்டேன். இந்த சைத்தான்களினால் ஒன்றும் செய்யமுடியாது என்று அவைகளை விட்டுவிட்டு நாம் இனி முஸ்லீம் அல்லாவைத்தான் வணங்க வேண்டும், என்றெண்ணி பள்ளி வாசலுக்குச் சென்று பூவும் பொட்டும், காணிக்கைகளும் செலுத்தி வந்தேன். அல்லாவும் எனக்கு குல்லா போட்டு விட்டார். இப்படியாக கண்ட சாத்தான்களை யெல்லாம் வழிபட்டுக் கொண்டு கண்ட இடங்களிலெல்லாம் பிச்சை எடுத்துக் கொண்டு கொஞ்ச உயிருடன் பம்பாய் வந்து சேர்ந்தேன். அந்த வருடம் டிசம்பர் 25, 1987 கிறிஸ்மஸ் பண்டிகை அன்று நன்றாக குடிக்கவும் இயேசு கிறிஸ்து அவர் கடவுள் இல்லையென்று திட்டவும் செய்தேன். என் இரக்கமுள்ள மெய்தேவன் இந்தக் கிறிஸ்மஸ் நாட்களிலே என்னைச் சந்திக்க ஆரம்பித்தார். கிறிஸ்மஸுக்கு பின் வந்த 27-ந் தேதி ஞாயிற்றுக்கிழமையன்று 'புதிய எருசலேம் சபை' விசுவாசியான என் உறவினரான தேவராஜ் என்பவர் பரிசுத்த ஆராதனைக்கு புதிய எருசலேம் சபைக்கு கட்டாயமாக என்னைக் கூட்டிக் கொண்டு சென்றார்கள். தலைமை சபை பரிசுத்த ஆராதனை ஸ்தலத்திற்குள் நான் நுழைந்ததும் எங்கேயோ வந்து சேர்ந்ததாக எனக்குத் தெரிந்தது. ஆராதனை முடிந்ததும் திருச்சபையின் மேய்ப்பர் அவர்கள் என் தலையில் கைவைத்து ஜெபித்தார்கள். அன்றே என்னை அலைக்கழித்த அசுத்த ஆவிகள் என்னைவிட்டு ஓடிவிட்டன. சாத்தான் முறியடிக்கப்பட்டான். என்னிலிருந்த அசுத்தங்கள் எல்லாம் என்னைவிட்டு அகன்றன. தொடர்ந்து திருச்சபைக்குச் சென்றேன். இயேசு கிறிஸ்து என்னை இரட்சித்தார். இப்பொழுது நான் புதிய எருசலேம் சபையின் விசுவாசி. புதிய எருசலேம் சபை மூலமாக, என்னைவிட்டு பிரிந்த என் மனைவி, குழந்தை என்னோடு சேர்க்கப்பட்டார்கள். உற்றார் உறவினர்கள் எல்லோரையும் கூட்டிச் சேர்த்து வரவழைத்த கர்த்தர் புதிய எருசலேமின் சாட்சியாக என்னை நிலைநிறுத்தியுள்ளார். நான் என் மனைவியும், குழந்தையும் கர்த்தருக்கு சாட்சியாக இருக்கிறோம். நான் இப்பொழுது மிகவும் மகிழ்ச்சியாக இருக்கிறேன். என் உறவினர்கள் எல்லாரும் என்னை குறித்து ஆச்சரியப் படுகிறார்கள். அடைக்கப்பட்ட வாசல்கள் எனக்கு இப்பொழுது திறக்கப்படுகின்றன. புதிய எருசலேம் சபையில் தேவன் வாசம் பண்ணுகிறார்! இதற்கு நான் சாட்சி

கிறிஸ்துவுக்குள்,
Bro திரவியம்
பம்பாய்

---

'பாவிகளை இரட்சிக்க கிறிஸ்து இயேசு உலகத்தில் வந்தார் என்கிற வார்த்தை எல்லா அங்கீகரிப்புக்கும் பாத்திரமானது. அவர்களில் பிரதான பாவி நான்.

(1 தீமோ. 1:15).

# இப்படியும் சில மதியீனர்கள்

ஒரு போலீஸ் அதிகாரி அதிகாலையில் எழுந்து போய் தன்னுடைய கடமைகளை முடித்துவிட்டு மத்தியான வெயிலில் மிகவும் களைப்போடே திரும்பி வந்து தன்னுடைய பாதணிகளை கழற்றிவிட்டு அதிக களைப்பினால் படுக்கை அறை சென்று அப்படியே படுக்கையில் சாய்ந்து விட்டார் தூக்கமும் அவரை ஆட்கொண்டது. திடீரென காலில் சுருக்கென்று வலித்தது. விழித்துப்பார்த்தார். காலில் ஒரு வண்டொன்று உட்கார்ந்திருப்பதைக் கண்டார். தூக்கம் கலைக்கப் பட்டதால் வண்டின் மீது அவர் கோபம் பற்றியெரிந்தது. உடனே உறையிலிருந்த கைத்துப்பாக்கியை எடுத்தார். தன் காலின் மீது இருக்கிற வண்டை குறிவைத்து சுட்டுத் தள்ளினார். ஐயோ என்ற அலறல் சத்தமும் தொடர்ந்து கேட்கவே மற்றவர்கள் ஓடிவந்து பார்க்கையில் அதிகாரியின் காலிலிருந்து இரத்தம் ஊற்று போல் வந்து கொண்டிருந்தது. உடனே மருத்துவமனை கொண்டு சென்றனர். இப்படி ஒருவன் செய்தால் அவனை நாம் மூடன் என்று சொல்வோமல்லவா! கோபம் நிர்மூடனைக் கொல்லும் (யோபு 5:2). தன் ஆவியை அடக்காதவன் மதிலிடிந்த பட்டணம் போலிருக்கிறான். இந்த முட்டாள் போலீஸ் அதிகாரியைப் போல் எவனாவது செய்வானா என்று கேட்டால், ஆம் நிச்சயமாகவே செய்கிறார்கள். தனக்குண்டான பாதிப்பை மாத்திரம் பார்க்கிற அறிவிலிகள் இப்படி செய்கிறார்கள். சின்னகாரியத்திற்காய் கர்ப்பஸ்திரியான மனைவியை எட்டி உதைத்து பெரும் பாதிப்புக்குள்ளான மதியீனர்கள் உண்டு. கோபத்தால் வீட்டாரை அடிக்க, அடிபடக்கூடாத இடத்தில் பட்டு பாதிக்கப்பட்ட புத்தியீனர்கள் இருக்கிறார்கள். கோபத்தால் தன் வீட்டிலுள்ள விலையேறப் பெற்ற பொருட்களைப்போட்டுடைத்து நஷ்டமடைந்த மந்த புத்தியுடையவர்கள் உண்டு. கடுங் கோபத்தால் தகாத வார்த்தைகளை பேசி, எழுதி நல்ல உறவை நட்பை இழந்துபோன அறிவிலிகள் அநேகர் உண்டே. இப்படிப்பட்டவர்களுக்கும் அந்த மூட போலீஸ் அதிகாரிக்கும் யாதொரு வித்தியாசமும் இல்லை. அவரும் கோபத்தால் தன்னைக் கெடுத்துக் கொண்டார். இவர்களும் கோபத்தால் தங்களுடையவர்களை, தங்களுக்குரியவைகளை கெடுத்து தங்களையே கஷ்ட நஷ்டத்திற்குட்படுத்துகிறார்கள்.

இளம் வாலிபன் ஒருவன், வேலை செய்து கூலியை வாங்கி வரும் வழியில் ஒரு அழகான கண்ணாடி கூஜாவை வாங்கி வந்து வீட்டின் மேலேயுள்ள பலகையில் வைத்து விட்டு சாப்பிட்டுக் கொண்டிருந்தான். திடீரென பளார் என சத்தம் கேட்டது. ஓடிப்போய் பார்த்தான், தான் வாங்கி வந்த கூஜா கீழே விழுந்து துண்டு துண்டாக சிதறிக் கிடந்ததைக் கண்டான். பதற்றத்துடன் மேலே பார்த்தான். ஒரு எலி ஓடுவதைக் கண்டான். கடுங்கோபம் கொண்டான். எலியை அடித்துக் கொல்லவேண்டும் என்று முடிவெடுத்தான். ஒரு தடியை எடுத்துக் கொண்டு விரட்டினான். அந்த எலி அங்கும் இங்கும் ஓடி அவனை அலைக்கழித்தது. இவனும் விடாது விரட்டினான். ஆனால் அந்த எலியோ வெளியேறி பக்கத்து வீட்டு ஓலைக் கூரைக்குள் புகுந்துவிட்டது. இவனுக்கோ பொறுக்க முடியவில்லை எலியை எப்படியாவது கொன்றே தீருவேன் என்று முடிவெடுத்திருந்த அவன் எதையும் யோசிக்காமல் ஒரு தீக்குச்சியைப் பற்ற வைத்து கூரையை கொளுத்தினான். கூரையை கொளுத்தி விட்டால் எலி செத்துப் போகும் என்பது இவனுடைய ஒரே எண்ணம். குடிசைக்குள்ளிருந்தவர்கள் ஐயோவென அலறிக் கொண்டு வெளியே ஓடினார்கள். தங்களை யாராவது குறைவு படுத்தி குற்றப்படுத்தி பேசினால் சிலருக்கு கட்டுக்கடங்கா கோபம் வரும். கோபத்தால் நிறைந்து, குற்றப்படுத்தினவரை சாடுவார்கள் தான் அந்தக் குற்றத்தை செய்யவில்லை என்று சாதிப்பார்கள். அத்துடன் நிற்கமாட்டார்கள் குற்றம் சாட்டினவர் மீது குற்றம் சுமத்துவார்கள். தான் நீதிமான் என்று நிரூபிக்க முற்பட்டு மற்றவரை குற்றம் சாட்டுவார்கள். தகாத வார்த்தைகளை உபயோகித்து மற்றவர்களை தர்மசங்கடத்திற்குள்ளாக்குவார்கள். இவர்களுடைய ஒரே நோக்கம் தன்னிடத்தில் குறை இல்லை என்று எப்படியும் நிரூபித்

துக் காட்ட வேண்டும் என்பதே. இப்படிப் பட்டவர்கள் ஒரு போதும் சீராய் இருப்பதில்லை. ஒரு விவேகியை ஒருவன் குற்றப்படுத்தினால், அவன் மறுப்பு தெரிவிப்பான். எதிராளி மீண்டும் குற்றப்படுத்தினால், விவேகி தீமையோடு எதிர்த்து நிற்க வேண்டாம் என்று ஆபத்தைக் கண்டு மறைந்து கொள்வான். காலம் அவன் நீதிமான் என்று நிரூபிக்கும். ஒரு குணசாலியான பெண்மீது களங்கமான ஒன்று கூறப்படுமானால், அவளுக்கு வேதனை உண்டாகும் வருத்தம் வருவது இயற்கையே. அதற்காக நான் உத்தமி, நான் உத்தமி என்று ஊரைக் கூட்டினால் அவள் எப்படி தான் உத்தமி என்று நிரூபிக்க முடியும். பலருக்கும் தெரியவரும் இன்னும் அசிங்கமாகும். அப்படியேவிட்டு விட்டால் காலப்போக்கில் இவளதுஉத்தமத்தைகாண்கிறவர்கள் இவள் மேல் சுமத்தப்பட்ட களங்கம் பொய்யென அறிந்து கொள்வார்கள்

இரண்டு பூனைகள் சேர்ந்து வட்டு ஒன்றை திருடி வந்தது. அதைப்பங்கிட்டு தரும்படி குரங்கு ஒன்றிடம் போனது. குரங்கு வட்டை இரண்டாகப் பிட்டு தராசின் தட்டுகளில் வைத்தது. ஒரு தட்டு கீழே போகவே அதிலுள்ள வட்டை பிட்டு கொஞ்சம் தின்று விட்டு மீண்டும் வைத்தது. இப்போது அடுத்ததட்டு கீழே போகவே, அதில் கொஞ்சம் பிட்டு தின்றது. இப்படியாக குரங்கே எல்லாவற்றையும் தின்று தீர்த்தது. குரங்கிடம்போன முட்டாள் பூனைகள் இரண்டும் வெறுமையாக வீடு திரும்பினது.

இடம்: மெரின் காலேஜ் ஹாஸ்டல்

ஜார்ஜ்: Brother இந்த Table மீது பத்துரூபாய் வைத்திருந்தேன் காணவில்லையே. யாராவது எடுத்தார்களா, உங்களுக்குத் தெரியுமா?

போஜு: (சற்று எரிச்சலுடன்) ஏன் பிரதர் உங்கள் பணத்துக்கு நான் என்ன காவலாளியா?

ஜார்ஜ்: (சற்று வியப்புடன்) Brother, காணவில்லையே உங்களுக்குத் தெரியுமா என்று தானே கேட்டேன்.

போஜு: (சற்று ஆத்திரத்துடன்)நான் திருடனுயிருந்து இரட்சிக்கப்பட்டதினாலல்லவா, என்னை சந்தேகித்து இப்படி கேட்கிறீர்கள்.

ஜார்ஜ்: (சற்று வெறுப்புடன்) என்ன பிரதர் முட்டாள் தனமாய்ப் பேசுகிறீர்கள்.

போஜு: (கோபத்தோடு) என்ன? என்னை திருடன் என்று பழி சுமத்தினீர்கள், இப்போது முட்டாள் என்று வேறு பட்டம் தட்டுகிறீர்கள். நான் இரட்சிக்கப்பட்டதினால் அடக்கிக் கொண்டிருக்கிறேன். இல்லாவிட்டால்என்ன செய்திருப்பேன் தெரியுமா?

ஜார்ஜ்: (சலிப்போடும் சற்று கோபத்துடனும்) ஆமாமா, கிழித்திருப்பாய்.

போஜு: (கடுங்கோபத்தோடு) டாய் மரியாதையாகப் பேசு, நான் யார் தெரியுமா?

ஜார்ஜ்: (கோபத்தோடு) உன்னையும் தெரியும், உங்கப்பனையும் தெரியும், சரிதான் போடா.

போஜு: (ஆவேசத்தோடு) ராஸ்கல் எங்கப் பாவை வேறு இழுக்கிறாயா? பல்லை உடைத்து விடுவேன்.

ஜார்ஜ்: (கடுங்கோபத்தோடு கிட்டே நெருங்கி) உடைடா, பார்க்கலாம்.

பயங்கர ஆவேசத்தோடு போஜு பக்கத்திலிருந்த குலரை எடுத்து ஜார்ஜின் மண்டையில் அடித்தான். ஜார்ஜ் கீழே விழுந்தான்.

சம்பவத்தை அறிந்த இரட்சிக்கப்படாத பணியாளர்கள் மத்தியில் ஒரே சிரிப்பும் பரியாசமும். அடே, விவாதம் எழும்புமுன் அதை விட்டுவிடு இல்லையேல் அது சண்டையைப் பிறப்பிக்கும் என்று பிரசங்கித்து பழகினார்கள். இப்போது அதை நிரூபித்துக் காட்டி விட்டார்களே. அவிசுவாசிகளெல்லாரும் சிரித்தார்கள். இப்படியே அந்த முட்டாள் பூனைகளைப் போல சாத்தானால் தூண்டப்பட்டு தேவனுடைய பிள்ளைகளாகிய மாமியும் மருமகளும், கணவனும் மனைவியும், சகோதரனும் சகோதரனும், ஊழியனும் ஊழியனும் வாக்குவாதம் பண்ணி கோபங்கொண்டு சண்டையிட்டு வீட்டுச் சத்தம் வெளியே கேட்கச் செய்து பல மாதங்களாக பல ஆண்டுகளாக காத்து வந்த சாட்சியை கெடுத்துப்போடுவது மதியீனமல்லவோ. "உங்கள் சாந்த குணம் எல்லா மனுஷருக்கும் தெரிந்திருப்பதாக. கர்த்தர் சமீபமாயிருக்கிறார் வைராக்கியமும் விரோதமும் எங்கே உண்டோ அங்கே கலகமும் சகலதுர்ச் செய்கைகளும் உண்டு" (யாக். 3:16).

---

"நீங்கள் கோபங் கொண்டாலும் பாவஞ் செய்யாதிருங்கள்" (எபே. 4:26)

---

# சிறுவர் பகுதி

ஞாயிறு பள்ளியின் ஆசிரியையிடம் எல்லா பிள்ளைகளும் இந்த வாரம் எங்களுக்கு ஏதேனும் பறவைகளைப் பற்றிய கதை சொல்ல வேண்டும் என கேட்டுக் கொண்டனர். ஆசிரியையும் அதற்கு சம்மதித்து அவர்களின் வேண்டுகோளை நிறைவேற்றி காகத்தைப் பற்றிய கதையைச் சொன்னார்கள்.

காகம் பறவையினங்களில் ஒன்று இதை நாம் எல்லா இடங்களிலும் காணலாம். மனித சஞ்சாரம் உள்ள இடங்களில் இது அதிகமாக காணப்படும். நமது முன்னோர்களில் நோவா என்பவர் செய்த பேழையில் இடம் பெற்றிருந்த பறவைகளில் காகமும் ஒன்றாகும். ஜலப்பிரளயம் ஏற்பட்டு பின்னர் தண்ணீர் வற்றிவிட்டதோ இல்லையோ என கவனிக்க நோவா தானே முதலாவது இந்த காகத்தை வெளியே விட்டார் என்று பார்க்கிறோம். இந்த காகம் தண்ணீர் வற்றுவது வரையிலும் போகிறதும் வருகிறதுமாக இருந்ததாம். இந்த காகம் தந்திரமுள்ளது. அது மாத்திரமில்லை அது விவேகமுமுள்ளது. கிராமத்தில் சிறு பிள்ளைகள் கடைகளிலிருந்து ஏதேனும் தின்பண்டங்களையோ அல்லது தேங்காய் துண்டு போன்றவற்றையோ வாங்கிக் கொண்டு வந்தால் அதை கைகளிலிருந்து பறித்துக் கொண்டு பறந்து விடும். (உடனே டேவிட் எழுந்து டீச்சர் ஒரு நாள் நான் முறுக்கு வைத்திருந்தேன் அதை பிடுங்கிக் கொண்டு பறந்து விட்டது என்றான்) இப்படிப்பட்ட காகம் ஒரு முறை ஒரு நல்ல காரியம் செய்தது.

கர்த்தருடைய தீர்க்கதரிசியாகிய எலியா என்பவர் ஒரு முறை கர்த்தரின் வார்த்தைப்படி கேரீத் ஆற்றண்டையில் தங்கி இருக்கும் பொழுது இந்த காகங்கள் அவருக்கு கொஞ்ச நாட்களாக தினமும் விடியற்காலத்தில் அப்பமும் இறைச்சியும், மாலையிலும் அப்பமும், இறைச்சியும் கொண்டு வந்து கொடுத்து அந்த தேவபக்தனை பலப்படுத்தி அப்பொழுது கிரேஸ்யது, ஒரு காகம் எப்படிக் கொண்டு வந்து கொடுக்க முடியுமென தனது சந்தேகத்தை தெரிவித்தாள். இல்லையம்மா காகங்கள் கொண்டு வந்து கொடுத்தது என்று நாம் வேதத்தில் வாசிக்கிறோம். எல்லோருக்கும் ஒரே ஆச்சரியம்! திருட்டுக் காகமும் உதவி செய்யுமோ என்று மிகுந்த ஆச்சரியப்பட்டனர் பிள்ளைகளே! கர்த்தரின் கட்டளையை தேவனின் எல்லா சிருஷ்டிகளும் நிறைவேற்றுகின்றன. கர்த்தர் காகத்திற்கு கட்டளையிட்டார். அது அப்படியே செய்தது (ஆனால் மனிதன் மாத்திரம் தேவனுடைய கட்டளைக்கு கீழ்ப்படிவது கிடையாது)

இந்தப் பிரகாரம் தேவனாகிய கர்த்தர் தமது மெய் பக்தர்களை பஞ்சத்திலும் கஷ்டத்திலும் கூட எப்படியாவது காப்பாற்றுகிறார். மிகவும் கஞ்சர்களும் எல்லாம் தானே அநுபவிக்க வேண்டும் என்று எண்ணுகிற மனிதர்களிடத்திலும் தேவன் இடைபட்டு அவர்களைக் கீழ்ப்படுத்தி தமது மெய்பக்தர்களை போஷிக்கின்றார்.

மட்டுமின்றி "காக்கா நோக்கறியும்" என்ற பழமொழியின்படி நாம் காகத்தை விரட்டுவதற்கு கையை ஓங்கினோம் என்றால் அது உடனே பறந்து போய்விடும். அது போல நாமும் ஆபத்து வருகின்றது என்று தெரிந்தவுடன் ஒதுங்கிக் கொள்வது நல்லது. அதைத்தான் ஞானி சொல்லுகிறார் விவேகி ஆபத்தைக்கண்டு மறைந்து கொள்ளுகிறான். பேதைகள் நெடுகப்போய் தண்டிக்கப்படுகிறார்கள் (நீதி 22:3). நமக்கும் இப்படிப்பட்ட சுபாவங்கள் இருந்தால் நல்லது (இன்னும் சில பறவைகளை பின்னால் பார்க்கலாம்)

பிள்ளைகளே, நாமும் தேவனுக்கு பிரியமாய் ஜீவித்தால் காகத்தின் மூலம் போஷித்த தேவன் நம்மையும் போஷிக்க வல்லவராக இருக்கின்றார்.

---

ஆகாயத்து பட்சிகளைக் கவனித்துப் பாருங்கள் அவைகளையும் உங்கள் பரமபிதா பிழைப்பூட்டுகிறார். (மத். 6:26)

---

'தேவன் ஒருவரே....'
THERE IS ONE GOD....'

Regd No. 040038/81
Postal Regd. No. MH BY NE - 94/83
Tamil Monthly Magazine

## ஞானஸ்நானம்

21-9-1955 அன்று கொமாரபாளையத்தில் நடந்த ஞானஸ்நானக் கூட்டத்தில் 9 பேர்கள் திருமுழுக்குப்பெற்று திருச்சபையின் அங்கமாக இணைக்கப்பட்டுள்ளார்கள் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

---

"புதிய எருசலேம் செய்தி" பத்திரிகை வரும் நவம்பர் 1985லிருந்து கிழக்காலும் முதலியிலிருந்து வெளியிடப்படும் என்பதை மகிழ்ச்சியுடன் வாசகர்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறோம்.

Chief Pastor N. LAZAR
"New Jerusalem Church."
Church Lane, Tilak Nagar
Durga Road, Bhandup,
Bombay-400 078,
India

---

## அறிவிப்புகள்

1. முழு இரவு விழிப்பு ஜெபம்
   21 (புதன்) நவம்பர் 1985
   23 (வெள்ளி) டிசம்பர் 1985
2. புதிய எருசலேம் செய்தி பத்திரிகை ஆண்டு சந்தா Rs. 10-00
   வெளிநாடு Rs.75-00

   அனுப்ப வேண்டிய முகவரி :

   Chief Pastor N. LAZAR
   "New Jerusalem Church"
   Church Lane, Tilak Nagar,
   Durga Road Bhandup,
   Bombay-400078. India.
3. மணி ஆர்டர் கூப்பனில் உங்கள் சந்தா (எண்) நம்பரை குறிப்பிடவும் பழைய சந்தாதாரா அல்லது புதிய சந்தாதாரா என்பதையும் குறிப்பிடவும்.
4. பணம் அனுப்புகிறவர்கள் சந்தாவா அல்லது நன்கொடையா என்பதை தெளிவாக குறிப்பிடவும்.



Edited, Printed and Published by
Chief Pastor N. LAZAR, New Jerusalem Church, Church Lane Tilak Nagar, Durga Road, Bhandup,
Bombay-400072 & Printed at :
Thamizhosai Atchagam, 34, Habibulla Road,
T. Nagar, Madras 600 017

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் - 60 ★ DECEMBER 1988



"புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ,
நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ,
எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள்
விழித்திருங்கள். உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லா
ருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்."

மாற்கு 13 : 35-37

EDITOR : CHIEF PASTOR N. LAZAR

BOMBAY. INDIA.

# ஆசிரியர் உரை

தேவனுடைய பிள்ளைகளே, ஒரு ஆண்டின் இறுதி மாதத்திற்குள் கடந்து வந்திருக்கிறோம். காலங்கள் தோன்றுகின்றன, மறைகின்றன; காலம் பொன்னானது. கடந்த நாள் திரும்ப வருவதில்லை. நாளை என்று எந்த ஒரு காரியத்தையும் நாம் விட்டு விடக்கூடாது. இன்று நிறைவேற்றுவதை இன்றே நிறைவேற்றி முடிக்க வேண்டும். இந்த ஆண்டின் இறுதியை நாம் நெருங்கிக் கொண்டிருக்கிறோம். ஒரு புதிய ஆண்டு பிறக்கப் போகிறது. அது நமக்கு புத்துணர்வைக் கொடுக்கட்டும். இந்த ஆண்டு நிறைவேற்றப்படாமல் விட்டுவிட்டக் காரியத்தையும், நாம் சீர்ப்படாமல் இருக்கிற காரியத்தையும், நாம் சரி செய்யாமல் விட்டு விட்டக் காரியத்தையும், வேகமாய் சரி செய்வோமாக, நிறைவேற்றுவோமாக! நம்மை இன்னும் பரிசுத்தப்படுத்துவோமாக! தேவனுக்கு பிரயோஜனமுள்ள பாத்திரமாக இன்னும் அதிகமாய் நாம் காணப்படுவோமாக! தேவனை! தேவனுடைய சித்தத்தை அறிகிற அறிவிலே இன்னும் முதிர்ச்சியடைவோம். தீமையை வெறுத்து நன்மையை பற்றிக்கொண்டு தேவனுக்குப் பிரியமாகவே செய்வோமாக, எல்லாரும் அப்படித்தான், நாமும் அப்படித்தான், நீயும் அப்படித்தான் என்று சொல்லிக் கொண்டிராமல் அறிந்த சத்தியத்தில் பரிசுத்தத்தில் சரியாய் இருக்கிறேன் என்று சொல்ல ஒவ்வொருவரும் ஆயத்தமாயிருப்போம். தேவன் அதிகமான கிருபை அருள்கிறாரே. அவருடைய வருகை நெருங்குகிறது. அவருடைய வருகையின் காலத்தில் இதோ ஒரு வருஷம் குறைக்கப்பட்டுவிட்டது. ஆமோ, நாம் செய்ய வேண்டிய கடமை எவ்வளவு என்று ஓடி அறிவிப்போம். அக்கினியிலிருந்து ஒரு சிலரையாவது பறித்து இரட்சிப்போம். தேவனுக்காக எதையாவது தியாகம் செய்வோம். நம்முடைய வாழ்க்கை பிறருக்கு பிரயோஜனமாக, ஆசீர்வாதமாக, முன்மாதிரியாக, நல்ல முன்மாதிரியாக இருக்க இந்த புத்தாண்டில் புதிய தீர்மானம் எடுப்போமாக! கர்த்தர் நம்மை பெலப்படுத்தி ஆசீர்வதிப்பாராக! புத்தாண்டு உங்களுக்கு ஆசீர்வாதமாக இருக்கட்டும்!

இயேசுவின் நாமத்தில்,

கிறிஸ்துவுக்குள்,

(Chief Pastor N. LAZAR)

## பரிசுத்த விவாகம்

| மணமகன் | மணமகள் | இடம் | காலம் |
|---|---|---|---|
| மைக்கேல் அந்தோணி | கிங்ஸிஜாய் | ஆலக்கோட்டை | 27-10-1088 |

# பிறந்தார்! பிறந்தார்! வானவர் புவி மானிடராய்ப் பிறந்தார்

உலகில் எத்தனையோ குழந்தைகள் பிறக்கின்றன, இறக்கின்றன. சில முதிராப் பிண்டமாக விழுந்து போகின்றன. சில அழிக்கப்படுகின்றன. உலகத்தில் பிறந்ததெல்லாம் குழந்தைகள். இதுவும் குழந்தைதானே? என்ன அதிசயம்! இந்த குழந்தையின் பிறப்பைப்பற்றி ஆயிரக்கணக்கான வருஷங்களுக்கு முன்னிருந்தே வேதம் அறிவித்து வந்தது. அவர் ஒரு கன்னிகையில் பிறப்பார் என்றும் (ஏசா. 7:14) யூதேயாவிலுள்ள எப்பிராத்தா என்னப்பட்ட பெத்லகேமில் பிறப்பார் என்றும் (மீகா 5:2), அவர் ஆபிரகாமின் சந்ததியென்றும் (ஆதி 12:7), தாவீதின் குமாரனென்றும் (II சாமு. 7:12) கிழக்கில் தோன்றும் நட்சத்திரம் என்றும் (எண். 24:17) அவர் இவ்விதமாக ஜீவிப்பார் என்றும் (ஏசா. 52: 13,14, ஏசா 7:15), அவரே மேசியா (இரட்சகர்) என்றும் (ஏசா. 9:6, மீகா 5:2), ஜனங்களின் பாவங்களுக்காக சங்கரிக்கப்படுவார், துன்பப்பட்டு மரிப்பார் என்றும் (தானி. 9:24-26; ஏசா 53 அதி), அவர் மரித்து, அடக்கம் பண்ணப்பட்டு மூன்றும் நாள் உயிரோடெழும்புவார் என்றும் (ஏசா. 25:8, ஓசி. 6:2) அவரை விசுவாசிக்கிறவர்கள் மீட்கப்படுவார்கள். இரட்சிக்கப்படுவார்கள், அவர்களுடைய வாழ்க்கை பதறாது என்றும் (ஏசா. 28:16). அவர் உன்னதத்திற்கு எழுந்தருளிப்போய் மனிதனின் மேல் வரங்களைப் பொழிவார் என்றும் (சங் 68: 18), இன்னும் பல முறைகளாய் முன்னறிவிக்கப்பட்டிருந்தது. தேவனுடைய பக்தர்கள் அந்தக் காலத்தையும் கணித்து முன்னறிவித்தார்கள். ஆனபடியினால் இஸ்ரவேலின் ஸ்திரீகளில் அநேகர், வாக்குத்தத்தம் பண்ணப்பட்ட மேசியா, தெய்வீகக் குழந்தை கன்னிகை வயிற்றில் பிறப்பார் என்று குறிப்பிட்டிருந்தபடியால் மகா பரிசுத்தமாக, கன்னிகைகளாக, புருஷனால் தீட்டுப் படாதவர்களாக எதிர்பார்த்து வாழ்ந்து கொண்டிருந்தார்கள். உலகமெல்லாம் அக்கிரமத்திலும் அநியாயத்திலும், தீட்டிலும், மூழ்கியிருக்கிறது. ஆனால் இஸ்ரவேலின் ஸ்திரீகள் பரிசுத்தத்திலும், ஜெபதபங்களிலும், வாக்குத் தத்தங்களை எதிர்பார்த்தும் ஜீவிக்கிறார்கள். அது தேவபக்தியுள்ள சந்ததி. இன்னும் உலக கணக்கெடுப்பில் விபச்சாரம், வேசித்தனம் இல்லாத நாடு இஸ்ரவேல் என்று கணிக்கப்பட்டிருக்கிறது. மற்ற நாடுகளுடைய நிலைமை எவ்வளவு அசுத்தமானதாக இருக்கிறதென்பதை நாம் அறிவோம்.

தேவன் ஆபிரகாமோடே செய்த உடன்படிக்கையை, வாக்குத் தத்தத்தை நிறைவேற்ற ஆபிரகாமின் சந்ததியில் ஒரு பங்கை தேவபக்தியுள்ள சந்ததியாக காத்து வந்தார் (ஆதி 18:17-19). குறித்த காலம் வந்தது. தேவதூதர்களின் தலைவர்களில் ஒருவனாகிய காபிரியேல் தாவீது வம்சத்தாளாகிய மரியாள் என்னும் விசேஷித்த கன்னிகைக்கு தரிசனமாகி கிருபை பெற்றவளே, வாழ்க, கர்த்தர் உன்னுடனே இருக்கிறார். ஸ்திரீகளுக்குள்ளே நீ ஆசீர்வதிக்கப்பட்டவள் என்றும் மேசியாவாகிய இயேசு உன் வயிற்றில் குழந்தையாகத் தோன்றி பிறக்கப் போகிறாரென்றும் முன்னறிவித்தான். மரியாள் மனப்பூர்வமாய் அதை ஏற்றுக் கொண்டாள். இயேசுவானவர் மரியாளுடைய கர்ப்பத்தில் உற்பவித்து ஒரு மனிதக் குழந்தையாக, தெய்வீகக் குழந்தையாக, மனிதனை மீட்க தேவன் மனிதனாய்ப் புவியில் பிறந்தார். ஏழையாய், மாட்டுத் தொழுவத்தில் பிறந்தார். மரியாளைத் தனக்கு மனைவியாக ஏற்றுக் கொண்டிருந்த யோசேப்புக்கும் தேவதூதனால் மேற்படி செய்தி வெளிப்படுத்தப்பட்டிருந்த படியினால் அவரும் அந்த தெய்வீக குழந்தையை வளர்க்கும் தந்தையானார். தேவன் புவியில் ஒரு ஸ்திரீயினிடத்திலிருந்து மனிதனாய் வெளிப்பட்டார். இது எப்படியாகும் என்று சிலர் சந்தேகப்படலாம். தேவனாலே கூடாத காரியம் ஒன்றுமில்லை. மண்ணிலிருந்து ஒரு மனிதனை உண்டு பண்ணினவர் (ஆதாம்) ஒரு ஆணிலிருந்து பெண்ணை உருவாக்கினவர் (ஆதாமிலிருந்து ஏவாள் உருவாக்கப்பட்டது) ஒரு பெண்ணிலிருந்து ஒரு ஆணை

உருவாக்க வல்லவராயிருக்கிறார் (மரியாளில் இயேசுவானவர் உற்பவித்தது). இவர் பிறந்த பொழுது வானதூதர் தோன்றி ஸ்துதி பாடினார்கள். தேவ தூதர்களால் செய்தி அறிந்த வயல்வெளியின் மேய்ப்பர்கள் சத்திரத்திற்குள் போய் முன்னணையிலே கிடத்தப்பட்டிருந்த குழந்தையைக் கண்டார்கள். கண்டு, தேவனைத் துதித்தார்கள். தாங்கள் கேட்டு கண்ட எல்லாவற்றையும் பிறருக்கு பிரசித்தப்படுத்தினார்கள். குழந்தை பிறந்த பொழுது நட்சத்திரம் ஒன்று வானத்திலே புதிதாய்த் தோன்றிற்று. வான சாஸ்திரிகள் அதைக் கண்டு யூதருக்கு ராஜாவாகிய மேசியா பிறந்திருக்கிறார் என்று கணித்து எருசலேமை நோக்கி பிரயாணப்பட்டு நட்சத்திரத்தினால் வழி நடத்தப்பட்டு 1½,2 வயதாயிருந்த குழந்தையை அது தங்கியிருந்த வீட்டிற்குள் பிரவேசித்து பிள்ளையையும் அதன் தாயாகிய மரியாளையும் கண்டு சாஷ்டாங்கமாய் விழுந்து, அதை பணிந்து கொண்டு (மரியாளையல்ல 'அதைப்' பணிந்து கொண்டு, குழந்தையைப் பணிந்து கொண்டு) அதற்கு பொன்னையும் தூபவர்க்கத்தையும், வெள்ளைப் போளத்தையும் காணிக்கையாக படைத்தார்கள். இந்தப் பிள்ளை அரசனாயிருக்கிறதென்பதற்கு அடையாளம் பொன்; இந்தப்பிள்ளை மகா பரிசுத்த ஆசாரியனாயிருக்கிறாரென்பதற்கு அடையாளம் தூபவர்க்கம்; இந்தப் பிள்ளை மகா பெரிய தீர்க்கதரிசியாய், ஞான குருவாய் இருக்கிறாரென்பதற்கு அடையாளம் வெள்ளைப்போளம். இது இயேசுவானவரின் மூன்று முக்கிய பதவிகளாகும். அவர் இந்த உலகத்தில் ஜீவித்த நாட்களில் பாவமற்ற பரிசுத்தராய் விளங்கினார். அவருடைய உற்றாரும் பெற்றாரும், பகைவர்களும், எதிரிகளும், சீஷர்களும், நெருங்கிப் பழகினவர்களும், நியாயாதிபதிகளும், அதிபதிகளும் அவர் குற்றமற்ற பரிசுத்தர், வாக்கிலும் செய்கையிலும் மகா பரிசுத்தர் என்று சாட்சியிட்டார்கள். அவர் வானவர் தான்! அவர் தேவனே! அவர் மனிதனுடைய வித்து (சந்ததி) அல்ல. உன்னிடத்தில் பிறக்கும் பரிசுத்தமுள்ளது தேவனுடைய குமாரன் எனப்படும் என்று மரியாளுக்கு முன்னறிவிக்கப்பட்டபடி இவர் தேவனே. அவருடைய பரிசுத்த வாழ்க்கை அனைத்திருபிக்கிறது. மற்றபடி இவரைத் தவிர மற்றெல்லாக் குழந்தைகளும் பாவிகளான மனிதர்களே. அநேகர் தங்களை தெய்வங்கள் என்று சொல்லிக் கொண்டாலும் அசுத்த மாயைக்குக் கட்டுப்பட்டவர்களாய், சனியனால் பிடிக்கப்பட்டவர்களாய், கடைசியில் பாவத்தின் பலனாகிய மரணத்தினால் ஆட்கொள்ளப்பட்டு மரித்து இல்லாமல் போனவர்களே. அவர்களுடைய சரீரம் அழிந்து விட்டது. அவர்களுடைய ஆத்துமம் (ஆவி) நரகத்திற்காய் எதிர் நோக்கித் தவித்துக் கொண்டிருக்கிறது

உலகத்தில் எத்தனையோ குழந்தைகள் பிறந்தார்கள், பிறக்கிறார்கள், பிறக்கப் போகிறார்கள். பிறந்தவர்களெல்லாரும் இறந்தார்கள். இவரோ மரித்தோரிலிருந்து உயிர்த்தெழுந்ததினால் இறைவன் என்று நிரூபிக்கப்பட்டிருக்கிறார். அவர் உயிரோடிருக்கிறார். மற்றவர்களெல்லாரும் மரித்துப் போனார்கள். இனி அவர்களைப் பார்க்க முடியாது. அவர்களோடு பேசமுடியாது ஆனபடியினால் அவர்களுக்கு சிலை வைத்து, படம் வைத்து கும்பிடுகிறார்கள். பின் சந்ததியாருக்கு அவர்கள் இப்படியிருந்தார்கள் என்று உயிரற்ற சிலையை, படத்தைக் காட்டுகிறார்கள். இவரோ உயிருள்ள ஆண்டவராயிருக்கிறபடியால் இவருக்கு சிலை வைக்கப்படுவதுமில்லை. இயேசுவானவர் இப்படியிருந்தார், இனி பார்க்க முடியாதபடியினால் இதோ பார்த்துக்கொள்ளுங்கள் என்று காட்டுவதுமில்லை.

வானவர் ஒருமுறை மானிடனாய்ப் பிறந்தார். நமக்காக கல்வாரி சிலுவையில் மரித்து, அடக்கம் பண்ணப்பட்டு மூன்றாம் நாளில் உயிர்த்தெழுந்தார். தம்முடைய பக்தர்களுக்கு தரிசனமாகி தம்மை வெளிப்படுத்தி காண்பித்து 40 நாட்களுக்குப் பின்பு அவர்கள் மத்தியிலிருந்து அவர்களை ஆசீர்வதித்துவிட்டு அவர்கள் கண்காண பரலோகத்துக்கு எழுந்தருளினார். மறுபடியும் வரப்போகிறார். பெலவீனமான, மாம்சமான மனிதனாய் அல்ல, மகிமையடைந்தவராய் தம்முடைய தெய்வீகத் தன்மையோடு உலகத்தை நியாயத்தீர்க்க வரப்போகிறார். அதற்கு முன்பே தெய்வீக குழந்தையாய் உலகத்தில் தோன்றிய இறைவனாகிய

இயேசுவை நீ விசுவாசித்து, உன்னுடைய உள்ளத்தில் உனக்கு ஆண்டவராகவும் தெய்வமாகவும் ஏற்றுக் கொள் அவர் இந்த பூமியிலே மனிதனாய்த் தோன்றிய நோக்கம் உன்னிலும் நிறைவேறும்.

தேவன் மானிடனாய்ப் பிறந்தார்! நாமெல்லாரும் அந்த தெய்வீகக் குழந்தையைப் போற்றுவோமாக! போற்றி! போற்றி! போற்றி!!!

"...கர்த்தராகிய இயேசுகிறிஸ்து வானவர், மாம்சத்தின்படி தாவீதின் சந்ததியில் பிறந்தவரும், பரிசுத்தமுள்ள ஆவியின்படி மரித்தோரிலிருந்து உயிர்த்தெழுந்ததினால் பலமாய் ருபிக்கப்பட்டவருமாயிருக்கிறார். (ரோ. 1:4,5)

# அடைக்கலப் பட்டணம்

(தொடர்ச்சி)

## 2. சீகேம்=தோள்

இரண்டாவது அடைக்கலப் பட்டணம் எப்பிராயீம் மலைத் தேசத்திலுள்ள சீகேம் ஆகும். இந்தப் பட்டணம் சீகேமுக்கு வடக்கே 31 மைல்கள் தூரத்தில் ஏபால், கெரிசீம் என்னும் மலைகளுக்கிடையில் உள்ளது. ஆபிராம் சீகேமுக்குச் சமீபமான மோரே என்னும் சமபூமியில் தங்கியிருந்த போது கர்த்தர் அவனுக்குத் தரிசனமானார். அங்கே ஒரு பலிபீடத்தை கட்டினார் (ஆதி. 12 : 6,7). யாக்கோபு சீகேமுக்கு அருகிலுள்ள சாலேம் என்ற இடத்தில் கூடாரம் போட்டு அதை விலைக்கு வாங்கி பலிபீடம் கட்டி ஏல் எல்லோகே இஸ்ரவேல் என்று பெயரிட்டார். (ஆதி. 33:18-20) பின்பு யாக்கோபு வீட்டாரனைவரோடுங் கூட தேவனைத் தொழுது கொள்ளும்படி தன் வீட்டாரை சுத்திகரித்து அவர்களுடைய ஆபரணங்களையெல்லாம் சுமந்து சீகேமுக்கு அருகே ஒரு கருவாலி மரத்தின் கீழ் புதைத்துப் போட்டு சீகேமில் ஒரு பலிபீடத்தைக் கட்டி தேவனைத் தொழுது கொண்டார். அந்தபலிபீடத்திற்கு ஏல் பெத்தேல் என்று பெயரிட்டார். ஏற்கெனவே அந்த இடத்திற்கு பெத்தேல் என்று பெயர், இஸ்ரவேலர் பாலஸ்தீனவை கைப்பற்றின பின்பு இந்த பட்டணம் எப்பிராயீமுக்குக் கொடுக்கப்பட்டது (1 நாளா. 7 : 28) இது அடைக்கலப் பட்டணங்களில் ஒன்றாக அழைக்கப்பட்டது. (யோசு 20 : 7; 21 : 21)

யோசுவா இஸ்ரவேலரை சீகேமிலே கூடிவரச் செய்து தம்முடைய கடைசி பிரசங்கத்தை செய்தார் (யோசு 24 : 1). சீகேம் என்றால் தோள் என்றர்த்தம் தேவ ஜனங்கள் தோளோடு தோள் சேர்ந்து தேவாலயத்திற்குப் போய் தேவனைத் தொழுது கொள்ள வேண்டும். கிறிஸ்தவத்தினுடைய ஒழுங்கு தேவாலயத்திற்குப் போய் அல்லது சபையாய்க் கூடி குறித்த வேளையில் சேர்ந்து தேவனைத் தொழுது கொள்ள வேண்டும். சேர்ந்து தேவனைப்பாடி, ஆராதனை செய்து அவருக்கு தொழுகை செலுத்தவேண்டும். "கர்த்தருடைய ஆலயத்துக்கு போவோம் வாருங்கள் என்று எனக்கு அவர்கள் சொன்ன போது மகிழ்ச்சியாயிருந்தேன். 'எருசலேமே உன் வாசல்களில் எங்கள். கால்கள் நிற்கலாயிற்று' (சங். 122 : 1, 2) "நான் கர்த்தருக்கு செய்த பொருத்தனைகளை அவருடைய ஜனங்களெல்லாருக்கும் முன்பாகவும், கர்த்தருடைய ஆலயத்தின் பிரகாரங்களிலும் எருசலேமே உன் நடுவிலும் நிறைவேற்றுவேன், அல்லேலூயா!" "கர்த்தர் எனக்குச் செய்த எல்லா உபகாரங்களுக்காகவும் அவருக்கு என்னத்தைச் செலுத்துவேன். இரட்சிப்பின் பாத்திரத்தை எடுத்துக் கொண்டு கர்த்தருடைய நாமத்தைத் தொழுது கொள்ளுவேன்." நான் கர்த்தருக்குச் செய்த பொருத்தனைகளை அவருடைய ஜனங்களெல்லாருக்கும் முன்பாகவும் செலுத்துவேன். (சங். 116 : 18, 19, 12, 13, 14). என்றும் "சபை கூடி வருகிறதை சிலர் விட்டு விடுகிறது போல நாமும் விட்டு விடாமல்..." (எபி. 10 : 25). இருக்கவேண்டுமென்றும், அன்றியும் பாலியத்துக்குரிய இச்சைகளுக்கு நீ விலகிஓடி சுத்த இருதயத்

தோடே கர்த்தரைத் தொழுது கொள்ளுகிறவர்களுடனே நீதியையும், விசுவாசத்தையும் அன்பையும் சமாதானத்தையும் அடையும்படி நாடு (II தீமோ. 2 : 22), என்றெல்லாம் வேதத்தில் வாசிக்கிறோம்.

மனிதன் தேவனை நான்கு விதமாக தொழுது கொள்ளவேண்டும்.

1) தனி ஜெபம்

2) குடும்ப ஜெபம்

3) இரண்டோ மூன்றோ பேர்கள் கூடும் போது ஜெபித்தல், கூடி ஜெபித்தல்.

4) விசேஷமாக தேவனுடைய சமூகம் சென்று சபையாய்க் கூடி தேவனை ஆராதித்தல், தெய்வீக காரியத்தில் ஈடுபடுதல்.

இவ்விதமான விதங்களில் தேவனை தொழுது கொள்ள கிறிஸ்தவன் கடமை பட்டுள்ளான். அநேக கிறிஸ்தவர்களுக்கு சபை வேண்டாம், ஐக்கியம் வேண்டாம், தொழுகை வேண்டாம், எந்த சபையும் சரியில்லை, யாரும் சரியில்லை, நான் மாத்திரம் பரிசுத்தம், ஆகையால் எங்கும் போய் தொழுது கொள்ளத் தேவையில்லை என்று சொல்லி தேவனுக்குச் செலுத்த வேண்டிய கூட்டுத் தொழுகையை ஆராதனையைச் செலுத்த ஐக்கியத்தைக் காத்துக் கொள்ள மறுக்கிறார்கள். இவர்களுடைய எண்ணம் எல்லாரும் சரியில்லை நாம் மட்டும் சரி; ஒருவரையும் பிடிக்கவில்லை என்பதே. உண்மையான விஷயம் என்னவென்றால் இவர்களை ஒருவருக்கும் பிடிக்காது. அவ்வளவு அருவருப்பும் கீழ்ப்படியாதவருமாகும். தோளோடு தோள் சேர்ந்து தேவனை ஆராதிக்கிற அடைக்கலத்தை, ஐக்கியத்தை இவர்கள் விட்டு விடுகிறார்கள். பின்பு சாத்தானால் தாக்கப்பட்டு தங்களுடைய ஆவிக்குரிய ஜீவியத்தையே இழந்து விடுகிறார்கள். ஒரு சபையும் சரியில்லை எல்லாம் மோசம் என்பார்கள். இதோ சபை என்று காண்பித்தால் ஏ அப்பா! ரொம்ப கண்டிப்பு, அந்தப்படி யார் நடக்க முடியுமென்பார்கள். நீங்களோ தேவனுடைய ஜனங்களே, தோளோடு தோள் சேர்ந்து தேவனை ஆராதிக்கிற சீகேமுக்குள் அடைக்கலமாக புகுந்து உங்களை பாதுகாத்துக் கொள்ளுங்கள். அடைக்கலப் பட்டணத்திற்குள் இருக்கும் மட்டும் உங்களுக்கு ஆபத்தில்லை. ஐக்கியத்தில் இருக்கும்வரை உங்களுக்கு பயமில்லை. திருச்சபையில் இருக்கும்வரை உங்களுக்கு நம்பிக்கையுண்டு. விழுந்தாலும் தூக்கிவிட பரிசுத்தவான்கள் உண்டு. கேதேசுக்குப் போய் ஆலயத்துக்குப் போய், சீகேமிலே பரிசுத்தவான்களோடு சேர்ந்து தோளோடு தோள் சேர்ந்து தேவனை ஆராதியுங்கள். வீட்டில் இருந்து கடவுளை கும்பிட்டால் போதாதா? தனியாயிருந்து கடவுளை கும்பிட்டால் போதாதா? என்று சொல்லிக் கொண்டு இராதீர்கள். சபை கூடி வரும் போதெல்லாம் நீங்களும் கூடி வாருங்கள். அப்பொழுது உங்களுக்கு நேரிடும் காரியங்களை அறிவிப்பேன் என்று தேவன் சொல்கிறார் (ஆதி. 49 : 1).

(தொடரும்)

---

"எல்லாவற்றையும் முறுமுறுப்பில்லாமலும், தர்க்கிப்பில்லாமலும் செய்யுங்கள்"
(பிலி. 2 : 16)

---

# கால்களைக் கழுவுதல்

கிறிஸ்துவுக்குள் பிரியமானவர்களே, இந்நாட்களில் ஆவிக்குரியவர்கள் என்று தங்களை பெருமையாய்ப் பேசிக் கொண்டே அநேக சபைகள் கர்த்தருடைய உபதேசங்களை விட்டுவிட்டு 'மனுஷருடைய கற்பனைகளை உபதேசங்களாய்ப் போதித்து வீணாய் எனக்கு ஆராதனை செய்கிறார்கள் என்று ஏசாயா தீர்க்கதரிசி நன்றாய் சொல்லியிருக்கிறான்" என்று மத். 15 : 9ல் இயேசுகிறிஸ்து சொன்னது போல் வீணான ஆராதனை செய்கிறவர்களாக மாறிவிட்டார்கள். இவர்களில் அநேகர், நாங்கள் கர்த்தருக்காக எல்லாவற்றையும் விட்டு விட்டோம் என்பார்கள். ஆம், உண்மையில் இவர்கள் கர்த்தராகிய

இயேசு கிறிஸ்துவின் உபதேசங்கள் எல்லாவற்றையும் விட்டு விட்டார்கள். இவர்கள் இனி விடவேண்டியது ஒன்று மட்டும் பாக்கியுண்டு. அது அவர்களுடைய ஜீவனே. "தன் ஜீவனையும் வெறுக்காவிட்டால் எனக்கு சீஷனாய் இருக்கமாட்டான் (லூக். 14 : 26).

பிரியமானவர்களே, மனுஷனுடைய கற்பனைகளை, எழுத்துக்களை, பிரசங்கங்களை உபதேசங்களாக ஏற்றுக் கொண்டவர்கள், தேவனுடைய தெய்வீக திட்டங்களை அறிந்து கொள்ளமாட்டார்கள்.

வேதவாக்கியம் சொல்வதைக் கவனியுங்கள். "பின்பு பாத்திரத்தில் தண்ணீர் வார்த்து, சீஷருடைய கால்களைக் கழுவவும், தாம் கட்டிக் கொண்டிருந்த சீலையினால் துடைக்கவும் தொடங்கினார். (யோ. 13 : 5).

ஒரு நாள் ஒரு ஆவிக்குரிய சபையைச் சேர்ந்த ஊழியர் ஒருவர் வந்தார். பாஸ்டர் நீங்கள் ஒரு நாள் எங்கள் சபையை வந்து பார்க்கவேண்டும். புதிய எருசலேம் சபையில் இல்லாத அநேக விசேஷங்கள் அங்கே உண்டு என்றார். வேத வசன ஆதாரத்தின்படி ஒரு விசேஷத்தைச் சொல்லுங்களேன் என்றேன். அதாவது, யோவான் 13 : 15ல் சொல்லியபடி "சீஷருடைய கால்களைக் கழுவி தாம் கட்டியிருந்த சீலையினால் துடைக்கவும் தொடங்கினார்" என்று எழுதியிருக்கிறதல்லவா அதுபோல் எங்கள் சபையில் பெரிய பணக்காரர்களும் தாங்கள் கட்டியிருக்கிற சீலையினால் தான் பிறருடைய கால்களைத் துடைப்பார்கள். அது எவ்வளவு பெரிய தாழ்மை பார்த்தீர்களா? என்று சொன்னார்.

ஐயா, நீங்கள் வேத வாக்கியங்களை சரியாக வாசிக்கவில்லையா? யோவான் 13 : 4, 5 ஐ வாசித்துப் பாருங்கள் என்றேன். வேதப் புத்தகத்தை திறந்து அவர் வாசித்தார் போஜனத்தை விட்டெழுந்து வஸ்திரங்களைக் கழற்றி வைத்து, ஒரு சீலையை எடுத்து அரையில் கட்டிக் கொண்டு பின்பு பாத்திரத்தில் தண்ணீர் வார்த்து என்று எழுதியிருப்பதை வாசித்துவிட்டு ஆமாம், பாஸ்டர் தன்னுடைய மேலங்கியைக் கழற்றி வைத்து விட்டு துடைப்பதற்காகவே ஒரு சீலையை (துணியை) அரையில் கட்டிக் கொண்டு துடைத்தார் என்று எழுதியிருக்கிறது. நீங்கள் சொன்னது சரிதான் என்று ஒத்துக் கொண்டார்.

இந்த கால் கழுவுதலைத் தாழ்மையின் அடையாளம் என்றே பெந்தேகொஸ்துக்காரர்கள் புரிந்திருக்கிறார்கள். அதிகமாய் ஒன்றும் தெரியாது. இவ்விதமாகத் தாழ்மை என்று கூறுகிறவர்கள் தங்களுக்குப் பிடிக்காதவர்களுடைய கால்களைக் கழுவ மாட்டார்கள். தங்களைப் போன்ற அந்தஸ்துக்குரியவர்களையே தேடி பெருமையாகவே வாழ்கிறார்கள். "அவர் சீமோன் பேதுருவினிடத்தில் வந்த போது அவன் அவரை நோக்கி ஆண்டவரே, நீர் என் கால்களைக் கழுவலாமா என்றான். இயேசு அவனுக்குப் பிரதியுத்தரமாக நான் செய்கிறது இன்னதென்று இப்பொழுது நீ அறியாய். இனிமேல் அறிவாய் என்றார். பேதுரு அவரை நோக்கி நீர் ஒருக்காலும் என் கால்களைக் கழுவப்படாது என்றான். இயேசு அவனுக்கு பிரதியுத்தரமாக நான் உன்னைக் கழுவாவிட்டால் என்னிடத்தில் உனக்குப் பங்கில்லை என்றார். அதற்கு சீமோன் பேதுரு "ஆண்டவரே, என் கால்களை மாத்திரமல்ல என் கைகளையும் என் தலையையும் கூடக் கழுவவேண்டும் என்றான்" (யோ. 13 : 6-9).

இதுபோலவே, இந்தக் கால்களைக் கழுவுவதின் மேன்மையை அறியாத அநேக பெந்தேகொஸ்து சபையார் ஒருக்காலும் கால்களைக் கழுவக் கூடாது என்று தடை செய்து விட்டார்கள். இன்னும் சில சபையார் கால்களைக் கழுவுதல் இயேசுநாதர் காண்பித்த ஒரு மாதிரி தானே (யோ. 13 : 15) தவிர அதில் ஒன்றும் ஆவிக்குரிய இரகசியங்கள் இல்லை என்று கூறி வருடத்திற்கு ஒரு நாள் அந்த மாதிரியைத் தாங்களும் பின்பற்றுகிறதாகக் காண்பித்துக் கொள்வார்கள்.

இன்னும் சில சபையார் இந்தக் கால்களைக் கழுவுதல் தாழ்மையைத் தான் குறிப்பிடுகிறது என்று கூறி மாதம் ஒருமுறை அல்லது மூன்றுமாதம், ஆறு மாதங்களுக்கு ஒருமுறை செய்து தாழ்மைப்படுவது போல் காண்பித்துக் கொள்வார்கள். மற்ற நாட்களிலெல்லாம் தாழ்மையில்லாதவர்களாகவே நடந்து கொள்வார்கள்.

இந்தக் கால்களைக் கழுவுவதின் இரகசியத்தைப் பேதுரு அறிந்து கொண்டபடியால் "ஆண்டவரே, என் கால்களை மாத்திரமல்ல, என் கைகளையும், என் தலையையும் கூடக் கழுவவேண்டும் என்றான்" (யோ. 13:9) என்று எழுதியிருக்கிறது. என்ன ஆச்சரியம் பாருங்கள், முன்பு தடை செய்த பேதுரு இப்பொழுது என் தலையையும் கூடக் கழுவ வேண்டும் என்று கூறுகிறார்.

அதற்கு இயேசு கிறிஸ்து தரும் விளக்கத்தை வாசியுங்கள். இயேசு அவனை நோக்கி "முழுகினவன் தன் கால்களை மாத்திரம் கழுவ வேண்டியதாயிருக்கும், மற்றபடி அவன் முழுவதும் சுத்தமாயிருக்கிறான், நீங்களும் சுத்தமாயிருக்கிறீர்கள்...... என்றார்" (யோ. 13:10).

இது ஒரு சுத்திகரிப்பைக் குறிக்கிறது என்று நாம் காண்கிறோம். பாவ மன்னிப்புக்கென்று பாவம் போகக் கழுவப்பட ஒரு ஆத்துமா முறையாக ஞானஸ்நானம் பெற்றிருக்குமானால் (அப். 2:38; 22:16; மாற் 1:3, 4) அந்த ஆத்துமா சுத்தமாக்கப்படுகிறது ஆயினும் மாம்சத்தில் வாழ்கிறபடியால் மாமிச சிந்தைகளால் ஆத்துமாவில் அசுசிகள் காணப்பட்டிருக்குமானால், அவைகளையும் தேவனுடைய சமுகத்தில் அறிக்கை செய்து விட்டு மீண்டும் கழுவிக் கொள்ளவேண்டும். அதுவே கால்களை கழுவுதலாகும். அவன் மீண்டும் ஞானஸ்நானம் பெற வேண்டியதில்லை. ஆனால், கால்களை (நடத்தைகளை) மட்டும் கழுவ வேண்டும் என்று கர்த்தர் கூறுகிறார்.

உலகப் பிரகாரமாக நாம் ஓர் நீர் நிலையில் போய் குளித்து விட்டு வீட்டுக்கு மிகவும் சுத்தமாகவே வந்தாலும் நம்முடைய கால்களில் படிந்துள்ள தூசிகளை நாம் கழுவிக் கொண்டு வீட்டிற்குள் பிரவேசிப்பது போல் இவ்விதமாய் தங்களைக் கழுவிக் கொள்கிறவர்களுக்கு மட்டுமே கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினிடத்தில் பங்கு உண்டென்றும் மற்றவர்களுக்குப் பங்கு கிடையாது என்றும் அருமை இரட்சகர் கூறுகிறார் (யோ. 13:8)

தேவன் தம்முடைய திருச்சபையை திருவசனத்தைக் கொண்டு தண்ணீர் முழுக்கினாலேயே சுத்திகரித்துப் பரிசுத்தமாக்குகிறார் (எபே. 5:26, 27). தொடர்ந்து கூறுகிறார். "எனவே, நீங்களும் ஒருவருடைய கால்களை ஒருவர் கழுவக்கடவீர்கள்" (யோ. 13:14). திருவிருந்துக்கு முன் ஒருவருக்கொருவர் கால்களைக் கழுவவேண்டும். நீங்கள் இவைகளை அறிந்திருக்கிறபடியினால் இவைகளைச் செய்வீர்களானால் பாக்கியவான்களாயிருப்பீர்கள்" (யோ. 13:17).

"ஆண்டவரும் போதகருமாகிய நானே உங்கள் கால்களை கழுவினதுண்டானால் நீங்களும் ஒருவருடைய கால்களை ஒருவர் கழுவக் கடவீர்கள் (யோ. 13:14)

# வேதபாடம்

(தொடர்ச்சி)

யாத். 32:11-14: இஸ்ரவேலர்களுக்காக மோசேயினுடைய முதலாவது பரிந்து மன்றாடுதல். தேவன் இஸ்ரவேலர்களை அழிக்க வேண்டுமென்றிருந்தார். "மோசே கெஞ்சி பிரார்த்தித்தான. அப்பொழுது கர்த்தர் தம்முடைய ஜனங்களுக்கு செய்ய நினைத்த தீங்கை செய்யாதபடிக்கு பரிதபங் கொண்டார்" (யாத். 32:13,14) தேவன் தாம் நியமித்த பரிசுத்தவான்களுடைய ஜெபத்தைக் கேட்கிறார். தாம் ஏற்படுத்திய பரிசுத்தவான்களோடிருந்து கர்த்தர் கிரியை செய்கிறார். வேதாகமம் முழுவதிலேயும், ஆதியாகமம் தொடங்கி வெளிப்படுத்தலாகமம் வரைக்கும் இவ்விதமான ஒருபடம் காண்பிக்கப்படுகிறது. தேவன் தாம் நியமித்த தம்முடைய பரிசுத்தவான்களோடு கூட இருந்து கிரியை நடப்பித்து அவர்களுடைய ஜெபத்தைக் கேட்டு அவர்களுடைய விருப்பத்தின்படி செய்கிறார் என்பதே அது.

உ-ம். 1. ஆபிரகாம்: அவன் ஒரு தீர்க்கதரிசி; நீ பிழைக்கும் படிக்கு அவன் உனக்காக வேண்டுதல் செய்வான் (ஆதி. 20:7,18; 18:16-33).

2. ஈசாக்கு: ஆதி. 25:21
3. யாக்கோபு: ஆதி. 32: 9-12.
4. மோசே: யாத். 32:30-35;33:12-16;34:8,9; எண். 14:13-20;16:22.
5. நியாயாதிபதிகள்: நியா. 2:16-18
6. ஏலி: I சாமு. 1:17.
7. சாமுவேல்: I சாமு. 7:7-12;12:15-23.
8. எலியா: I இரா. 18:36-39
9. நெகேமியா: நெகே. 1:4-11.
10. யோபு: யோபு 42:7-10
11. அப்போஸ்தலர்கள்: அப். 6:4.
12. அப். பவுல்: எபே. 1:15-19
13. எப்பாப்பிரா: கொலோ. 4:12.
14. தேவனுடைய சபையின் தூதர்கள்: வெளி. 1:16, 20.

தேவன் தாம் நியமித்த பரிசுத்தவான்களின் ஜெபத்தைக் கேட்கிறார். அவர்கள் தேவனுடையவர்கள். ஜனங்கள் தேவனுடைய மனுஷனாகிய மோசேக்கு விரோதமாக எவ்வளவு முறுமுறுத்தும், கூப்பாடு போட்டும் பிரயோஜனமில்லை. ஜனங்களுடைய ஜெபத்தையல்ல, மோசேயினுடைய ஜெபத்தையே தேவன் கேட்பார். ஏனெனில், தேவன் மோசேயை ஏற்படுத்தினார். மோசே தேவனுடைய மனிதன். மோசே தேவன் பட்சத்தில் தேவனுடைய பிரதிநிதியாக நிற்கிறார். ஜனங்கள் தேவனுடைய ஜனங்கள் தான். ஆனால் தேவனுடைய பட்சத்தில் உறுதியாய் நிற்பதில்லை. மோசேயோடு சேர்ந்து ஐக்கியமாய் தான் நிற்க முடியும் (Iயோ. 1:3). யோபின் சிநேகிதர்களைப் பார்த்து கர்த்தர் சொன்னது: நீங்கள் யோபினிடத்தில் போங்கள், அவன் உங்களுக்காக வேண்டுதல் செய்வான் என்பதே (யோபு 42:8). தேவனுடைய திட்டத்தையும், தேவனுடைய நடபடியையும் அறியாத மக்கள் எல்லாரும் ஒன்றுதான், எல்லாரும் சமம்தான் என்று சொல்லி தெய்வீக நியமத்தை மீறி கோராகு, தாத்தான், அபிராம், ஓனைப்போல மோசேக்கும் ஆரோனுக்கும் விரோதமாய் கூட்டங்கூடி அவர்களை நோக்கி நீங்கள் மிஞ்சிப் போகிறீர்கள், சபையார்கள் எல்லாரும் பரிசுத்த மானவர்கள், இப்படியிருக்க கர்த்தருடைய சபைக்கு மேலாக உங்களை ஏன் உயர்த்துகிறீர்கள் என்றது போலும் (எண். 16:1-19). ஆரோனும், மிரியாமும் மோசேக்கு விரோதமாய் பேசி கர்த்தர் மோசேயைக் கொண்டு மாத்திரம் பேசினாரோ? எங்களைக் கொண்டும் அவர் பேசினதில்லையோ என்றது போலும் (எண். 12:1-15) பேசியும், கலகம் பண்ணியும் நடந்து வருகிறார்கள். தேவனுடைய மனிதர்களுக்கு கொடுக்க வேண்டிய கனத்தைக் கொடுக்காமல் அற்பமாய்ப் பேசி, தூஷித்து, இதனால சிட்சிக்கப்பட்டு தங்களுடைய ஆவிக்குரிய வல்லமையையும், தங்களுடைய ஆவிக்குரிய ஜீவியத்தையும், வரங்களையும் இழந்து தங்களுடைய பாவத்திலே செத்து, தங்களுடைய சரீர ஜீவனையும் இழந்துபோன கிறிஸ்தவர்களும், புறஜாதிகளும் உண்டு. நாமெல்லாரும் கிறிஸ்துவுக்குள் சகோதரர்கள், சரிதான். அன்றியும், மனுஷரில் தெரிந்து கொள்ளப்பட்ட எந்த பிரதான ஆசாரியனும் மனுஷருக்காக தேவ காரியங்களைப்பற்றி தேவனால் நியமிக்கப்படுகிறான் (எபி. 5:1,4). "தேவனானவர் சபையிலே முதலாவது அப்போஸ்தலரையும் இரண்டாவது தீர்க்கதரிசிகளையும் மூன்றாவது போதகர்களையும் ...ஏற்படுத்தினார்" (I கொரி. 12:28; எபே 4:11-16). எல்லாரும் ஜெபம் பண்ணலாம். ஆனால் ஜெபம் பண்ணும் ஊழியத்திற்கென்று நியமிக்கப்பட்டவர்கள் அப்போஸ்தலர்களே. எல்லாரும் சுவிசேஷத்தை அறிவிக்கலாம், சாட்சி கொடுக்கலாம், இயேசு கிறிஸ்துவைப்பற்றி பிரசங்கிக்கலாம். ஆனால் தேவ வசனத்தை போதிக்கிற ஊழியம் அப்போஸ்தலர்களுடையதே. அப்போஸ்தலர்கள்: நாங்களோ ஜெபம் பண்ணுவதிலும் (ஜெபம் பண்ணுகிற ஊழியத்திலும்) தேவ வசனத்தைப் போதிக்கிற ஊழியத்திலும் இடைவிடாமல் தரித்திருப்போம் என்றார்கள் (அப். 6:4). சுவிசேஷத்தை யாரும் பிரசித்தப்படுத்தலாம். ஆனால் உபதேசம் அப்படியில்லை, இப்படியில்லை என்று சொல்ல அப்போஸ்தலரைத் தவிர சாதாரண எந்த ஊழியக்காரனுக்கும், விசுவாசிக்கும் அதிகாரம் கிடையாது. அப்படிச் சொல்வதை, அப்படி இவர்கள் குழப்புவதை தேவ ஜனங்கள் கேட்க வேண்டிய அவசியமும் இல்லை. விளக்கம்

கொடுக்கிறவரிடம் கேட்க வேண்டிய முதல் கேள்வி நீர் அப்போஸ்தலனா? அதற்குரிய ஆதாரம், அடையாளம் என்ன? உமக்குப் போதித்தவர் யார்? என்ற கேள்விகளினால் இனம் கண்டு கொள்ளலாம். இப்படியாக எந்த மனுஷனும் எங்களை கிறிஸ்துவின் ஊழியக்காரர் என்றும் தேவனுடைய இரகசியங்களின் உக்கிராணக்காரரென்றும் எண்ணிக்கொள்ளக்கடவன் (I கொரி. 4:1) என்று அப்போஸ்தலர்கள் சொல்லுகிறார்கள். கர்த்தர் மோசேயினுடைய ஜெபத்தைக் கேட்டு தமது ஜனங்களுக்கு செய்ய நினைத்த தீங்கை செய்யாதபடிக்கு பரிதாபம் கொண்டார்.

(தொடரும்)

---

"நீங்களும் எங்களோடே ஐக்கியமுள்ளவர்களாகும்படி நாங்கள் கண்டும் கேட்டும் இருக்கிறதை உங்களுக்கு அறிவிக்கிறோம்; எங்களுடைய ஐக்கியம் பிதாவோடும் அவருடைய குமாரனாகிய இயேசு கிறிஸ்துவோடும் இருக்கிறது" (1யோவா. 1:3)

---

# மோட்ச வழி

(குரு-சிஷ்ய உரையாடல்) (தொடர்ச்சி)

**சிஷ்யன் :** மனிதன் அடைய வேண்டிய ஸ்திதி, நிலை என்ன?

**குரு :** மனிதன் இறைவனால் சிருஷ்டிக்கப்பட்டான். முதலாவது ஆதாம் சிருஷ்டிக்கப்பட்டான். பின்பு ஆதாமிலிருந்து ஏவாள் சிருஷ்டிக்கப்பட்டாள். ஆதாமுக்குத் துணையாக ஏவாள் சிருஷ்டிக்கப்பட்டாள். மற்ற பிராணிகள், மிருகங்கள், பறவைகளெல்லாம் ஜோடி ஜோடியாக சிருஷ்டிக்கப்பட்டன. அவைகளுடைய நோக்கம் இனவிருத்தி செய்து பலுகிப் பெருகுவதே. ஆனால் மனிதனுடைய சிருஷ்டிப்பில் குடும்ப உறவு, ஐக்கியம் என்ற ஒருநிலை காணப்படுகிறது. மனிதன் படிப்படியாக வளர்ச்சியடைந்து மறுரூபமாக வேண்டும். இதுவே மனிதன் அடைய வேண்டிய கதி.

**சிஷ்யன் :** இந்த நிலையை நான் அடைந்து கொள்ள என்ன செய்ய வேண்டும்?

**குரு :** ஆதி மனிதன் வீழ்ச்சியடைந்ததின் நிமித்தம் மனித ஜாதி ஆத்துமாவில் செத்த நிலையில் இருக்கிறது. இந்த நிலையிலிருந்து இவன் மாற கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசித்து மறுபிறப்படைய வேண்டும். இப்படி மறு பிறப்படைந்தவர்கள் புதுச் சிருஷ்டியாக இருக்கிறார்கள். இவர்கள் மனதிலும், சரீரத்திலும் மறுரூபமடைகிறார்கள். தினந்தோறும் மனம் புதிதாகிறதினால் பூரணப்பட்டவர்களுடைய சரீரம் ஒருநாள் மறுரூபமடையும்.

**சிஷ்யன் :** மறுபிறப்பு எவ்விதமாய் உண்டாகிறது?

**குரு :** மறுபிறப்பு ஆவியினால் பிறப்பதாகும். பரிசுத்த ஆவியானவர் ஒரு மனிதனில் இந்த ஆத்மிக பிறப்பை உண்டாக்குகிறார் இதற்கு மனந்திரும்பி கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசிப்பதும், முழுகி ஞானஸ்நானம் பெற்று பரிசுத்த ஆவியின் அபிஷேகம் பெறுவதும் ஆரம்ப நிலையாகும். இதைத் தொடர்ந்தே மறுரூபநிலை உருவாகின்றது.

**சிஷ்யன் :** மனம் புதிதாகுதல் என்றால் என்ன?

**குரு :** மறுபடியும் பிறந்த மனிதன் இந்த உலகத்துக்கு ஒத்த வேஷம் தரியாமல் தேவனுடைய தன்மையும் பிரியமும் பரிபூரணமான சித்தம் இன்னதென்று பகுத்தறிந்து அதைச் செய்வதினால் அவன் மறுரூபமடைந்து கொண்டே இருக்கிறான். அதாவது, அவன் வளர்ந்து கொண்டே இருக்கிறான். பரிசுத்த ஆவியானவர் இந்தக் கிரியைகளை அவனில் நடப்பிக்கிறார். தேவனுடைய சித்தம் இன்னதென்று ஒரு காரியத்தை குறித்து தெரியும் பொழுது தான் என்பதை மறுப்பதினால் தேவ சித்தத்தை நிறைவேற்ற முடியும். இப்படி ஒவ்வொரு

லேயும் தேவசித்தத்தை நிறைவேற்றும் பொழுது தேவன் அவனைச் சிருஷ்டித்த நோக்கம் அவனில் நிறைவேற ஆரம்பிக்கிறது. அவன் திறந்த முகமாய் கர்த்தருடைய மகிமையை கண்ணாடியில் காண்கிறது போலக் கண்டு அந்த சாயலாகத்தானே பரிசுத்தஆவியானவரால் மகிமையின் மேல் மகிமையடைந்து மறுரூபப்பட்டுக் கொண்டிருக்கிறான். தேவனுடைய சித்தம் அறிந்தும் அதைச் செய்யாதவர்கள் வளர்வதில்லை. அவர்கள் அடைய வேண்டிய அந்தக் கதியை அடையார்.

சீஷன் : தேவனுடைய சித்தத்தை எப்படி அறிந்து கொள்ளலாம்?

குரு : தேவசித்தத்தை தேவ வசனத்தின் மூலமாகவும், ஜெபத்தின் மூலமாகவும், தெய்வீக மனிதர்கள் மூலமாகவும், நடைமுறை வாழ்க்கையில் தேவன் நடத்தும் விதத்திலிருந்தும் தேவசித்தத்தை அறிந்து கொள்ளலாம்.

(தொடரும்)

"உங்கள் மனம் புதிதாகிறதினால் மறுரூபமாகுங்கள்"
(ரோ 12:2)

## நகோமி - இன்பமான இனிப்பு

மாதர் பகுதி
(தொடர்ச்சி)

நியாயாதிபதிகளின் காலத்திலே தேசத்தில் பஞ்சம் உண்டாயிற்று. யூதேயாவிலுள்ள பெத்லகேம் ஊரானாகிய எலிமெலேக்கும் அவன் மனைவி நகோமியும் அவர்களுடைய குமாரர்களாகிய மக்லோன், கிலியோன் என்னும் இருவரோடுங்கூட மோவாப் தேசத்திற்குப் போய் அங்கே இருந்து விட்டார்கள் (ரூத் 1:1,7). அங்கே நகோமியின் புருஷனாகிய எலிமெலேக்கு இறந்து போனான். நகோமி விதவையானாள். இதற்குப் பின்பு நகோமி தன்னுடைய இரண்டு குமாரர்களுக்கும் மோவாபியரில் பெண் கொண்டாள். ஒருத்தி பெயர் ஓர்பாள் மற்றவள் பெயர் ரூத். தேசத்திலே பஞ்சம் உண்டாயிற்றென்றால் பஞ்சம் பிழைக்கப் போகிறது தவறல்ல. ஆனால் அங்கேயே மோவாப் தேசத்திலேயே இருந்து விட்டது குடும்பத் தலைவர்களுடைய தவறுகளாகும். மேலும் அங்கேயே அவர்கள் பெண் கொண்டார்கள். இது தேவனுடைய கற்பனையை மீறியதாகும் (உபா. 7:3; 23:3).

மனிதனுடைய நீண்ட ஆயுளுக்கு ஆதாரம் கர்த்தருடைய கற்பனைகளைக் கைக்கொள்ளுவதே (உப. 28 அதி; லேவி 26. அதி). ஏறக்குறைய 10 வருஷத்துக்குள் மக்லோனும், கிலியோனும் இறந்து போனார்கள். இப்பொழுது நகோமி, ஓர்பாள், ரூத் ஆகிய மூவரும் விதவையானார்கள். நகோமியினுடைய வாழ்விலே புயல் வீசிற்று. அவள் மறுபடியும் அப்பத்தின் வீடாகிய பெத்லகேமுக்குத் திரும்புகிறாள். தேவன் தம்முடைய ஜனங்களை சந்தித்து அவர்களுக்கு ஆகாரம் அருளினார் என்று நகோமி மோவாப் தேசத்திலே கேள்விப்பட்டு தன் மருமக்களோடு கூட மோவாப் தேசத்திலிருந்து திரும்பி வரும்படி எழுந்து தான் இருந்த ஸ்தலத்தை விட்டு புறப்பட்டாள். இது ஒரு நல்ல மனமாற்றமாகும். நகோமியினுடைய வாழ்விலே இறைவனைப் பற்றி, இறைவனுடைய ஸ்தலத்தைப் பற்றி, திருச்சபையைப்பற்றி எழுச்சி எப்பொழுதும் இருந்து கொண்டிருந்தது. பின்மாற்றத்தை விட்டு அவள் எழுந்து தேவ சமூகத்தை தேடி வருகிறாள். இது நகோமியினுடைய நல்ல முடிவாகும். பின் மாறியிருக்கிறவர்கள் மனந்திரும்பி தேவ சமூகத்திற்கு எழுந்து வர வேண்டும். நகோமி தன் இரண்டு மருமக்களோடுங்கூட யூதா தேசத்துக்குத் திரும்பி போக வழி நடந்தாள். அப்பொழுது அவள் தன்னுடைய இரண்டு மருமக்களையும்

நோக்கி மரித்துப் போனவர்களுக்கும் எனக்கும் நீங்கள் தயை செய்தது போல கர்த்தர் உங்களுக்கும் தயை செய்வாராக! நீங்கள் இருவரும் உங்கள் தாய் வீட்டிற்குத் திரும்பிப் போங்கள். உங்களுக்கு வாய்க்கும் புருஷனுடைய வீட்டிலே நீங்கள் சுகமாய் வாழ்ந்திருக்க கர்த்தர் அநுக்கிரகம் செய்வாராக! என்று ஆசீர்வதித்தாள்.

நகோமி ஒரு தேவனுடைய மகளாகும். அவள் தேவனுடைய கற்பனையை முதலாவது மீறியிருந்தாலும் பின்பு அவள் தேவனைத் தேடுகிற ஒரு மகளாக இருந்தாள். தன்னுடைய மருமக்களுடைய நல்வாழ்வை அவள் விரும்பினாள். அவர்களை ஆசீர்வதித்து அவர்களுடைய தாய் வீட்டிற்கு போகவழியனுப்புகிறாள். மருமக்கள்மார்களை வேலை செய்ய வைத்து அவர்களாலே ஆதாயத்தை தேட அவள் விரும்பவில்லை. நகோமி தன்னுடைய மருமக்கள்மார்கள் மேல் அன்பு கூர்ந்தாள். அவர்களுக்கு ஒரு முன் மாதிரியான வாழ்க்கை வாழ்கிறவளாக இருந்தாள். ஓர்பாளும் ரூத்தும் கூட நகோமியின் மேல் அன்பு கூர்ந்தார்கள். அவர்கள் சத்தமிட்டு அழுது உம்முடைய ஜனத்தண்டைக்கே உம்முடன் வருவோம் என்றார்கள் (ரூத் 1:8-10). நகோமி அவர்களைப் பார்த்து என் மக்களே, நீங்கள் திரும்பிப் போங்கள். உங்களுக்குப் புருஷர்களாகும்படி இனி என் கர்ப்பத்திலே பிள்ளைகள் உண்டாகாது. அப்படியே உண்டானாலும் அவர்கள் பெரியவர்களாகும் வரை நீங்கள் வாழ்க்கைப்படாமல் இருக்கக்கூடாது. உங்கள் நிமித்தம் எனக்கு மிகுந்த விசனம் இருக்கிறது என்றாள். (ரூத் 1 : 11-13). நகோமியின் நல்ல குணத்தை இதில் பார்க்கலாம். மருமக்கள்மார்களின் நல்வாழ்வை அவள் விரும்பினவளாக இருந்தாள். மூளி, சண்டாளி, மூதேவி நீ வந்து என் பிள்ளைகள் செத்துப் போனார்கள் என்று திட்டுகிற சில மாமியார்கள் போல நகோமி இல்லை. நகோமி ஒரு தேவ பக்தியுள்ள ஒரு கிறிஸ்தவ ஸ்திரீயாகும். ஓர்பாள் தன் மாமியை முத்தமிட்டு திரும்பி மோவாபுக்கு தன் தாயின் வீட்டுக்கு, தன் பழைய விக்கிரக தெய்வங்களை வணங்க போய்விட்டாள். ஓர்பாள் உலகப் பிரகாரமான நோக்கமுள்ளவள். இவள் கிறிஸ்தவ புருஷனுக்கு வாழ்க்கைப்பட்டிருந்தும் இவளுடைய நோக்கமெல்லாம் உலகப் பிரகாரமான நோக்கமாகும். சந்தர்ப்பம் கிடைத்தது தன்னுடைய பழைய வாழ்க்கைக்கு திரும்பிப் போய்விட்டாள். ரூத்தோ நகோமியை விடாமல் பற்றிக் கொண்டாள். நகோமியினுடைய வாழ்க்கை நல்ல ஒரு மாதிரியான தேவ பக்தியுள்ள வாழ்க்கையாகும். ரூத் நகோமியினுடைய தேவனை நேசித்தாள். அவள் நகோமியைப் பற்றிக் கொண்டாள். நான் உம்மைப் பின்பற்றாமல் உம்மை விட்டு திரும்பிப் போவதைக் குறித்து என்னோடே பேசவேண்டாம். நீர் போகும் இடத்திற்கு நானும் வருவேன். நீர் தங்கும் இடத்தில் நானும் தங்குவேன். உம்முடைய ஜனம் என்னுடைய ஜனம் உம்முடைய தேவன் என்னுடைய தேவன். நீர் மரணமடையும் இடத்தில் நானும் மரணமடைந்து அங்கே அடக்கம் பண்ணப்படுவேன், மரணமேயல்லாமல் வேறொன்றும் உம்மைவிட்டு என்னைப் பிரிக்காது என்ற உடன்படிக்கை செய்யுமளவுக்கு நகோமியினுடைய வாழ்க்கை சிறந்ததொரு தேவ பக்தியுள்ள வாழ்க்கையாக காணப்பட்டது. நகோமிகளே! உங்கள் வீட்டிற்கு வருகிறவர்கள் உங்களுடைய தேவபக்தி, அன்பு, கரிசனை, முன்மாதிரி இவைகளைப் பார்த்து உங்கள் தேவனைப் பற்றிக் கொள்ள ஏதுவாக இருக்கிறதா? அல்லது இடறலின் கல்லாய், எரிச்சலின் ஆவியுடையவர்களாய், ஜாதி வெறி பிடித்தவர்களாய் இருக்கிறீர்களா? புறஜாதி பெண்ணாகிய ரூத் நகோமியின் குடும்பத்தில் ஐக்கியமானாள். நகோமியின் தேவனை அவள் பற்றிக் கொண்டாள். அவள் திரும்பிப் போய் பழைய மோவாபிய வாழ்க்கை வாழ, பழைய விக்கிரக தெய்வங்களை வணங்க மறுத்துவிட்டாள். அதற்கு மாதிரியாக இருந்தது நகோமியாக்கும்!

(தொடரும்)

---

"அயல் வீட்டுக்காரிகள் நகோமிக்கு ஒரு ஆண் பிள்ளை பிறந்தது என்று வாழ்த்தி அதற்கு ஓபேத் என்று பேரிட்டார்கள்.

(ரூத் 4 : 17)

# I கொரிந்தியர் 14-ம் அதிகாரம்

கொரிந்து சபையார் எல்லா வரங்களையும் உடையவர்களாய் யாதொரு வரத்திலும் குறைவற்றவர்களாய் இருந்தார்கள் (1 கொரி 1 : 7).

இப்படி வரங்களால் நிரப்பப்பட்ட இவர்கள் எல்லாரும் சபையாய்க் கூடி வருகிற வேளைகளில் ஆவியினால் நிறைந்து அவரவர்களுடைய வரங்களை இயக்கி விடுவதுண்டு. ஆதலால் இவர்கள் கூடி வந்திருக்கையில் ஒரே சமயத்தில் ஒருவன் சங்கீதம் பாடுவதும், ஒருவன் போதகம் பண்ணுவதும், ஒருவன் அந்நிய பாஷை பேசுவதும், ஒருவன் இரகசியத்தை வெளிப்படுத்துவதும், ஒருவன் வியாக்கியானம் செய்வதும் இப்படி ஒழுங்கில்லாமல் கலகமுண்டாக்கிக் கொண்டிருந்தார்கள் (1 கொரி. 14 : 26, 40, 33). இதை அறிந்த அப்போஸ்தலர் பவுல், சபையார் கூடி வந்திருக்கையில் எப்படி வரங்களை செயல்படுத்த வேண்டும், வெவ்வேறு வரங்களுடைய தன்மை என்னவென்று விவரித்துக் காண்பித்து, சபையில் வரங்களைப் பெற்றவர்கள் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்று கூறி ஒழுங்குபடுத்தவே இந்த அதிகாரம் எழுதப்பட்டது.

இதில் முக்கியமாய் கவனிக்க வேண்டியதென்னவென்றால் சபையாக கூடி வந்திருக்கையில் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்றே எழுதப்பட்டுள்ளது. இது தனி ஒருவனுக்கு கொடுக்கப்பட்ட ஆலோசனை அல்ல (வச 14, 23, 26,28, 34). மேலும் வந்திருக்கையில் அந்நிய பாஷைகளில் பேசுவதை விட தீர்க்கதரிசனம் சொல்லுவது மேன்மையாயிருக்கும் என்று சொல்வதற்காக, அந்நிய பாஷை பேசுவதைப் பற்றியும், தீர்க்கதரிசனம் சொல்வதைப் பற்றியும், விவரித்து எழுதப்பட்டுள்ளது.

அந்நிய பாஷை பேசுதல்

1. ஞான வரங்களை (அந்நிய பாஷை பேசுதலை) விரும்புங்கள் (வச 1)
2. அந்நிய பாஷையில் பேசுகிறவன் ஆவியினால் இரகசியங்களை பேசுகிறான். அதை மற்றவன் அறிய மாட்டான். தேவன் அறிவார். ஆகையால் அவன் தேவனிடம் பேசுகிறான். பேசுகிறவனுக்கு அதின் அர்த்தம் விளங்காமல் இருக்கலாம். மற்றவனுக்கும் விளங்காது. ஆகவே பேசுகிறவனுக்கு கேட்கிறவன் அந்நியனாக இருக்கிறான். ஆனால் தேவனுக்கு அறிமுகமானவனாக இருக்கிறான் (வச 2, 11).
3. ஒருவன் அந்நிய பாஷையில் பேசினால் பேசுகிறவன் பக்தி விருத்தியடைவான். அதைக் கேட்கிற சபையார் பக்தி விருத்தி அடைய முடியாது (வச 4).
4. சபையார் எல்லாரும் அந்நிய பாஷையில் பேசுவதை அப்போஸ்தலர் விரும்புகிறார் (வச 5).
5. ஒரு ஊழியக்காரன் சபை நடுவே எழுந்து நின்று வெறும் அந்நிய பாஷையிலே பேசிக் கொண்டிருந்தால் சபைக்கு பிரயோஜனமிராது (வச 6).
6. பரிகார உதடுகளாலும், அந்நிய பாஷைகளாலும் இந்த ஜனத்தோடே பேசுவேன். ஆனாலும், அவர்கள் கேட்க மாட்டோமென்கிறார்கள் (செவி கொடுப்பதில்லை) (ஏசா. 28 : 11, I கொரி. 14. 31).
7. சபையில் எல்லோரும் அந்நிய பாஷை பேசிக் கொள்ளும் போது விளங்காதவனோ அவிசுவாசியோ உள்ளே வந்தால், பேசுகிறவர்களை பைத்தியம் பிடித்தவர்களென்பான் (வச 23).

தீர்க்கதரிசனம் சொல்லுதல்

1. விசேஷமாய் தீர்க்கதரிசன வரத்தை விரும்புங்கள் (வச 1).
2. ஒருவன் தீர்க்கதரிசனம் சொன்னால் கேட்கிறவனுக்கு விளங்கும். ஆகவே, அவர்கள் கேட்டு பக்தி விருத்தி அடையவும், புத்தியடையவும், ஆறுதலடையவும் ஏதுவாயிருக்கும் (வச 3).
3. ஒருவன் தீர்க்கதரிசனம் சொன்னால் அதைக் கேட்கிற சபையார் பக்தி விருத்தி அடைவர் (வச 4).

4. எல்லாரும் தீர்க்கதரிசனம் சொல்வதை அப்போஸ்தலர் அதிகமாக விரும்புகிறார்.

5. ஒரு ஊழியன் கருத்தோடே சபையாரை உணர்த்தும்படி ஐந்து வார்த்தை பேசினாலும் பிரயோஜனமாயிருக்கும் (வச 19).

6 தீர்க்கதரிசனம் விசுவாசிகளுக்கு சொல்லப்படுவதால் அது விசுவாசிகளுக்கு அடையாளமாயிருக்கிறது என்று வேத வாக்கியம் சொல்வதால் அந்நிய பாஷை அவிசுவாசிகளிடம்] பேசப்படுகிறது அது அவர்களுக்கு அடையாளமாயிருக்கிறது (வச 22).

7. எல்லோரும் தீர்க்கதரிசனம் சொன்னால் உள்ளே பிரவேசித்த அவிசுவாசி உணர்த்துவிக்கப்பட்டு தன் பாவம் உணர்த்தப்பட்டு விசுவாசியாவான் (வச 24, 25).

காரியம் இப்படியிருப்பதால் சபைக் கூட்டத்தில் அந்நிய பாஷை பேசுதலிலும் தீர்க்கதரிசனம் சொல்லுதல் மேன்மை உள்ளது. ஆகவே தீர்க்கதரிசனம் சொல்ல நாடுங்கள் என்று அப்போஸ்தலன் சொல்கிறார். அதே சமயம், அந்நிய பாஷை பேசுதலையும் தடை செய்து விடக் கூடாது. (அநேக சபையார் தடைச் சட்டம் விதிப்பது போல்) (வச 28).

ஒழுங்குமுறை:

1. அந்நிய பாஷை பேசுகிறவன், அதின் அர்த்தத்தையும் சொல்லத்தக்கதாக விண்ணப்பம் பண்ணக் கடவன் (வச 13). அர்த்தம் சொல்லாவிட்டால் சபையார் பக்தி விருத்தியடைய மாட்டார்கள் (வச 5).

2. பேசுகிறவனுக்கு அர்த்தம் சொல்லும் வரமில்லாவிட்டால் வியாக்கியான வரமுடையவன் அந்நிய பாஷையின் அர்த்தம் சொல்ல வேண்டும் (வச 27).

3. அந்நிய பாஷை பேசும் வரத்தை மட்டும் உடையவன், சபையில் வியாக்கியானம் பண்ணும் வரமுடையவன் இல்லாதிருந்தால் சபைக்கு கேட்கும்படி பேசக் கூடாது. தேவனுக்கும், அவனுக்கும் கேட்கத் தக்கதாய் மெதுவாய் பேசிக் கொள்ளலாம் (வச 28).

4. ஒருவன் சபையில் அந்நிய பாஷையில் தேவனை ஸ்தோத்திரித்து ஜெபம் பண்ணினால் அதை விளங்கிக் கொள்ள முடியாதவன் ஆமென் (அப்படியே ஆகக் கடவது) என்று சொல்ல முடியாது ஆகையால் மற்றவனும் ஆமென் என்று சொல்லத்தக்கதாக கருத்து விளங்கும் வகையில் ஸ்தோத்திரித்து ஜெபம் பண்ண வேண்டும் (வச 14-17).

5. பிரசங்கி சபையில் நின்று எல்லாருக்கும் புரியும்படியான வார்த்தையில் பேச வேண்டும். தனக்கு பல அந்நிய பாஷைகள் தெரியும் என்பதற்காக ஒருவருக்கும் விளங்காத அந்நிய பாஷைகளில் பிரசங்கிக்கக் கூடாது (வச 19)

6. தண்ணீர்த் தொட்டியில் (Water tank) தண்ணீர் இருந்தால் பல அறைகளிலும் (Room) உள்ள நீர்க் குழாய்களில் தண்ணீர் வரும். தண்ணீர் வருகிறது என்பதற்காக, எல்லாக் குழாய்களையும் திறந்து வைத்தால் வீடெல்லாம் தண்ணீராகி பொருள்கள் சேதமாகும். எந்த அளவு தண்ணீர் வேண்டுமோ அந்த அளவுக்கு குழாயைத் திறந்து மூடலாம். திறந்தால் தண்ணீர் வரும். தேவை இல்லையென்றால் மூடி விடலாம். அது போல் வரங்கள் பெற்றவர்கள் பலர் கூடி வந்து எல்லாரும் வரங்களை இயக்க ஆரம்பித்தால் கலகமுண்டாகும். ஆகையால் பலரும் அந்நிய பாஷைகளைப் பேசிக் கொள்ளும்போது ஒரு சிலர் தவிர மற்றவர்களிடம் ஆவியானவர் இயக்குவதை நிறுத்தி விடுவார். அதை கிரகித்து உடனே அவர்கள் பேசுவதை நிறுத்திவிட வேண்டும். ஆனால் இரண்டு பேர் அல்லது மூன்று பேர்களோ ஆவியானவர் இயக்க அவர்கள் மாத்திரம் அந்நிய பாஷைகளை பேச வேண்டும். அடுத்து அவர்களில் ஒவ்வொருவராக அந்நிய பாஷை பேச வேண்டும். பேசிவிட்டு அவர் அர்த்தம் சொல்லலாம், அல்லது மற்றவர் அர்த்தம் சொல்ல வேண்டும் (வச 27).

7. அப்படியே தீர்க்கதரிசனம் சொல்ல ஆவியானவர் ஒரு சிலரை இயக்குவார், மற்றவர்கள் அமைதலாகி விடவேண்டும். இயக்கப்பட்டவர்கள் ஒவ்வொருவராக பேசவேண்டும். தீர்க்கதரிசியின் ஆவி தீர்க்கதரிசிக்கு கட்டுப்பட்டே இருப்பதால் இயக்கப்பட்டவர்களில் ஒருவர் பேசும் போது மற்றவர் அடக்கிக் கொள்ள வேண்டும். முந்தினவர் பேசி முடித்த பின் மற்றவர் பேசலாம் (வச 29-32)

ஒரு இயந்திரத்தை நேரடியாக பிரித்துப் பார்த்துவிட்டு (Practical) அதைப் பற்றிய விவரத்தை புத்தகத்தில் (Theory) படித்தால் எளிதாக விளங்கும். வெறும் புத்தகத்தைப் படித்து தெளிவாக விளங்கிக் கொள்வது கடினம். "புதிய எருசலேம் சபை" யாதொரு வரத்திலும் குறைவற்றதாய் கர்த்தருடைய வருகைக்கு ஆயத்தப்பட்டுக் கொண்டிருப்பதால், மேலே சொல்லப்பட்ட வரங்களும் ஒழுங்கு முறைகளும் நேரடியாகக் காணக் கூடியதாக இருக்கிறது. ஆகவே 1 கொரிந்தியர் 14-ம் அதிகாரத்தில் எழுதியிருப்பதை விளங்கிக் கொள்வது எளிதான காரியமாயிருக்கிறது.

இதை விளங்கிக் கொள்ளாத சிலர் அந்நிய பாஷை பேசினால் அர்த்தத்தையும் சொல்ல வேண்டும். ஆகையால் அந்நிய பாஷையே கிடையாது. அவசியமில்லை என்று கூறுகிறார்கள் பரிசுத்த ஆவியின் அபிஷேகம் பெற்றதற்கு அடையாளமாகிய அந்நிய பாஷையுமுண்டு. வியாக்கியானம் பண்ணத்தக்கதான அந்நிய பாஷையுமுண்டு. இன்னும் சிலர் எங்களுக்கு தீர்க்கதரிசன வரம் இருக்கிறது. ஆகையால் குறைவான வரமாகிய அந்நிய பாஷை எங்களுக்கு இருக்கவே கூடாது என்று சொல்கிறார்கள். ஒருவன் அந்நிய பாஷை பேசினால் வச. 22ன் படி அவன் அவிசுவாசி என்று சொல்லும் புத்தியீனர்களுமுண்டு.

இப்படி இவர்கள் அந்நிய பாஷை பேசுதலை வெறுப்பதால் இவர்கள் இழந்து போவது யாதெனில்,

1. தேவனுடைய சித்தத்தின்படி தேவனிடம் பேசும் சிலாக்கியத்தை இழக்கின்றனர். (1 கொரி. 14:2, 14, 28)
2. தாங்கள் பக்தி விருத்தியடைவதை இழக்கின்றனர் (வச 4).
3. ஆவியோடு நன்றாய் ஸ்தோத்திரம் பண்ணி தேவனை மகிமைப்படுத்த தவறுகிறார்கள் (வச 16, 18)
4. வானத்திலிருந்து மகிமைப் படுத்தினேன் இன்னமும் மகிமைப் படுத்துவேன் என்ற சத்தம் உண்டாயிற்று. அதைக் கேட்ட ஜனங்கள் அதை விளங்காமல் இடி முழக்கம் என்றார்கள். இயேசு அவர்களை நோக்கி இந்த சத்தம் என்னிமித்தம் உண்டாகாமல் உங்கள் நிமித்தம் உண்டாயிற்றென்றார். (யோவா. 12 : 28-30) அப்படிப் போல அவிசுவாசிக்கு அடையாளமாக பேச தேவனுடைய கருவியாய் (வாயாய்) இருக்கும் கிருபையை இழக்கிறார்கள் (வச 21, 22; ஏசா. 28:11)
5. அந்நிய பாஷையின் மூலம் வெளிப்படும் தேவ இரகசியத்தை அறிய முடியாமல் போகிறார்கள்.
6. தீர்க்கதரிசன வரம் செயல்பட இடங் கொடாமல் சீர் கெட்டு போகிறார்கள் (அப். 19 : 6).
7. ஒரு அரசனை ஒரு புலவன் புகழ்ந்தால் கவிபாடி புகழ்வான், அது அரசனை களிப்பாக்கும். அப்படி தேவனிடம் அந்நிய பாஷைகளைப் பேசிப் புகழ்ந்து அவரை மகிழ்ச்சியாக்க முடியாமல் போகிறார்கள் (அப். 10 : 45). இது உங்களுக்கு விளங்கும். விளங்காவிடில் விளங்காது போவீர்கள். பரியாச உதடுகளினாலும், அந்நிய பாஷையினாலும் இந்த ஜனத்தோடே பேசுவார். இதுவே நீங்கள் இளைத்தவனை இளைப்பாறப் பண்ணத்தக்க இளைப்பாறுதல்; இதுவே ஆறுதல் என்று அவர்களோடே அவர் சொன்னாலும் கேட்க மாட்டோம் என்கிறார்கள் (ஏசா. 28 : 11, 12 ; 1 கொரி 14 : 21). ஆகையால், அவர்கள் போய் பின்னிட்டு விழுந்து நொறுங்குவார்கள் என்றும் சிக்குண்டு பிடிபடுவார்கள் என்றும் ஏசாயா தீர்க்கதரிசி நன்றாய் சொல்லியிருக்கிறார் (ஏசா. 28 : 13).

---

"இப்படியிருக்க சகோதரரே, தீர்க்கதரிசனம் சொல்ல நாடுங்கள் அந்நிய பாஷைகளைப் பேசுகிறதற்கும் தடை பண்ணாதிருங்கள்"

(1 கொரி. 14 : 39)

---

# புதிய எருசலேம் சபையின் நடபடிகளில் சில (தொடர்ச்சி)

கர்த்தருக்கு பிரியமானவர்களே, ஒரு நாள் நம்முடைய ஊழியர் ஒருவர் வள்ளியூர் பஜாரிலிருந்து நமது ஆலயத்துக்கு வந்து கொண்டிருந்தார். வழியில் ஜெபமணி மருத்துவமனை என்ற பெயரில் ஓர் மருத்துவமனை உள்ளது அங்கிருந்து ஒரு வாலிபப் பையன் நமது ஊழியரைப் பின் தொடர்ந்து ஆலயத்துக்குள் வந்தான். தம்பி! நீங்கள் யார்? என்று கேட்டோம். தழுதழுத்த குரலில்: ஐயா! இங்கே நோயாளியை அழைத்து வந்தால் ஜெபிப்பீர்களா என்று கேட்டான். தம்பி நோயாளி யார்? எங்கே இருக்கிறார்? என்று கேட்டோம்.

என்னுடைய தம்பிதான் நோயாளி; என் அப்பா அம்மாவுடன் மருத்துமனையில் இருக்கிறான். எங்கள் ஊர் கலந்தபனை. நாங்கள் C S.I கிறிஸ்தவர்கள். என்ன நோய் என்றே மருத்துவர்களால் கண்டு பிடிக்க முடியவில்லை. ஒருவர் உங்களைப் போல் ஜிப்பா போட்டுக் கொண்டு ரோட்டில் வந்து கொண்டிருந்ததைப் பார்த்து அந்த ஊழியரோடு போய் அவர்கள் ஜெப ஆலயம் எங்கே இருக்கிறது; என் தம்பியை அழைத்து வந்தால் ஜெபிப்பீர்களா என்று அவரிடம் கேட்டுவா என்று என் பெற்றோர்கள் என்னை அனுப்பினார்கள் என்று மேற்படி தம்பி கூறினான். மாலை சுமார் 5 மணி நேரமிருக்கும். விசுவாசத்தோடு அழைத்து வந்தீர்களானால் கர்த்தர் உங்கள் தம்பிக்கு சுகம் அளிப்பார் என்று கூறி அனுப்பினோம்.

அன்றைய தினம் வெளியூரிலிருந்து கர்த்தருடைய ஆலோசனை பெறுவதற்காக சில புதிய ஆத்துமாக்கள் ஆலயத்திற்கு வந்திருந்தார்கள், அவர்களோடு பேசிகொண்டிருந்தோம். சுமார் அரை மணி நேரத்துக்குள் மேற்படி பையனும் அவனுடைய அம்மா, அப்பா, நோயாளியாயிருக்கிற தம்பி ஆகிய நால்வரும் ஆலயத்துக்குள் வந்தார்கள். பையனை உட்கார வைத்து இவனுக்கு என்ன வியாதி? வியாதி வந்து எவ்வளவு காலம் ஆகிறது? டாக்டர் என்ன சொன்னார்கள் என்று சில காரியங்களை பையனுடைய பெற்றோர்களிடம் பேசிக் கொண்டிருந்தோம். அது வரையில் உட்கார்ந்திருந்த பையன் திடீரென்று கீழே பொத்தென்று விழுந்தான். விழுந்து கை, கால்களெல்லாம் வெட்டி வெட்டி இழுத்தது. பெற்றோர்கள் கைகளையும் கால்களையும் பிடித்தார்கள். சில வினாடிகளில் பையனின் ஆவி பிரிந்துவிட்டது.

பையனின் தாயார் கூக்குரலிட்டு ஐயோ என் மகனே! இவ்வளவு சீக்கிரமாய் எங்களை விட்டு போய்விட்டாயே என்று சொல்லி அழுதார்கள். பையனின் தகப்பனார் மௌனமாய் இருந்து அழுதார் எங்களுக்கு பெரிய துக்கமாகிவிட்டது. வந்திருந்த புதிய ஆத்துமாக்கள் இது என்ன இப்படி நடந்துவிட்டதே என்று திகைக்கிறார்கள்

ஆண்டவரே, இந்த பையனின் ஆவி வெளியே இருக்கும் பொழுதே பிரிந்திருந்தால் நலமாய் இருந்திருக்குமே. உம்முடைய சமூகத்தில் வந்த பிறகு இப்படியாகிவிட்டதே. இந்த இறந்து போன பாடியை உம்முடைய ஆலயத்துக்குள்ளிருந்து வெளியே எடுத்துக் கொண்டு போனால் அக்கம் பக்கத்திலிருக்கும் புறஜாதி மக்கள் என்ன நினைப்பார்கள்? தேவரீர் உம்முடைய நாமத்தை மகிமைப்படுத்த வேண்டும் என்று உள்ளத்தில் ஜெபித்தேன்.

"நான் அற்புதம் நடப்பிக்கப் போகிறேன். அதைக் கண்டு புதிதாய் வந்திருக்கும் யாவரும் என்னை விசுவாசிப்பார்கள். பையன் பிழைப்பான் என்று பெற்றோர்களிடம் கூறு" என்று கர்த்தருடைய ஆவியானவர் உள்ளத்தில் பேசினார்.

பையனுடைய தகப்பனாரின் முதுகில் கை வைத்து, ஐயா, நீங்கள் அழவேண்டாம் கர்த்தர் உங்கள் பையனைப் பிழைக்க வைப்பார் என்று கூறினேன். அவருடைய முகத்தில் நம்பிக்கை தெரிய ஆரம்பித்தது. தன்னுடைய துணைவிக்கு ஆறுதல் சொன்னார். அழாதே, நம்முடைய பிள்ளை பிழைக்கும் என்று ஐயா கூறுகிறார்கள். கலங்காதே நாம் ஆண்டவருடைய சந்நிதானத்தில் அல்லவா இருக்கிறோம். ஆண்டவர் நம்மை ஒரு போதும் கைவிட மாட்டார் என்று கூறி

னாரும் தன் மகனுடைய உயிரற்ற சரீரத்தை அணைத்துக் கொண்டு அழுத அந்த அம்மா எழுந்து உட்கார்ந்தார்கள்.

கர்த்தர் சொன்ன வார்த்தையில் விசுவாசம் வைத்து உடன் ஊழியர்களோடு சேர்ந்து நின்று மீண்டும் பையனுடைய உயிர் அவனுக்குள் வரவேண்டும் என்று மிகவும் துயரமாய் கர்த்தரிடம் வேண்டினோம். கர்த்தர் தம்முடைய ஊழியக்காரராகிய எங்களுடைய ஜெபத்தைக் கேட்டார், சில வினாடிகளுக்குள் பையனுடைய உயிர் மீண்டும் அந்த சரீரத்துக்குள் வந்தது. பையன் கண் திறந்தான். உடனே எழுந்து உட்கார்ந்தான். அல்லேலூயா! தாயாருடைய கண்கள் இப்பொழுது ஆனந்தக் கண்ணீர் வடித்தது.

இயேசுவே, இயேசுவே என் பையன் பிழைத்துக் கொண்டான் என்று சத்தமிட்டு தன் பையனை வாரி அணைத்துக் கொண்டார்கள். அற்புதமாய் உயிர் பெற்ற பையனுக்கு 12 வயது இருக்கும்.

அருமையானவர்களே, கர்த்தர் அந்த ஏழைக் குடும்பத்தின் கண்ணீரைத் துடைத்தார். எங்கள் கலக்கங்களையும் போக்கினார். "இயேசு கிறிஸ்து நேற்றும் இன்றும் என்றும் மாறாதவராய் இருக்கிறார்" (எபி.13:8) (தொடரும்)

Pastor S. Sundar Raj
New Jerusalem Church.
Vallioor.

---

"...கர்த்தர் அவர்களுடனேக் கூடக் கிரியை நடப்பித்து அவர்களால் நடந்த அடையாளங்களினால் வசனத்தை உறுதிப்படுத்தினார்" (மாற். 16:20)

---

# சாட்சி

## நான் தேவன் என்பதற்கு நீங்கள் எனக்கு சாட்சிகள்.

சிறப்பு :

என் பெயர் இராஜலட்சுமி நான் ஒரு இந்து பிராமண குடும்பத்தைச் சேர்ந்தவள். எனது சொந்த ஊர் தஞ்சாவூர்க்கு அருகிலுள்ள மாயவரம். நான் சிறு வயது முதல் தெய்வபக்தியிலே வளர்க்கப்பட்டு தெய்வத்தின் மீது நம்பிக்கை உடையவளாக வளர்ந்தேன். நான் போகாத கோயில்கள் இல்லை. நான் கடைபிடிக்காத விரதங்களும் இல்லை. புண்ணியம் தேடுவதற்காக சிறு வயதிலேயே வயதானவர்களோடு சேர்ந்து கொண்டு கோயில் குளங்களாக சுற்றி வருவேன். என் ஆத்துமாவுக்கு ஏற்ற ஆகாரம் கிடைக்கவில்லை. நாம் தெய்வங்களுக்கு தொண்டு செய்தால் பரலோகம் செல்லலாம் என்ற நம்பிக்கை எனக்கு இருந்தது. கோயில் கோயிலாக சென்ற போதிலும் தெய்வத்திடம் பயம் ஏதுமில்லை. பாவத்தின் விலை தெரியவில்லை. ஆடம்பரமாக ஜீவித்தேன். எனக்குள் எவ்வித சந்தோஷமுமில்லை. இப்படியாக பள்ளி வாழ்க்கையை முடித்தேன். என்னுடைய விருப்பம் இல்லாமலேயே விக்கிரகங்கள் மத்தியில் உள்ள (B. Litt.) கல்லூரியிலே சேர்க்கப்பட்டேன். இன்னும் பக்தி அதிகரித்தது ஆனால், பலன் ஒன்றுமில்லை. உறவினர்கள். மத்தியில் உண்மையான அன்பு பாசமில்லை. வீட்டில் சமாதானமில்லை. வியாதி அதிகரித்தது. வருடந்தோறும் தேர்ச்சியடைந்தால் கோயிலை நூறுமுறை சுற்றி வருவேன். நன்றி செலுத்துவேன்.

இயேசுவை அறிதல் :

என்னுடன் ஒரு கிறிஸ்தவ சகோதரி படித்தாள். அவள் இயேசுகிறிஸ்துவே மெய்யான தேவன் என்று சொன்னாள். நானோ, என் மதமே உயர்ந்தது என்றும், இயேசு தெய்வமானால் கிறிஸ்தவ மதத்திலேயே என்னை பிறக்க வைத்திருக்கலாம் என்றும் விவாதிக்க ஆரம்பித்தேன். என் சகோதரியிடம் சென்று என்னுடன் ஒரு கிறிஸ்தவ சகோதரி அன்பாய் இருக்கிறாள்,

என்றும் கூறினேன். அவன், அந்த பெண்ணிடம் பழக்கம் வைக்காதே. அவள் உன்னையும் கிறிஸ்தவளாக்கி விடுவாள் என்று சொன்னான். நான் மாரியம்மாளிடம் இருக்கிறபடியால் என்னை ஒருவரும் அசைக்க முடியாது என்று பெருவிரல் காட்டி சவால் விட்டேன். ஒருவருட காலம் இயேசுவுக்கு துரோகியாக இருந்தேன். "பக்தியுள்ளவர்களை கர்த்தர் தமக்காகத் தெரிந்து கொண்டார்" என்ற திருவார்த்தையின்படி அவரே என்னைத் தேடி வந்தார். இதிலிருந்து எந்த ஒரு மனிதன் இயேசுவுக்கு எதிரியாக இருக்கிறானோ அவன் அவருக்கு அடிமையாக மாறுவான் என்பதை உணர்ந்து கொண்டேன். அந்த கிறிஸ்தவ சகோதரி, "ஒரு கூட்டம் வைத்திருக்கிறேன். வா" என்று அழைத்தாள். எனக்குள் செல்வதா வேண்டாமா என்ற போராட்டம். எல்லா தெய்வங்களையும் பார்த்து பலன் ஒன்றுமில்லை. இயேசுவையும் ஒரு கை பார்ப்போம். இயேசுவும் என்ன சாதித்து விடுகிறார் என்று என் மனசாட்சி எனக்குள் பேசியது. அதுவும் திருப்தி அளிக்கவில்லை என்றால் தற்கொலை செய்து கொள்ளலாம் என்று எண்ணினேன். பரிசுத்த வேதாகமம், பரிசுத்த ஆலயம் இவற்றின் வாசனையைக் கூட அறியாத நான் முதன் முதலாக ஆலயத்திற்குச் சென்றேன். விக்ரகங்கள் மத்தியில் இருந்த என்னை தேவன் 1977-ல் தொட்டார். என்னோடு பேசினார். அவருக்கே என்னை ஒப்புக் கொடுத்தேன். கூட்டம் முடிந்து வெளியே வந்தவுடன் நான் பெற்ற சந்தோஷத்தை யாரிடம் சொல்வது என்று நினைத்தேன். அடுத்த நாளிலிருந்து நான் சென்று வந்த விக்ரக கோயில் மற்றும் அசுத்த இடங்களில் (சினிமா) கால் வைக்கவே இல்லை. விக்கிரகங்களுக்கு நேர்ந்து கொண்டதை இதுவரை செய்யவே இல்லை. என் ஆத்துமா தேவனுடைய பார்வையிலே விலையேறப் பெற்றதாக இருக்கிறபடியால், என் தேவனை துதிக்கிறேன். அவருடைய பரிசுத்த நாமத்தை மகிமைப்படுத்துகிறேன்.

**உபத்திரவம் :**

என்னுடைய வாழ்க்கையில் ஏற்பட்ட மாறுதலைக் கண்டு, கல்லூரிக்குச் சென்றதால் தானே இயேசுவை அறிந்தாய் என்று கல்லூரியை விட்டு நிறுத்தி விட்டார்கள். தேவனிடத்தில் நான் வைத்த முதல் ஜெபம் கேட்கப்பட்டது. இதிலிருந்து தேவன் இயேசு ஜீவனுள்ளவர் என்று தெரிந்து கொண்டேன்.

அதாவது, வேலை இல்லாமல் இருந்த என் குடும்பத்தில் என் சகோதரனுக்கு வேலை கிடைத்தது. கர்த்தருடைய சித்தத்திற்கு ஒப்புக் கொடுத்தேன். சில நாட்களுக்குப் பிறகு மீண்டும் கல்லூரி வாழ்க்கையை ஆரம்பித்தேன். என் ஆத்துமா எனக்குள் களிகூர்ந்தது. நான் கர்த்தருக்குள் வளர ஆரம்பித்தேன். புதிய ஏற்பாடு வாசிக்க ஆரம்பித்தேன். ஞானஸ்நானம் எடுக்க வேண்டும் என்று யாரும் எனக்குப் போதிக்கவில்லை. பரிசுத்த ஆவியானவர் அப். 22:16 ஐக் கொண்டு என்னோடு பேசினார். அதற்கும் என்னை ஒப்புக் கொடுத்து என் வீட்டிற்கு தெரியாமலேயே ஞானஸ்நானம் பெற்றுக் கொண்டேன். கடியர் ராஜலக்ஷ்மி என்று பெயர் சூட்டினார்கள். ஆலயத்திற்குச் சென்று வர ஆரம்பித்தேன். வீட்டில் மறைவாக ஜெபித்து வேதம் வாசித்து வந்தேன். ஆராதனை முடிந்து வீட்டிற்கு வந்தேன். என் தாயார் விறகுக் கட்டையினால் என் காலை அடித்து இங்கு ஜெபித்தால் இயேசு கேட்க மாட்டாரா? காலை ஒடித்து விட்டால் செல்ல மாட்டாய் என்று அடித்தார்கள். அடியை சும்மா வாங்கிக் கொண்டு வீட்டினுள் சென்று விக்கிரகங்களுக்கு கீழே முழங்காற்படியிட்டு என் தேவனை துதித்தேன். அந்த உபத்திரவத்தினால் அன்று முதல் முழங்காற்படியிட்டு நின்ற நேரத்திலெல்லாம் வெளிப்படையாக ஜெபிக்க ஆரம்பித்தேன். இந்த இடத்திலே தேவன் இருக்கிறபடியால் இந்த பிசாசுகளுக்கு இடமில்லை என்று ஜெபித்தேன். வீட்டிலுள்ள மற்றவர்களும் விக்கிரகங்களுக்கு படைப்பதை விட்டு விட்டார்கள். தூசிபடிய ஆரம்பித்தன. ஒரு வாரம் கழித்து என் சகோதரன் விக்கிரக படங்களை எல்லாம் சுற்றி பெட்டியிலே போட்டு விட்டார். கர்த்தருக்கே மகிமை உண்டாவதாக. என் தந்தையும் இறந்து போனார். ஊரிலுள்ள அனைவரும், நேரம் காலமின்றி என்னை அழைத்து, கிறிஸ்

